# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஐந்தாம் மடலம் - இரண்டாம் பாகம்

## நி, நீ

## Vol. V - Part - II


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

ஐந்தாம் மடலம் - இரண்டாம் பாகம்

## நி - நீ

## Vol. V- Part - II

முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2005

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 14

முதற் பதிப்பு : 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. V, Part - II



விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**VOL. V- PART II**

ஐந்தாம் மடலம் - இரண்டாம் பாகம்

(நி - நீ)


பதிப்புக் குழு

முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும்*

*அறநிலையத் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்கள்

புலவர் த.சரவணத் தமிழன்

திரு.மா.பூங்குன்றன்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன் (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை–600 009.

நாள்...26.12.2005...

## அணிந்துரை

'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி தமிழ்!' அந்த வண்டமிழ், 'ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ' ஏற்ற பணிகளை ஆற்றி வருகிறது எனது அரசு.

தமிழ்நாடு அரசு, தமிழ் நாடும் அரசாக விளங்குகின்றது. இந்திய அரசின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவும், இணையற்ற தமிழ் மறையாம் திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக ஆக்கவும், ஒல்லும் வகையான் ஓயாது முயன்று வருகிறது தமிழ்நாடு அரசு. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய் விளங்கும் நம் தமிழ், பின்னைப் புதுமைக்கும் போர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்க வேண்டும் என்ற விழைவோடு, முத்தமிழோடு நான்காம் தமிழாக அறிவியல் தமிழை அறிமுகப்படுத்தி, அதனை மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, மாணவ மாணவியர் கற்க ஏற்பாடு செய்தேன்.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதுடன் நில்லாது, தமிழ் வளர்த்த சான்றோர்கள் நினைவைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்தும், நினைவிடங்கள் அமைத்தும், அவர்தம் நூல்களைப் பொது உடைமையாக்கியும் சிறப்பித்து வருகிறது எனது அரசு. அந்த வகையிலே, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு பிறந்த நாள் விழாவைக் கொண்டாடி மகிழ்ந்ததுடன், அவரது நினைவை என்றென்றும் போற்றிப் பாராட்டிடும் வகையில் மதுரை மாநகரில் மணி மண்டபம் உருவாக்கிடவும் முனைந்துள்ளது.

தமிழ் மொழியின் தனிப் பெரும் வளர்ச்சி குறித்த கவிஞர்களின் கனவுகள் நனவாக்கப்பட வேண்டும் என்பது என் விருப்பம்

"வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளி உறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்"

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கனவு மெய்ப்படும் விதத்தில், தமிழ் மொழியின் சொல் வளத்தைப் பெருக்க 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' (A Comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சார்பாக கடந்த 2002–ஆம் ஆண்டு வரை ஆறு பகுதிகள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. 2002–2003–ஆம் ஆண்டில், சட்டமன்றப் பேரவையில், எஞ்சிய 25 பகுதிகள் நான்காண்டுகளில் தொகுத்து முடிக்கப் பெறும் என்ற அரசின் அறிவிப்பினைத் தொடர்ந்து, தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் ஊட்டி, போதுமான நிதியுதவியும் வழங்கி, பணிகள் முடுக்கிவிடப்பட்டதன் விளைவாய், ஆண்டுக்கு ஆறு பகுதிகள் என்ற முறையில், முதற்கட்டமாகத் தொகுத்து அச்சிட்டு முடிக்கப்பட்ட 'ச' மற்றும் 'த' வரிசைச் சொற்களின் 6 பகுதிகள் அண்மையில் 9.8.2005 அன்று என்னால் வெளியிடப்பெற்றன. அதனைத் தொடர்ந்து இரண்டாவது கட்டமாக 'ந' மற்றும் 'ப' வரிசை சொற்களில், 6 பகுதிகள் தொகுத்து முடிக்கப்பட்டு அச்சிடப்பட்டு அவை தற்போது வெளியிடப்படுவதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறேன்.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப்' பணி சீரிய பணி. அந்தச் சீரிய பணியில் ஈடுபட்டு செந்தமிழைச் செழுந்தமிழாய் ஆக்கிவரும் அனைவருக்கும் என்னுடைய வாழ்த்துகள்.

தமிழ் வாழ்க ! தமிழ்ப் பணி வளர்க !

**ஜெ ஜெயலலிதா**
தமிழக முதலமைச்சர்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா

தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.


## அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநராகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

சி.வி.சண்முகம்

சென்னை.

*முனைவர்.பு.ஏ. இராமையா,* இ.ஆ.ப.,
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி – பண்பாடு
(ம) அறநிலையத் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்.

## பதிப்புரை

நாளும் உணவு தேடி நாடோடிகளாய் வாழ்ந்த மாந்தவினம், குழுவாய்க் கூடிவாழ முற்பட்டுக் குமுகாயத் தோற்றத்தையுண்டாக்கிக் கொண்டபோது, தங்களுக்குள் கருத்து மாற்றம் நிகழ்த்த வேண்டிய கட்டாயச் சூழ்நிலை உருவாகியது. அப்போது, கையாலும் வாயாலும் சைகை காட்டித் தம் எண்ணங்களை வெளிப்படுத்தினர். அதனைச் 'சைகைமொழி' அல்லது 'இயற்கைமொழி' என்றனர்.

காலப்போக்கில் வெறுக்கும் பொருளைச் 'சீ' என்றும், வியக்கும் பொருளை 'ஆ' என்றும், வெகுளிச் சுவையிற் 'போ' என்றும், உள்ளம் மகிழ்ந்தபோது 'வா' என்றும் இன்னும் பிறவாரும் சொற்களமைத்தனர். இவற்றைச் சுவை வகையில் தோன்றிய சொற்கள் என்றனர். இந்த வகையிலேயே உலகின் முதன்மொழி உருவானது என்பது மொழியாராய்ச்சியாளர்களின் ஆய்வு. இவ்வாறு மக்களது இயற்கை வேட்கையில் தோன்றி, அவரவர் நாகரிக முன்னேற்றத்திற்கேற்ப வளர்ந்து வரும் மக்களாக்கப் பொருளே மொழியாகும்.

உலக முதன்மொழி தமிழே! இந்திய மொழிகளுக்கு மூலமும் வேரும் தமிழே! திராவிட மொழிகளுக்குத் தாய்மொழி தமிழே என்று ஆணித்தரமாக சான்றுகளுடன் எடுத்துரைத்த மாபெரும் சான்றோராகிய 'மொழி ஞாயிறு', தேவநேயப் பாவாணர் அவர்கள் காட்டிய வழிகளில், இந்நூலில் வேர் விளக்கம் தரப்பட்டுள்ளது.

இன்றைக்குக் கோயிலில் செய்யப்படும் கும்பாபிடேகம் என்னும் 'குடமுழுக்கு', தமிழில் 'நீர்த்தெளி' என்றே முற்காலத்தில் வழங்கப் பெற்றதென்பதைக் கல்வெட்டுச் சான்றுகளுடன் 'நீர்த்தெளி' எனும் சொல் தலைப்பில் வரையறுக்கப்பட்டுள்ளது.

'நில்' என்னுஞ் சொல்லுக்கும், 'நிமிர்' என்னும் சொல்லுக்கும் 'நீர்' என்னும் சொல்லுக்கும் வரையறுக்கப்பட்டுள்ள பொருள் விளக்கங்களும் இலக்கிய மேற்கோள்களும் கற்குந்தோறும் களிப்பூட்டும் வகையில் தரப்பட்டுள்ளன. நிலையம் என்னும் சொல்லை நிலயம் என தவறான வடிவில் வழங்கி அது வடசொல்லென மயங்கியிருத்தலை மாற்றியமைத்து, அது தென்சொல்லேயென நிறுவப்பட்டுள்ளது.

தேவநேயப் பாவாணரின் கருத்துப்படி, சென்னைப் பல்கலைக் கழகப் பேரகரமுதலியையும், சாம்பசிவம்பிள்ளை மருத்துவ அறிவியல் அகரமுதலியையும் அடிப்படையாகக் கொண்டு, பிந்தைய அகரமுதலியில் ஆளப்பட்டுள்ள சொற்களுள் தமிழ்ச்சொற்களை மட்டும் தொகுத்து இவ்வகரமுதலிப் பகுதி அணியப்படுத்தப்பட்டுள்ளது. சொல்லுக்குப் பொருள் விளக்கங்கள் உரிய வகையில் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. அவற்றை மெய்ப்பிக்கும் வகையிலான இலக்கிய மேற்கோள்களும் நாட்டு மக்களிடை வழங்கும் பழமொழிகளும் உலக வழக்குத் தொடர்களும் ஆங்காங்கே இணைக்கப்பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வரிசையில் அனைத்து மடலங்களும் செந்தமிழின் தரத்தை உலகோர் உணரும் வகையில் திகழ்கின்றன. பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் நி, நீ வரிசையான இந்நூல் பதினான்காவது வெளியீடாகும்.

பேரகரமுதலியின் எஞ்சிய தொகுதிகள் யாவும் நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் முடிக்கப்பெறும் என்று அரசு அறிவித்த வண்ணம், திட்டமிட்டவாறு இலக்கினை எய்துதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களுக்கு முதற்கண் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இம்முயற்சியில் உறுதுணையாயிருந்த மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களுக்கும் எனது இதயங் கனிந்த நன்றி. இந்நூல் வெளிவர அயராதுழைத்த அகரமுதலித் தொகுப்பாளர் (பகுதிப் பொறுப்பாளர்), பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள் மற்றும் திட்டப் பணியாளர்கள் அனைவரையும் பாராட்டிட நான் கடமைப்பட்டுள்ளேன். மேலும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டுத் தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை
–07–2005

(பு.ஏ. இராமையா)

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# நி

**நி**[1] *ni,* 'ந்' என்ற மெய்யெழுத்தும் 'இ' என்ற உயிரெழுத்துங் கூடிய கூட்டெழுத்து; the syllable formed by adding the short vowel 'i' to the consonant 'n'.

*[ந் + இ.]*

**நிகடை** *nigaḍai,* பெ. (n.) மாழையை உருக்க உதவும் மண் சிமிழ்; a melting pot used by goldsmiths, chemists and others for melting metals etc. (சா.அக.).

**நிகண்டகம்** *nigaṇḍagam,* பெ. (n.) கடலைச் செடி; bengal gram plant-cicer anetinum. (சா.அக.).

**நிகம்** *nigam,* பெ. (n.) ஒளி (அக.நி.); brightness, brilliance.

**நிகமம்** *nigamam,* பெ. (n.) 1. முடிவு; conclusion. 'நிகமத்தில் இத்திரு வாய்மொழி, (ஈடு. 1, 8, 11.). 2. வேதம்; vedam, 'நிகமாகமம் விதித்தநீதி' (சிவஞா. நெஞ். 27,7.). 3. நகரம் (சூடா.); town, city. 4. நெடுந்தெரு, பொதுச் செல்வழி; street thoroughfare. *'நீண்டவந் நிகமம் புக்க நிமலன்'* (கந்தபு. ததீசியுத். 83.). 5. கடைவீதி (யாழ்.அக.); bazaar 6. வணிகம் (யாழ்.அக.); trade 7. வணிகக் கூட்டம் (யாழ்.அக.); group of traders.

**நிகமனம்** *nigamanam,* பெ.(n.) அனுமானவுறுப்பு ஐந்தனுள் இறுதியானது (தருக்க. சங்.); conclusion, being the fifth member of the Indian syllogism.

**நிகமி-த்தல்** *nigami-,* 11 செ.குன்றாவி. (v.t.) முடித்தல் (ஈடு. 1, 6, பிர.ஜீ.பக். 262.); to conclude.

**நிகர்**[1]**-தல்** *nigar-,* 4 செ.குன்றாவி. (v.t.) நிகர்[2]-, பார்க்க; see nigar-. *"மஞ்சை நிகருந் த்யாக வள்ளலே"* (விறலிவிடு. 902.).

**நிகர்**[2]**-த்தல்** *nigar-,* 4 செ. குன்றாவி. (v.t.) ஒத்தல்; to be similar, alike. *'கண்ணொடு நிகர்க்குங் கழிப்பூங் குவளை'* (தொல். பொருள். 290.).

**நிகர்**[3]**-த்தல்** *nigar-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மாறுபடுதல்; to rival. *"தன்னொடு நிகரா வென்னொடு நிகரி"* (ஐங்குறு. 67.). 2. விளங்குதல்; to shine; to be visible. *"தஞ்சேணிகர் காவின்"* (திருக்கோ. 183.).

**நிகர்**[4] *nigar,* பெ. (n.) 1. ஒப்புமை; comparison, likeness, simile. *"தனக்கு நிகருமேலு மின்றாகியே"* (கந்தபு. ததீசியுத். 150.). 2. ஒப்பு; equal, parallel, match. *"நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்"* (நாலடி, 64.). 3. ஒளி; lustre, brightness, splendour. *"நீர்வார் நிகர்மலர்"* (அகநா.11.). *"காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றித் தூநீர் மாலை தூத்தகை இழந்தது நிகர்மலர் நீயே கொணர்வா யென்றலும்"* (மணிமே. 5: 13-15.). 4. போர் (யாழ்.அக.); battle,fight. 5. கூட்டம்; crowd.

**து.** நிசாசு, **தெ.** நிகநிக, நிகாரிஞ்சு.

**நிகர்த்த** *nigartta,* பெ.அ. (adj.) ஒத்த; similar.

*[நிகர் → நிகர்த்த.]*

**நிகர்த்தல்** *nigarttal,* பெ. (n.) போர் (சூடா.); battle, war.

**நிகர்த்து–தல்** *nigarttu-,* 5 செ. குன்றாவி. (v.t.) நன்றாகப் புடைத்தல்; to tharsh, give a good drubbing.

*[நகர்த்து–நிகர்த்து–.]*

**நிகர்ப்பு** *nigarppu,* பெ. (n.) 1. ஒப்பு; resemblance, likeness. 2. போர் (திவா.); battle, fight.

*[நிகர்–நிகர்ப்பு.]*

**நிகர்பக்கம்** *nigar-pakkam,* பெ. (n.) உவமைப் பொருளிருக்குமிடம்: comparing thing's place.

*[நிகர் + பக்கம்]*

**நிகர்மலர்** *nigar-malar,* பெ. (n.) 1. புதுப்பூ; fresh flower. *"ஆய்சுனை நிகர்மலர் போன்மென நசைஇ வீதேர் பறவை விழையும் போதார் கூந்தனங் காதலி கண்ணே."* (அகநா. 371.). 2. ஒளியுடைய பூ; flower with brightness. *"காது சேர் நிகர்மலர் கொய்யும் ஆயம் எல்லாம் உடன் கண்டன்றே"* (குறுந். 311.). *"அகனக ரெல்லாம் மரும்பவிழ்முல்லை நிகர்மலர் நெல்லோடு தூஉய்க்".* (சிலப். 9:1.).

*[நிகர் + மலர்.]*

**நிகர்வு** *nigarvu,* பெ. (n.) ஒப்பு (வழக்.); comparison.

*[நிகர் → நிகர்வு.]*

**நிகர[1]** *nigara,* இடை. (part.) ஓர் உவம உருபு (நன்.367.); a term of comparison.

*[நிகர் → நிகர.]*

**நிகர[2]** *nigara,* இடை. (part.) ஒளி; light; lustre. (த.சொ.அக.).

*[நிகு → நிகர.]*

**நிகரணாளகி** *nigaraṇāḷagi,* பெ. (n.) காதிற்குள் நடுவரையிலிருந்து மிடற்றுக்குச் செல்லும் குழல்; the tube which forms a communication between the internal ear and the back of the mouth- Eustachiartube. (சா.அக.).

**நிகரம்[1]** *nigaram,* பெ. (n.) 1. கூட்டம்; company, assemblage, flock, multitude. *"உடனடப்பன புகர்முகக் கரிநிகரமே"* (பாரத.அணி.6.). 2. குவியல்; heap. *'பருத்த நிகரமாகிய கருப்பூரம்'* (மலைபடு. 516, உரை.). 3. மொத்தம் (வின்.); total. 4. அரும்பொருட்குவை (யாழ். அக.); treasure. 5. கொடை (யாழ்.அக.); gift.

*[நிகர் → நிகரம்.]*

**நிகரம்[2]** *nigaram,* பெ. (n.) விழுங்குகை; swallowing, *"நிகரம்பயி லமுதுண்டு"* (பாரத. அருச்சுனன்றவ. 154.).

**நிகரவா** *nigaravā,* பெ. (n.) *பிரமிப்பூண்டு;* பார்க்க; see *pirami-p-pūṇḍu* (சா.அக.).

**நிகரா** *nigarā,* வி.எ. (adv.) பகையாத; without having enmity. *"தன்னொடு நிகரா வென்னொடுநிகரி"* (ஐங்குறு.67.).

*[நிகர் + ஆ.]*

**நிகரார்** *nigarār,* பெ. (n.) பகைவர் (திவா.); enemies. *"நிகரா ருயிர்க்கு நஞ்சாய வேற்கைக் குலோத்துங்க சோழன்"* (குலோத். கோ. 384.).

*[நிகர் → நிகரார்.]*

**நிகரி** *nigari,* வி.எ. (adv.) பகைத்து; with enmity.

*[நிகர் + இ.]*

**நிகரிடு–தல்** *nigaridu-,* 17 செ.குன்றாவி. (v.t.) ஒப்பிடுதல்; to compare. "தன்னொடு நிகரா என்னொடு நிகரிப் பெருநலம் தருக்கம் என்ப விரிமலர்த்" (ஐங்குறு. 67.).

*[நிகர் + இடு.]*

**நிகரில்பக்கம்** *nigaril- pakkam,* பெ. (n.) 1. எதிர்க்கட்சி; opposite side or party. 2. எதிரிடையான கொள்கை; opposite view. *"பக்க நிகர்பக்க நிகரில்பக்கமென"* (சி.சி.அளவை.9.).

*[நிகர் + இல் + பக்கம்.]*

**நிகரில்லகறை** *nigarillagarai,* பெ. (n.) கரிசலாங் கண்ணி; eclipse plant- Echypta prostata. (சா.அக.).



**நிகரில்லாவாசான்** *nigarillā-v-āsān,* பெ. (n.) (ஞானக் கண்) அறிவுக்கண்; eye of wisdom. (சா.அக.).

**நிகரிலிசோழமண்டலம்** *nigar-ili-cōla-mandalam,* பெ. (n.) சோழராட்சிக்குள்ளடங் கியிருந்த எருமையூ (மைசூ) ரிலொரு பகுதி; a division in Mysore when it formed part of the Cōla dominion.

*[நிகரிலிசோழன் + மண்டலம்.]*

*மண்டிலம் > மண்டலம்*

**நிகரிலிசோழன்** *nigar-ili-cōlan,* பெ. (n.) முதலாம் இராசராசன் பட்டப்பெயர்களு ளொன்று (I.M.P.Tn. 109.); one of the titles of Rāja Rāja the first.

*[நிகரிலி + சோழன்.]*

**நிகரோதயம்** *nigarōdayam,* பெ. (n.) சிற்றரத்தை; lesser galangal. Alpinia galanga (minor.) (சா.அக.).

**நிகலம்** *nigalam,* பெ. (n.) 1. தோள்மேல், (வின்.); the upper part of the shoulder. (சா.அக.). 2. பிடர் (வின்.); nape.

**நிகவா** *nigavā,* பெ. (n.) 1. பிரமிப்பூடு; hyssop plant-zoofa-hyssopus officinalis. 2. நீர்ப்பிரமி; Indian brahmi- Gratiola monicri (சா.அக.).

**நிகழ்[1]–தல்** *nigal-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நேருதல்; to happen, occur. *"தொண்டனார்க் கங்கு நிகழ்ந்தன"* (பெரியபு. திருநா. 380.). 2. நடந்துவருதல்; to be current, passing, as time. *"நிகழுங் காலத்துச் செய்யு மென்னுங்*

*கிளவியொடு"* (தொல். சொல்.229.). 3. செல்லுதல்; to enter, pass. *"செயிர்க்க ணிகழாது"* (பு.வெ.8,17.). 4. தங்குதல்; to abide, continue. *"தொன்மை மேன்மையி னிகழ் பெருந் தொண்டைநன்னாடு"* (பெரியபு. திருக்குறிப்பு. 2.). 5. நிறைவேறுதல்; to be performed, transacted, carried on.

**நிகழ்[2]—தல்** *nigal-*, 4 செ.கு.வி. (v.i.) 1. விளங்குதல்; to shine. *"வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்பட"* (பதிற்றுப்.49, 15, உரை.). 2. ஒளி செய்தல்; to emit light, to be respiendent.

**நிகழ்களன்** *nigal-kalan,* பெ. (n.) கதை நாடகம் முதலியன நிகழ்வதாகக் காட்டப்படும் இடம்; scene; setting for a play, etc., *போர்க்களத்தை நிகழ்களனாகக் கொண்ட நாடகம். (உ.வ.).*

*[நிகழ் + களன்.]*

**நிகழ்காலம்** *nigal-kālam,* பெ. (n.) வினை நடைபெறுகிற காலம் (தொல்.சொல். 240, இளம்பூ.); தொழில் தொடங்கப் பெற்று முற்றுப் பெறாத நிலைமை (தொல். சொல். 200, சேனா.); present tense.

*[நிகழ் + காலம்.].*

தொழிலாவது பொருளினது புடைப் பெயர்ச்சியாகலின் அஃதொருகணம் நிற்பதல்லது இரண்டுகணம் நில்லாமையில் நிகழ்ச்சி யென்பதொன்று அதற்கில்லை.

**நிகழ்காலவிலக்கு** *nigal-kāla-vilakku,* பெ. (n.) நிகழ்காலம் பற்றிவரும் முன்னவிலக் கென்னும் அணி (தண்டி.42, உரை.) ; a kind of rhetoric signifying the present.

*[ நிகழ்காலம் + விலக்கு. ]*

**நிகழ்காலவினையெச்சம்** *nigal-kāla-viṉai-y-eccam,* பெ. (n.) அகர ஈறுபெற்று இடைநிலை யோடு கூடாது தானே நிகழ்காலம் காட்டி நிற்குஞ்சொல் (த.சொ.அக.); present verbal participle.

*[ நிகழ்காலம் + வினையெச்சம். ]*

எ—டு.

வந்திருக்கிறான் – நிகழ்கால நிறைவு.

வந்திருப்பான் – எதிர்கால நிறைவு.

வந்திருந்தான் – இறந்தகால நிறைவு.
வந்து கொண்டிருக்கிறான் – நிகழ்கால நிறைவுத் தொடர்ச்சி.
வந்து கொண்டிருந்தான் – இறந்தகால நிறைவுத் தொடர்ச்சி.
வந்து கொண்டிருப்பான் – எதிர்கால நிறைவுத் தொடர்ச்சி.
(மொழி. கட். 31.)

**நிகழ்ச்சி[1]** *nigalcci,* பெ. (n.) 1. நேர்ச்சி; occurrence, incident, event. *'மூன்று கால நிகழ்ச்சியையும் அறியுமவன்'* (பு.வெ. 8, 13, உரை.). 2. நிலைமை; situation. *"ஒலி யெழுதற்கஞ்சி நின்ற நிகழ்ச்சியும் போன்ம்"* (பரிபா.10:62.). 3. செயல்; business. *"நினக்கு யான்புரிய நிகழ்ச்சி யாது"* (காஞ்சிப்பு. தழுவக்.10.). 4. இக்காலம்; present moment.

*[ நிகழ் → நிகழ்வு → நிகழ்ச்சி. ]*

**நிகழ்ச்சி[2]** *nigalcci,* பெ. (n.) ஒளி; light. (த.சொ.அக.).

*[ நிகர் → நிகழ். ] [ நிகர் = ஒளி. ]*

**நிகழ்ச்சி[3]** *nigalcci,* பெ. (n.) வரவு, பெருக்கம்; income, increasing the quantity. *"கெழியின்மை கேட்டாலறிக பொருளின் நிகழ்ச்சி யானாக்கம் அறிக"* (நான்மணி. 64.).

**நிகழ்ச்சி⁴** *nigalcci,* பெ. (n.) தொலைக்காட்சி வானொலி முதலியவற்றில் நடத்திக்காட்டப் படுவது; programme, broadcast. இன்றையத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் காணத் தகுவனவாய் இல்லை (உ.வ.). "வானொலி நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து கேட்கும் பழக்கத்தைக் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகக் கொண்டவர்" (உ.வ.).

*[நிகழ் → நிகழ்ச்சி.]*

**நிகழ்ச்சிநிரல்** *nigalcci-niral,* பெ. (n.) நடைபெறப்போகும் நிகழ்ச்சிகளின் ஒழுங்கு படுத்தப்பட்ட தொகுப்பு; *agenda;* list of programmes. கலைமாமணி விருது வழங்கும் நிகழ்ச்சி நிரலைச் சரியாக அமைத்து வழங்கியிருந்தனர் (உ.வ.). முதலமைச்சரின் சுற்றுப் பயண நிகழ்ச்சி நிரலைப் பெற்றுக் கொண்டு அதற்கேற்ப செயற்பட வேண்டும் (உ.வ.). இன்றையக் கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலை அணியப் படுத்திவிட்டேன் (உ.வ.).

*[ நிகழ்ச்சி→ நிரல்.]*

**நிகழ்சாதி** *nigalšādi,* பெ. (n.) ஆண்சாதி நான்கு வகைகளில் ஒன்று; one of the four classes of men. (சா.அக.).

**நிகழ்த்து¹--தல்** *nigalttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** அருஞ்செயல் புரிதல்; to create a record. அகரமுதலித் துறையில் அருஞ்செயல் நிகழ்த்தியோர் பலர் (உ.வ.). **2.** விந்தை ஏற்படுத்துதல்; to work a miracle. இறைவன் நிகழ்த்தி யதாகக் கூறப்படும் விந்தைகளின் தொகுப்பே திருவிளையாடற் புராணமெனும் தொன்ம நூலாகும் (உ.வ.). **3.** நாடகம், நாட்டியம் முதலிய வற்றை நடித்து, நடத்துதல்; to perform. நாடகம் என்பது நிகழ்த்திக் காட்டப் படுவதுதான். (உ.வ.). தெருக்கூத்தைச் சிறப்பாக நிகழ்த்திக் காட்டினார்கள். (உ.வ.). **4.** உரை வழங்குதல்; to deliver a speech etc., குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தின் கூட்டுக் கூட்டத்தில் உரை நிகழ்த்துவார். (உ.வ.). **5.** சொற்பொழிவாற்றுதல், கலந்துரையாடல்; to conduct a discussion. மதுரையில் நடந்த ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் தேவநேயப் பாவாணர் நிகழ்த்திய உரையை நூலாக வெளியிட்டுள்ளனர். (உ.வ.).

**நிகழ்த்து²--தல்** *nigalttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நடப்பித்தல்; to effect, perform, transact, set on foot, bring to pass., "*ஐந்தொழி னிகழ்த்தலாகும்*" (திருவாத. பு. திருவெம்.6.). **2.** சொல்லுதல்; to speak, say, mention, narrate, declare. "*முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற்பாலர்*" (கந்தபு. சூரப. வதை.74.).

**நிகழ்பு** *nigalbu,* பெ. (n.) *நிகழ்ச்சி,* **1,2** பார்க்க; see *nigalcci.* "*முக்காலமு நிகழ்பறிபவன்*" (பு.வெ.8.13, கொளு.).

*[ நிகழ்--நிகழ்பு. ]*

**நிகழ்முறை** *nigal-murai,* பெ. (n.) *நிகழ்ச்சி நிரல்* பார்க்க; see *nigalcci-niral.*

*[ நிகழ்+முறை. ]*

**நிகழ்வாக்கம்** *nigal-v-ākkam,* பெ. (n.) படிநிலை மாற்றம், படிநிலை வளர்ச்சி; transformation. "*ஒத்த பொருள்க ணிகழ்வாக்க முரைத்து நின்றேன்*" (நீலகேசி, 421.).

*[ நிகழ்வு + ஆக்கம்.]*

**நிகழ்வினைவிலக்கு** *nigalvinai-vilakku,* பெ. (n.) நிகழ் வினையைக் காட்டி விலக்குவதாகிய ஓர் அணி: a figure of speech.

*[ நிகழ்வினை + விலக்கு.]*

எ–டு:
மாதர் நுழைமருங்கு நோவ மணிக்குழைசேர்
காதின்மிசை நீலங்கவின் புனைவீர்–மீதுலவு
நீனிலவு வாட்கண் நிமிர்கடையே செய்யாவோ
நானிலஞ் செய்யு நலம்.

**நிகழ்வு[1]** *nigaḻvu,* பெ. (n.) *நிகழ்ச்சி[1], 1,4* பார்க்க; *see nigaḻcci. "இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றா"* (தொல். சொல். 202.).

*[ நிகழ் → நிகழ்வு. ]*

**நிகழ்வு[2]** *nigaḻvu,* பெ. (n.) 1. வாழ்க்கையில் இயற்கையாக நிகழ்வது, நடைபெறுவது; happening, occurrence. பிறப்பு, இறப்பு என்ற இரு நிகழ்வுகளுக்கு இடையே நடைபெறுவது தான் வாழ்க்கை. (உ.வ.). 2. நிகழ்ச்சி; incident. 3. நடப்பு: event. உண்மை நிகழ்வுகளை அடித்தளமாய் கொண்டமைக்கப்பட்டது இந்நாடகம். (உ.வ.).

**நிகழாசம்** *nigaḻāšam,* பெ. (n.) உயிர்ப்பினை (இரேசகம்) விடுத்தல்; exhabation of vital air in scientific breathing, It is opposed to உயிர்ப்பினை உள்ளிழுத்தல் (பூரகம்) (சா.அக.).

**நிகழும்** *nigaḻum,* வி.எ. (adv.) நடைபெற்றுக் கொண்டிருக்கிற; current, in force. நிகழும் திருவள்ளுவராண்டு 2034 துலைத் திங்கள் பத்தாம் பக்கல் எம் மகளுக்குத் திருமணம் நடக்கவுள்ளது. (உ.வ.). 2. செல்லுகின்ற, ஒழுகும்; on going, adapt. *"நாறுயு நிகழும் யாறு கண்டழிந்து வேறுபடு புனலென விரை மண்ணுக் கலிழைப் புலம்புரி யந்தணர் கலங்கினர் மருண்டு"* (பரிபா. 6:43.).

**நிகளம்[1]** *nigaḷam,* பெ. (n.) 1. நீர்க்கடம்பு; water cadambam tree-Nauclia parviflora. 2. மலம்; filth. (சா.அக.).

**நிகளம்[2]** *nigaḷam,* பெ. (n.) நீளம் (உ.வ.); length வகுள பரிமள நிகள கவிமாலை சூடுவதும் (திருவகுப்பு.).

நீட்சிக் கருத்து நெகிழ்ச்சிக் கருத்தின் வழிநிலைக் கருத்தே. நிற்றற் கருத்தும் நடத்தற் கருத்தும் நீட்சிக் கருத்தினின்று தோன்றும். நுல் → நெல் → நெள் → நெகு → நெகிழ் (நெகிள்) → நீள். நெகிள் (நெகிழ்) →நிகள் → நீள் →நீளம்→ நிகளம். எதுகை முகனை என்பதை எகனை முகனை யென்பதுபோல், அகலம் நீளம் என்பதை அகலம் நிகளம் என்றும் பொதுமக்கள் வழங்கியிருக்கலாம். ஈயமும் மெழுகும் போல்வன உருகியும், களியும் களிமண்ணும் போல்வன நீர்கலந்தும் நெகிழும் போது நீளுதல் காண்க. (வே.க.3:37).

**நிகளம்[3]** *nigaḷam,* பெ. (n.) 1. யானைக் காற் சங்கிலி; chain for an elephant's feet. *"அயிராவதத்தி னிகளங்கால் விட்ட நினைவு"* (தமிழ்நா. 123.). 2. விலங்கு; chain, fetters. *"மறலினர் நிகளஞ் சீத்து"* (தணிகைப்பு. அகத்தி.170.). 3. பிணை (பந்தம்.); bondage. *"யார்க்கு நிகளமாம் விருத்தி தோன்ற"* (திருவிளை. தீர்த்.3.). 4. நீர்க் கடம்பு மரம் (சங்.அக.); water cadamba tree.

*[ நீளம் → நிகளம். ]*

**நிகற்புதம்** *nigaṟpudam,* பெ. (n.) வியப்பு (அற்புதம்) (பிங்.); wonder (கதி.அக.).

**நிகன்னம்** *nigaṉṉam,* பெ. (n.) கொலை; (உ.வ.); murder (சா.அக.).

**நிகாசகம்[2]** *nigāšagam,* பெ. (n.) மகிழமரம்; morning face flower-mimusops alingi- (சா.அக.).

**நிகாநயம்** *nigānayam,* பெ. (n.) நிலவுமலர் (சந்திரகாந்தி); moon flower Ipomaea grandi flora. (சா.அக.).

**நிகாயம்** *nigāyam,* பெ. (n.) குக்கில் எனும் செடி; Indian dammar regin-shorea robusta (சா.அக.).

**நிகாரணன்** *nigāraṇaṉ,* பெ. (n.) கொலைஞன் (யாழ்.அக.); murderer. (சா.அக.).

**நிகாரம்** *nigāram,* பெ. (n.) 1. பனி; dew. 2. உறைந்த பனித்தூள்; white particles of frozen dew, hoar frost. (சா.அக.).

*[ நில் + காரம். ]*

நில் – நி எனக் குறுகி முன்னொட்டானது. காரச்சீலை, காரச்சேவு. காரத்துளி(நூந்தி) காரப்பகை, காரப்பொடி, காரமருந்து முதலியன வேகத்தையும் உறைப்பை யுமுடைய பொருள்கள். கரி என்னும் வினையடியால் பிறந்த தொழிற்பெயர். கரி + அம்– காரம்: முதனிலைத் திரிந்து விகுதி பெற்ற தொழிற் பெயர். ஒ.நோ. படி + அம் = பாடம், தவி +அம் = தாவம். கரித்தல் – மிகுதல், காரம்மிகுதி. காரம் என்னும் சொல் முதலாவது மிகுதியை உணர்த்திப் பின்பு உறைப்பு மிகுதியை உணர்த்தும். உறைப்பு உறைந்த பனியையும் உணர்த்தும். காரம் பார்க்க; see kāram.

**நிகாலம்** *nigālam,* பெ. (n.) கழுத்து; neck. (சா.அக.).

**நிகாவப்புடவி** *nigāva-p-puḍavi,* பெ. (n.) *நிகவா* பார்க்க; *see nigavā.* (சா.அக.).

**நிகாவரி** *nigāvari,* பெ. (n.) *நிகவா* பார்க்க; *see nigavā.* (சா.அக.).

**நிகாவா** *nigāvā,* பெ. (n.) *நிகவா* பார்க்க; see *nigavā.*

**நிகீயெனல்** *nigī-y-eṉal,* பெ. (n.) குதிரையின் கனைப்புக் குறிப்பு; onom. expr.of the neighing of a horse.

**நிகு**[1] *nigu,* பெ. (n.) அறியுங் கருவி (யாழ்.அக.); instrument of knowledge.

**நிகு**[2] *nigu,* பெ. (n.) மஞ்சள்; turmeric-curcuma longa. (சா.அக.).

**நிகுஞ்சகம்** *niguñjagam,* பெ. (n.) ஒரு மரம்; a kind of a tree. (சா.அக.).

**நிகுஞ்சரம்** *niguñjaram,* பெ. (n.) சுக்குநாறிப்புல்; ginger grass- andropogon hardus. (சா.அக.).

**நிகுநிகுவெனல்** *nigunigu-v-eṉal,* பெ. (n.) மினுமினுத்தற் குறிப்பு; expr. signifying the glittering of an object. நெய் பூசிய கத்தி நிகுநிகு வென்றிருக்கிறது. (உ.வ.).

க. நிகிநிகி

*[ நிகு + நிகு + எனல். ]*

**நிகும்பசாரி** *nigumbaśāri,* பெ. (n.) காட்டாமணக்கு; parging nut-jhatropha curcas. (சா.அக.).



**நிகும்பம்** *nigumbam,* பெ. (n.) 1. நேர்வாளம்; croton oil plant-croton tigilium. 2. நேர்வாளக் கொட்டை; croton seed. 3. காட்டு நேர்வாளம்; small wild aumanac-Jatropha

multifida. **4.** எலியாமணக்கு; rat aumanac, adul oil plant-Jatropha glandulifera. **5.** சிவதை; Indian rhubarb-Ipomaea turpethem (சா.அக.).

**நிகுமம்** *nigumam,* பெ. (n.) *நிகும்பம்* பார்க்க; *see nigumbam.* (சா.அக.).

*[ நிகும்பம் → நிகுமம். ]*

**நிகுரம்** *niguram,* பெ. (n.) **1.** பினத்தல் நளிர்; delirium. **2.** ஒருவகை வெறி; frenzy-phrenitis (சா.அக.).

**நிகேசரம்**[1] *nigēšaram,* பெ. (n.) **1.** சம்பங்கிமரம்; champauk tree michelia champaca. **2.** சம்பங்கிப் புல்; a kind of grass with fragrance of champak. (சா.அக.).

**நிகேசரம்**[2] *nigēšaram,* பெ. (n.) மரவகை (சங்.அக.); a kind of tree.

**நிகோடா** *nigōḍā,* பெ. (n.) பூவந்தி எனும் மரவகை; four leaved soap nut.

**நிங்கசம்** *ningašam,* பெ. (n.) சங்குத் திராவகம் பார்க்க; see sangu-t-tirāvagam. (சா.அக.).

**நிச்சடம்** *niccaḍam,* பெ. (n.) **1.** தாளிக்கொடி; hedge bind weed-Ipomaca sepiaria alias-convolvulus marginatus. **2.** காட்டுத்தாளி; kaldanah-convolvulus muri-catus. (சா.அக.).

**நிச்சதம்** *niccadam,* பெ. (n.) செடிக் காசரைக் கீரை, குப்பைக்கீரை; dung hill green-Amaranthus virdis. (சா.அக.).

**நிச்சநிரப்பு** *nicca-nirappu,* பெ. (n.) நாடோறும் இரவான் வருந்தித்தன் வயிறு நிறைத்தல்; living on daily begging. "*பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை நிச்ச நிரப்புக்கொன் றாங்கு*" (குறள், 532.).

*[ நித்தம் → நிச்சம் + நிரப்பு எப்போதும் வறுமையிலிருப்பது.]*

**நிச்சம்**[1] *niccam,* வி.எ. (adv.) **1.** எப்பொழுதும்; always, perpetually. **2.** நிலைத்த; constantly, "*நிச்சமும் பெண்பாற்குரிய வென்ப*" (தொல். பொருள். 99.). **2.** என்றும்; daily.

pkt. niccam skt. nitya

நில் → நிற்றம் = நிலைப்பு
ஒ.நோ: வெல் → வெற்றம்
கொல் → கொற்றம்.
நிற்றம் → நிச்சம்
ஒ.நோ: முறம் → முற்றில் → முச்சில்.
(வே.க.3:46.)

**நிச்சம்**[2] *niccam,* பெ. (n.) *நிச்சயம்* பார்க்க; see *niccayam,* "*நிச்ச நினையுங்காற் கோக் கொலையாம்*" (நாலடி,81.).

skt.niš-caya

*[ நில் → நிற்றம் → நிச்சம் = நிலைப்பு.]*

**நிச்சயதாம்பூலம்** *niccaya-tāmbūlam,* பெ. (n.) திருமணத்தை உறுதிப்படுத்த மணமகனின் தகப்பன் மணமகளின் தகப்பனுக்குத் தாம்பூலம் முதலியன அளிக்கை; presentation of betel, plantains, turmeric, new cloths etc. by the father of the bride in confirmation of a marriage; betrothal.

*[ நில் → நிற்றம் → நிச்சம் → நிச்சயம்*
*ஒ.நோ: முற்றில் → முச்சில்.*
*நிச்சயம் + தாம்பூலம். ]*

**நிச்சயப்பத்திரிகை** *niccaya-p-pattirigai*, பெ. (n.) உறுதிச் சீட்டு (புதுவை.); certificate.

*[நில் → நித்தம் → நிச்சம் → நிச்சயம் + பத்திரிகை.]*

skt. *பத்திரிகா*

**நிச்சயம்** *niccayam*, பெ. (n.) **1.** உறுதி; certainty, assurance. **2.** மெய் (திவா.); truth, veracity. **3.** துணிவு; decision, resolution, determination, *"நிச்சயமெனுங் கவசத்தான் நிலைநிற்பதன்றி"* (கம்பரா. சூரன்வதை. 142.).

*[நிச்சம் + அயம்.]*

**நிச்சயாந்தம்** *niccayāndam*, பெ. (n.) அணிவகை (பாப்பா.132.); (Rhet.) a figure of speech.

**நிச்சயார்த்தம்** *niccayārttam*, பெ. (n.) **1.** மெய்ப்பொருள் (வின்.); certainty, truth. **2.** *நிச்சயதாம்பூலம்* பார்க்க (இ.வ.); see *niccaya - tāmbūlam*.

**நிச்சயி–த்தல்** *niccayi-*, 11 செ.குன்றாவி. (v.t.) **1.** உறுதிப்படுத்துதல் (வின்.); to ascertain, confirm. **2.** உறுதிசெய்தல்; to resolve, determine, decide. *"அறிஞர் நிச்சயித்தனர்"* (கந்தபு. சூரனமைச். 137.).

*[நில் → நிச்சம் → நிச்சயி.]*

**நிச்சல்** *niccal*, வி.எ. (adv.) **1.** *நிச்சம்*[1] பார்க்க; see niccam. *"நிச்ச லேத்து நெல்வாயிலார் தொழ"* (தேவா.21,3.).

**தெ.** நிச்சலு, **க.** நிச்சல்

நில்→நிற்றம்–நிலைப்பு.

ஒ. நோ: வெல் → வெற்றம்

கொல் → கொற்றம்.

நிற்றம் → நிற்றல் → நிச்சல்.

**நிச்சல்காவி** *niccal-kāvi*, பெ. (n.) காவிபாயின் கீழ்ப் பகுதி (M.Navi.83); lower top-sail.

*[நிச்சல் + காவி.]*

**நிச்சல்சவர்** *niccal-šavar*. பெ. (n.) சவர் பாயின் கீழ்ப் பகுதி; (M. Navi.38); lower top-gallant sail.

*[நிச்சல் + சவர்.]*

**நிச்சலும்** *niccalum*, வி.எ.(adv.) *நிச்சல்* பார்க்க; see *niccal*. *"நிச்சலும் விண்ணப்பஞ் செய்ய"* (திவ்.திருவாய்,1,9,11.).

*[நிச்சல் → நிச்சலும்.]*

**நிச்சள்** *niccaḷ*, பெ.(n.) கொடி வகை (மலை.); hedge bind-weed.

**நிச்சனதாரி** *niccaṉadāri*, பெ.(n.) மாமரம்; mango tree-mangifera indica. (சா.அக.).

**நிச்சாணம்** *niccāṇam*, பெ.(n.) இதளியம்; mercury-hydargyrum. (சா.அக.).

**நிச்சி–த்தல்** *nicci-*, 11 செ.குன்றாவி. (v.t.) நிச்சயி–, பார்க்க; see niccayi-. *"நிச்சித்திருந் தேனென் னெஞ்சங் கழியாமை"* (திவ். திருவாய்.10,4,5.).

*[நில் → நிச்சல் → நிச்சி.]*

**நிச்சிதம்** *niccidam*, பெ. (n.) உறுதி; certainty. *'இப்பரிசு ஒத்து ஒவ்வாமைப்படப் படைத்தான் நிச்சிதமாக'* (புறநா. 194, உரை.).

*[நில் → நிச்சம் → நிச்சிதம்.]*

**நிச்சிதார்த்தம்** *niccidārttam,* பெ.(n.) *நிச்சயதாம்பூலம்* (உ.வ.) பார்க்க; see *niccaya-tāmbūlam.*

*[நிச்சயதாம்பூலம் – நிச்சிதார்த்தம் (கொ.வ.).]*

**நிச்சியம்** *nicciyam,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic - alliumsativum. (சா.அக.).



**நிச்சிரம்** *nicciram,* பெ. (n.) *நிச்சியம்* பார்க்க; see *nicciyam.*

**நிசக்கல்லு** *niśa-k-kallu,* பெ. (n.) நஞ்சு (வைத்திய பரிபா.); a kind of prepared poison. (கதி.அக.).

**நிசமம்** *niśamam,* பெ. (n.) *நியமம்* பார்க்க (யாழ்.அக.) ; see *niyamam.*

*[நியமம் → நிசமம்.]*

**நிசாகசம்** *niśākaśam,* பெ. (n.) **1.** இரவில் மலரும் வெள்ளாம்பல்; white Indian water lily-nymphaea pubescense. **2.** மகிழமரம்; morning face flower-mimusops alingi. (சா.அக.).

**நிசாகசி** *niśākaśi,* பெ. (n.) தாமரைக் கொடி; lotus creeper-nelumbium speciosum. (சா.அக.).

**நிசாகம்** *niśāgam,* பெ. (n.) மஞ்சள்; turmeric-curcuma longa. (சா.அக.).

**நிசாகரம்** *niśāgaram,* பெ. (n.) கோழிக்கீரை; cocks green-portulaca oleracea. (சா.அக.).

**நிசாடு** *niśāḍu,* பெ. (n.) மஞ்சள்; turmeric. (சா.அக.).

**நிசாடுகம்** *niśāḍugam,* பெ. (n.) *நிசாடு* பார்க்க; see *niśāḍu.* (சா.அக.).

**நிசாதமை** *niśādamai,* பெ. (n.) பழமுள்ளிப் பாலை; edible palay mimusops kanki. (சா.அக.).

**நிசாதல்** *niśādal,* பெ. (n.) நவச்சாரம்: ammonia chloride. (சா.அக.).

**நிசாதனம்** *niśādaṉam,* பெ. (n.) பழமுள்ளிப் பாலை; edible palay. mimusops kanki. (சா.அக.).

**நிசாபிகம்** *niśābigam,* பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric-coscinum fenestratum. (சா.அக.).

**நிசாபிகாரி** *niśābigāri,* பெ. (n.) சிற்றாமரைப்பூ; small lotus flower. (சா.அக.).

**நிசாபிசா** *niśā-piśā,* பெ. (n.) *நிசாபிகம்* பார்க்க; see *niśābigam.* (சா.அக.).

**நிசாரம்** *niśāram,* பெ. (n.) **1.** மஞ்சள்; turmeric-curcumalonga. **2.** வாழை; plantain. (சா.அக.).

**நிசாவர்த்தி** *niśā-vartti,* பெ. (n.) மஞ்சள், இந்துப்பு, கடுகு, குங்கிலியம் இவற்றைத் தேனில் அரைத்துத் துணிக்குத் தடவி வர்த்தியாகச் செய்து நாடிவிரணம், பவுத்திரம் முதலியவைகளுக்கு இடும் ஒரு மருந்து; a medicinal gauze or wick used for introducing into simus ulcer of fistula; the gauze or wick is smeared with the paste prepared with turmeric mustard, conkany resin, rock salt and honey. (சா.அக.).

**நிசி** *niśi,* பெ. (n.) 1. மஞ்சள்; turmeric . 2. மான்மணத்தி; musk. (சா.அக.)

**நிசிகம்** *niśigam,* பெ. (n.) மஞ்சள்: turmeric. (சா.அக.).

**நிசிதாவி** *niśidāvi,* பெ. (n.) செங்கொன்றை; red cassia-cassia marginata. (சா.அக.).

**நிசுலம்** *niśulam,* பெ. (n.) அலரி; oleander-Nerium odorum. (சா.அக.).

**நிசுளம்** *niśuḷam,* பெ. (n.) நீர்க்கடம்பு; water cadamba-stephegyne parviflora alias s.purpurea. (சா.அக.).

**நிசுனம்** *niśuṉam,* பெ. (n.) நீர்க்கடம்பு எனும் செடி; a plant called nīr-k-kaḍambu. (சா.அக.).

**நிசோதகம்** *niśōdagam,* பெ. (n.) செஞ்சிவதை; a red variety of turbith root-Ipomaea turpithum. (சா.அக.).

**நிட்களக்கல்** *niṭkaḷakkal,* பெ. (n.) ஒருவகை நஞ்சு (சீதங்க பாடாணம்); a mineral poison. (சா.அக.).

**நிட்குடி** *niṭ-kuḍi,* பெ. (n.) ஏலம்; cardomum-Elleteria cardamomum. (சா.அக.).

**நிட்சைமாதுறுதம்** *niṭsai- māduṟudam,* பெ. (n.) சிற்றரத்தை; lesser galangal-alpinia galanga. (minor) (சா.அக.).

**நிட்பலம்** *niṭpalam,* பெ. (n.) 1. அவரை; bean. 2. மொச்சைப்பயிறு (1,2 வைத்திய. பரிபா.); hyacinth bean (கதி.அக.).

**நிட்பவம்** *niṭpavam,* பெ. (n.) 1. அவரை; bean. 2. மொச்சை; country bean. (சா.அக.).

**நிட்பாவம்** *niṭ-pāvam,* பெ. (n.) மொச்சைக் கொட்டை; dry bean. (சா.அக.).

**நிடலம்** *niḍalam,* பெ. (n.) நெற்றி (சூடா.); forehead.

*[நுதல் → நுதலம் → நிதலம் → நிடலம்.]*

**நிடலாட்சன்** *niḍalāṭśaṉ,* பெ. (n.) (நெற்றிக் கண்ணையுடையவனான) சிவன்; sivan, as having an eye in his forehead.

*[நுதல் → நிதல் → நிடல் + அட்சன்.]*

skt. அக்ஷய → அட்ச → அட்சன்

**நிடாடம்** *niḍāḍam,* பெ. (n.) ஆந்தை (வைத்திய.கருப்பொ.); owl. (கதி.அக.).

**நிடாலம்** *niḍālam,* பெ. (n.) நெற்றி (வைத்திய. கருப்பொ.); forehead. (கதி.அக.).

*[நுதல் → நிதல் → நிடல் → நிடலம் → நிடாலம்.]*

**நிண்ணயம்** *ninnayam,* பெ. (n.) **1.** உறுதி (யாழ்.அக.); *determination, resolution.* **2.** ஆராய்வு (சங்.அக.); *ascertaining. "நிண்ணயந் தெரிவிவேகம்"* (கைவல்.தத்.8).

[நில் = உறுதி, உறுதிப்பாடு. நில் + நயம்.]

**நிண்ணயி—த்தல்** *ninnayi-,* 4 செ. குன்றாவி. (v.t.) முடிவுபடுத்துதல் (உ.வ.); to determine, resolve.

[நிண்ணயம் → நிண்ணயி—,]

**நிண்ணி—த்தல்** *ninni-,* 4 செ. குன்றாவி. (v.t.) நிண்ணயி—த்தல் பார்க்க (உ.வ.); see ninnayi-,

[நிண்ணயம் → நிண்ணயி → நிண்ணி—,]

**நிண[1]—த்தல்** *nina-,* 4 செ.கு.வி. (v.i.) கொழுத்தல்; to grow fat.

(நிணம் → நிண—,)

**நிண[2]—த்தல்** *nina-,* 3செ. குன்றாவி. (v.t.) **1.** கட்டுதல்; to tie up, fasten. "*கட்டினிணக்கு மிழிசினன்*" (புறநா.82.). **2.** முடைதல் (சூடா.); to braid.

(நிணர் → நிண—,)

**நிணக்கழலை** *nina-k-kalalai,* பெ. (n.) கொழுப்புக்கட்டி (M.L.); fatty tumour.

(நிணம் + கழலை.)

**நிணக்கும்** *ninakkum,* கு.வி.எ. (adv.) கட்டும்; binding. "*சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப் பட்ட மாரிஞான்ற ஞாயிற்றுக் கட்டினிணக்கு மிழிசினன் கையது*" (புறநா.82.).

**நிணங்கிழிப்ப** *ninankilippa,* கு.வி.எ. (adv.) தசையின் உள்சவ்வு கிழிபட; trint out flesh tissue. "*ஈர்ங்கை மறந்தவெனிரும்பே ரொக்கல் கூர்ந்த வெவ்வம் விடக்கொழு நிணங்கிழிப்பக் கோடைப் பருத்தி வீடு நிறை பெய்த*". (புறநா.393:10)

[நிணம் + கிழப்ப.]

**நிணங்கொள்புலால்** *ninankolpulal,* பெ. (n.) கொழுப்பு நிறை இறைச்சி; fatted flesh. "*நிணங்கொள் புலாலுணங்கனின்று புள்ளோப்புறலைக் கீடாகக் கணங்கொள் வண்டார்த்துலாங் கன்னி நறுஞாழல் கையிலேந்தி*" (சிலப்.7:9.).

[நிணம் + கொள் + புலால்]

**நிணச்செருக்கு** *nina-c-cerukku,* பெ. (n.) உடற்கொழுப்பாலாகிய செருக்கு; pride in one's own muscular strength. *நிணச்செருக்கு அவனை ஆட்டுகிறது.*

(நிணம் + செருக்கு.)

**நிணச்சோறு** *nina-c-cōru,* பெ. (n.) புலால் விரவின சோறு (சிலப். 5:68. உரை.); meat rice.

(நிணம் + சோறு.)

**நிணஞ்சுடுபுகை** *ninañ-cudupugai,* பெ. (n.) கொழுப்பைத் தீயிலிடுவதால் ஏற்படும் புகை; smoke arising out of burning fats. "*நிணஞ்சுடு புகையொடு கனல் சினந் தவிராது நிரம்பகல் பறிய வேறா வேணி*" (நற்.43:32.).

(நிணம் + சுடு + புகை.)

**நிணத்திசு** *nina-t-tiśu,* பெ. (n.) குருதிச்சவ்வு; adipose tissue.

[நிணம் + திசு.]

**நிணந்தவை** *ninandavai,* பெ. (n.) தெற்றின மாலை; garland. "*நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க மணந்தவை போல வரைமலை யெல்லாம்*" (பரிபா.19:80.).

**நிணந்து** *ninandu,* வி.எ. (adv.) பிணித்து; bond. "*நிணந்தெ னெஞ்ச நிறை கொண்ட கள்வனை*" (சீவக.பதுமை 144.).

**நிணநரம்புகள்** *nina-narambugal,* பெ. (n.) ஊன் நரம்புகள்(M.L.); lymphatic vessels; absorbents.

*[நிணம் + நரம்புகள்.]*

**நிணநீர்** *ninanir,* பெ. (n.) குருதியில் சென்று சேரும் வெள்ளையணுக்களைக் கொண்ட நிறமற்ற நீர்மம்; lymph.

*[நிணம் + நீர்.]*

**நிணநெய்** *nina-ney,* பெ. (n.) மணிக்கட்டு களிலுண்டாகும் பசை (M.L.); synovia.

*[நிணம் + நெய்.]*

**நிணப்பு** *ninappu,* பெ. (n.) கொழுப்பு; fat. (சா.அக.).

*[நிணம் + நிணப்பு.]*

**நிணம்** *ninam,* பெ. (n.) 1. கொழுப்பு; fat "*நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்து*" (பு.வெ.3,5.). 2.ஊன்; flesh. "*மைந்நிண விலைஞர்* " (மணிமே.28:33.). 3. ஊனீர் (வின்.); serum.

**க.** நிணெ **ம.,** **க.**நிணம்; **க.**நிணெ; **து.** நிணம்; *கோத.* நினிக்;

**நிணம்படுகுருதி** *ninam-padukurudi,* பெ. (n.) குருதி கலந்த கொழுப்பு; fat stained with blood. "*பிணஞ்சமந் தொழுகிய நிணம்படு குருதியிற் கணங் கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட*" (சிலப்,26:209.).

*[நிணம்படு + குருதி]*

**நிணமுருக்கு** *ninam-urukku,* பெ. (n.) உடம்பிலுள்ள கொழுப்பைக் கரையும்படி செய்யும் ஒரு நோய்; a disease lending to decrease fat in the system, a wasting disease as tuberculosis etc. 2. உடம்பின் கொழுப்பைக் கரையச்செய்யும் மருந்து; any medicine prescribed for reducing the fat in the body. (சா.அக.).

*[நிணம் + உருக்கு.]*

**நிணமூரி** *nina-mūri,* பெ. (n.) நிணத்தின் துண்டம்; a piece of fat. "*மூடைப் பண்ட மிடை நிறைந்தன்ன வெண்ணின மூரி யருள*" (புறநா.393.).

*[நிணம் + மூரி.]*

**நிணர்[1]–தல்** *ninar-,* 2 செ.கு.வி. (v.i.) கட்டுதல்; to tie, fasten. "*பட்டு நிணர்கட்டில்*" (சீவக. 2030.).

**து.** நிணே, நிணெ, நினெ; **துட.** நின்,

**நிணர்[2]–தல்** *ninar-,* 2 செ.கு.வி. (v.i.) செறிதல்; to crowd, gather thick. "*எங்கணு நிணர்ந்த பூங்குளிர் நிழல்*" (திருவானைக். நாட்.109.).

**நிணல்** *ninal,* பெ. (n.) சாயை; shade.

*[நில் → நில → நிழல் → நிணல்.]*

**நிணவுதி** *ninavudi,* பெ. (n.) *நிணத்திசு* (இ.வ.) பார்க்க; see *nina-t-tišu.*

**நிணவை** *ninavai,* பெ. (n.) 1. பிணிப்பு (பெருங்.உஞ்சைக். 34, 144.); tying, bondage. 2. பின்னிச் செய்யப்பட்டது; that which is plaited. **அம்பணை மூங்கிற் பைம்போழ் நிணவையும்** (பெருங். உஞ்சைக்.42,28.).

*[நிணர் → நிண → நிணவை.]*

**நிணறு** *ninaru,* பெ. (n.) 1. உருக்கம்; affection, love. "*அவன் நெஞ்சம் நிணறு கொண்டு பேசினான்*" (வின்.). 2. நலம்; benefit, good. "*கிணறு வெட்ட வேணும் நிணறு சொன்னேன்*" (இராமநா. உயுத்.23.).

தெ. நெனறு

*[நில் → நிணம் → நிணர் → நிணறு.]*

நிணர் = கட்டு, இறுக்கம், செறிவு, நட்பு.

**நிணனுகுகுருதி** *ninanugu-kurudi,* பெ. (n.) நிணத்தோடு கலந்து உகா நின்ற குருதிப் பலி; sacrifer with fat stained blood. "*நிணனுகு குருதிகொ ணிகரடு விலையே*" (சிலப்.12:19.).

**நித்தக்கட்டளை** *nitta-k-kattalai,* பெ. (n.) நாள்தோறுமாய ஏற்பாடு (வின்.); daily allotment, whether of allowance or expense.

(நித்தம் + கட்டளை.)

நில் → நிற்றல் → நித்தல் → நித்தம்.

கள் → கட்டு → கட்டளை = முறைமை; முறையான செலவு.

**நித்தக்கத்தரி** *nitta-k-kattari,* பெ. (n.) பெரிய கத்தரி; long brinjal. (சா.அக.).

**நித்தக்கருமம்** *nitta-k-karumam,* பெ. (n.) 1. அறநூல்களில் விதிக்கப்பட்டதும், செய்யாமற் போவது கரிசெனக் கருதப்படுவதுமான செயல்; a constant act or duty enjoined by sāstras, non-performance of which is considered a sin. 2. நாள்தோறும் செய்வதான செயல்; daily duties enjoined by sāstrās.

*[நித்தம் + கருமம்.]*

நில்→நிற்றம்→நித்தம்.
ஒ.நோ. வெல் → வெற்றம்
கொல் → கொற்றம்
குற்று → குத்து
முற்றகம் → முத்தகம்
பீற்றல் → பீத்தல்.
குல் → குரு → கரு → கருமம்.
கரு → கருத்தல் – செய்தல்.

**நித்தக்காய்ச்சல்** *nitta-k-kāyccal,* பெ. (n.) நாளும் அடிக்கும் காய்ச்சல் (வின்.); quotidian fever.

*[நித்தம் + காய்ச்சல்.]*

நில் → நிற்றல் → நித்தல் → (நித்தன்)→நித்தம்.

**நித்தத்துவம்** *nittattuvam,* பெ. (n.) என்றுமுளதாந் தன்மை; eternity. "*நிராமய மான நித்தத்துவம்*" (உத்தரரா.திக்குவி.248.).

*[நித்தம் + தத்துவம்.]*

நில் → நிற்றல் → நித்தல் → (நித்தன்)→நித்தம்.

**நித்தநிமந்தம்** *nitta-nimandam,* பெ. (n.) நித்தியக் கட்டளை; daily offerings in a temple. "*மகாதேவர்க்கு நித்த நிமந்தஞ் செலுத்துகைக்கு*" (S.I.I:392).

*[நித்தம் + நிமந்தம்.]*

நில் → நிற்றல் → நித்தல் → (நித்தன்)→நித்தம்.

**நித்தப்படிகாரன்** *nitta-p-paḍikāraṉ,* பெ. (n.) நாட்கூலிக்காரன்; one who works on daily wages. (சரவண. பணவிடு.81–2.).

*[நித்தப்படி + காரன்.]*

**நித்தம்**[1] *nittam,* பெ. (n.) 1. என்றும் அழியாதுள்ள நிலை; eternity. *"நேரினித்தமு மொட்டின னாகுமே"* (மேருமந்.592.). 2. ஒமகுண்டம் (பிங்.); sacrificial pit. 3. *நித்திய கருமம்* பார்க்க; see *nittiya karumam.* *"கருமநித்த நைமித்தங் காமியங்கள்"* (பிரபோத.39,13.). 4. *நீர்முள்ளி (மலை.)* பார்க்க; see *nīrmuḷḷi.*

*[* நில் → நிற்றம் → நித்தம். *]*
நித்தம் → நித்தல்.

ஒ.நோ. வெல் → வெற்றம்
கொல் → கொற்றம்
குற்று → குத்து
முற்றகம் → முத்தகம்
பீற்றல் → பீத்தல்.

இடம் (வெளி), காலம், இறைவன் மூன்றும் வேறு ஒன்றினின்றும் தோன்றாது என்றும் ஒரே தன்மையாய் நிற்கும் நித்தப் பொருளாம். காலம் கருத்துப் பொருளே. (த.ம.85.).

நிற்றம், நிச்சம், நித்தம் என்னும் மூவடிவுகளுட் கடைப்பட்ட நித்தம் என்னும் வடிவினின்று நித்ய என்னும் வடசொல்லைத் திரித்துக் கொண்டு, அதையே முத்தென்சொல் வடிவிற்கும் மூலமாகக் கூறி ஏமாற்றி வருகின்றனர் வடமொழியாளர். இதற்கு ஏதுவானது, ஏமாறுந் தன்மை மிக்க தமிழரின் பேதைமையே.

என்றுமுண்மைக் கருத்தைத் தோற்றுவித்தற்கு நிலைப்புக் கருத்தே பொருத்தமானது. வடமொழியாளர் 'நி' என்னும் முன்னொட்டை மூலமாகக் கொண்டு, ஒன்றன் உட்பட்டது, ஒன்றொடு தொடர்புள்ளது, தொடர்ந்தது, நீடித்தது, நிலைத்தது என்று கருத்துத் தொகுத்து, நித்ய என்னும் சொற்குப் பொருட்கரணியங் காட்டுவர். இதன் பொருந்தாமையை இனி மேலாயினுங் கண்டு தெளிக. (வே.க.3:47.).

**நித்தம்**[2] *nittam,* வி.எ. (adv.) எப்போதும்; constantly, perpetually, eternally. *"நித்தமணாளர் நிரம்பவழகியர்"* (திருவாச. 17:3.).

நில் → நிற்றம் → நித்தம்.

ஒ.நோ. வெல் → வெற்றம்
கொல் → கொற்றம்
குற்று → குத்து
முற்றகம் → முத்தகம்
பீற்றல் → பீத்தல்.

**நித்தம்**[3] *nittam,* பெ. (n.) நாட்டியம்; dance. *"நித்தந் திகழு நேரிழை முன்கையால்"* (பரிபா.12:43.).

skt. nrtta

**நித்தரு** *nittaru,* பெ. (n.) கற்பூரம்; camphor-camphora officinarum. (சா.அக.).

**நித்தல்**[1] *nittal,* வி.எ. (adv.) *நித்தலும்* பார்க்க; see *nittalum.* *'நித்தல் பழி தூற்றப்பட்டிருந்து'* (இறை.கள.1,14.).

*[நில் → நிற்றல் → நித்தல்.]*

**நித்தல்**[2] *nittal,* பெ. (n.) *நித்தம்* பார்க்க; see *nittam.*

*[நில் → நிற்றல் → நித்தல்.]*

**நித்தல்விழா** *nittal-viḻā,* பெ. (n.) கோயிலில் நடக்கும் நாள்பூசை (நித்தியோற்சவம்); daily procession of the cipali idol. *"நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே"* (சிலப்.உரைபெறுகட்.4.).

*[நில் → நிற்றல் → நித்தல் + விழா.]*

**நித்தலம்[1]** *nittalam,* பெ. (n.) முத்து; pearl-margarita sinensis. (சா.அக.).

**நித்தலம்[2]** *nittalam,* பெ. (n.) *நித்திலம்* பார்க்க; see *nittilam.* "*நத்தளித்த வெண்டூய வனித்தலத் தண்வயல்*" (மருதூரந்.37.).

*[நுல் → நெல் → நில் → நில = ஒளிவீசுதல். நில + திலம் = நிலத்திலம் = ஒளிவீசும் முத்து நிலத்திலம் → நித்திலம்(வே.க.3:21.). ]*

**நித்தலழிவு** *nittal-alivu,* பெ. (n.) நாட்படிச் செலவு; daily expenses. (தெ.க.தொ. **3: 298.**).

*[நில் → நிற்றல் → நித்தல் + அழிவு. அழிவு = செலவு.]*

**நித்தலும்** *nittalum,* வி.எ. (adv.) எந்நாளும்; always, continually, perpetually. "*உமை நித்தலுங் கைதொழுவேன்*" (தேவா. **25,1.**).

*[நில் → நிற்றல் → நித்தல் → நித்தலும்.]*

**நித்தவஞ்சி** *nittavañji,* பெ. (n.) பூவந்தி; soap nut tree-sapindas trifoliatus. (சா.அக.).

**நித்தவினோதம்** *nitta-vinōdam,* பெ. (n.) அருகனின் முக்குடைகளுளொன்று (சூடா.); an umbrella of Arhat, one of mukkuḍai.

*[நித்தல் + ( skt.) வினோதம்.]*

**நித்தவினோதவளநாடு** *nitta-vinōda-valanādu,* பெ. (n.) சோழமண்டலத்தின் பழைய நாடுகளில் ஒன்று; an ancient division in Cōla mandalam. "*நித்தவினோத வளநாட்டுக் கிழார்க் கூற்றத்துப் பிரமதேயம்*" (தெ.க.தொ.**2:76:95.**).

*[நில் → நிற்றல் → நித்தல் → நித்தம். நித்தம் + (skt.) வினோதம் + வளநாடு.]*

**நித்தற்கத்திரி** *nittar-kattiri,* பெ. (n.) *நித்தக்கத்தரி* பார்க்க; see *nitta-k-kattari.* (சா.அக.).

*[நித்தல் + கத்திரி.]*

**நித்தன்** *nittan,* பெ. (n.) **1.** கடவுள்; the supreme being, as eternal. **2.** சிவன் (பிங்.); Lord Sivan. **3.** அருகன் (பிங்.); Arhat.

*[நில் → நிற்றல் = நிற்கை, நிலை. நிற்றல் → நித்தல் = என்றும். நித்தல் → நித்தலும் = நிலையான, என்றுமுள்ள. நித்தல் → நித்தன் = நிலையானவன், என்றுமுள்ளவன்.]*

**நித்தாசம்** *nittāšam,* பெ. (n.) நிலவேம்பு: ground neem. french chiretta-justicia paniclata. (சா.அக.).

**நித்தாசில்லி** *nittāšilli,* பெ. (n.) பொருத்துள் பொசியும் நீர்மம்; an ankaline fluid contained in a joint cavity-synovia-a secretion like the white of a egg moisteniny the joints. (சா.அக.).

**நித்தாநித்தம்** *nittānittam,* பெ. (n.) நிலைபேறும், நிலையாமையும்; being eternal and temporal. "*நித்தநித்த நிகழுநல்லேது*" (மணிமே. **29:121.**).

*[ நித்தம் + அநித்தம். ]*

**நித்தாரம்** *nittāram,* பெ. (n.) உறுதிப்பாடு நிலைப்பேறு; determination; ascertainment. "*நித்தாரமி தென்றலும்*" (ஞானவா.சிகித்.**134.**).

skt. nir-dhāra

*[ நித்தம் + ஆரம். ]*

**நித்திகம்**[1] *nittigam,* பெ. (n.) கண்டங்கத்தரி; a prickly plant with diffuse branches. **2.** தூதுவளை; climbing brinjal.

**நித்திகம்**[2] *nittigam,* பெ. (n.) ஒருவகைப் பூடு; a kind of shurb. (த.சொ.அ.).

**நித்திட்டம்** *nittiṭṭam,* பெ. (n.) செஞ்சந்தனம்; red sandal-pterocarpus santalinus. (சா.அக.).

**நித்திடம்** *nittiḍam,* பெ. (n.) கொடிக்கத்தரி; climbing brinjal - solanum trilobatum. (சா.அக.).

**நித்திதம்** *nittidam,* பெ. (n.) *நித்திகம்* (மலை,) பார்க்க; see *nittigam.*

**நித்தியக்கட்டளை** *nittiya-k-kaṭṭaḷai,* பெ. (n.) நாள்தொறுமாய ஏற்பாடு (வின்.); daily allotment, whether of allowance or expense.

*[நில் → நிற்றல் → நித்தம் → நித்தியம் + கட்டளை.]*
இதனை நிதக்கட்டளை என்பர்.

**நித்தியகண்டம்** *nittiya-kaṇḍam,* பெ. (n.) நாள்தோறும் வரும் ஏதம்; daily peril. *'நித்திய கண்டம் பூரணாயுள்'* (உ.வ.).

*[நித்தியம் + கண்டம். நில் → நிற்றல் → நித்தல் → நித்தம் → நித்தியம்.]*

**நித்தியகதி** *nittiya-kadi,* பெ. (n.) காற்று; wind, as ever moving.

*[நித்தியம் + கதி.]*

**நித்தியகம்பலை** *nittiya-kambalai,* பெ. (n.) ஓயாச்சண்டை (யாழ்ப்.); constant quarrelling.

*[நித்தியம் + கம்பலை.]*
நில் → நிற்றல் → நித்தம் → நித்தியம். கும் → கம் → கம்பல் → கம்பலை = திரண்டெழும் பேரோசை, சண்டை.

**நித்தியகம்புலு** *nittiya-kambulu,* பெ. (n.) நித்திய கம்பலை (யாழ்ப்.) பார்க்க; see nittiya kambalai.

*[நித்தியம் + கம்புலு.]*
நித்தம் → நித்தியம்
கம்பலை → கம்பலு → கம்புலு.

**நித்தியகருமம்** *nittiya-karumam,* பெ. (n.) **1.** சாத்திரங்களில் விதிக்கப்பட்டதும் செய் யாமை தீதென்று கருதப்படுவதுமான செயல்; a constant act or duty enjoined by sastra, non-performance of which is considered a sin. **2.** சாத்திரங்களில் அறுதியிட்டப்பட்ட அன்றாட செயல்கள்; daily duties enjoyed by sastras.

*[நித்தம் → நித்தியம் + கருமம்.]*

*நில் → நிற்றம் → நித்தம் → நித்தியம்*

*குல் → குரு → கரு → கருமம் → கம்மம் (பே.வ.)* karma- Pali and Prak. *எ–டு: (கருமான்)–கருமாளன்–கம்மாளன். கரு என்னும் முதனிலை இன்று வழக்கற்றது. கருத்தல்–செய்தல்.*

*கருமம் → கம்மம் → கம். கம்மம்= முதற் றொழிலாகிய பயிர்த்தொழில்.*

*கம்மவர் → கம்மவாரு = பயிர்த் தொழில் செய்யும் தெலுங்கர். கம் = பல்வேறு கனிம (உலோக)த் தொழில். "ஈமும் கம்மும்" (தொல். 328.).*

*கம்மாளன் = பொற்கொல்லன், ஐங்கொல்லருள் ஒருவன். கம்மியன் = கற்றச்சன் (சிற்பி.) கரு + வி = கருவி. கரு + அணம் = கரணம் = செய்கை, திருமணச் சடங்கு, கருவி, அகக்கருவி. 'கற்பெனப்படுவது கரணமொடு புணர' (தொல். 1088.).*

*இதிற்கரணம் என்பது திருமண வினையாகிய சடங்கைக் குறித்தது. வடவர் 'கரு' என்னும் முதனிலையைக் 'க்ரு' எனத் திரித்துள்ளனர். இங்ஙனம் சொன் முதல் உயிர்மெய்யில், உயிரை நீக்குவது ஆரிய மரபு.*

ஒ.நோ. பொறு → ப்ரு, திரு → ச்ரீ, வரி —வ்ரீஹி. கரை – E. cry. துருவு = E.through புருவம் – E. brow.

வடவர் கரணம் என்னும் சொல்லைக் காரண என நீட்டி, அதற்கேற்பக் கார்ய என்னும் சொல்லைத் திரித்துள்ளனர். காரணம் என்னும் நீட்டம் தமிழுக்கேற்கும். ஆயின், காரிய என்னும் திரிபு ஏற்காது. ஏற்கனவே காரணம் என்பதினின்று கரணியம் என்னும் சொல் திரிந்துள்ளது. அதற்கேற்பக் கருமம் என்பதினின்று, கருமியம் (காரியம்) என ஒரு சொல்லைத் திரித்துக் கொள்ளலாம்.

செய், பண்(ணு), புரி முதலிய பல பிற ஒருபொருட் சொற்கள் தமிழில் இருப்பதனாலும், கரு என்பது வழக்கற்றுப் போனதினாலும், பின்னது வடசொல்லென மயங்கற் கிடந்தருகின்றது. தமிழ் வடமொழிக்கு முந்தியதென்றும் பெருஞ் சொல்வள மொழியென்றும் அறியின், இம்மயக்கந் தெளிந்துவிடும். தமிழ் திராவிட மொழிகட்குரிய இல், மனை, வீடு முதலிய சொற்களை மட்டுமின்றி, ஆரிய மொழிகளில் புகுந்த 'குடி' என்னுஞ் சொல்லையுந் தன்னகத்துக் கொண்டுள்ள தென்று, கால்டுவெலார் கூறியிருப்பதைக் கூர்ந்து நோக்குக. (வ.வ. 274.).

கரு – கருத்தல் = செய்தல், வினையாற்றுதல். நெல்லை மாவட்ட மீனவர் உழைப்பாளியைக் கருவாளி எனக் குறிப்பிடுதலை இன்றுங் காணலாம். கருத்தல் என்னும் வினை வடதமிழில் வழக்கூன்றித் தென்னகத்தில் வழக்கிழந்த தெனினும் இது தொன்முது செந்தமிழ்ச் சொல் என அறியத்தகும்.

**நித்தியகலியாணம்** *nittiya-kaliyāṇam*, பெ. (n.) தொலையா மகிழ்ச்சி (நிரந்தரசுகம்) (வின்.); everlasting, perpetual happiness.

*[ நித்தியம் + கலியாணம்.]*

**நித்தியகலியாணி** *nittiya-kaliyāṇi*, பெ. (n.) செடிவகையுளொன்று; old-maid, a garden plant.

*[ நித்தியம் + கலியாணி.]*

*நில் → நிற்றல் = நிற்கை, நிலை.*
*நிற்றல் → நித்தல் = என்றும்.*
*நித்தல் → நித்தம் = என்றும்.*
*நித்தம் → நித்தியம் = நிலையான, என்றும்.*
*கலி + யாணம் = கலியாணம்.*
*கலி = தழைத்தல்.*
*யாணம் = புதுமை, புதுவருவாய்.*
*கலியாணம் → கலியாணி (தென்.கட்.12.).*

**நித்தியசகலம்** *nittiyaśagalam*, பெ. (n.) இரு வகைச் சகலாவத்தையுளொன்று.; one among two types of sagālavattai. (கதி.அக.).

**நித்தியசுந்தரேசுவரர்** *nittiya-sundarēsuvarar*, பெ. (n.) திருநெடுங்களத்திருக்கோயிலில் கோயில் கொண்டிருக்கும் இறைவன்; the deity at Thirunedungaḷam. (த.சொ.அக.).

*[ நித்தியம் + சுந்தரேசுவரர்.]*

**நித்தியசுமங்கலி** *nittiya-sumaṅgali*, பெ. (n.) கணிகையர்; dancing-girl.

*[ நித்தியம் + சுமங்கலி.]*

*நில் → நிற்றல் = நிலையான, என்றும்.*
*நிற்றல் → நித்தல் = என்றும்.*
*நித்தல் → நித்தியல் = என்றும்.*
*நித்தம் → நித்தியம் = என்றும்.*
*நன்கலம் (நங்கலம்) = மங்கலம்.*
*நன்கலம் = தாலி, சிறந்த அணி.*
*நன்கலம்= அணியத்தக்கநிலை, மங்கலம்.*
*நன்கலம் = மங்கலம். ந= ம,போலி*
*மாட்டுப் பெண் = நாட்டுப்பெண்*
*முனி = நுனி*
*மங்கலம் = மங்கலி.. 'சு' வடசொல் முன்னொட்டு தமக்கென வரைந்த கணவரின்றி நாடொறுமொருவரைக் கணவராய்க் கொள்ளுதலின் கணிகையர் நித்தியசுமங்கலி எனப்பட்டனர்.*

**நித்தியசேவகம்** *nittiya-śēvagam*, பெ. (n.) நாடோறும் செய்யுஞ் தொண்டு; daily service. (த.சொ.அக.).

*[ நித்தியம் + Skt. சேவகம்.]*

**நித்தியசேவனை** *nittiya-šēvaṉai,* பெ. (n.) *நித்திய சேவகம்* பார்க்க; see *nittiya-sevagam* (த.சொ.அக.).

*[ நித்தியசேவகம் → நித்தியசேவனை.]*

**நித்தியதாநம்** *nittiya-dānam,* பெ. (n.) *நித்தியதானம்* பார்க்க; see *nittiya-dāṉam* (த.சொ.அக.).

**நித்தியதானம்** *nittiya-dāṉam,* பெ. (n.) நாடொறுமளிக்குங் கொடை (வின்.); daily alms, gifts, or presents.

*[ நித்தியம் + தானம்.]*

**நித்தியநட்சத்திரம்** *nittiya-natcattiram,* பெ. (n.) *நித்தியவிண்மீன்* பார்க்க; see *nittiya-viṇmīṉ.*

*[ நித்திய + skt. நட்சத்திரம்]*

**நித்தியநைமித்திகம்** *nittiya-naimittigam,* பெ. (n.) 1. நாட்சடங்கும் சிறப்புச்சடங்கும்; daily and occasional or special ceremonies. 2. பழம் நூல்களால் உருவாக்கப்பட்டதும், கோள்நிலை கண்டு இன்றியமையாது செய்ய வேண்டியதுமான செயல்; any regularly - recurring, occasional duty enjoined by sastras.

*[ நித்தியம் + skt.நைமித்திகம்.]*

**நித்தியப்பகுவசனம்** *nittiya-paguvašaṉam,* பெ. (n.) 1. பன்மையாகவே வழங்குஞ் சொல்; words used always in the plural as makkal. 2. வசவு (உ.வ.); abusive language.

*[ நித்தியம் + பகுவசனம்.]*

**நித்தியப்படி[1]** *nittiya-p-paḍi,* வி.எ. (adv.) நாடோறும்; daily. *'நித்தியப்படிக்குத் தனித்துப்படுத்து'* (தனிப்பா. ii, 49, 118.).

*[ நித்தியம் + படி.]*

*படி = போல.*

**நித்தியப்படி[2]** *nittiya-p-paḍi,* பெ. (n.) *நித்தியக் கட்டளை* பார்க்க; see *nittiya-k-kaṭṭaḷai.*

*நித்தியம் + படி.*
*படி = படியளந்து செய்யும் கட்டளை.*

**நித்தியப்படித்தரம்** *nittiya-p-paḍittaram,* பெ. (n.) கோயில் நித்தியக்கட்டளை; fixed daily allowance for routine service in a temple.

*[ நித்தியம் + படித்தரம்.]*

**நித்தியப்படிமோகினி** *nittiya-p-paḍi-mōgiṉi,* பெ. (n.) ஆலயத்திற்கு நாள்தொறும் நிகழ்வுறும் பூசையின் பொருட்டு அரசால் கொடுக்கப்படும் படித்தொகை (ரொக்கம்) (W.G) ; allowance in money for daily services in a temple, made by the government.

*[நித்தியப்படி + skt. மோகினி.]*

**நித்தியப்பிரளயம்[1]** *nittiya-p-piraḷayam,* பெ. (n.) 1. உயிர்களின் உறக்க (சுழுத்தி) நிலை (சங்.அக.); (நாள்தோறும் நிகழும் பிரளயம்) lit. daily dissolution; sound sleep. 2. இறப்பு (வின்.); death.

*[நித்தியம் + skt. பிரளயம்.]*

**நித்தியப்பிரளயம்[2]** *nittiya-p-piraḷayam,* பெ. (n.) இடைவிடாத சாவு: continuous death. (த.சொ.அக.).

**நித்தியப்பூசை** *nittiya-p-pūšai,* பெ. (n.) அன்றாடு நிகழ்வுறும் பூசை; daily worship, as in a temple.

*[நித்தியம் + பூசெய் → பூசை.]*

**நித்தியம்**[1] *nittiyam,* பெ. (n.) (சாசுவதம்) நிலையானது; eternity, permanence. நித்தியமாய் நிர்மலமாய் (தாயு. பொருள்வ. 1.). 2. முத்தி (யாழ்.அக.); everlasting bliss. 3. நித்திய பூசை பார்க்க; see nittiya pūšai. 4. நித்திய விதி, 1 பார்க்க. உடையவர் நித்தியம். 5. கடல் (யாழ்.அக.); sea, ocean.

*[நில் → நித்தம் → நித்தியம்.]*

**நித்தியம்**[2] *nittiyam,* வி.எ. (adv.) நாடோறும்; daily.

**நித்தியம்**[3] *nittiyam,* பெ. (n.) *நித்திகம்* பார்க்க; see *nittigam.*

**நித்தியமல்லி** *nittiyamalli,* பெ. (n.) 1. சிவப்புப் பூக்களையுடையதொரு பூடு; jasmine bendy-hisbiccus hirtus. 2. ஒருவகை மல்லிகை; (சா.அக.).

**நித்தியமல்லிகை** *nittiya-malligai,* பெ. (n.) மல்லிகை வகை: a kind of jasmine.

*[நித்தம் → நித்தியம் + மல்லிகை.]*

**நித்தியமுத்தன்** *nittiya-muttan,* பெ. (n.) 1. கடவுள் (வின்.); God, as the being of eternal bliss.

**நித்தியமுத்தி** *nittiya-mutti,* பெ. (n.) மீளா நற்கதி (யாழ்.அக.); eternal bliss.

*[நித்தியம் + முத்தி.]*

**நித்தியமோட்சம்** *nittiya-mōṭcam,* பெ. (n.) *நித்தியமுத்தி* (யாழ்.அக.) பார்க்க; see *nittiya mutti.*

*[நித்தியம் + மோட்சம்.]*

**நித்தியயோகம்** *nittiya-yōgam,* பெ. (n.) 1. குறையா(த) செல்வம்(வின்.); everlasting wealth. 2. என்றும் விடாசேர்க்கை; perpetual, inseparable union.

**நித்தியல்**[1] *nittiyal,* பெ.அ. (adj.) நாள்தோறும்; daily. *"நித்தியல் திருப்பெருக்கு அமுது கொடுக்கிற"* (T.A.S.v,117.).

*[நித்தம்→ நித்தயம் → நித்தியல்.]*

**நித்தியல்**[2] *nittiyal,* பெ. (n.) 1. *நித்தியபூசை* பார்க்க; see *nittiya-pūšai.* 2. *நித்தியக்கட்டளை* பார்க்க; see *nittiya-k-kaṭṭalai.*

**நித்தியவஞ்சி** *nittiya-vañji,* பெ. (n.) கொஞ்சி வஞ்சி; gum lac tree-schleichera trijuga. (சா.அக.).

**நித்தியவநித்தியம்** *nittiya-v-anittiyam,* பெ. (n.) *நித்தாநித்திம்* பார்க்க; see *nittā-nittam.* *"நித்தியவ நித்தியங் கணிண்ணயம்"* (கைவல். தத். 8.)

*[நித்தியம் + அ(ல்)நித்தியம்.]*

**நித்தியவாசம்** *nittiya-vāšam,* பெ. (n.) நிலையான இருப்பு; permanent habitation.

*[நித்தியம் + வாசம்.]*

**நித்தியவாசி** *nittiya-vāši,* பெ. (n.) இறைவன் (கிறித்.); God, as the eternal being.

*[நித்தியம் + வாசி*
*நித்தல் → நித்தம் → நித்தியம்*
*வதி → வசி → வாசி.]*

**நித்தியவிண்மீன்** *nittiya-viṇmīṉ,* பெ. (n.) அன்றன்று நிலவுடன் சேரும் நாண்மீன்; lunar asterism pertaining to each day.

*[நித்தியம் + விண்மீன்.]*

**நித்தியவிதி** *nittiya-vidi,* பெ. (n.) 1. அன்றாடக் கடமையுணர்த்தும் நூல்; book of rules on daily duties. 2. இறந்தவர் பொருட்டு பத்து நாளுஞ் செய்யும் சடங்கு (உ.வ.); daily offering to the deceased during the ten days following death. 3. ஓமக்கிடங்கு (யாழ்.அக.); sacrificial pit. 4. காவு கொடுக்குமிடம் (யாழ்.அக.); sacrificial altar.

*[நித்தியம் + விதி.]*

*skt.* விதி

த. நெறி.

**நித்தியவிபூதி** *nittiya-vibūdi,* பெ. (n.) திருமாலின் இருப்பிடம் (அஷ்டாதச. ஸ்ரீவசன. 4, பிர. 381, வியா.); the abode of Tirumāl.

**நித்தியன்** *nittiyaṉ,* பெ. (n.) கடவுள்(வின்.); God, as eternal.

*[நித்தம் → நித்தியம் → நித்தியன்.]*

**நித்தியாசாரம்** *nittiyāšāram,* பெ. (n.) நாடொறும் கடைப்பிடிக்க வேண்டுவன (C.G.); daily observance.

*[நித்தியம் + Skt. ஆசாரம்.]*

**நித்தியாதேவா** *nittiyādēvā,* பெ. (n.) தழுதாழை; wind killer-cleodendron phlomoides. (சா.அக.).

**நித்தியாநித்தியம்** *nittiyā-nittiyam,* பெ. (n.) *நித்தாநித்தம்* பார்க்க; see *nittā-nittam.*

*[நித்தியம் + அல் + நித்தியம்.]*

**நித்தியானந்தம்** *nittiyāṉandam,* பெ. (n.) நிலையான மகிழ்ச்சி (வின்.); eternal bliss. 2. வீடுபேறு (யாழ்.அக.); salvation.

*[நித்தியம் + Skt. ஆனந்தம்.]*

**நித்தியானந்தன்** *nittiyāṉandaṉ,* பெ. (n.) கடவுள் (சங்.அக.); God.

*[நித்தியம் + Skt. ஆனந்தன்.]*

**நித்தியானம்** *nittiyāṉam,* பெ. (n.) பார்க்கை (யாழ்.அக.); seeing, sight.

**நித்திரகாசம்** *nittira-kāšam,* பெ. (n.) நொச்சி; notchi-vitex negundo. (சா.அக.).

**நித்திரம்** *nittiram,* பெ. (n.) *நிதித்திகம்* பார்க்க; see *nidittigam.* (சா.அக.).

**நித்திரவரி** *nittira-vari,* பெ. (n.) *நிதித்திகம்* பார்க்க; see *nidittigam.* (சா.அக.).

**நித்திராவி** *nittirāvi,* பெ. (n.) ஊமத்தை; dhatura-datura stramonium. (சா.அக.).

**நித்தில்**[1] *nittil,* பெ. (n.) நொச்சி; five leaved chaste tree-vitex negundo. (சா.அக.).

**நித்தில்²** *nittil,* பெ. (n.) மின்மினி (நாமதீப. 253.); firefly.

*[நிலத்தில் > நித்தில்.]*

**நித்திலக்கோவை** *nittila-k-kōvai,* பெ. (n.) அகநானூற்றின் மூன்றாவது பகுதி; the third section of Aganāṉūṟu.

*[நித்திலம் + கோவை.]*

நிலத்திலம் என்பது இடைக்குறையாய் நித்திலம் என்றாயிற்று என்பது பாவாணர் கருத்து.

சங்கப் பனுவலுள் அகநானூறென்னும், நூலின் மூன்று பகுதிகளுள் இறுதிப் பகுதி நித்திலக்கோவை என்பதாகும். அகம் பற்றிய நானூறு பாக்களின் தொகுதி அகநானூறென்று கொள்வோமாயின், அப்பொருள்பற்றிய நானூறு பாக்களைக் கொண்ட குறுந்தொகைக்கும், நற்றிணைக்கும் இப்பெயர் பொருந்துதல் வேண்டும். அங்ஙனமின்மையை அறிவோர் ஓர்ந்துணர்க. அகநானூற்றுக்கு நெடுந்தொகையென்றொரு பெயருமுண்டு. இஃது அடி நிமிர்ந்தோடி அகப்பொருட் பனுவலுக்கியன்ற முதல் கரு உரி என்னும் முப்பொருளையும் அப்பொருட்கேயுரிய உள்ளுறையுவமைகளையும் இறைச்சிப்பொருளையும் விரித்தோதும் சிறப்புடைத்தாதலால் அகநானூறு என்னும் பெயர் இதற்கு மாத்திரமே பொருந்துவதாயிற் றென்பது கற்றறிந்தார் துணிபு.

இதன்கண்ணமைந்துள்ள நானூறு பாக்களை வரிசைப்படுத்தியமைத்த அமைப்பு வியத்தற்குரியதும் தனிச்சிறப்பு வாய்ந்ததுமாகும். 1, 3, 5, 7, 9 என ஒற்றைப்படை எண் பற்றி வரும் பாக்களனைத்தும் பாலைத் திணைக்கும், 2, 8, 12, 18, 22, 28 என்னும் முறை பற்றி வரும் பாக்களனைத்தும் குறிஞ்சித் திணைக்கும் 4, 14, 24, 34 என்னும் முறைபற்றி வரும் பாக்களனைத்தும் முல்லைத் திணைக்கும், 6, 16, 26, 36 என்னும் முறைபற்றி வரும் பாக்களனைத்தும் மருதத் திணைக்கும், 10, 20, 30, 40 என்னும் முறை பற்றி வரும் பாக்களனைத்தும் நெய்தற்றிணைக்குமுரிய வாயமைந்து பாலைக்கு இருநூறும், குறிஞ்சிக்கு எண்பதும், முல்லை, மருதம் நெய்தலுக்கு நாற்பது நாற்பதுமாக நானூறு பாக்களடங்கிய பனுவலாயமைந் திலங்குகின்றது.

முதலிலுள்ள 120 பாக்களுக்குக் களிற்றியானை நிரை எனவும், 121 முதல் 300 பாக்களுக்கு மணிமிடைபவளம் எனவும், 301 முதல் 400 முடியவுள்ள பாக்களுக்கு நித்திலக் கோவை எனவும் பெயர் கொடுத்து இந்நூலை மூன்று பகுதிகளாகப் பகுத்திருப்பதும் போற்றற்குரியதே. இவ்வாறு பெயரிட இந்நூலிற் போந்துள்ள அழகிய சொற்றொடர்களையே ஆய்ந்தெடுத்துப் பெயராக அமைத்தல் வேண்டு மென்று இப்பெயர்களைச் சூட்டியவர் முயன்றுள்ளன ரென்று ஊகித்தற்கிடனுளது. மணிமிடைபவளம் என்னுந் தொடர் இந்நூலகத்து இடைக்காடனார் பாடிய 304 ஆவது பாடலில்

*'சுரும்பிமிர் பூதப் பிடத்தளையவிழ*
*அரும்பொறி மஞ்ஞை யால வரிமணல்*
*மணிமிடை பவளம் போல அணிமிகக்*
*காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்*
*ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப'*

என்றாங்கமைந்துள்ளதைக் கண்டு இத்தொடர் தானே ஒரு பகுதிக்குப் பெயராக அமையுமென்று கருதி இதுபோன்று பெயர்த்தன்மையுடைய வேறு இரண்டு தொடர் பெறுதற்கு முயன்றும் கிடைக்கப் பெறாமை யால் நிரலாகத் தொடுக்கப்பட்ட கோவையாகலின் அப்பொருளமைந்த 'களிற்றின நிரை' என இந்நூலுள் போந்த தொடரினையே களிற்றியானை நிரை என சிறிது திருத்தி அதனை ஒரு பகுதிக்குப் பெயரமைத்தனரென்றும் எஞ்சிய பகுதிக்கு நித்திலக் கோவை என்னும் பொருள்பட இந்நூலிற் போந்துள்ள அழகிய சொற்றொடர் பலவற்றையும் கருதி அப்பொருள் பயப்ப நித்திலக்கோவையென்று பெயரமைத்தனரென்றும் கொள்ளலாம்.

இனி, இவ்வகநானூற்றின் முற்பகுதியில் சார்த்து வகையால் வருகின்ற அக்காலத்து மன்னர் போரும் புகழும் அமைந்த செய்யுள்களை ஆராய்ந்தெடுத்துக் கோத்து அவற்றினூடே களிற்றியானையின் பெயர்களும் மறப்பண்பும் மிக்குத் தோன்றுதலால் அம் மறப்பண்பு இப்பெயரினும் தோன்றல் வேண்டும் என்று கருதி '*களிற்றியானை நிரை*' என்னும் இப்பெயரை அம்முற்பகுதிக் கிட்டனரெனலாம். இப்பெயர் மறப்பண்புணர்த்தும் தன்மையுடைத் தாதலும் நினைக.

இங்ஙனமே மணிமிடைபவளத்தில் சார்த்து வகையாற் கூறப்பட்ட புறப்பொருளும் நூல்நுவலும் அன்பறமாகிய அகப்பொருளும் விரவி வருமாறு கோவை செய்து அச்செய்கை தோன்ற மணிமிடைபவளம் எனப் பெயரிட்டனரெனலாம்.

நித்திலக்கோவையில் முழுவதும் இன்பநுதலிய செய்யுள்களே காணப்படுகின்றன. முற்பகுதிகளிற் போலச் சார்த்துவகையால் மன்னருடைய போரும் புகழும் கூறுகின்ற செய்யுள்கள் இல்லை. ஆதலான், இஃது இன்பமாகிய ஒரு பொருளே நுதலி வருகின்ற பண்பு தோன்ற நித்திலக்கோவை என்னும் இனிய இப்பெயரை இட்டனர் எனலாம்.



நித்தியமல்லி



நிலாவாரை



நிலப்பனங்கிழங்கு



நிலவேம்பு

**நித்திலத்தாமம்** *nittila-t-tāmam,* பெ. (n.) முத்துமாலை; pearl garland. *"மத்தக மருங்கின் மாலையொடு கிடந்த நித்திலத் தாம நிலையின்வாழாமை"*.(பெருங். உஞ்ஞைக். 48:62.).

*[நித்திலம் + தாமம்.]*

**நித்திலப்பூண்** *nittila-p-pūṇ,* பெ. (n.) முத்தாலான பூண்; pearl ring. *"நித்திலப் பைம்பூ ணிலாத்திக ழுவிரொளித் தண்கதிர் மதியத் தன்ன மேனியன்."* (சிலப்.22:17.).

*[நித்திலம் + பூண்.]*

**நித்திலப்பூம்பந்தர்** *nittila-p-pūmpandar,* பெ. (n.) முத்துப் பந்தல்; roof with pearls. *"நீல விதானத்து நித்திலப் பூம்பந்தர்க் கீழ்"*. (சிலப். 1:49.).

*[நித்திலம் + பூ + பந்தல் → பந்தர். ல > ர போலி]*

**நித்திலம்** *nittilam,* பெ. (n.) முத்து; pearl. *"உரைபெறு நித்திலத்து மாலை"* (சிலப்.3:112– 3.). *"எக்கர் இடுமணல்மேல் ஓதம் தரவந்த நித்திலம் நின்றிமைக்கும் நீள்கழித் தண்சேர்ப்ப"* (ஐந். ஐம்.48.).

நுல் → நெல் → நில் → நில.
நில = ஒளி வீசுதல்.
நில + திலம் = நிலத்திலம்.
நிலத்திலம் = ஒளிவீசும் முத்து.
நிலத்திலம் → நித்திலம். (வே.க.3:21.)
இனி,
நிழற்றுதல் = ஒளிவீசுதல்.
நிழற்றி = ஒளிஉமிழ்வது.
நிழற்றி → நிழத்தி → நித்தி → நித்திலம் என்றுமாம்.

**நித்திலமதாணி** *nittila-madāṇi,* பெ. (n.) ஒருவகை அணிகலன், முத்துமாலை; an ornament made up of pearl. *முத்தாலாயது நித்திலமதாணி அத்தகு மதிமறு.* (பரிபா. 2:30.).

*[நித்திலம் + அது + அணி.]*

**நித்திலமாலை** *nittila-mālai,* பெ. (n.) முத்து மாலை; pearl garland. *"உரைபெறு நித்திலத்து மாலைத் தாமம்"* (சிலப். 3:11.).

*[நித்திலம் + மாலை.]*

**நித்திலவட்டம்** *nittila-vaṭṭam,* பெ. (n.) முத்து மாலை; garland of pearls. *"நித்தில வட்டமோர் பொன்செய் நாண்"* (சீவக.1323.).

*[நித்திலம் + வட்டம்.*
*வள் → வளை → வட்டம்.]*

**நித்திலவிதானம்** *nittila-vidāṉam,* பெ. (n.) முத்துப்பந்தர்; pearl ceiling. "திகழொளி நித்திலச் சித்திர விதானத்து விளங்கொளி பரந்த பளிங்கு செய் மண்டபத்து" (மணிமே. 18:46–47.).

**நித்திலவூர்தி** *nittila-v-ūrdi,* பெ. (n.) முத்துப் பல்லக்கு; a planquin decorated with pearls. *"நீந்து நித்திலவூர்தி"* (சீவக. 858.).

*[நித்திலம் + ஊர்தி.]*

**நித்திறம்** *nittiṟam,* பெ. (n.) கண்டங்கத்தரி; என்னுஞ் செடி: a plant called kaṇḍaṅ-kattari. (சா.அக.).

**நித்தை[1]** *nittai,* பெ. (n.) உமை; Parvadi, as eternal, *"நித்தை யனுப்பிரவேசி"* (கூர்மபு. திருக்.21.).

*[நில் → நிற்றல் = நிலையானது.*

*நிற்றல் → நித்தல் = நிலையானது, அழிவற்றது. நித்தல் → நித்தன் = அழிவற்றவன்.*

*நித்தன் → நித்தை = அழிவற்றவள், நிலைத்திருப்பவள்.]*

**நித்தை²** *nittai,* பெ. (n.) உறக்கம்; sleep. *"நித்தைநீள் பசலைப் பேரோர் விராகெனும் வேலின் வீழ்"* (சீவக.3080.).

க. நித்தெ.

**நிதகம்** *nidagam,* பெ. (n.) நீர்முள்ளி (மலை.); water thistle-nygrophila spinosa alias barleria longiflora. (சா.அக.).

**நிதகாரி** *nidagāri,* பெ. (n.) *நிதகம்* பார்க்க; *see nidagam.* (சா.அக.).

**நிதத்துரு** *nidatturu,* பெ. (n.) சோனைப்புல்; guinea grass-panicum maximum. (சா.அக.).

**நிதந்துய்—த்தல்** *nidantui,* 4 செ.குன்றாவி. (v.t), நாள்தோறும் உண்ணல்; to eat all the day.

*[நிதம் + துய்—.]*

**நிதம்¹** *nidam,* பெ. (n.) நஞ்சு; poison. (சா.அக.).

**நிதம்²** *nidam,* வி.எ. (adv.) நாளும்; daily, *"நிதமிந்தப் படியிருந்து"* (திருப்பு.788.).

*[நித்தம் → நிதம்.]*

**நிதம்பசூலை** *nidamba-šūlai,* பெ. (n.) பிள்ளைப் பேற்றின் (பிரசவத்தின்) முறைக் கேட்டால் உண்டாம் நோய்வகை (வின்.); an arthritic disease, due to derangement in the process of childbirth.

*[நிதம்பம் + சூலை.]*

**நிதம்பம்** *nidambam,* பெ. (n.) **1.** பெண்ணின் குந்துபுறம் (குண்டி) (பிருஷ்டம்); buttocks or hind quarters; posteriors, especially of a woman. **2.** அல்குல் (பிங்.); pubic region. *''இன்றீங் கிளவியு நிதம்பமு மொன்றி''* (ஞானா. 60,6.). **3.** மலைப்பக்கம் (பிங்.); side or swell of a mountain. **4.** ஆற்றின் கரை (யாழ்.அக.); bank or shore as of a river. **5.** நடனக் கை வகை (சிலப்.பக்.81.); (nātya.) a hand-pose. **6.** கற்பரி நஞ்சு; a mineral poison. **7.** தோள் (யாழ்.அக.); shoulder.

skt.-nitamba.

**நிதற்பம்** *nidarpam,* பெ. (n.) வேம்பு; margosa-azadiracta indica. (சா.அக.).

**நிதானகாண்டம்** *nidāṇa-kāṇḍam,* பெ. (n.) வளி முதலா எண்ணிய முக்கூற்றின் அளவு வேறுபாட்டினால் உடம்பிலுண்டாகும் நோய் பற்றிக்கூறும் மருத்துவநூல்; the branch of medicine in ayurveda which treats of the essential nature of diseases,their structural and functional changes, their causes and symptoms. etc. (சா.அக.).

*[நிதான + காண்டம்.]*

**நிதானநூல்** *nidāṇa-nūl,* பெ. (n.) மாதவ நிதானம் என்னும் மருத்துவநூல்; an ayurvedic book called mādava nidāṇam. (சா.அக.).

**நிதிகோமல்** *nidi-k-komal,* பெ. (n.) முருங்கை; moringa tree-Hyperinthera moringo. ((சா.அக.).

**நிதிசம்** *nidišam,* பெ. (n.) பெருவழுதலை; long brinjal- Solanum melongina. (சா.அக.).

**நிதித்திகம்** *nidittigam,* பெ. (n.) **1.** கண்டங் கத்திரி; prickly night shade; yellow berried night shade-solanum jacquini. **2.** ஏலம்; cardomum. (சா.அக.).

**மறுவ.** நிதித்திகா.

**நிதித்துருஞ்சு** *niditturuñju,* பெ. (n.) வெண் கருங்காலி; egg fruited ebony-diosphyros vocarpa. (சா.அக.).

**நிதிந்தம்** *nidindam,* பெ. (n.) *நிதித்திகம்* பார்க்க; *see nidittigam.* (சா.அக.).

**நிதிநாயகன்** *nidināyagaṉ,* பெ. (n.) வெட்டி வேர்; cuscus root-andropogon muricatus. (சா.அக.).

**நிதிநூல்** *nidinūl,* பெ. (n.) புதையலைக் கண்டறியும் செய்திபற்றிக் கூறும் நூல்; a system of metallurgy burried treasures. (சா.அக.).

**நிதியம்** *nidiyam,* பெ. (n.) மிளகு; pepper-piper nigrum. (சா.அக.).

**நிதியவம்** *nidiyavam,* பெ. (n.) சிறுதேக்கு; bettle killer-cleodendron serrata. (சா.அக.).

**நிதியோபம்** *nidiyōbam,* பெ. (n.) குங்கிலியம்; bedellium-shorea robusta. (சா.அக.).

**நிதைருநூறு** *nidairunūṟu,* பெ. (n.) சீந்தில்; moon creeper -menispermum condifolium alias tinosphora cordifolium. (சா.அக.).

**நிந்திரம்** *nindiram,* பெ. (n.) கண்டங்கத்தரி (மலை.); a thorny plant.

**நிப்பாட்டம்** *nippāṭṭam,* பெ. (n.) *நிற்பாட்டம்* பார்க்க; see *niṟ-pāṭṭam.*

*[நிற்பாட்டம் → நிப்பாட்டம்.]*

**நிப்பாட்டியம்** *nippāṭṭiyam,* பெ. (n.) *நிற்பாட்டம்* (இ.வ.) பார்க்க; *see niṟpāṭṭam.*

*[நிற்பு + ஆட்டம் → நிற்பாட்டம் → நிற்பாட்டியம் → நிப்பாட்டியம்]*

**நிப்பாட்டு[1]–தல்** *nippāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிற்பாட்டு[1]–தல் பார்க்க; see *niṟ-pāṭṭu-.*

**நிப்பாட்டு[2]** *nippāṭṭu,* பெ. (n.) *நிற்பாட்டு[2]* பார்க்க; *see niṟpāṭṭu.*

**நிபம்** *nibam,* பெ. (n.) **1.** கடம்பு; cadamba tree-nauclea cadamba. **2.** வேம்பு; margasa-azadiracta indica. **3.** நீர்ச்சாடி; water jar. (சா.அக.).

**நிபலம்** *nibalam,* பெ. (n.) முடக்கொத்தான்; palsy creepe-cardiospermum halicacabum. (சா.அக.).

**நிம்தேசன்** *nimdēsaṉ,* பெ. (n.) கொத்தான்; air creeper- cassytha filiformis. (சா.அக.).

**நிம்பக்காய்** *nimba-k-kāy,* பெ. (n.) **1.** வேப்பங் காய்; margosa fruit. **2.** எலுமிச்சங்காய்; lime fruit. (சா.அக.).

**நிம்பகம்** *nimbagam,* பெ. (n.) வேம்பு; margosa tree-azadiracta indica. (சா.அக.).

**நிம்பச்சாறு** *nimba-c-cāṟu,* பெ. (n.) எலுமிச்சம் பழச்சாறு; juice of lime fruit or margosa fruit. (சா.அக.).

**நிம்பசேதம்** *nimbašēdam,* பெ. (n.) முடக் கொற்றான் (மலை.); ballon vine. (சா.அக.).

**நிம்பத்தாரோன்** *nimba-t-tārōṉ,* பெ. (n.) பாண்டிய குல அரசர்; the pāṉdiya-kings.

*[நிம்பம் + தாரோன்.]*

தமிழக வேந்தர்கள் தமக்குரிய குறியீடுகளுளொன்றாகப் பூவையும், மாலையையும் கொள்வது பண்டை மரபு. அந்த வகையில் வேம்பு மாலையை அடையாளமாகக் கொண்டகுடி பாண்டியகுடி.

**நிம்பத்தின்சளி** *nimbattiṉ-šaḷi,* பெ. (n.) வேப்பம்பிசின் (தைலவ.தைல.); margosa resin.

*[நிம்பம் + சளி.]*

**நிம்பதரு** *nimbadaru,* பெ. (n.) 1. வேப்பமரம்; margosa tree. 2. எலுமிச்சை மரம்; lime tree citrusmedica (acida). (சா.அக.).

**நிம்பதேசி** *nimbadēši,* பெ.(n.) முடக்கொத்தான்; palsy curer-cardio spermum halicacabum. (சா.அக.).

**நிம்பதைலம்** *nimbatailam,* பெ. (n.) 1. வேப்பெண்ணெய்; margosa oil. 2. வேப்பெண்ணெய்த் தைலம்; a medicated oil prepered with the margosa oil as the chief ingredient along with other drugs. (சா.அக.).

**நிம்பப்பத்திரி** *nimba-p-pattiri,* பெ. (n.) வேப்பிலை; margosa leaf. (சா.அக.).

**நிம்பப்பழம்** *nimba-p-paḻam,* பெ. (n.) 1. வேப்பம்பழம்; margosa ripe fruit. 2. எலுமிச்சம் பழம்; lime fruit. (சா.அக.).

**நிம்பப்பாசி** *nimba-p-pāši,* பெ. (n.) வேப்பம் பாசி; an acquatic plant-moschara corallina. (சா.அக.).

**நிம்பப்பாசிகம்** *nimba-p-pāšigam,* பெ. (n.) எலுமிச்சம் பழச்சாறு; juice of lime fruit. (சா.அக.).

**நிம்பம்** *nimbam,* பெ. (n.) வேம்பு; margosa, neem. "*நிம்பம் முளைத்து நிகழ்தல் நித்தியம்*" (மணிமே.27:173.).

**நிம்பமாலை** *nimba-mālai,* பெ. (n.) *நிம்பளம்* பார்க்க (நாஞ்.); *see nimbaḷam.*

**நிம்பமோலி** *nimba-mōli,* பெ. (n.) வேப்பம் பட்டை; bark of margosa tree. (சா.அக.).

**நிம்பயிலை** *nimba-ilai,* பெ. (n.) 1. வேப்பிலை; margosa leaf. 2. கறிவேப்பிலை; curry leaf used in preparation of food - murraya koenigi. (சா.அக.).

**நிம்பழச்சாறு** *nimbaḻa-c-cāṟu,* பெ.(n.) வேப்பம் பழச்சாறு அல்லது எலுமிச்சம் பழச்சாறு; juice of margosa fruit or lime fruit. (சா.அக.).

**நிம்பளம்** *nimbaḷam,* பெ. (n.) *நிம்மதி* (இ.வ.) பார்க்க; *see nimmadi.*

**நிம்பன்** *nimbaṉ,* பெ. (n.) வேப்பமாலையுடைய பாண்டியன் (பழ.); the pandya king, as wearing a garland of morgosa flowers.

*[நிம்பம் → நிம்பன்.]*

**நிம்பாணி** *nimbāṇi,* பெ. (n.) இணைக்கும்படி இருபக்கமும் கூருள்ள ஆணி; coupling nail.

*[நெம்பு + ஆணி → நெம்பாணி → நிம்பாணி.]*



**நிம்பிச்சி** *nimbicci,* பெ. (n.) சர்க்கரை வேம்பு; sweet margosa so called from its bark being sweet after some years. (சா.அக.).

**நிம்பியம்** *nimbiyam,* பெ. (n.) வாழை; plantain tree-musa paradisiaca. (சா.அக.).

**நிம்பிரி** *nimbiri,* பெ. (n.) பொறாமை; jealousy, "*சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு*" (தொல். பொருள்.245.).

**நிம்பு—தல்** *nimbu-,* 5 செ.குன்றாவி.(v.t.) நெம்புதல்; to lift with a lever,

*[நெம்பு—, → நிம்பு—,]*

**நிம்புகம்** *nimbugam,* பெ. (n.) எலுமிச்சை; lime-citrus medica. (சா.அக.).

**நிம்பொளம்** *nimboḷam,* பெ. (n.) முத்துவகை; a kind of pearl. "*ஒப்புமுத்துங் குறுமுத்தும் நிம்பொளமும்*" (தெ.க.தொ. 2:143.).

**நிமம்** *nimam,* பெ. (n.) பிடர்த்தலை (பிங்.); nape of the neck.

*[நிவ → நிம → நிமம், நிவ = உயர, மேலே.]*

**நிமயம்** *nimayam,* பெ. (n.) 1. கண்ணிமைப் பொழுது; twinkling of the eye, moment, instant; 2. அறுபது நொடி கொண்ட காலவளவு; minute of time =1/60 hour.

*[நிமையம் → நிமயம்]*

**நிமரம்பாம்பு** *nimaram- pāmbu,* பெ. (n.) '*இரையெடுத்து அசைய முடியாமற் கிடக்கும் பாம்பு*' (நாஞ்.); snake unable to move after taking its prey.

*[நிமிர் → நிமர் + அம் + பாம்பு.]*

**நிமி[1]—தல்** *nimi-,* 4 செ.குு.வி.(v.i.) வாய் நெளிதல்; to twitch, as the lips of a child in crying. "*நிமியும் வாயொடு கண்கணீர் மல்க*" (திவ்.திருவாய். 6,5,2.).

*[நெளி → நிமி.]*

**நிமி[2]** *nimi,* பெ. (n.) கதிரவன் குலத்து வேந்தரு ளொருவன்; a king of the solar race. "*நிமித்திருமரபுளான்*" (கம்பரா.திருவவதா.9.).

**நிமிச்சுற** *nimiccuṟa,* வி.எ. (adv.) நிறைய; full, to the brim.

**நிமிட்டாம்பழம்** *nimiṭṭām-paḻam,* பெ. (n.) கிள்ளு; pinch, humorously expressed as a fruit which a child may expect.

*[நிமிட்டு + ஆம் + பழம்.]*

**நிமிட்டு[1]–தல்** *nimiṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. கிள்ளுதல் (வின்.); to pinch, as in punishment. 2. நெருடித் தூண்டுதல்; to trim, as a wick. 3. கசக்குதல் (வின்.); to rub or crush between the hands, as grain.

*[நிமிடு → நிமிட்டு–,]*

**நிமிட்டு[2]** *nimiṭṭu,* பெ. (n.) கிள்ளுகை; pinch.

**நிமிடன்** *nimiḍaṉ,* பெ. (n.) மிகத்திறமை யானவன்; extremely clever person.

*[நிமிடு → நிமிடி → நிமிடன்.]*

**நிமிடி[1]** *nimiḍi,* பெ. (n.) நெருடி; a hand signal. *"அகினா றங்கை சிவப்ப நல்லோர் துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி உள்ளழுதுறீஇய வொள்ளடர்ப் பாண்டி"* (பெருங். உஞ்சை. 33:91.).

**நிமிடி[2]** *nimiḍi,* பெ. (n.) சுறுசுறுப்புள்ளவன்; clever, active person. *அவன் வேலையில் நிமிடி.* (உ.வ.).

*[நிமிடு → நிமிடி.]*

**நிமிடிபாதம்** *nimiḍipādam,* பெ. (n.) 1. கண்டிப்பு; strictness. 2. தன்முரண்டு; obstinancy.

**நிமிடு[1]** *nimiḍu,* பெ. (n.) திறன்மிகு வேலை (இ.வ.); clever workmanship.

*[நிமையம் → நிமிடு.]*

ஒரு வேலையை விரைவாய்ச் செய்தலை ஒரு நொடியில் முடி என்றும் ஒரு நிமையத்தில் முடி என்றும் வழங்கும் வழக்கில் இச்சொல் உருவாகியிருக்கலாம்.

**நிமிடு[2]–தல்** *nimiḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) நெருங்குதல்; to feel between fingers. *"துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி"* (பெருங். உஞ்சை. 33, 92.).

**நிமிண்டி** *nimiṇḍi,* பெ. (n.) 1. சிறு திருடன் (வின்.); sly thief. 2. எறும்பு வகை (யாழ்.அக.); a kind of ant.

*[நிமிண்டு → நிமிண்டி.]*

**நிமிண்டு[1]–தல்** *nimiṇḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. கசக்குதல்; to crush, squeeze between the hands, as grain, *"கொல்லைக்கம்பை நிமிண்டியு மூதியுந் தின்ன வல்லோர்"* (தனிப்பா. i, 142,38.). 2. கிள்ளுதல்; to pinch, nip off, with the fingers. 3. பிறர் அறியாமல் சிறிதுசிறிதாகக் கவர்தல் (யாழ்ப்.); to pilfer little by little.

*[நிமி → நிமிண்டு–.]*

**நிமிண்டு[2]–தல்** *nimiṇḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) கட்டை விரலுக்கும் சுட்டுவிரலுக்கும் இடையே பிடித்து அழுத்தி முன்பின் அசைத்தல்; to pinch, to trim as a wick, etc. *குழந்தையின் கன்னத்தை நிமிண்டக் கை குறுகுறுத்தது (உ.வ.). விளக்குத் திரியை நிமிண்டினாள். (உ.வ.)*

*[நிமி → நிமிண்டு–.]*

**நிமித்த சூடாமணி** *nimitta-šūdāmaṇi,* பெ. (n.) நிமித்த (சகுண) நூல் (யாழ்.அக.); a treatise on omens.

*[நிமித்தம் + சூடாமணி.]*

**நிமித்தத்துவம்** *nimi-t-tattuvam,* பெ. (n.) ஏதுத் தன்மை (சங்.அக.); causality.

**நிமியும்வாய்** *nimiyum-vāy,* பெ. (n.) நெளிந்த வாய்; dented mouth, out of shape as the lips of a child in crying. (திவ்.திருவாய்.1–5–2.).

*[நிமியும் + வாய்.]*

**நிமிர்[1](ரு)–தல்** *nimir(ru)-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** உயர்தல் (சூடா.); to become erect; to be straightened; to stand upright; to raise or hold the head erect. **2.** நீளுதல்; to be out-stretched, as the arm. "*திரையெனு நிமிர்கையால்*" (கம்பரா.கங்கை. 62.). **3.** வளர்தல்; to grow tall, as a youth; to increase in height; to shoot up; "*ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி*" (தேவா. 1160, 5.). **4.** ஏறுதல்; to exceed the limit, as a foot in verse. "*அம்மை தானே அடிநிமிர் பின்றே*" (தொல். பொருள்.547.). **5.** பரத்தல்; to extend, expand, spread out. "*உரைகுறுக நிமிர் கீர்த்தி*" (கம்பரா. குலமுறை.4.). **6.** நுடங்குதல்; to bend, shake, "*மின்னு நிமிர்ந் தனையராகி*" (மதுரைக். 679.). **7.** நடத்தல்; to walk, proceed. "*கடற்றானை யொன்னார் நடுங்க வுலாய்நிமிரின்*" (பு.வெ. 7,5.). **8.** ஓடுதல் (சூடா.); to run. **9.** மிகைத்தல்; to be excessive. "*நிமிர்பரிய மாதாங்கவும்*" (புறநா.14.). **10.** தொலைவாதல்; to be far,distant. "*நணுகவு நிமிரவு நடக்கு ஞானத் தருணர்வினின்*" (கம்பரா.கடிமண. 60.). **11.** பொன்போல் உயர்ந்ததாதல்; to be of superior quality, as gold. "*நிமிர்பொன் சொரியும் வரையே*" (சீவக.1376.) **12.** நெருங்குதல் (வின்.); to be close,thick, crowded. **13.** உறுதியாதல்; to be bold, firm decided. செயற்றிறத்தில் நிமிர்ந்து நிற்கிறான். (வின்.). **14.** இறுமாத்தல் (வின்.); to be proud, affected, arrogant. **15.** முயலுதல்; to be active, make an effort. இசைச் சொலளவைக் கென்னா நிமிராது (மணிமே. 11:81.). **16.** கோள் முறைமாறி (வக்கிரித்து) திரும்புதல் (வின்.); to return from retrograde motion-, as a planet.

**க.** நிமிர்.

**நிமிர்[2]–தல்** *nimir-,* 4செ.கு.வி. (v.i.) இடையிடுதல்; to interpose. "*நிறைந்து முறழ்ந்து நிமிர்ந்துந் தொடர்ந்தும்*" (பரிபா.19:82.).

**நிமிர்[3]** *nimir,* பெ. (n.) தெரிநிலை வினைப் பகுதி; verb explicity denoting tense by a tense-sign; "*நிமிர்சுடர்*" (நான்மணி. 9.).

**நிமிர்கழிச்சேர்ப்பன்** *nimir-kaḻi-c-cērppaṉ,* பெ. (n.) நீண்ட கழியைக் கையில் வைத்திருக்கும் கடற்கரைத் தலைவன்; chief of maritime tract who holding strick. "*எறிசுறா நீள்கடல் ஒதம் உலாவ நெறியிறாக் கொட்டும் நிமிர்கழிச் சேர்ப்பன்*" (திணை. மொழி.)

*[நிமிர்கழி + சேர்ப்பன்]*

**நிமிர்ச்சி[1]** *nimircci,* பெ. (n.) **1.** இறுமாப்பு; proud. **2.** உறுதி; confidence. ***3.*** *நிமிர்வு* பார்க்க; see *nimirvu.* **4.** மேட்டிமை; vanity haughtiness.

**நிமிர்ச்சி[2]** *nimircci,* பெ. (n.) **1.** உயர்ச்சி; hight. **2.** நிமிர்வு; erect. **3.** நீட்சி; length. (கதி.அக.).

**நிமிர்சுடர்** *nimir-šuḍar,* பெ. (n.) நிமிர்ந்தெரியும் நெருப்பு; a straight flame. "*மையால் தளிர்க்கும் மலர்க்கண்கள் மாலிருள் நெய்யால் தளிர்க்கும் நிமிர்சுடர்*" (நன்மணி. 38.).

**நிமிர்த்திப்பிடி–த்தல்** *nimirtti-p-pidi-,* 4 செ. குன்றாவி. (v.t.) **1.** நேர்நிற்கச் செய்தல்; to hold erect. **2.** வலுக்கட்டாய (பிடிவாத)மாக வற்புறுத்துதல்; to persist in; to be obstinate in. **3.** உயர்த்துதல்; to hold aloft, lift up.

*[நிமிர்த்தி + பிடி –,]*

**நிமிர்த்திவிடு–தல்** *nimirtti-vidu-,* 18 செ. குன்றாவி. (v.t.) **1.** நிமிரச் செய்தல்; to straighten. **2.** நன்றாய்ப் புடைத்தல் (வின்.); to give a good drubbing.

*[நிமிர்த்தி + விடு–,]*

**நிமிர்த்து[1]–தல்** *nimirttu-,* 5 செ. குன்றாவி. (v.t.) **1.** நேர்நிற்கச் செய்தல்; to straighten up, set upright, as a pot. *நீர்க்குடத்தை நிமிர்த்து. (உ.வ.).* **2.** வளைவு நீக்குதல்; to unfold, uncoil, as an ola. *"மண்மூடு தோட்டின் முடங்க னிமிர்த்து"* (கம்பரா. பள்ளி.6.). **3.** சீர்படுத்துதல் (வின்.); to improve, as one's circumstances. *உன்னை வளர்த்து நிமிர்த்தினவன் நானல்லவோ?* (உ.வ.). **4.** நன்றாய்ப் புடைத்தல்; to thrash, beat severely. *அவனை நன்றாய் நிமிர்த்தி வெளியே அனுப்பு.* (உ.வ.)

**க.** நிமிர்சு.

*[நிமிர் → நிமிர்த்து–,]*

**நிமிர்த்து[2]–தல்** *nimirttu-,* 5செ.குன்றாவி. (v.t.) **1.** இருக்கும் நிலையிலிருந்து உயர்த்துதல்; raise. குனிந்து எழுதிக் கொண்டிருந்தவன் தலையை நிமிர்த்திப் பார்த்தான் (உ.வ.) கூனிக் குறுகாமல் நெஞ்சை நிமிர்த்தி நில். (உ.வ.). **2.** நேராக்குதல்; straighten. கம்பியை நிமிர்த்தப் போய்க் கையைக் கிழித்துக் கொண்டாயா (உ.வ.) தவலையை நிமிர்த்தி வைக்கக் கூடாதா? (உ.வ.).

**நிமிர்ந்தநடை** *nimirnda-nadai,* பெ. (n.) மேட்டிமையான நடை; haughtiness style.

**நிமிர்ப்பு** *nimirppu,* பெ. (n.) *நிமிர்ச்சி* பார்க்க; see *nimircci.*

*[நிமிர் → நிமிர்ப்பு.]*

**நிமிர்வு** *nimirvu,* பெ. (n.) *நிமிர்ச்சி* பார்க்க; see *nimircci.*

*[நிமிர்ச்சி → நிமிர்வு.]*

**நிமிரல்** *nimiral,* பெ. (n.) **1.** நிமிர்கை; straightening out, becoming erect. **2.** சோறு (பிங்.); boiled rice. *"மகளிர் புறங்கடை யுகுத்த கொக்குகிர் நிமிரல்"* (நற்.258.).

*[நிமிர் → நிமிரல்.]*

வளைவு நீளுவதே நிமிரல். அரிசி சோறாகும் போது சற்று நீளுகிறது. அந்த நீளலும் நிமிரலின் பாற்பட்டதாய்க் கொள்ளப்படும்.

**நிமிரி** *nimiri,* பெ. (n.) **1.** மஞ்சனிறம் (G.Tj.D.i.120.); yellow colour. **2.** குதிரை வலிப்பு நோய் (M.Cm.d.249.); a disease of cattle.

**நிமிளன்** *nimilan,* பெ. (n.) **1.** திறமையாளன் (கெட்டிக்காரன்) (நெல்லை); clever, tactful person. **2.** சுருசுருப்பானவன்.; agile, active person.

*[நிமிடன் → நிமிளன்.]*

**நிமிளை[1]** *nimilai,* பெ.(n.) செவ் வெண்மையான கல்வகை (பதார்த்த. 1133.); bismuth pyrites.

**நிமிளை[2]** *nimilai,* பெ. (n.) **1.** அம்பரை; bismuth. **2.** கூட்டுக்கலவை; compound stone. (சா.அக.).

**நிமுட்டு—தல்** *nimuṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நிமிண்டு—தல்* பார்க்க; see *nimiṇḍu-,*

[நிமிண்டு → நிமிட்டு → நிமுட்டு.]

**நிமேசகம்** *nimēšagam,* பெ. (n.) மின்மினிப் பூச்சி; firely glow worm. (சா.அக.).

**நிமை**[1] *nimai,* பெ. (n.) இமை; eyelid. '*நீலிக்கு கண்ணீர் நிமையிலே*' (பழ.).

*[இமை → நிமை.]*

உம்முதல் = பொருந்துதல், கூடுதல்.
உம் → அம். அம்முதல் = பொருந்துதல்.
அம் → அமை. அமைத்தல் = பொருந்துதல்.
அமை → இமை. இமைத்தல் = கண்மூடுதல்
இமை → நிமை.

**நிமை**[2]**—த்தல்** *nimai-,* 11 செ. குன்றாவி. (v.t.) இமைத்தல்; to wink, "*புருவநிமிரவிரு கண வாள் நிமைக்க*" (திருப்பு.497.).

*[இமை → நிமை.]*

**நிமைக்கழலை** *nimai-k-kalalai,* பெ. (n.) கண் இமையில் வரும் கட்டி; a tumour in the eyelid-Blepharoneus. (சா.அக.).

*[நிமை + கழலை.]*

**நிமைகொட்டு—தல்** *nimai-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கண் இமை மாறி மாறி வேகமாக மூடவும் திறக்கவும் செய்தல்; to close and open the eye lids alternatively and also repeatedly-nictating. 2. சாடை காட்டுதல்; to have a hint or intimation by the motion of eyelids. (சா.அக.).

*[நிமை + கொட்டு—,]*

**நிமைத்தடிப்பு** *nimai-t-taḍippu,* பெ. (n.) இமைத் தடிப்பு; the morbid thickening of an eyelid.

*[நிமை + தடிப்பு.]*

**நிமைதொங்கு—தல்** *nimai-toṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) கண்ணிமை செயலற்றுத் தொங்குதல்; droping of the upper eyelid from paralysis (சா.அக.).

*[நிமை + தொங்கு—.]*

**நிமைமூடு—தல்** *nimai-mūḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கண் இமைமூடுதல்; to shutting or closing of the eyelids. (சா.அக.).

*[நிமை + மூடு—.]*

**நிமையம்** *nimaiyam,* பெ. (n.) 1. கண்ணிமைப் பொழுது; twinkling of the eye; moment, instant. 2. அறுபது நொடி கொண்ட கால அளவு; minute of time = 1/60 hour.

*[இமை → நிமை → நிமையம்.]*

**நிமையழற்சி** *nimai-y-alaṟci,* பெ. (n.) கண் இமையிலுண்டாகும் அழற்சி; inflammation of the eyelid .(சா.அக.).

*[நிமை + அழற்சி.]*

**நிமையாட்டம்** *nimai-y-āṭṭam,* பெ. (n.) கண் இமையின் ஆட்டம்; consistant movement of the muscles of the eyelid. (சா.அக.).

*[நிமை + ஆட்டம்.]*

**நிமையொட்டு–தல்** *nimai-y-oṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கண் இமைகளைச் சேரத் தைத்தல்; to stich the upper and lower lids together-the plastic surgery of the eye lids.

*[நிமை + ஒட்டு–,]*

**நிமைவீழ்ச்சி** *nimai-viḻcci,* பெ. (n.) கண் இமையின் செயலிழப்பு; paralysis of an eye-lid. (சா.அக.).

*[நிமை + வீழ்ச்சி.]*

**நியக்கியம்** *niyakkiyam,* பெ. (n.) நரிமுருங்கை; tranquebar genderussa-Justicia tranque barensis. (சா.அக.).

**நியக்கு** *niyakku,* பெ. (n.) நாளவம்; elder wood tree wine-Leea sambucena. (சா.அக.).

**நியக்குரோதம்** *niyakkurōdam,* பெ. (n.) ஆலமரம்; banyan tree.

**நியதீசம்** *niyadīšam,* பெ. (n.) சுனைப்புன்கு; rusty soap nut erioglossum adule. (சா.அக.).

**நியமனம்** *niyamaṉam,*பெ.(n.) வேம்பு(வைத்திய பரிபா.); margosa. (சா.அக.).

**நியர்** *niyar,* பெ. (n.) ஒளி; light, brilliance. "*நியர்வளை முன்கையாள்*" (தேவா.134,4.)

*[நிகர் → நியர்.]*

**நியர்ப்புதம்** *niyarppudam,* பெ. (n.) பதினாயிரங்கோடி (பிங்.); a hundred thousand millions.

**நியரசம்** *niyarašam,* பெ. (n.) *நியரதம்* பார்க்க; see *niyaradam.* (சா.அக.).

**நியரதம்** *niyaradam,* பெ. (n.) வேம்பு; margosa tree. (சா.அக.).

**நியா** *niyā,* பெ. (n.) சிவதுளசி; sivās basil-besilicumalba. (சா.அக.).

**நியாசதி** *niyāšadi,* பெ. (n.) அனிச்சம்; snake jasmine- Rhinecanthas communis. (சா.அக.).

**நியாதூற்றி** *niyādūṟṟi,* பெ. (n.) கடம்பு; cadamba tree-nancles cadamba alias n.purpurea. (சா.அக.).

**நிர்க்குண்டி**[1] *nirkkuṇḍi,* பெ. (n.) நொச்சி (திவா.); a species of chaste tree.

**நிர்க்குண்டி**[2] *nirkkuṇḍi,* பெ. (n.) தாமரைக் கிழங்கு; lotus root. (சா.அக.).

**நிர்த்தகனம்** *nirttagaṉam,* பெ. (n.) சேரான் கொட்டை; marking nut - semi carpas-anacardium alias sansviera roxburghiana. (சா.அக.).

**நிர்த்தித்தம்** *nirttittam,* பெ. (n.) கண்டங்கத்தரி; yellow berried night shade-solanum xanthocarpum. (சா.அக.).

**நிர்மூலி** *nirmūli,* பெ. (n.) ஒரு பூடு; aglaia minutiflora. (சா.அக.).

**நிர** nira, பெ. (n.) **1.** நிறைவடைதல்; to be full. படி நிரக்க அளந்து ஊற்றினாள் (உ.வ.). **2.** பங்கிடுதல்; to share. எல்லோருக்கும் நிரந்து கொடு (உ.வ.)

**நிரக்க** *nirakka,* வி.எ. (adv.) (பொருந்திகையான வகையில்) நிறைய; to be full. திருமணத்துக்கு வந்திருந்தவர்களுக்கு நிரக்கப் பரிமாறினார்கள் (உ.வ.)

*[நிர → நிரக்க.]*

**நிரகுள்ளி** *nirakuḷḷi,* பெ. (n.) நொச்சி; five leaved chaste tree- vitex negundo. (சா.அக.).

**நிரஞ்சத்திமூலி** *nirañjattimūli,* பெ. (n.) நிலத்துளசி; ground basil- ocimum prostatum. (சா.அக.).

**நிரஞ்சனம்** *nirañjanam,* பெ. (n.) **1.** அறிவு (ஞான)க் கண்; eye of wisdom. **2.** உணவு கொள்ளாமை; abstaing from food. (சா.அக.).

**நிரட்டிகா** *nirattigā,* பெ. (n.) கண்டங்கத்திரி; yellow barried night shade-solanum jacquini. (சா.அக.).

**நிரந்தவர்**[1] *nirandavar,* பெ. (n.) பகையரசர்;

**நிரந்தவர்**[2] *nirandavar,* பெ. (n.) (கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும்) கூடியொழுகுவார்; to attacher. "சீரிடங் காணின் எறிதற்குப் பட்டடை நேரா நிரந்தவர் நட்பு"(குறள், **821.**).

**நிரந்து** *nirandu,* பெ. (n.) **1. நிரல்படக் கோத்து;** to join correctly. "விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்" (குறள், **648.**). **2. வரிசையுற்று;** to roll. "நரந்த நாறுங் குவையிருங்கூந்தல் நிரந்திலங்கு வெண்பல் மடந்தை" (குறுந். **52.**)

*[நிர → நிரந்து]*

**நிரப்படுபுணை** *nira-p-paḍu- puṇai,* பெ. (n.) வறுமையைக் கடத்தற்குரிய தெப்பம்; a device to manage the poverty. "*இரப்பச் சிந்தியே னிரப்படு புணையின் உளத்தினளக்கு மிளிர்ந்த தகையேன்*" (புறநா. **376.**).

*[நிரப்பு = வறுமை, ஏழ்மை.
நிரப்பு + படு + புணை.]*

**நிரப்பம்** *nirappam,* பெ. (n.) **1.** முழுமை; fullness, repletion, perfection. '*நிரப்ப மெய்திய நேர்பூம் பொங்கணை*' (பெருங். மகத. **14,62.**). **2.** சிறப்பு; superiority, excellence. (திவ். திருவாய். **1,2,3,** பன்னீ.). **3.** ஒப்புமை; Symmetry. '*நிரப்பமில் யாக்கை*' (கலித். **94.**). **4.** சமம்; uniformity. "*குடக்குந் தெற்குங் கோண முயர் நிரப்பங் கொளீஇ*" (பெருங். இலாவாண. **4,59–60.**). **5.** கற்பு; chastity. (திவ்.திருவாய். **5,3,3,** பன்னீ.).

*[நிரம்பு → நிரப்பு → நிரப்பம்.]*

**நிரப்பலா** *nirappalā,* பெ. (n.) ஆசினிப்பலா; the bread fruit tree- artocarpus. incisa. (சா.அக.).

**நிரப்பிவிடு–தல்** *nirappi-viḍu-,* **18** செ.குன்றாவி. (v.t.) **1.** நிறைவு செய்தல்; to complete, fulfil. **2.** சூலடையச் செய்தல்; to impregnate. (Loc.) **3.** நிறைகுடத்தடியில் நெற்பரப்புதல்; (வின்.). to strew paddy round a niṟaikuḍam.

**நிரப்பு[1]–தல்** *nirappu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நிறைத்தல்; to fill, replenish; to cause to abound. *'அல்லன் மாக்கட் கில்லது நிரப்புனர்'* (மணிமே. 23,133, பி.ம்.). நீர் வந்தால் தொட்டியை நிரப்பு. (உ.வ.) மண்ணைக் கொட்டிப் போட்டுப் பள்ளத்தை நிரப்பு. (உ.வ.) 2. நிறைத்தல்; to load a gun etc. துமுக்கியில் குண்டுகளைப் போட்டு நிரப்பி வை. (உ.வ.) 3. நிறைவு செய்தல்; to complete; to perform satisfactorily. *'வேள்வி நிரப்பி'* (கம்பரா. பிராட்டிகளங்.20.). இந்த விண்ணப்பத்தை நிரப்பிக்கொடுங்கள். (உ.வ.) வினாத்தாளில் கோடிட்ட இடங்களைத் தக்க சொற்களைக் கொண்டு நிரப்புக. (உ.வ.) 4. அமர்த்துதல்; to fill a vocancy, post. அகர முதலித்துறையில் வெறுமையாயுள்ள இடங்களைத் தக்கவர் களைக் கொண்டு நிரப்பினால் பணி விரைவாய் நிறைவுறும். (உ.வ.) 5. பொந்திகையாக்குதல்(யாழ்.அக.); to satisfy. 6. விடையளித்தல்; to tell, reply, respond, answer. *'உயிர் நீக்கினரியாரது நிரப்புவீர்'* (கம்பரா. சம்பாதி. 29.). 5. பரப்புதல்; to spread.

*[நிரம்பு → நிரப்பு.]*

**நிரப்பு[3]** *nirappu-,* பெ. (n.) 1. நிறைவு (சூடா.); fullness, completeness. 2. சமதளம்; levelness. தரை நிரப்பு வரவில்லை. (உ.வ.). 3. வறுமை; destitution, poverty. "நெருநலுங் கொன்றது போல நிரப்பு" (குறள், 1048.). 4. குறைவு (வின்.); deficiency, want. 5. சோம்பு; inactivity, sloth, want of energy. 6. நிறை குடத்தினடியில் இடப்படும் நெல்; paddy strewn round a niṟaikuḍam. 7. நிறை நாழி (யாழ்.அக.); measure full of paddy.

**நிரப்புநர்** *nirappu-nar,* பெ. (n.) கொடுப்போர்; donars, givers. "*அல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்*" (மணிமே.23:133.).

நிரப்பு → நிரப்புநர்
நிரப்புதல் – நிறைத்தல்,
நிறைவு செய்தல், கொடுத்தல்.

**நிரப்போர்** *nirappōr,* பெ. (n.) 1. இரப்பவர்; beggars. 2. வறியவர்; the destitute.

*[நிரப்பு → நிரப்போர்.]*

**நிரம்ப** *niramba,* வி.எ. (adv.) 1. நிறைய; fully. 2. மிகுதியாக; abundantly, highly, "*நிரம்ப வெழுந்ததங் கூர்மையும்*" (நாலடி,28.).

*[நிரம்பு → நிரம்ப.]*

**நிரம்பவழகியர்[1]** *niramba-v-aḻagiyar,* பெ. (n.) பேரழகுள்ளவர்; exquisitely "*நித்தமணாளர் நிரம்ப வழகியர்*" (திருவாச.17,3.).

*[நிரம்ப + அழகியர்]*

**நிரம்பவழகியர்[2]** *niramba-v-aḻagiyar,* பெ. (n.) சேதுபுராணம், திருப்பரங்குன்றப் புராணம் முதலிய நூல்களினாசிரியரும் 16–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான புலவர்; the author of *sēdupurāṇam, Tirupparaṅkuṉṟa-p-purāṇam* and other works, 16th century.

**நிரம்பாச்சொல்** *nirambā-c-col,* பெ. (n.) *நிரம்பா மென்சொல்* பார்க்க (யாழ்.அக.); see *nirambāmeṉcol.*

*[நிரம்பு + ஆ + சொல்.*
*'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

**நிரம்பாத்துயில்** *nirambā-t-tuyil,* பெ. (n.) *நிரம்பாத் தூக்கம்* (பிங்.) பார்க்க; see *nirambā-t-tūkkam.*

*[நிரம்பு + ஆ + துயில்.*
*ஆ–எதிர்மறை இடைநிலை.]*

**நிரம்பாத்தூக்கம்** *nirambā-t-tūkkam,* பெ. (n.) அரைத்தூக்கம் (திவா.); unsound. sleep; broken sleep.

*[*நிரம்பு + ஆ + தூக்கம்.
ஆ–எதிர்மறை இடைநிலை.*]*

**நிரம்பாநெறி** *nirambā-neṟi,* பெ. (n.) கடைபோய் நிரம்பாத குறைவழி; not filled fully. "*அரம்போ ழவ்வளை மகளிர் மனத்தின் நிரம்பா நெறியினவாகி யரும் பொருள் கல்லா மாந்த ருள்ளம் போல*" (பெருங். உஞ்சை. 50: 10–13.).

**நிரம்பாநோக்கு** *nirambā-nōkku,* பெ. (n.) இடுக்கிப் பார்க்கும் பார்வை; look with eyes contracted. "*நிரம்பா நோக்கினிரையங் கொண்மார்*" (அகநா.67.).

*[*நிரம்பு + ஆ + நோக்கு.
ஆ–எதிர்மறை இடைநிலை.*]*

**நிரம்பாமென்சொல்** *nirambā-meṉ-šol,* பெ. (n.) மழலைச் சொல் (திவா.); lisping in-distinct prattle.

*[*நிரம்பு + ஆ + மென்சொல்.
ஆ–எதிர்மறை இடைநிலை.*]*

**நிரம்பாமேனி** *nirambā-mēṉi,* பெ. (n.) முற்ற வளராத உடல்; not growth full body. "*இரந்தூணி ரம்பா மேனி யொடு விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே*" (குறுந்.33.).

**நிரம்பாமொழி** *nirambā-moḻi,* பெ. (n.) *நிரம்பா மென்சொல்* பார்க்க (யாழ்.அக.); see *nirambā meṉ-šol.*

*[*நிரம்பு + ஆ + மொழி.
ஆ–எதிர்மறை இடைநிலை.*]*

**நிரம்பிப்பாய்–தல்** *nirampi-p-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) ததும்பி வழிதல் (வின்.); to over flow.

*[*நிரம்பு + பாய்–,*]*

**நிரம்பியபுட்பம்** *nirambiya-puṭpam,* பெ. (n.) *நிரம்பிய பூ* பார்க்க; see *nirambiya-pū.*

*[*நிரம்பிய + புட்பம்.*]*

skt. புஷ்பம்.

**நிரம்பியபூ** *nirambiya-pū,* பெ. (n.) வாழை (மலை.); plantain.

*[*நிரம்பிய + பூ.*]*

**நிரம்பியம்** *nirambiyam,* பெ. (n.) *நிரம்பிய பூ* பார்க்க (சங்.அக.); see *nirambiya- pū.*

**நிரம்பியமரம்** *nirambiya- maram,* பெ. (n.) **1.** வாழை மரம்; plantain tree- musa paradisiaca. **2.** தென்னை மரம்; coconut tree-cocos nuciyerd **3.** ஆலமரம்; banyan tree-ficus bengalansis. (சா.அக.).

*[*நிரம்பிய + மரம்.*]*

**நிரம்பிவழி–தல்** *nirambi-vaḻi-,* 2செ.கு.வி. (v.i.) அளவுக்கதிகமாக நிறைந்து காணுதல்; over flow, spill over. மண்டபத்தில் உட்கார இடமில்லாமல் கூட்டம் நிரம்பி வழிந்தது. (உ.வ.) பெட்டி ஏற்கனவே நிரம்பி வழிகிறது, இதில் இந்த புத்தகத்தை எப்படி திணிப்பது? (உ.வ.)

**நிரம்பினபெண்** *nirambiṉa-peṇ,* பெ. (n.) பூப்பெய்திய பெண் (யாழ்.); girl who has attained puperty.

*[நிரம்பு → நிரம்பின + பெண்.]*

**நிரம்பு¹-தல்** *nirambu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிறைதல்; to become full, complete, replete. "*பருவ நிரம்பாமே*" (திவ்.பெரியாழ். 1,2,17.). 2. மிகுதல்; to abound, be abundant, copious. "*நெற்பொதி நிரம்பின*" (கம்பரா. கார்கால.74.). 3. முடிவுறுதல்; to be over; to end, terminate. "*நெறிமயக்குற்ற நிரம்பா நீடத்தஞ் சிறுநனி நீதுஞ்சி யேற்பினு மஞ்சும்*" (கலித்.12.). 4. பூப்படைதல்; to attain puperty as a girl. அவள் நிரம்பின பெண் (யாழ்ப்.). 5. முதிர்தல் (வின்.); to mature, as grain.

க. நெர.

**நிரம்பு²-தல்** *nirambu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. முழுமையாதல், நிறைதல்; to be filled with, become full. குளத்தில் நீர் நிரம்பியிருக்கிறது. (உ.வ.). பை நிரம்பக் காய்கறிகள் வாங்கி வந்தார். (உ.வ). 2. முழுமை யடைதல்; finish or complete (certain years in one's age). இன்றோடு குழந்தைக்கு மூன்று அகவை நிரம்புகிறது. (உ.வ.). அவளுக்கு இன்னும் பதினெட்டு அகவை நிரம்பவில்லை. (உ.வ.). 3. அதிக அளவில் இடம் பெறுதல்; to be full (of). பிறமொழிச் சொற்கள் நிரம்பியிருக்கும் கதை. (உ.வ.).

**நிரம்பையர்காவலன்** *nirambaiyar-kāvalaṉ,* பெ. (n.) கொங்குநாட்டிலுள்ள நிரம்பை என்ற ஊர்த்தலைவரான அடியார்க்குநல்லார்; Adiyārkku nallār, the chief of Nirambai, a village in Koṅgu country. "*காருந் தருவு மனையா னிரம்பையர் காவலனே*" (சிலப். உரைச்சிறப்புப்பாயிரம்.).

*[நிரம்பையர் + காவலன்.]*

**நிரயத்தானை** *niraya-t-tāṉai,* பெ. (n.) மாற்றாருக்குப் பெருந்துன்பந்தரும் படை; to oppose, confront. "இரவிடங் கொடுத்த நிரைமணி விளக்கின் விரவுக் கொடி யடுக்கூத்து நிரயத்தானையோ டைம்பெருங் குழவு மெண்பேராயமும்" (சிலப்.26:37.).

*[நிரயம் + தானை.]*

நிரயம் = அளறு.
அளறிடைப் பட்டாருவதொப்பத் துன்பத்தைத் தரும் படை யென்க.

**நிரயத்துன்பம்** *niraya-t-tuṉbam,* பெ. (n.) அளறு (நரக)த்துன்பம்; consigned to hell. "இனிப்பேரின்பத்தைத் தரும் தவத்தில் நின்றோர் அதனைவிட்டு இழிதலின் விளைவாகிய நிரயத்துன்பத்தை யுறுதலுமாம்" (சிலப்.14–2. உரை.).

*[நிரயம் + துன்பம். நிரயம் = அளறு.]*

**நிரயப்பாலர்** *niraya-p-pālar,* பெ. (n.) *நிரயபாலர்* பார்க்க; see *niraya-pālar.*

*[நிரயம் + பாலர்.]*

**நிரயபாலர்** *niraya-pālar,* பெ. (n.) நிரயத்தின் தலைவர்; chief of the infernal regions. '*நிரயபாலர் பலரும்*' (சீவக. 2771. உரை.).

*[நிரயம் + பாலர்.]*

நிரயம் = அளறு.

**நிரயம்** *nirayam,* பெ. (n.) அளறு; hell. "*நீங்கா நிரயங் கொள்பவரோ டொன்றாது*" (புறநா.5.).

மாந்தப் பிறப்புற்று வாழுங் காலத்து நன்மையைச் செய்து, நன்னெறி செல்வோர் இறப்புக்குப் பின் துறக்கம் செல்வர் என்பதும், அல்லவர் நிரயம் செல்வர் என்பதும் நம்பிக்கை.

**நிரயவட்டம்** *niraya-vaṭṭam,* பெ. (n.) பெருகளற்றுவட்டம், மணல்வட்டம், எரிபரல் வட்டம், அரிபடைவட்டம், புகைவட்டம், இருள்வட்டம், பெருங்கீழ்வட்டமாகிய ஏழு

நிரயங்கள் (பிங்.); the seven internal regions,viz., peru kaḷaṟṟu vaṭṭam, maṇalvaṭṭam, eriparal vaṭṭam, aripadai vaṭṭam, pugaivaṭṭam, irulvaṭṭam, perunkīḷ vaṭṭam.

*[நிரயம் + வட்டம்.]*

**நிரயணம்** *nirayaṇam,* பெ. (n.) மேழராசியின் தொடக்கத்திலிருந்து கணிக்கப்படும் வான் செலவின் தொலைவு (**செந்.viii. 67.**); celestial longitudinal difference measured from the zero point of the fixed Hindu zodiac.

**நிரல்**[1] *niral,* பெ. (n.) **1.** வரிசை; row, order, arrangement. "***நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு***" (தொல். பொருள்.**482.**). **2.** ஒப்பு; equality, similarity. "***நிரலல்லோர்க்குத் தரலோ வில்லென***" (புறநா.**345.**).

**ம.** நிர.
**க.து.** நிருகெ. **கோத.** நெர்வ் (வரிசையில் நிற்றல்) நெர்ட் (வரிசையில் நிற்கவை) **துட.** நெர் (வரிசையில் செல்தல்)

*[நில் → நில → நிர → நிரல்.]*

**நிரல்**[2]**(லு)—தல்** *niral(lu)-,* **11** செ.கு.வி. (v.i.) ஒழுங்குபடுதல்; *to be placed in a row, arranged in order.* '***நேரின மணியை நிரலவைத் தாற் போல்***'. (தொல்.பொருள்.**482.**உரை.). "***நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த கொடும்பட நெடுமதிற் கொடித்தேர் வீதியுள் குறியவு நெடியவுங்குன்று கண்டன்ன***" (சிலப்.**27:151.**).

**நிரல்பட** *niral -pada,* வி.எ. (adv.) வரிசைப்படி; in proper order. ***நடந்த நிகழ்ச்சிகள் நிரல்படத் தரப்பட்டுள்ளன.***

*[நிரல் + பட.]*

**நிரலளவு** *niral-aḷavu,* பெ. (n.) பொதுப்படையான மதிப்பீட்டளவு; average. கிடைத்த தொகையை நிரலளவாய்ப் பகிர்ந்து கொண்டனர். (**உ.வ.**)

*[நிரல் + அளவு.]*

**நிரவல்**[1] *niraval,* பெ. (n.) ***நிரவு–, பார்க்க;*** see niravu–, ***எல்லோருக்கும் ஒரே நிரவலாகப் பங்கீடு செய்.*** (**உ.வ.**).

*[நிரவு → நிரவல். 'அல்' தொழிற்பெயரீறு.]*

**நிரவல்**[2] *niraval,* பெ. (n.) ஒரு பாட்டின் வரியை அதற்கான பண்ணின் அழகைக் காட்டும் வகையில் பயன்படுத்தும் முறை: rendering a line of musical composition elaboratley so as to bring the nuances of ragam.

**நிரவல்**[3] *niraval,* பெ. (n.) சராசரி (**இ.வ.**); average.

*[நிர → நிரவல் ]*

**நிரவலடி—த்தல்** *niraval-aḍi-,* **4** செ.கு.வி. (v.i.) உழுத நிலத்தைச் சமனாக்குதல் (**யாழ்ப்.**); to cover, fill up, level, as furrows.

*[நிரவு → நிரவல் + அடி –.]*

**நிரவற்பயிர்** *niravaṟ-payir,* பெ. (n.) பெருமழையில் மண்ணால் மூடப்பட்ட பயிர் (**வின்.**); growing corn covered with earth during heavy rain.

*[நிரவு → நிரவல் + பயிர்.]*

**நிரவனிலம்** *niravaṉilam,* பெ. (n.) நீர்வாரடித்த நிலம்; influx of water over the land, flooded land.

*[நிரவல் + நிலம்.]*

**நிரவிப்பிடி—த்தல்** *niravi-p-piḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) **1.** நிரப்புதல்; to fill up, make full. **2.** சிறுகச் சிறுகக் கடனைத் தீர்த்தல்; to discharge by small instalments as a debt. **3.** குளமுதலியவற்றைத் தூர்த்து நிலமாக்கி அடாவடியாய்த் தனதாக்கிக் கொள்ளல்; to fill up a tank and appropriate the land to one self, generally unjustly.

*[நிரவி + பிடி.]*

**நிரவு[1]—தல்** *niravu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** சமனாக்குதல்; to level, fill up, as a hole or well. *"உழாஅ நுண்டொளி விரவிய வினைஞர்" (பெரும்பாண்.211.). அந்தப் பள்ளத்தை நிரவு.* (உ.வ.). **2.** குறை தீர்த்தல் (வின்.); to make up a deficiency. அவரின் அருளினால் என் துன்பமெல்லாம் நிரவிப் போயிற்று. (உ.வ.). **3.** பொதுப்படையான மதிப்பீடு பார்த்தல்; to average. *எல்லோருக்கும் நிரவிக் கொடு.* (உ.வ.). **4.** சரிப்படுத்துதல்; to equalise, as threads for weaving; to proportion, as income and expenditure; to adjust. *இழைகளை நிரவி நெய்தால் துணி நயமாயிருக்கும். (உ.வ.). வருவாயைக் கருத்திற் கொண்டு நிரவி செலவிடு. (உ.வ.).* **5.** அழித்தல்; to demolish, as a fort; to level down. *"அடங்கார் புரமூன்றும் நிரவ வல்லார்"* (தேவா. 77,2.). தேவநேயப் பாவாணர் தம் ஆய்வாற்றலால் மொழிநூலின் மூடக் கருத்துகளனைத்தையும் நிரவிவிட்டார். (உ.வ.)

*[நிர → நிரவு—]*

**நிரவு[2]—தல்** *niravu-,* 7 செ.கு.வி. (v.i.) **1.** சமனாதல்; to be filled, become level, full, covered, as a well, a furrow or a sore. *பெரு வெள்ளத்தினால் வயல் நிரவி விட்டது. (உ.வ.). பயன்பாடற்ற பாழுங்கிணறு எப்போது நிரவுமோ. (உ.வ.).* **2.** தீர்தல்; to be liquidated, as a dept. *இவ்வாண்டு வேளாண்மையில் கிடைத்த வருவாயினால் என் எல்லாக்கடனும் நிரவியது.* **3.** பரவுதல்; to spread, expand. *"பார்முழுதும் நிரவிக் கிடந்து"* (தேவா.152:9.). **4.** வரிசையாயிருத்தல்; to lie in rows; *"நிரவிய தேரின் மேன்மேல்" (கம்பரா. முதற்போர்.151.).*

*[நிர → நிரவு—.]*

**நிரவுவீடு** *niravu-viḍu,* பெ. (n.) சுவருக்குப் பகரமாய் மரப்பலகைகளை வைத்துக் கட்டிய வீடு (நாஞ்.); house in which wooden planks are used for walls.

*[நிரவு + வீடு.]*

**நிரளியசாரை** *niraḷiya-šārai,* பெ. (n.) ஒரு வகை மாழைக் கரு (கானகக் கல்) (யாழ்.அக.); a kind of metallic ore.

**நிரனிறு—த்தல்** *niraṉiṟu-,* 10 செ.கு.வி. (v.i.) நிறுத்தமுறையால் வரிசையாக அமைத்தல்; to arrange words or phrases in different sets so that each term of one set may qualify or govern the corresponding term in another set. *"நிரனிறுத்துக்கூறிய ஒழுக்கம்"* (தொல். பொருள்.12,உரை.).

*[நிரல் + நிறு—,]*

**நிரனிறை** *niraṉiṟai,* பெ. (n.) பொருள்கோள் வகையுள் நிறுத்தமுறையே சொற்களை வரிசைப்பட அமைத்துப் பொருள் கொள்ளுதல் (தொல்.சொல்.405.); mode of construing a verse in which words are so arranged in groups that each term of one group is made to govern or qualify the corresponding term in another group,one of porul-kōl.

*[நிரல் + நிறை.]*

**பொருள்கோள் வகைகள்:**

1. யாற்று நீர்.
2. மொழி மாற்று.
3. நிரனிறை.
4. விற்பூட்டு.
5. தாப்பிசை.
6. அளைமறிபாப்பு.
7. கொண்டு கூட்டு.
8. அடிமறிமாற்று.

நிரனிறை: சொல்லையும் பொருளையும் வரிசைபட அமைத்து முறையே என்பதுபோல நிரலே பொருள் கொள்ளப்படுவதாகும். இது பெயர் நிரனிறையும் வினை நிரனிறையும் என இருவகைப்படும்.

*[நிரல் + நிறை]*

**நிரனிறைத்தொடை** *niranirai-t-todai,* பெ. (n.) பொருளைச் சேர நிறுத்திப் பயனைச் சேர நிறுத்தல் (இளம். தொல். செய். 87.); meaningful of words which is similar in meaning.

*[நிரனிறை + தொடை]*

**நிரனிறையணி** *niranirai- y-ani,* பெ. (n.) சொல்லையும் பொருளையும் நிரலே நிறுத்தி நேரே பொருள் கொள்ளும் அணிவகை; rhetoric mode of construing a verse in which words are so arranged in groups that each term of one group is made to govern or qualify the corresponding term in another group.

எ-டு: நிரலே நிறுத்தி நேரே பொருள் கொள்வது: காரிகை மென்மொழியா னோக்காற் கதிர்முலையால் வார்புருவத் தாலிடையால் வாய்த்தளிரால் நேர் தொலைந்த கொல்லி வடிநெடுவேற் கோங்கரும்பு விற்கரும்பு வல்லி கவிர் மென்மலர்.

நிரலே நிறுத்தி மொழி மாற்றிப் பொருள் கொள்வது:

ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும் பாடகமு மூரகமும் பஞ்சரமா— நீடியமால் நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ மன்றார் மதிற்கச்சி மாண்பு.

*[நிரனிறை + அணி]*

**நிரனிறைவழு** *niranirai-valu,* பெ. (n.) (அணியி.) ஒரு நிரலை முன்வைத்து அதன் பின்வைக்கும் நிரலை மாறுபட வைக்குங் குற்றம்; a defect in composition which consists in following one order at one place and the reverse order later on. (இலக்.வி.697.).

*[நிரனிறை + வழு.]*

**நிரா** *nirā,* பெ. (n.) பழம் முதலியவற்றின் கன்றின நிலை (யாழ்.அக.); hardness in fruit through blight or injury.

*[நரா → நிரா.]*

**நிராங்கு-தல்** *nirangu-,* 9 செ.கு.வி. (v.i.) நரங்குதல் (யாழ்ப்.); to be thin, stunded, as a person, a beast, vegetable.

*[நரங்கு → நருங்கு → நிருங்கு → நிராங்கு-,]*

**நிராமலம்** *nirāmalam,* பெ. (n.) விளா; wood apple tree.- feronium elephantum. (சா.அக.).

**நிராமாலு** *nirāmālu,* பெ. (n.) நிராமலம் பார்க்க; see nirāmalam. (சா.அக.).

**நிரியசம்** *niriyaśam,* பெ. (n.) வேம்பு; margosa or neem tree-azadirachta indica. (சா.அக.).

**நிரியம்** *niriyam,* பெ. (n.) தினை; Italian-millet-panicum italicum. (சா.அக.).

**நிருங்கு¹–தல்** *nirungu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. நொறுங்குதல்; to be mashed, crushed to pieces 2. தேய்கடையாதல்; to be deficient in growth; to decay; to grow lean, as a child; to fail, as a business, a harvest.

*[நலிவு → நலுங்கு → நருங்கு → நிருங்கு.]*

**நிருங்கு²** *nirungu,* பெ. (n.) வளர்ச்சிக் குறைவு; stunted growth.

*[நலிவு → நருங்கு → நிருங்கு.]*

**நிருத்தி** *nirutti,* பெ. (n.) ஒரு தருக்கநூல்; an astorict book.

**நிருதிதா** *nirutitā,* பெ. (n.) கோடாசூரி; a virulent mineral poison. (சா.அக.).

**நிருவாலி** *niruvāli,* பெ. (n.) காட்டுப்பூவரசு; false fern tree-folicium decipiens. (சா.அக.).

**நிரை¹–தல்** *nirai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வரிசையாதல்; to be in a row; to form a column. 2. முறைப்படுதல்; to be regular, orderly. 3. திரளாதல்; to crowd, swarm. "*நிரைவிரி சடைமுடி*" (தேவா. 994.9.).

*[நிர → நிரை.]*

**நிரை²–த்தல்** *nirai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒழுங்காய் நிறுத்துதல்; to arrange in order, classify. "*முட்ட நித்தில நிரைத்த பந்தரில்*" (பாரத. கிருட்டிண.103.). 2. நிரப்புதல்; to crowd, cluster "*நிரைதிமில் வேட்டுவர்*" (மதுரைக்.116.). 3. பரப்புதல்; to spread, over. "*நெடுங்கழைக் குறுந்துணி நிறுவி மேனிரைத்து*" (கம்பரா. சித்திர.46.). 4. கோத்தல்; to string together. "*நிணநிரை வேலார்*" (பு.வெ.1,9.). 5. நிறைவேற்றுதல்; to fulfil, accomplish, perform. 6. தனித் தனியாகச் சொல்லுதல் (வின்.); to enumerate, say, declare. 7. ஒலித்தல் (வின்.); to sound.

*[நிர → நிரை.]*

**நிரை³–தல்** *nirai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நிரப்புதல் (யாழ்ப்.); to make full, crowd fill up by adding thing to thing. "*வயிறு நிரைந்த மட்டும் உண்டேன்*" (உ.வ.) 2. ஒழுங்காக்குதல்; to place in row. 3. ஓலை முதலியவற்றை வரிசையாக வைத்து மறைத்தல்; to hide or cover as with plaited leaves. *தோட்டம் மூன்றுபுறமும் நிரைந்திருக்கிறது* (உ.வ.). 4. முடைதல்; to plait *வீடுவேயக் கிடுகு நிரைகிறார்கள்* (உ.வ.).

*[நிர → நிரை.]*

**நிரை⁴–தல்** *nirai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. திரளுதல்; to swarm, crowd together. "*மேகக் குழாமென நிரைத்த வேழம்*" (சீவக.1859.). 2. அவைகூட்டுதல்; to form an assembly, "*மறுநிலை மைந்தனை நிரைத்துக் கிளைகொள் வழக்குய்த்தலும்*" (கல்லா.43.21.). 3. தொடர்ந்து வருதல்; to follow in succession. "*நிரைத்த தீவினை நீங்க*" (சீவக.1603.).

*[நிர → நிரை]*

**நிரை[5]** *nirai,* 4 பெ. (n.) 1. வரிசை; row, column, line, train, series. "*நிரைமனையிற் கைந்நீட்டுங் கெட்டாற்று வாழ்க்கையே நன்று*" (நாலடி,288.). 2. ஒழுங்கு (சூடா.); order, regularity, arrangement system. 3. கொடிப்படை (திவா.); van of an army. 4. படைவகுப்பு (யாழ்.அக.); array of an army, military division. 5. மறை சொற்களை மேன்மேலுங் கூட்டியோதும் முறை; a mode of reciting vedic text. 6. கோபுரம்; temple tower, "*உயர்ந்தோங்கிய நிரைப் புதவின்*" (மதுரைக்.65.). 7. கூட்டம்; collection, pack, herd. "*சிறுகட் பன்றிப் பெருநிரை*" (அகநா.94.). 8. ஆன்மந்தை herd of cows. "*கணநிரை கைக்கொண்டு*" (பு.வெ.1,9.). 9. ஆன் (பிங்.); cow. 10. நிரையசை (காரிகை.) பார்க்க; see nirai-y-ašai. 11. விளையாட்டு வகை (யாழ்.அக.); a kind of game. 12. எடை; weight. 13. வலிமை; strength.

ம. நிர. தெ. தெறி. க. நிரி.

*[நிர → நிரை]*

**நிரைக்கட்டை** *nirai-k-kaṭṭai,* பெ. (n.) உல்லடைப்பு (புதுவை.); damming a river with stockade.

*[நிரை → கட்டை]*

**நிரைக்கழு** *nirai-k-kaḻu,* பெ. (n.) எயிற்கதவுக்குக் காவலாக வைக்கப்படும் ஒருவகை முட்கழு (சிலப்.15.213.உரை.); spikes set up to protect gates and walls; palisade.

*[நிரை → கழு.]*

**நிரைகவர்தல்** *nirai-kavardal,* பெ. (n.) நிரைகோடல் பார்க்க; see nirai-kōḍal.

*[நிரை + கவர்தல்.]*

**நிரைகிளம்பி** *niraikiḷambi,* பெ. (n.) சினையாடு (சங்.அக.); a pregnant sheep.

*[நிரை + கிளம்பி.]*

**நிரைகோட்பறை** *nirai-kōṭ-paṟai,* பெ. (n.) நிரைகவரும்போது அடிக்கும் பாலைப் பறைவகை (இறை.கள.1.18.); drum for capturing cows, peculiar to pālai tract.

*[நிரைகோள் + பறை.]*

**நிரைகோடல்** *nirai-kōḍal,* பெ. (n.) போர்த் தொடக்கமாகப் பகைவர் ஆன்மந்தையைக் கவர்கை; seizing the cattle of one's enemy, considered as the chief mode of declaring war in ancient times.

*[நிரை + கோடல். நிர → நிரை. கொள் + தல்= கொள்தல் → கொள்ளல் → (கொள்ளுதல்)→ கோள் + தல் → கோடல்.]*

**நிரைகோள்** *nirai-kōḷ,* பெ. (n.) நிரைகோடல் பார்க்க; *see nirai-kōḍal* "*கொடுங்காற் சிலையர் நிரைகோ ளுழவர்*" (திவ். இயற். திருவிருத்.37.).

*[நிரை + கோள்.]*

**நிரைச்சம்** *niraiccam,* பெ. (n.) நிரைச்சல், 1,2 (இ.வ.) பார்க்க; *see niraiccal.* 1,2.

*[நிரைச்சல் → நிரைச்சம்.]*

**நிரைச்சல்** *niraiccal,* பெ. (n.) 1. ஓலை முதலியவற்றாலிடும் அடைப்பு; screen, hedge with stakes covered with plam leaves in regular order. 2. இரவல் (வின்.); loan of articles to be returned. 3. சூதுவிளையாட்டு வகை (யாழ்.அக.); a game with squares marked on the ground. 4. படையின் முன்னணி (யாழ்.அக.); vanguard. 5. படைவகுப்பு (யாழ்.அக.); disposition or array of an army.

க. நெரகே.

*[நிரை → நிரைச்சல். நிரை = கொடிப்படை, கூட்டம், விளையாட்டு.]*

**நிரைசல்** *niraišal,* பெ. (n.) நிரைச்சல், 1 (வின்.) பார்க்க; *see niraiccal.*

*[நிரைச்சல் → நிரைசல்.]*

**நிரைத்தாலி** *nirai-t-tāli,* பெ. (n.) ஒரு வகைத்தாலி (சிலப்.121:28.உரை.); a kind of tāli.

*[நிரை + தாலி. நிரை–வரிசை.]*

**நிரைதல்** *niraidal,* பெ. (n.) மறைப்பு; keep out of sight, hide.

**நிரைந்துகாட்டு–தல்** *niraindu-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விளக்கிக்கூறுதல் (வின்.); to explain seriatim in detail.

*[நிரை = நிரப்புதல், வரிசையாதல், முறைப்படுதல்.*
*நிரை → நிரைந்து + காட்டு–,]*

**நிரைநிறை** *nirai-niṟai,* பெ. (n.) நிரனிறை (வின்.) பார்க்க; see niraniṟai.

*[நிரல் + நிறை.]*

**நிரைப்பு** *niraippu,* பெ. (n.) ஒழுங்கு (பாண்டி.); order.

*[நிரல் → நிரை → நிரைப்பு]*

**நிரைபசை** *niraibašai,* பெ. (n.) முற்றியலு கரத்தாலேனும் குற்றியலுகரத்தாலேனும் தொடரப்படும் நிரையசை; a nirai-y-ašai followed by 'u' or shortened 'u'.

*[நிரை → நிரைபு. நிரைபு + அசை.]*

குறிலிணையும் குறினெடிலும் ஒற்றடுத்தும் ஒற்றடாதும் இணைந் தொலிப்பது நிரையசை.

**நிரைபு** *niraibu,* பெ. (n.) நிரைபசை (தொல். பொருள்.327. உரை.)பார்க்க; see niraibašai.

*[நிரை .→ நிரைபு.]*

**நிரைபுலிப்பற்றாலி** *nirai-puli-p-paṟṟāli,* பெ. (n.) வலிய புலியின் பற்களைக் கொண்டு அமைக்கப்பட்ட தாலி (சிலப்.12:28.உரை.); tāli with tiger's teeth.

*[நிரை + புலிப்பல் + தாலி.]*

வலிமை வாய்ந்த புலியின் வாயைப் பிளந்து உதிர்த்த பற்களை வரிசையா யமைத்துச் செய்யப்பட்ட தாலி.

**நிரைபூத்தி** *niraipūtti,* பெ. (n.) கோடகசாலை எனும் ஒரு வகைப்பூடு; a very small plant called kōḍagašālai.

*[நிரை + பூத்தி.]*

**நிரைபெயர்–த்தல்** *nirai-peyar-,* 4செ.கு.வி. (v.i.) பகைவர் கைக்கொண்ட ஆனிரைகளைத் திரும்பக் கைப்பற்றல்; to recover cattle seized by one's enemy. "*தலைக்கொண்ட நிரைபெயர்த் தன்று*" (பு.வெ.2.1.கொளு.).

*[நிரை + பெயர்–.]*

**நிரைமணி** *niraimaṇi,* பெ. (n.) அவுரி; indigo-feratinctoria. (சா.அக.).

**நிரைமீட்சி** *nirai-mīṭci,* பெ. (n.) பகைவர் கவர்ந்த ஆனிரை மீட்கை; recovering the cattle seized by one's enemy.

*[நிரை + மீட்சி.]*

நிரை = கூட்டம், ஆன்மந்தை.
மீள் → மீட்சி.

**நிரைமீட்டல்** *nirai-mīṭṭal,* பெ. (n.) நிரைமீட்சி (பு.வெ.2.1.கொளு.உரை.) பார்க்க; see nirai-mīṭci.

*[நிரை + மீட்டல். நிரை = கூட்டம், ஆன்மந்தை (ஆநிரை) மீள் + தல் – மீள்தல் → மீட்டல்.]*

**நிரையசை**[1] *nirai-y-aśai,* பெ. (n.) இணைக்குறிலாலேனும் ஒற்றடுத்த இணைக் குறிலாலேனும் குறில்நெடிலாலேனும் ஒற்றடுத்த குறில் நெடிலாலேனும் ஆகிய செய்யுளசை; metrical syllable made up either of two short vowels as veṟi, or of two short vowels followed by a consonant as niṟam, or of a short and a long vowel as cuṟā, or of a short and a long vowel followed by a consonant as viḷām. "*குறிலிணை குறினெடிற்றனித்து மொற்றடுத்து நெறிவரு நிரையசை நான்குமாகும்*" (இலக்கணவி.714.).

*[நிரை + அசை.]*

இணைக்குறில்–வெறி.
ஒற்றடுத்த இணைக்குறில்–நிறம்.
குறில் நெடில்–சுறா.
ஒற்றடுத்த குறில்நெடில்–விளாம்.

**நிரையணி** *nirai-y-aṇi,* பெ. (n.) அவுரி (வைத்தியபரிபா.); indigo plant. (கதி.அக.).

**நிரையநிலம்** *niraiya-nilam,* பெ. (n.) நிரையம் (நீலகேசி, 75.உரை.); hell.

*[நிரையம் + நிலம்.]*

**நிரையம்** *niraiyam,* பெ. (n.) மாந்தப் பிறவியில் தீவினை செய்வோர் இறப்புக்குப்பின் சென்ற டைவதாகக் கருதப்படுவது; hell. "*நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்*" (பதிற்றுப்.15.).

**நிரையாடல்** *nirai-y-āḍal,* பெ. (n.) தரையிற் சதுரக்கோடு கீறிக் கற்களை வைத்து ஆடும் விளையாட்டுவகை (யாழ்ப்.); playing with stones an squares drawn on the ground.

*[நிரை + ஆடல்.]*

*நிரை = கூட்டம், கூடியாடும் விளையாட்டு, விளையாட்டு வகை. நிரை + ஆடல். ஆடுதல் → ஆடல்.*



**நிரையொன்றாசிரியத்தளை** *nirai-y-onrāśiriyattaḷai,* பெ. (n.) ஆசிரியப்பாவில் நிரையீற்றியற்சீர்முன் நிரைமுதலியற்சீர் வந்து ஒன்றுந் தளை (காரிகை.உறுப்.10.); metrical connection in āśiriyappā between any two adjoining cīr where the last syllable the preceding and the first syllable of the preceding and the first syllable of the succeeding cīr are nirai.

*[நிரை + ஒன்றாசிரியத்தளை.]*

"*திருமழை தலைஇய இருணிற விசும்பின் விண்ணதிர் இமிழிசை கடுப்பப் பண்ணமைந் தவர்தேர் சென்ற வாறே.*"

இது நிரையொன்றாசிரியத் தலையால் வந்த செய்யுளாகும்.

**நில்¹–தல்(நிற்றல்)** *nil-,* 3 செ.கு.வி. (v.i.) 1. கால்கள் ஊன்ற உடம்பு முழுவதும் நெடிதாக நிமிர்ந்திருத்தல்; to stand, "*நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச் சென்றான்*" (நாலடி, 29.). 2. உறுதியாயிருத்தல்; to be steadfast; to persevere, persist in a course of conduct "*வீடுபெற நில்*" (ஆத்திசூடி.) 3. மேற்செல்லாதிருத்தல்; to stop, halt, tarry. "நில்லடா, சிறிது நில்லடா" (கம்பரா.நாகபாச.73.). 4. இடங்கொண்டிருத்தல்; to stay, abide, continue "*குற்றியலிகர நிற்றல் வேண்டும்*" (தொல். எழுத்து.34.). 5. ஒழிதல்; to cease; to be discontinued, stopped or suspended. வேலை நின்று விட்டது (உ.வ.). 6. அடங்கியமைதல்; to be subdued "*சாயவென் கிளவிபோற் செவ்வழி யாழிசைநிற்ப*" (கலித்.143.38.). 7. எஞ்சியிருத்தல்; to remain; to be left, as matter in a boil, as disease in the system; to be due, as a debt "*நின்றதிற் பதினையாண்டு*" (திவ்.திருமாலை.3.). 8. காலந்தாழ்த்துதல்; to wait, delay. '*அரசன் அன்று கேட்கும், தெய்வம் நின்று கேட்கும்*' (பழ.). 9. ஒழுக்கத்தில் உறுதியாயிருத்தல்; to persist in a course of conduct. 10. நிலைத்திருத்தல்; to be permanent '*என் வலத்தில் மாறிலாய் நிற்க*' (பெரியபு.கண்ணப்ப.185.). 11. நீடித்தல்; to lengthen time, distance etc.,

**ம.** நில்க்க; **க.** நில்லு, நில்; **து.** நில்புன், நிலிபுனி; **கொலா., நா.** இல்; **கோண்.** நித்தானா; **கூ.** நிசல; **மால.** இலை.

*[ நீள்→நிள்→நில்.]*

நீள் → நீண்டிருத்தல்; உடம்பு முழுவதும் நெடிதாக நிமிர்ந்திருத்தல்

**நில்²** *nil,* 3 செ.கு.வி. (v.i.) 1. பொறுத்து நிற்றல்; to wait. '*நில், வருகிறேன்*'. 2. வினை செய்யாது விடுதல்; to stop. '*நில்லுகண்ணப்ப*'. (பெரியபு.ஆறுமுக. உரைநடை. ப.97.), '*கண்ணப்ப நிற்க*' (பெரியபு. கண்ணப்ப.183.).

**நில்லாதநிலை** *nillāda-nilai,* பெ. (n.) நிலையாத நிலை; state of uncertainty நில்லாத நிலையிது (சேதுபு.கடவுள்வா.).

*[நில்லாத + நிலை.]*

**நில்லாமை** *nillāmai,* பெ. (n.) 1) உறுதிப்பாடின்மை; uncertainty. 2 தவறுகை; slipping.

*[நில்→நில்லா→ நில்லாமை.]*

**நில்லிகா** *nilligā,* பெ. (n.) நிறுத்துக; *stop.* "நில்லிகா வென்பான்போ னெய்தற் றொடுத்தாளே மல்லிகா மாலை வளாய்" (பரிபா;11:104.).

நில் → நில்லிகா. நில் + இக = நில்லிக → *நில்லிகா* '*இக*' என்னும் முன்னிலையசை இகா என்றானது.

**நில அதிர்வு** *nila-adirvu,* பெ. (n.) பேரழிவையுண்டாக்கிய நிலநடுக்கத்தைத் தொடர்ந்து ஏற்படும் மெல்லிய நில அதிர்வு; after shock.

*[நிலம் + அதிர்வு]*

**நிலஅவுரி** *nila-avuri,* பெ. (n.) பேராவுரி; a large variety of indigo plant-Indigofera tinctoria. (சா.அக.).

**நிலஅளவர்** *nila-aḷavar,* பெ. (n.) நிலங்களை அளந்து பதிவுசெய்து ஆவண மாக்கும் அலுவலர்; surveyor (of land).

*[நிலம் + அளவர்.]*

**நிலஆவிரை** *nila-āvirai,* பெ. (n.) *நிலவாகை* பார்க்க; see *nila-vāgai.*

*[நிலம் + ஆவிரை.]*

**நிலஇயல்** *nila-iyal,* பெ. (n.) *நிலவியல்* பார்க்க; *see nila-v-iyal.*

*[நிலம் + இயல்.]*

**நிலஇலந்தை** *nila-ilandai,* பெ. (n.) *நிலவிலந்தை* பார்க்க; *see nila-v-ilandai.*

*[நிலம் + இலந்தை.]*

**நிலஉடமை** *nila-uḍamai,* பெ. (n.) *நிலஉடைமை* பார்க்க; *see nila-uḍaimai.*

*[நிலம் + உடமை. உடைமை → உடமை.]*

**நிலஉடைமை** *nila-uḍaimai,* பெ. (n.) தனிப் பட்ட முறையில் நிலம் சொத்தாக இருப்பது; landed property. *நில உடைமைக் குமுகாயம்.*

*[நிலம் + உடைமை.]*

**நிலக்கடம்பு**[1] *nila-k-kaḍambu,* பெ. (n.) செடிவகை (A); a plant.

*[நிலம் + கடம்பு.]*

**நிலக்கடம்பு**[2] *nila-k-kaḍambu,* பெ. (n.) குதிரைக்குளம்பு; horse hoof plant. (சா.அக.).

**நிலக்கடலை** *nila-k-kaḍalai,* பெ. (n.) (எண்ணெய் எடுக்கப் பயன்படுவதும் உணவுப் பொருளாகப் பயன்படுவதுமான) இரு பகுதிகளாக உடையக் கூடிய, சிறு நீள் உருண்டை வடிவ ஓட்டினுள் இருக்கும் பருப்பு; வேர்க்கடலை; peanut (the nut and the crop); ground nut.

*[நிலம் + கடலை.]*

இது வேரிற் காய்ப்பதால் வேர்க்கடலை; நிலத்தடியிலிருப்பதால் நிலக்கடலை; அயலகப் பயிராயினமையால் மணிலாக் கொட்டை அல்லது மல்லாக் கொட்டை; கப்பலில் வந்தமையின் கப்பற்கடலை என்றழைக்கப் படும்.



**நிலக்கடலைச்செடி** *nila-k-kaḍalai-c-ceḍi,* பெ. (n.) (எண்ணெய் எடுக்கவும் உணவுப் பொருளாகவும் பயன்படும்) இரு பகுதிகளாக உடையக் கூடிய சிறு நீள் உருண்டை வடிவ ஓட்டினுள் இருக்கும் பருப்பையுடைய கடலை வேரில் காய்க்கும் சிறு செடி; groundnut plant, groundnut crop.

*[நிலக்கடலை + செடி.]*



**நிலக்கடலைப்பயறு** *nila-k-kaḍalai-p-payaṟu,* பெ. (n.) *நிலக்கடலை* பார்க்க; see *nila-k-kaḍalai.*

*[நிலக்கடலை + பயறு.]*

**நிலக்கடலைப்பயிர்** *nila-k-kaḍalai-p-payir,* பெ. (n.) வேளாண்மையில் இட்டிருக்கும் நிலக்கடலைச் செடி; crop of ground nut.

*[நிலக்கடலை + பயிர்.]*

**நிலக்கடலைமணி** *nila-k-kaḍalai-maṇi,* பெ. (n.) *நிலக்கடலை* பார்க்க; see *nila-k-kaḍalai.*

*[நிலக்கடலை + மணி.]*

ஒ.நோ: நெல்மணி.

**நிலக்கடற்செடி** *nila-k-kaḍaṟceḍi,* பெ. (n.) கடலாரை; sea sorrel-marsiles genus. (சா.அக.).

**நிலக்கடிம்பு** *nila-k-kaḍimbu,* பெ. (n.) ஒருவகைப்பூண்டு: a kind of shurb.

*[நிலம்+கடிம்பு.]*

**நிலக்கண்ணிவெடி** *nila-k-kaṇṇi-veḍi,* பெ. (n.) நிலத்தில் மறைத்து வைத்து வெடிக்கச் செய்யும் வெடி; land mine.

*[நிலம் + கண்ணிவெடி.]*

**நிலக்கணம்** *nila-k-kaṇam,* பெ. (n.) (செய்யுள்) மூன்று நிரையடுத்து வருவதும் செய்யுளின் தொடக்கத்திருப்பின் நன்மை பயக்குமென்று கருதப்படுவதுமான செய்யுட் கணம்; metrical foot of three nirai as karu-viḷaṅ-kaṉi, considered auspicious at the commencement of a poem. "*நிலைக்கணந்தானே மலர்த் திருவிளங்கும்*" (இலக்.வி.800. உரை.).

*[நிலம் + கணம்.]*

**நிலக்கரி** *nila-k-kari,* பெ. (n.) நிலத்தடியில் படிவுகளாக இருப்பதும் வெட்டியெடுத்து எரிபொருளாகப் பயன்படுத்துவதுமான கறுப்பு நிறக்கனிமம்;coal,pitcoal.

*[நிலம் + கரி.]*

**நிலக்கரிச்சுரங்கம்** *nila-k-kari-c-curaṅgam,* பெ. (n.) நிலத்தடியில் படிந்தமைந்த கரியை வெட்டுதற்கான சுரங்கம்; coal mine.

*[நிலக்கரி + சுரங்கம்*
*சுல் – குத்தற் கருத்துவேர்*
*சுல் → சுர் → சுரங்கு → சுரங்கம்.]*



**நிலக்கலி** *nila-k-kali,* பெ. (n.) பெருங்கட்டுக்கொடி; big broom creeper. (சா.அக.).

**நிலக்கள்ளி** *nila-k-kaḷḷi,* பெ. (n.) கள்ளிவகை; green-tubed reddish backed white sepalled torch thistle.

*[நில் →நிலம் = நீர்போல் நீண்டோடாது ஒரேயிடத்தில் நிற்கும் பூதவகை. கள் → கள்ளி = பாலூறும் நிலைத் திணை. நிலம் + கள்ளி.]*



**நிலக்கறையான்** *nila-k-kaṟaiyāṉ,* பெ. (n.) கறையான் வகை (சங்.அக.); the common white ant.

*[நில் → நிலம் = நீர்போல் நீண்டோடாது ஒரேயிடத்தில் நிற்கும் பூதவகை. கல் → கர் → கரை → கறை. கறையான் = அரிப்பது, அரித்துக் கரைப்பது, குறைப்பது. நிலம் + கறையான்.]*

**நிலக்கன்று** *nila-k-kaṉṟu,* பெ. (n.) சிறுபயிர் (யாழ்.அக.); tender-crop.

*[நில் → நிலம் = நீரைப்போல் நீண்டோடாது ஓரிடத்து நிற்பது. கல் → கன் → கன்று = மா,புளி,வாழை முதலியவற்றின் இளநிலைப்பெயர்; யானை, குதிரை, கழுதை, ஆன், எருமை முதலியவற்றின் இளமைப் பெயர்.]*

*[நிலம் + கன்று.]*

**நிலக்கன்னி** nila-k-kaṉṉi, பெ. (n) 1. நிலம்பு; american bindweed. 2. தாளி; impomea.

*[நிலம் + கன்னி.]*

**நிலக்காணிக்கை** *nila-k-kāṇikkai,* பெ. (n.) வரிவகை (தெ.க.தொ.4:39.); a kind of tax.

*[நிலம் + காணிக்கை.]*

**நிலக்காரை** *nila-k-kārai,* பெ. (n.) முட்செடிவகை (வின்.); a low thorny shrub.

*[நிலம் + காரை.]*
நில் →நிலம்.
குல் – குத்தற்கருத்துவேர்.
குல்→கல் →கர் →கார் →காரை = முட்செடி.



**நிலக்காலி** *nila-k-kāli,* பெ. (n.) அவுரி; indigo plant-Indigofera tinctoria. (சா.அக.).

**நிலக்காளான்** *nila-k-kāḷāṉ,* பெ. (n.) காளான்வகை (வின்.); toadstool, a fungus.

*[நிலம் + காளான்*
*நில் → நிலம்*
*கல் → கள் → காள் → காளான்.]*



**நிலக்கிழங்கு** *nila-k-kiḻaṅgu,* பெ. (n.) நிலப்பனைக்கிழங்கு (சங்.அக.); tuber of nila-p-paṉai.

*[நிலம் + கிழங்கு.]*

**நிலக்கிழவி** *nila-k-kiḻavi,* பெ. (n.) மூவிலைக் குருந்து; thin leaved wild lime-Trichillia spinosa. (சா.அக.).

**நிலக்கிழார்** *nila-k-kiḻār,* பெ. (n.) பேரளவிலான விளை நிலத்தைச் சொத்தாக வைத்திருப்பவர்; பெரும் நில உடைமையாளர்; landowner, land lord.

நிலம்+கிழார்.

நில் → நிலம். குல் →கில் (திரட்சி,உருண்டை) கிழ → கிழான் → கிழார். நீரிறைக்கும் சால், நன்செய் வேளாண்மை செய்யும் உழவர், உரிமையாளர்.

**நிலக்கீல்** *nila-k-kīl,* பெ. (n.) கீல்; bitumen, asphalt. (சா.அக.).

**நிலக்குண்டி** *nila-k-kuṇḍi,* பெ. (n.) குன்றிமணி; Jeweller's bead. (சா.அக.).

**நிலக்குதம்** *nila-k-kudam,* பெ. (n.) சேனைக்கிழங்கு; elephant ham - typhonium trilobatum alias Dracontium maxima. (சா.அக.).

**நிலக்குமிழ்** *nila-k-kumiḻ,* பெ. (n.) நீண்டசெடிவகை (பதார்த்த.274.); small Cashmere tree.-Gmelina Asiatica. கழிச்சல், விழிசொருகல், கொட்டாவி, மந்தம் ஆகியவற்றைப் போக்கும் மருத்துவக் குணமுடையது. (சா.அக.).

**நிலக்குரா** *nila-k-kurā,* பெ. (n.) நிலக்குரோசினை; an unknown drug. இது பித்தளையின் களிம்பை அகற்றும்; வெடியுப்பைச் செந்தூரம் செய்யும். (சா.அக.).

*[நிலக்குரோசினை → நிலக்குரா.]*

**நிலக்குரோசினை** *nila-k-kurōšiṉai,* பெ. (n.) பெயரறியா மருந்துச் செடி an unknown drug. இது பித்தளையின் களிம்பை அகற்றும்; வெடியுப்பைச் செந்தூரம் செய்யும். (சா.அக.).

*[நிலக்குரோசினை → நிலக்குரா.]*

**நிலக்குழி** *nila-k-kuḻi,* பெ. (n.) **1.** உரல்குழி; pit in the ground in which a mortar is fixed **2.** எழுத்துக்குழி (அட்சரக்குழி); the figure of a letter marked in sand for a child to trace over.

*[நிலம் + குழி.]*



**நிலக்குற்றம்** *nila-k-kuṟṟam,* பெ. (n.) *அரங்கக்குற்றம்;* defect in theatre, stage. *"எண்ணப்பட்ட நாடக நூலாசிரியர், வகுத்த இயல்புகளின் வழுவாதவகை அரங்கு செய்யத் துவர் வரி வளை பொருத்தல் முதலிய நிலக்குற்றங்கள் நீங்கின விட்த்து" (சிலப்.3:95. உரை.).*

*[நிலம் + குற்றம்]*

**நிலக்குறி** *nila-k-kuṟi,* பெ. (n.) நிலத்தின்மேல் சில சாற்றைப் பிழிய அதன் கீழுள்ள பொருட்குவையைக் கண்டறியுமாறு தோன்றும் அடையாளம் (வின்.); sign said to appear on the ground when certain juices are poured on it, showing the presence of treasure underground and its quality.

*[நிலம் + குறி.]*

**நிலக்கூந்தல்** *nila-k-kūndal,* பெ. (n.) கொடியாள் கூந்தல் என்னும் செடி; pea-fruited dodder.

*[நிலம் + கூந்தல்.]*

**நிலக்கூலி** *nila-k-kūli,* பெ. (n.) நிலவாடகை; rent for land. *"நிலக்கூலி தண்டிப் போந்த படிக்கும்"* (தெ.க.தொ. 6:385.).

*[நிலம் + கூலி.]*

**நிலக்கொட்டை**[1] *nila-k-koṭṭai,* பெ. (n.) நிலக்கடலை பார்க்க; see nila-k-kaḍalai. (சா.அக.).

*[நிலம் + கொட்டை.]*

**நிலக்கொட்டை**[2] *nila-k-koṭṭai,* பெ. (n.) பூடுவகை (வின்.); a kind of plant.

**நிலக்கொடி** *nila-k-koḍi,* பெ. (n.) நிலமகள் பார்க்க; see nila-magaḷ. *"நிலக்கொடியுந் துயர் நீத்தனள்"* (கம்பரா. திருவவ.122.).

*[நிலம் + கொடி.]*

**நிலக்கொடிவேலி** *nila-k-koḍivēli,* பெ. (n.) நீலக்கொடிவேலி பார்க்க; see nīla-k-koḍivēli. (சா.அக.).

**நிலக்கொதி** *nila-k-kodi,* பெ. (n.) நிலக்கொதிப்பு பார்க்க (வின்.); see nila-k-kodippu.

*[நிலம் + கொதி.]*

**நிலக்கொதிப்பு** *nila-k-kodippu,* பெ. (n.) வெய்யோனின் வெப்பத்தால் நிலத்திலெழும் வெக்கை; heat of the ground, due to hot sun.

*[நிலம் + கொதிப்பு.]*

**நிலக்கொறுக்கை** *nila-k-koṟukkai,* பெ. (n.) மஞ்சணிறமானதும் இரண்டடி நீளம் வளர்வதுமான கடல்மீன் வகை; sea-fish, canary-yellow, attaining two feet in length.

*[நிலம் + கொறுக்கை.]*



**நிலக்கோட்டை** *nila-k-kōṭṭai,* பெ. (n.) ஒருவகைப்பூண்டு; a kind of shrub.

**நிலகடகம்** *nila-kaḍagam,* பெ. (n.) சிவதுளசி; shiva's basil-Basili cum alba. (சா.அக.).

**நிலகந்திகம்** *nilakandigam,* பெ. (n.) நொச்சி; notchy-vitex negundo. (சா.அக.).

**நிலகி** *nilagi,* பெ. (n.) கள்ளிக்கொடி; creeping milk hedge-sarcostemma intermedium. (சா.அக.).

**நிலகிக்கொத்தவரை** *nilagi-k-kottavarai,* பெ. (n.) இனிப்புக்கொத்தவரை; sweet cluster bean-cyamopsis psoralioides. (சா.அக.).

**நிலங்கடந்தநீனிறவண்ணன்** *nilaṅ-kaḍandanīniṟavaṇṇaṉ,* பெ. (n.) திருமால்; tirumal. *"காமன் மகன் அநிருத்தனைத் தன்மகள் உழை காரணமாக வாணன் சிறை வைத்தலின், அவனுடைய சோவென்னும் நகரவீதியிற் சென்று நிலங்கடந்த நீனிற வண்ணன் குடங்கொண்டாடிய குடக்கூத்தும்"* (சிலப்.6.55:உரை.).

*[நிலம் + கடந்த + நீலம் + நிறம் + வண்ணன்.]*

**நிலங்கடந்தநெடுமுடியண்ணல்:** *nilaṅ-kaḍanda-neḍumuḍi-y-aṇṇal,* பெ. (n.) திருமால்; tirumal. *"நீணிலங்கடந்த நெடுமுடியண்ணல் தாடொழுதகையேன் போகுவல் யானெனன்"* (சிலப்.11:147.).

*[நிலம் + கடந்த + நெடுமுடி + அண்ணல்.]*

**நிலங்கீறு–தல்** *nilaṅ-kīṟu-,* 7 செ.கு.வி. (v.i.) பொழுது புலருதல் (நெல்லை); to dawn.

*[நிலம் + கீறு–,]*

காலைக் கதிரவன் நிலத்தைக்கீறி வெளி வருவது போன்று தோன்றுதலால் இவ்வாறழைக்கப்பட்டிருக்கலாம்.

**நிலங்கு** *nilaṅgu,* பெ. (n.) பெரியகாடை (பிங்.); quail.

**நிலங்கொள்பாம்பு** *nilaṅ-koḷ-pāmbu,* பெ. (n.) நிலத்திலிருக்கும் பாம்பு; snakes. *"நிலங்கொள் பாம்பின் இழிதரும் விலங்கு மலை நாடனொடு கலந்த நட்பே"* (குறுந்.134.).

*[நிலம் + கொள் + பாம்பு.]*

**நிலச்சம்பங்கி** *nila-c-cambaṅgi,* பெ. (n.) செடிவகை; tuberose.

*[நிலம் + சம்பங்கி.]*

**நிலச்சரிவு** *nila-c-carivu,* பெ. (n.) மேடான இடத்திலிருந்து மண், மலையிலிருந்து பாறை, கல் முதலியவை திடுமெனப் பெயர்ந்து விழுதல்; landslide. பெருமழை பெய்ததால் *நீலமலையில் நிலச்சரிவு ஏற்பட்டுப் போக்குவரத்துத் தடைபட்டது.* (உ.வ.).

*[நிலம் + சரிவு.]*

**நிலச்சருக்கரை** *nila-c-carukkarai,* பெ. (n.) நிலச்சருக்கரைக் கிழங்கு; wild ground potato merma arenaria. (சா.அக.).

**நிலச்சல்லியம்** *nila-c-calliyam,* பெ. (n.) கிணறு வெட்டுதற்குரிய தகுதியை யறிவிக்கும் நிலக்குறி; the sign on a plot of land indicating whether it is suitable for digging a well.

*[நிலம் + சல்லியம்.*
*சுல் – குத்தற் கருத்து வேர்.*
*சுல் → சல் → சல்லியம்.]*

**நிலச்சாடை** *nila-c-cāḍai,* பெ. (n.) *நிலச்சார்பு* பார்க்க; see *nila-c-cārbu.*

*[நிலம் + சாடை.]*

**நிலச்சாந்து** *nila-c-cāndu,* பெ. (n.) **1.** சுண்ணக்காரை; சுண்ணாம்புக்காரை; lime, mortar. **2.** மண்ணைக்கொண்டு குழந்தை நெற்றியிலிடும் பொட்டு; mark on the forehead of child, made with earth.

*[நிலம் + சாந்து.]*

**நிலச்சாய்வு** *nila-c-cāivu,* பெ. (n.) *நிலச்சார்பு* பார்க்க; see *nila-c-cārbu.*

*[நிலம் + சாய்வு. சார்பு → சாய்வு.]*

**நிலச்சார்** *nila-c-cār,* பெ. (n.) *நிலச்சார்பு* (யாழ்ப்.) பார்க்க; see *nila-c-cārbu.*

*[நிலம் + சார். நில் → நிலம். சால் → சார்.]*

**நிலச்சார்பு** *nila-c-cārbu,* பெ. (n.) **1.** நிலத்தின் தன்மை; nature of the soil. **2.** நிலவளம்; fertility of the soil.

*[நிலம் + சார்பு. நில் → நிலம்.சால் → சால்பு → சார்பு.]*

**நிலச்சுருங்கி**[1] *nila-c-curuṅgi,* பெ. (n.) தொட்டாற்சுருங்கி; sensitive plant-mimosa indica olias oxalis sensitive. (சா.அக.).

*[நிலம் + சுருங்கி.]*

**நிலச்சுவான்தார்** *nila-c-cuvāṉdār,* பெ. (n.) *நிலக்கிழார்* பார்க்க; see *nila-k-kiḻār.*

**நிலச்சூடு** *nila-c-cūḍu,* பெ. (n.) *நிலக்கொதிப்பு* (வின்.) பார்க்க; see *nila-k-kodippu.*

*[நிலம் + சூடு.]*

**நிலச்சேமை** *nila-c-cēmai,* பெ. (n.) சேம்பையினச் செடிவகை (A.); a kind of arum.

*[நிலம் + சேமை.]*

**நிலசம்** *nilašam,* பெ. (n.) துருசு; blue vitrol-copper acetate. (சா.அக.).

**நிலத்தடிநீர்** *nilattaḍi-nīr,* பெ. (n.) நிலத்தின் அடியில் இருக்கும் நீர்; ground water. ஆழ்த்துளைக் கிணற்றின் மூலம் நிலத்தடி நீரை எடுத்து வேளாண்மைக்குப் பயன்படுத்துவர். (உ.வ.).

*[நிலத்தடி + நீர்]*

**நிலத்தடிநீர்மட்டம்** *nilattadi-nīr-mattam,* பெ. (n.) மண்ணுள்ளிருக்கும் நீரின் அளவு; ground water level.

*[நிலத்தடி + நீர்மட்டம்.]*

**நிலத்தண்டு** *nila-t-tandu,* பெ. (n.) **1.** வேர்த்தண்டு; a stem resembling a root-rhizome **2.** கீரைத்தண்டு; garden green-Amaranthus blitum. (சா.அக.).

*[நிலம் + தண்டு.]*

**நிலத்தரசு** *nilattarašu,* பெ. (n.) *நிலத்தரசுகாரர்* பார்க்க; see *nilattarašu-kārar.*

*[நிலம் + அத்து + அரசு.]*

**நிலத்தரசுகாரர்** *nilattarašu-kārar,* பெ. (n.) நிலவுடையாளர் (யாழ்ப்.); proprietors of the land.

*[நிலம் + அத்து + அரசுகாரர்.]*

**நிலத்தழல்** *nila-t-talal,* பெ. (n.) *நிலச்சூடு* (தக்கயாகப்.52,உரை.) பார்க்க; see *nila-c-cūdu.*

*[நிலம் + தழல்.]*

**நிலத்தளம்** *nila-t-talam,* பெ. (n.) தரை; ground, earth.

*[நிலம் + தளம்.]*

**நிலத்தாமரை** *nila-t-tāmarai,* பெ. (n.) முளரி; rose-Rosa centifolia.

*[நிலம் + தாமரை.]*

*நீரிலுறையும் தாமரையையொத்திருக்கும் அயலகப் பூஞ்செடி.*



**நிலத்தி** *nilatti,* பெ. (n.) மின்மினி, நுளம்பு (சூடா.); firefly.

*[நித்தில் → நிலத்தி.]*

**நிலத்திணை** *nila-t-tinai,* பெ. (n.) *நிலைத்திணை* பார்க்க; see *nilai-t-tinai.*

*நில் → நிலை + திணை.*

*நிலை → நில (கொ.வ.)*

**நிலத்திலம்** *nilattilam,* பெ. (n.) முத்து; pearl.

*[நிலத்தி – ஒளிர்வு*
*நிலத்தி → நிலத்திலம்.]*

**நிலத்துஇன்மைகூறிமறுத்தல்** *nilattu-inmaikūri-maruttal,* பெ. (n.) அகப் பொருட்டுறையுள் ஒன்று; one of agapporul-turai.

*[நிலைத்து + இன்மைகூறி + மறுத்தல்.]*

திருக்கோவையாரில் வரும் அகப்பொருட் துறைகளுளொன்று, இதன் பொருள் சந்தனத் தழையின்றி வேறுதழை கொண்டு செல்ல, இது எங்கள் நிலத்தில் இல்லாதது, உறவினர் ஐயுறுவர் என்று கூறி மறுப்பது என்பதாம்.

**நிலத்துத்தி**[1] *nila-t-tutti,* பெ. (n.) அரிவாள் முனைப்பூண்டு; a shruby plant-sida cordifolia. (சா.அக.).

**நிலத்துத்தி**[2] *nila-t-tutti,* பெ. (n.) துத்திவகை (யாழ்ப்.); downy heart leaved morning mallow.

*[நிலம் + துத்தி.]*

**நிலத்துளக்கு** *nila-t-tuḷakku,* பெ. (n.) நிலநடுக்கம்; earthquake. "*நிலத்துளக்கு விண்ண திர்ப்பு*" (ஆசாரக்.48.).

*[நிலம் + துளக்கு.* துளங்கு → துளக்கு = அசைவு, அதிர்வு.*]*

**நிலத்துளசி** *nila-t-tuḷaśi,* பெ. (n.) துளசிவகை, (பதார்த்த.305.); a kind of basil-Geniospermum gracile.

*[நிலம் + துளசி.]*



**நிலத்தூழி** *nila-t-tūḻi,* பெ. (n.) நிலத்துத் தோன்றிய ஐந்தாம் ஊழி; the fifth deluge. "உள்ளீடாகிய இருநிலத் தூழியும் நெய்தலுங் குவளையும் ஆம்பலும் சங்கமும்" (பரிபா.2:12.).

*[நிலம் + அத்து + ஊழி]*

**நிலத்தெய்வம்** *nila-t-teyvam,* பெ. (n.) 1. நிலத்தேவி (பூதேவி) (தக்கயாகப் 671, உரை.); earth,as goddess. 2. ஐந்திணைக் குரிய தெய்வங்கள்; deities presiding over the five-fold,tiṇai. "*நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனமகிழக் கலத்தொடு புணர்ந்துமைந்த கண்டத்தாற் பாடத் தொடங்கு மன்*" (சிலப்.7:24.).

*[நிலம் + தெய்வம்.]*

**நிலத்தேவர்** *nila-t-tēvar,* பெ. (n.) ஆரியப் பார்ப்பனர்; brahmins. மேலாத்தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும். (திவ். திருவாய்.5.1.8.)

*[நிலம் + தேவர்.]*

ஆரியப் பார்ப்பனர்களாகிய பிராமணர்கள் மண்ணுலகத் தேவர்களாகக் கருதப் பட்டமையானால் பூசுரர் எனப்பட்டனர். பூசுரர் என்பதின் தமிழ் வடிவமே நிலத்தேவர் என்பது.

**நிலத்தேவர்குழு** *nila-t-tēvar-kuḻu,* பெ. (n.) பிராமணர்குழு; group of bramins.

*[நிலத்தேவர் + குழு.]*

**நிலத்தோர்** *nila-t-tōr,* பெ. (n.) மாந்தர்; human being. இருநிலத்தோரும் இயைகென ஈத்தநின் தண்பரங் குன்றத் தியலணி. (பரிபா. 19:4)

**நிலந்தட்டி**[1] *nilan-taṭṭi,* பெ. (n.) நிலஞ்சமனாக்கும் பலகை (யாழ்ப்.); an instrument for levelling or smoothing a floor or road.

*[நிலம் + தட்டி.]*



**நிலந்தட்டி**[2] *nilan-taṭṭi,* பெ. (n.) கடல்மீன் வகை; a kind of sea-fish.

**நிலந்தடி** *nilantaḍi,* பெ. (n.) *நிலந்தட்டி*[1] (நாஞ்சில்.) பார்க்க; see *nilan-taṭṭi.*

*[நிலந்தட்டி → நிலந்தடி.]*

**நிலந்தரஞ்செய்—தல்** *nilan-taraṉ-cey-,* 1செ.குன்றாவி. (v.t.) முற்றும் அழித்தல்; to destroy utterly, as razing to the ground "*துயராயினவெல்லா நிலந்தரஞ் செய்யும்*" (திவ்.பெரியதி.1.1.9.).

*[நிலம் + தரம்செய்—,]*

**நிலந்தருதிருவிற்பாண்டியன்** *nilantaru-tiruviṟ-pāṇḍiyaṉ,* பெ. (n.) தொல்காப்பியம் அரங்கேறிய அவைக்குரியோனும் இடைச்சங்க காலத்தவருமான பாண்டியன் (தொல்.பாயி.); Pāṇḍiyaṉ of the second sangam in whose court Tolkāppiyam was first approved and published.

**நிலந்தருதிருவின்நிழல்** *nilan-taru-tiruviṉ niḻal,* பெ. (n.) நிலத்திற்குப் பல செல்வத்தினையும் தருகின்ற அருள்; benidiction. நிலந்தருதிருவின் நிழல்வாய் நேமி (சிலப்.15:1.).

(நிலம்+தரும்+நிழல்.)

மன்னன் குடிகளிடத்து அருளுடையான் ஆயவழி நிலத்துப் பல்வளமும் பெருகுமாகலின் நிலந்தருவின் நிழலாயிற்று. நிழல்=அருள். மாற்றாரது நிலத்தைத்தரும் வெற்றியாகிய செல்வம் என்றும், ஒளிபொருந்திய ஆணைச்சக்கரம் என்றுமாம்.

**நிலந்தருதிருவினெடியோன்** *nilantaru-tiruviṉeḍiyōṉ,* பெ. (n.) *நிலந்தருதிருவிற் பாண்டியன்* பார்க்க; see *nilan-taru-tiruviṟ-pāṇḍiyaṉ.* "*புகழ்சால் சிறப்பி னிலந்தரு திருவினெடியோன் போல்*" (மதுரைக். 763.).

*[நிலம்தருதிருவின் + நெடியோன்.]*

**நிலந்திரைத்தானை** *nilan-tirai-t-tāṉai,* பெ. (n.) நிலஅகலத்தைத் தன்னுள்ளே அடக்கிய தானை; battalian of army. "கலந்த கேண்மையிற் கனக விசயர் நிலந்திரைத் தானையொடு நிகர்த்துமேல்வர" (சிலப்.26:186.). "நிலந்திரைக்கும் கடற்றானை" (புறநா.96.).

[நிலம் + திரைத்த + தானை]

திரைத்தல் = சுருங்குதல், நிலவகலத்தைத் தன்னுள்ளே யடக்குதல்.

**நிலந்தெளிதல்** *nilan-teḷidal,* பெ. (n.) பொழுது புலரல்; day-breaking.

*[நிலம் + தெளிதல்.]*

இருளாற் கவ்வப் பட்டிருந்த நிலத்தைத் தன் கதிரொளியால் புலப்படுத்தித் தெளிவிக்கின்றமையால் பொழுது புலரலை நிலந்தெளிதல் என்றனர்.

**நிலநட்டம்** *nila-naṭṭam,* பெ. (n.) வேளாண்மை செய்யாமையால் உண்டாகும் இழப்பு (இ.வ.); loss on land by allowing it to lie fallow.

*[நிலம் + நட்டம்.]*

த. நட்டம். வ. நஷ்டம்.

**நிலநடுக்கம்** *nila-naḍukkam,* பெ. (n.) (உள்ளடுக்குகள் நொறுங்கி நகர்வதன் மூலம்) நிலத்தின் மேற்பரப்பு அடையும் அதிர்வு; earth tremor, earthquake. ***நேற்று சென்னையில் ஏற்பட்ட நிலநடுக்கம் பத்து நொடிகள் நீடித்தது.*** (உ.வ.).

*[நிலம் + நடுக்கம்.]*

**நிலநடுக்கோடு** *nila-naḍu-k-kōḍu,* பெ. (n.) இரு முனையங்களிலிருந்தும் நிலப்பந்தைச் சம அளவில் பிரிக்கக் குறுக்கு வாட்டில் இருப்பதாகக் கொள்ளும் கற்பனைக்கோடு; equator.

*[நிலம் + நடு+ கோடு.]*

**நிலநயம்** *nila-nayam,* பெ. (n.) *நிலநலம்* பார்க்க; see *nila-nalam.*

*[நிலம் + நயம்*
*நலம் → நயம்.]*

**நிலநலம்** *nila-nalam,* பெ. (n) நிலத்தினது நன்மை; profit on land.

தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம் கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால்–பெண்ணீர்மை
கற்பழியா ஆற்றல் கடல் சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி.
(நல்வழி.16.).

**நிலநெல்லி** *nila-nelli,* பெ. (n.) நெல்லிவகை; a common herb-phyllanthus maderas patensis.

க.,து. நெலநெல்லி.

*[நிலம் + நெல்லி.]*

**நிலப்படுகை** *nila-p-paḍugai,* பெ. (n.) ஆற்றோரத்தமைந்துள்ள நீர்வளம் மிக்க நிலம்; land on the banks of a river fit for cultivation.

*[நிலம் + படுகை.]*

**நிலப்படை** *nila-p-paḍai,* பெ. (n.) (பண்டைக்காலத்திருந்த) நால்வகைப் படையுளொன்றான தரைப்படை; military one among the four divisions; of armed force in olden days.

*[நிலம் + படை.]*

நிலத்தில் ஊர்ந்து சென்று பகைவரைத்தாக்கும் படைவகை. இப்படைவகைப் பழங் காலத்திலிருந்து இன்றுவரையுள்ளதென்பது குறிப்பிடத்தக்கது.

நால்வகைப்படைகளாவன:

| இக்காலம் | முற்காலம் |
|---|---|
| 1. நிலப்படை. | 1. நிலப்படை. |
| 2. நீர்ப்படை. | 2. குதிரைப்படை. |
| 3. வான்படை. | 3. யானைப்படை. |
| | 4. தேர்ப்படை. |

நாட்டுமக்களையும் தன்னையும் காத்துக் கொள்வதற்கும், தம் பகைவரைத் தெருட்டுதற்கும், ஆளும் நிலப்பரப்பை விரிவாக்கிக் கொள்வதற்கும், பயன்படும் வகையில் அமைத்துக்கொள்வது படையாகும்.

அது மன்னராட்சிக் காலத்தில், தேர், கரி, பரி, காலாள் என நான்வகையாய் அமைந்திருந்தது. இன்றைய மக்களாட்சியில் நிலம், நீர், வான் என மூவகையாய்ப் பாகுபாடு கொண்டது. அஃதெவ்வாறாயினும் காலட் படையாம் நிலப்படை இன்றுவரை தொடர்ந்து வருகின்றது.

**நிலப்பயன்** *nila-p-payaṉ,* பெ. (n.) நில விளைவு (வின்.); produce of the soil, profit on the land.

*[நிலம் + பயன்.]*

**நிலப்பயிர்** *nila-p-payir,* பெ. (n.) பெண் (வைத்தியபரி.கருப்பொ.); female,

**நிலப்பரணி** *nila-p-paraṇi,* பெ. (n.) சிற்றீஞ்சு; small date fruit-phoenix farnifera. (சா.அக.).

**நிலப்பரப்பு** *nila-p-parappu,* பெ. (n.) **1.** நிலத்தின் பரப்பளவு (வின்.); a measure of land. **2.** நிலப்பந்தின் பரப்பளவு; spread of extent of the earth.

*[நிலம் + பரப்பு.]*

**நிலப்பலா** *nila-p-palā,* பெ. (n.) வேர்ப்பலா (சங்.அக.); common jack fruit.

*[நிலம் + பலா.]*

நிலத்தடியில் காய்க்கும் கடலை நிலக்கடலை என்றாற் போல், நிலத்தையொட்டியுள்ள வேரில் பழுக்கும் வேர்ப்பலா நிலப்பலா எனப்பட்டது.

**நிலப்பனை** *nila-p-paṉai,* பெ. (n.) செடிவகை (பதார்த்த.403.); moosly or weevil root-curculigo orchioides.

*[நிலம் + பனை.]*

**நிலப்பனைக்கிழங்கு** *nila-p-paṉai-k-kiḻaṅgu,* பெ. (n.) நிலப்பனையின் கிழங்கு; ground palm-curculigo orchioides.

*[நிலப்பனை + கிழங்கு.]*

பனைமரத்தின் கொட்டைகளை மண்ணில் புதைத்து வைத்து, குறிப்பிட்ட காலம் வரை தண்ணீர் ஊற்றி வந்தால் முளைவிட்டு கிழங்காக வளரும். இதுவே பனைக் கிழங்கு. இக் கிழங்கு மருத்துவக் குணங்களைக் கொண்டது. (சா.அக.).

**நிலப்பாகல்** *nila-p-pāgal,* பெ. (n.) பாகல் வகை (மலை.); balsam-apple, climber-mormordica humilis.

*[நிலம் + பாகல்.]*

*பாகல் கொடிப் பாகல், நிலப்பாகல் என இரு வகையுடைத்து. கொடிப்பாகல் என்பது மரம்,செடி வேலி போன்றவற்றில் படர்ந்து காய்க்கும். நிலப்பாகல் என்பது நிலத்தில் கொடி போல் படர்ந்து காய்க்கும் தன்மையுடையது.*

**நிலப்பாகை** *nila-p-pāgai,* பெ. (n.) நிலப் பாகல் (சங்.அக.) பார்க்க,; see nila-p-pāgal.

*[நிலம் + பாகை. பாகல் → பாகை.]*

**நிலப்பாசம்** *nila-p-pāšam,* பெ. (n.) நாகப் பாம்பு; cobra. (சா.அக.).

**நிலப்பாலை[1]** *nila-p-pālai,* பெ. (n.) சிறுமரவகை (L); round leaved discous feather foil.

*[நிலம் + பாலை.]*

**நிலப்பாலை[2]** *nila-p-pālai,* பெ. (n.) 1. கும்பம் பாலை; blue dyeing roseberry-wrightia tinetoria 2. ஒழுகு; ground paulay, round leaved discous feather foil-cleistanthus collinus alias amanoa collina. 3. நிலத்தையொட்டிப் படரும் ஒரு செடி வகை; an annual with procumbent branches-Euphorbiahirta. (சா.அக.).

*[நிலம் + பாலை.]*

**நிலப்பாவாடை** *nila-p-pāvāḍai,* பெ. (n.) நடைபாவாடை (வின்.); cloth spread on the ground to walk on, as in a procession.

*[நிலம் + பாவாடை.]*

நில் → நிலம்
பா = பரவுதல், பாவுதல்
பா + ஆடை = பரவும் ஆடை.

**நிலப்பாளை[1]** *nila-p-pāḷai,* பெ. (n.) *அம்மான்பச்சரிசி* (சங்.அக.) பார்க்க; see *ammāṉ- paccariši.*

*[நிலம் + பாளை.]*



**நிலப்பாளை[2]** *nila-p-pāḷai,* பெ. (n.) பங்கம்பாளை; Indian worm killer-aristolochia bracteata. (சா.அக.).

**நிலப்பிப்பிலி** *nila-p-pippili,* பெ. (n.) ஒரு பூடு; lippia nodiflora. (சா.அக.).

*[நிலம் + பிப்பிலி.]*

**நிலப்பிரண்டை** *nila-p-piraṇḍai,* பெ. (n.) ஓரிலைத்தாமரை; one leaf lotus-Londium sufsruticosum. (சா.அக.).

*[நிலம் + பிரண்டை.]*

**நிலப்பிரபு** *nila-p-pirabu,* பெ. (n.) *நிலக்கிழார்* பார்க்க; see *nila-k-kiḻār.*

*[நிலம் + பிரபு]*

**நிலப்பிரபுத்துவம்** *nila-p-pirabuttuvam,* பெ. (n.) தனியாள் பெருமளவு நிலத்தைச் சொந்தமாகக் கொண்டிருக்கும் முறை; feudal-ism. *நிலப்புரபுத்துவக் குமுகாயத்தில் கொத்தடிமை முறையும் இருந்தது.* (உ.வ.).

*[நிலம் + பிரபுத்துவம்.]*

**நிலப்பிரயோசனம்** *nila-p-pirayōšaṉam,* பெ. (n.) நிலப்பயன் பார்க்க; see *nila-p-payaṉ.*

*[நிலம் + பிரயோசனம்.]*

**நிலப்பிளப்பு** *nila-p-piḷappu,* பெ. (n.) நிலம் பலகாலாகப் பிரிதல்; வெடித்தல் (சங்.அக.); crack in the earth.

*[நிலம் + பிளப்பு. நில் → நிலம், பிள் → பிள → பிளப்பு.]*

**நிலப்பீர்க்கு** *nila-p-pīrkku,* பெ. (n.) பீர்க்கு வகை; species of luffa.

*[நிலம் + பீர்க்கு. நில் → நிலம், பிள் → பீர் → பீர்க்கு.]*

**நிலப்புரண்டி** *nila-p-purandi,* பெ. (n.) நிலத்தில் புரண்டு கிடக்கும் பூண்டு (வின்.) a therb which takes fast hold of the ground.

*[நிலம் + புரண்டி]*

*[புரள் – புரண்டு – புரண்டி]*

**நிலப்புழு** *nila-p-pūlu,* பெ. (n.) *நிலப்பூச்சி* (வின்.) பார்க்க; see *nila-p-pūcci.*

*[நிலம் + புழு.]*

**நிலப்புழுக்கம்** *nila-p-pulukkam,* பெ. (n.) *நிலக்கொதிப்பு* (யாழ்.அக.)பார்க்க; see *nila-k-kodippu.*

*[நிலம் + புழுக்கம்.]*

**நிலப்பூ[1]** *nila-p-pū,* பெ.(n.) புற்புதர் களிலுண்டாகும் பூ; flowers of grasses and herbs. "*நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ*" (திவ்.இயற்.திருவிருத்.55.).

*[நிலம் + பூ.]*

**நிலப்பூ[2]** *nila-p-pū,* பெ. (n.) தாளி; convolulus. (சா.அக.).

**நிலப்பூச்சி** *nila-p-pūcci,* பெ.(n.) சில்வண்டுப்பூச்சிவகை (வின்.); mob-cricket gryllotalpa forealis.

*[நிலம் + பூச்சி.]*

**நிலப்பூசணி** *nila-p-pūšaṇi,* பெ. (n.) செடிவகை (l.); panicled bindweed.

*[நிலம் + பூசனி.]*

**நிலப்பூதம்** *nila-p-pūdam,* பெ. (n.) ஐவகைப் பூதங்களுளொன்று; the earth, one among the five elements of the nature.

*[நிலம் + பூதம்.]*

ஐவகைப் பூதங்களாவன:

1. நிலம். 2. நீர். 3. வான். 4. வளி. 5. தீ.

**நிலப்பெயர்** *nila-p-peyar,* பெ. (n.) வாழும் நாட்டின் அடிப்படையில் ஒருவனுக்கிடும் பெயர்; names of persons derived from their countries, as aruvāḷan, cōḻiyan. "*நிலப்பெயர் குடிப்பெயர்*" (தொல். சொல். 167.).

*[நிலம் + பெயர்.]*

**நிலப்பெயர்ச்சி** *nila-p-peyarcci,* பெ. (n.) இடமாறுகை (யாழ்.அக.); change of place.

*[நிலம் + பெயர்ச்சி.]*

**நிலப்பெயர்வு** *nila-p-peyarvu,* பெ. (n.) நிலப்பெயர்ச்சி பார்க்க; see nila-p-peyarcci.

*[ நிலப்பெயர்ச்சி → நிலப்பெயர்வு.]*

**நிலப்பொட்டு[1]** *nila-p-pottu,* பெ. (n.) மண்ணைக்கொண்டு குழந்தை நெற்றியில் இடும் பொட்டு; mark on the forehead of child, made on earth. வீரபாண்டி கட்டப்பொம்மன் பிறந்த ஊராகிய பாஞ்சாலங் குறிச்சியில் இன்றும் அவ்வூரில் பிறந்த குழந்தைகளுக்கு மண்ணை எடுத்து நெற்றில் பொட்டு வைக்கும் வழக்கம் உண்டென்பதறிக.

*[நிலம் + பொட்டு.]*

**நிலப்பொட்டு²** *nila-p-poṭṭu,* பெ. (n.) காளான்வகை (வின்.); a kind of medicinal fungus.

*[நிலம் + பொட்டு.]*

நிலமாகிய தரையில் பொட்டு போன்றிருப்பது.

**நிலப்போக்கு** *nila-p-pōkku,* பெ. (n.) மண்ணின் தன்மை; quality of soil.

*[நிலம் + போக்கு.]*

**நிலப்போங்கு** *nila-p-pōṅgu,* பெ. (n.) நிலத்தினியல்பு அல்லது தன்மை (வின்.); quality of soil.

*[நிலம் + போங்கு.]*

நில் → நிலம்

போக்கு → போங்கு.

**நிலபுலம்** *nila-pulam,* பெ. (n.) புன்செய், நன்செய் நிலம்; (property in) dry and wet lands. அவருக்கு நிறைய நிலபுலங்கள் இருக்கின்றன. (உ.வ.)

*[நிலம் + புலம்.]*

நில் → நிலம் = நீர் போல் ஓடாது நிலைத்து நிற்கும் பூதம்.

புல்→ புலம்= பொருந்தியிருக்கும் நிலம்.

**நிலபுலன்** *nila-pulaṉ,* பெ. (n.) நிலபுலம் பார்க்க; see nila-bulam.

*[நிலபுலம் → நிலபுலன்.]*

**நிலம்¹** *nilam,* பெ. (n.) **1.** நீர் போல் இயங்காது ஒரேயிடத்தில் நிலையாக நிற்கும் பூதவகை; the earth. "நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்" (தொல்.மரபு.90.). **2.** மண்; ground, land. "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க் கினத்தியல்ப தாகும் அறிவு" (குறள்,452.). 'நிலத்தில் எழுந்த பூண்டு நிலத்தில் மடியவேண்டும்' (பழ.). **3.** நிலத்தின் புறணி; soil. 'நிலந்தினக் கிடந்தன நிதி' (சீவக.1471.). **4.** தரை; ground; நிலத்திற் கிடந்து வணங்கினான். (உ.வ.). **5.** நன்செய் அல்லது புன்செய் ஆகிய வயல்; விளை நிலப் பரப்பு; field. நிலத்திற்குத்தகுந்த கனியும் குலத்திற்குத் தகுந்த குணமும். (பழ.). **6.** நீரும் நிலமுஞ் சேர்ந்த ஞாலம்; the world. 'நிலந்திறம் பெயருங்காலையும்' (பதிற்றுப்.63:6.); "நிலம் பெயரினும் நின் சொல் பெயரல்" (புறநா.3.). **7.** இடம்; place. "நிலப்பெயர்" (தொல். சொல்.167.). **8.** நிலத்திலுள்ளார்; inhabitants of the world. "நிலம் வீசும்" (சீவக.267.). **9.** நிலமகள்; Goddess of earth. "இலமென் றசைஇ இருப்பாரைக் காணின் நிலமென்னும் நல்லாள் நகும்" (குறள்,1040.). **10.** நாடு; region. '*செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி*' (தொல்.சொல்.398.). **11.** நிலத்துண்டு; piece of land. நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்து (தொல்.சிறப்புப்பா.). **12.** யாப்பின் நிலைக்களம்; prosody point "*பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்*" (தொல்.பொருள்.320). **13.** செய்யுளடி யெழுத்து; poetical syllable. "*மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்*" (தொல். பொருள்.290.). **14.** எழுத்தசை சீரென்னும் இசைப்பாட்டிடம்; source of musical sound, as letters, syllables and metrical feet. 'நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும் (மணிமே.28:42.). **15.** வரிசை; rank. '*கற்றுணர்ந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்*' (நாலடி,133.). **16.** புலனம் (விஷயம்); object of sense. 'அவதார ரகசியம் ஒருவர்க்கும் அறிய நிலமல்ல' (ஈடு.1:3:11.). **17.** மேன்மாடம் அல்லது மேல்தளம்; storey or upper floor of a building. '*பல நிலமாக அகத்தை எடுக்கும்*' (ஈடு.4.9.3.).

**18.** *நிலக்கள்ளி* (மலை.) பார்க்க; see *nila-k-kalli.* **19.** அகத்திணையில் முதற்பொருள் இரண்டினுளொன்று; one of the mudarporul (nature of land and season) in Agattinai.

*[நில் → நிலம்]*

***ம.,*** *நிலம்;* ***க., து., குட., பட.,*** *நெல.,* ***தெ.*** *நேல;* ***துட.*** *நெல்ன்;* ***கோத.*** *நெல்ம், நெதல்;* ***பர்.*** *நெந்தில், நெதில்*

*[நுல் – நீட்சிக்கருத்து வேர்.நுல் → நெல் → நெள் → நெரு → நெகிழ் (நெகிள்) → நீள் → நிள் → நில் → நிலம்.]*

**நிலம்நீச்சு** *nilam- niccu,* **பெ.** (n.) *நிலபுலம்* பார்க்க; see *nila-pulam.*

(நில் → நிலம் – வயல், வேளாண் நிலம்.

நீர் → நீந்து → நீச்சு. நிலம் +நீச்சு – நீர்வளம் சூழ்ந்த நிலப்பகுதி. எனினும் நிலபுலம் என்பதே வழக்கு.)

**நிலம்பாலை** *nilam-pālai,* **பெ.** (n.) கும்பம் பாலை; blue dyeing rose bery-wrightia tinctona. (சா.அக.).

**நிலம்பி** *nilambi,* **பெ.** (n.) கொசுகு (பிங்.); gnat.

*[நுளம்பு → நுளம்பி → நிலம்பி.]*

**நிலம்பிராண்டி** *nilam-pirāṇḍi,* **பெ.** (n.) நிலப் புரண்டி பார்க்க; see nila-p-puraṇḍi

*[நிலம் + பிராண்டி.*

நில் – நிலம்.
புரள் → புரண்டு → புரண்டி → புராண்டி → பிராண்டி.]

**நிலம்பிறாண்டு – தல்** *nilam-piṟāṇḍu-,* **5செ.குன்றாவி.** (v.t.) நிலத்தைச் சுரண்டுதல்; to scratch the land.

*[நிலம் + பிறாண்டு –,]*

*[நில் → நிலம்]*

புல் → புர் → புரள் → பிறழ் → பிறண்டு → பிறாண்டு –,]

**நிலம்பு** *nilambu,* **பெ.** (n.) தாளி (மலை.); american bindweed-ipomaca.

**நிலம்புரண்டி** *nilam-puraṇḍi,* **பெ.** (n.) மழைக்காலங்களில் புல்லில் நுரை போல் தோன்றி அதற்குள்ளிருக்கும் பச்சைப் பூச்சி; a green insect found in a middle of frothy substance that appears on grass during rainy seasens. (சா.அக.).

*[நிலம் + புரண்டி]*

**நிலம்புலம்** *nilam-pulam,* **பெ.** (n.) பல்வகை நிலம் (வின்.); different kinds of lands.

*[நிலம் + புலம்.]*

**நிலம்புறண்டி** *nilam-puṟaṇḍi,* **பெ.** (n.) நிலம்புரண்டி (யதார்த்த.247.) பார்க்க; see nilam-puraṇḍi.

*[நிலம் +புறண்டி, புரண்டி → புறண்டி. ]*

**நிலம்பூ**[2] *nilam-bū,* **பெ.** (n.) **1.** *நிலப்பூ* பார்க்க; see *nila-p-pū.* **2.** கள்ளி; milk spurge-ephorbia genus. **3.** கொசு; mosquito. **4.** சீதாப்பழம்; custard apple-anona squamosa **5.** தாளி; a running plant of convolvulous genus. (சா.அக.).

*[நுளம்பு → நுலம்பூ → நிலம்பூ.]*

**நிலம்பெயர்கை** *nilam-peyargai*, பெ. (n.) வேற்று நாட்டிற்குச் செல்லுதல்; to go abroad. *"நிலம் பெயர்ந்து உரைத்தல் வரைநிலை உரைத்தல் கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய"* **(தொல்.பொருள்.கற்.28.).**

*[நிலம் + பெயர்கை.*

*பெயர் = இடம்மாறுதல். பெயர் → பெயர்கை.*
*கை –தொழிற்பெயரீறு. ]*

**நிலமக்கள்** *nila-makkal*, பெ. (n.) மண்ணின் மைந்தர்கள்; son of the soil.

*[நிலம் + மக்கள். ]*

பழங்காலத் தமிழர்கள் தம் நிலங்களை அதன் தன்மைக்கேற்ப நால்வகையாகப் பிரித்துக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பாகுபடுத்தி, அவற்றுள் முல்லையுங்குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்ததைப் பாலையென்றோர் படிவமாக்கி அவ்வந்நிலத்தில் வாழ்வோரை அவ்வந் நிலமக்கள் என்றழைத்தனர்.அந்நிலத்திற் கேற்ப ஒழுக்கத்தையும் புணர்தல், பிரிதல், ஊடல், இருத்தல், இரங்கல்என்ற வகையாக வரையறுத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தினர். இன்றும் அவ்வழக்கந் தொடர்ந்த போதிலும் பண்டிருந்த பண்பாட்டைத் தொலைத்துவிட்டு பண்பாடற்று, வாழும் மாநிலத்திற் கேற்ப மொழிவழிப் பாகுபாடு கொண்டு பகைமேலிட வாழ்கின்றனர்.

**நிலமகள்[1]** *nila-magal*, பெ. (n.) *சீதா செங்கழுநீர்* பார்க்க; see *śīdā -cengalunīr*. **(சா.அக.).**

**நிலமகள்[2]** *nila-magal*, பெ. (n.) நிலமாகிய பெண்; Goddess of earth. *"நிலமகளழுத காஞ்சியும்"* **(புறநா.365.).**

*[நிலம் + மகள். ]*

**நிலமகன்** *nila-magan*, பெ. (n.) (நிலமகளின் மகனான) செவ்வாய் **(திவா.)**; the planet mars, as the son of the earth.

*[நிலம் + மகன்.]*

**நிலமங்கை** *nila-mangai*, பெ. (n.) *நிலமகள்[2]* **(திவ்.பெரியதி.8.4.9.)** பார்க்க; see *nila-magal*.

*[நிலம் + மங்கை. ]*

**நிலமங்கைநாச்சியார்** *nilamangai-nācciyār*, பெ. (n.) *நிலமகள்* பார்க்க; see *nila-magal*. *"பெருமாளுக்கும் நிலமங்கைநாச்சியார்க்கும்"* **(தெ.க.தொ.1:126.).**

*[நிலமங்கை + நாச்சியார்*

நாய்கன் – தலைவன்
நாய்ச்சி – தலைவி
நாய்ச்சி → நாய்ச்சியார்→நாச்சியார்.*]*

**நிலமட்டம்** *nila-mattam*, பெ. (n.) **1.** தரைமட்டம்; ground level. **2.** நீர்மட்டம் **(வின்.)**; water-level.

*[நிலம் + மட்டம்.]*

**நிலமடக்கு–தல்** *nilam-adakku-*, 5 செ.கு.வி. (v.i.) நிலத்துக்குத் தரம் ஏற்படுத்துதல் **(தெ.க.தொ.4:142.)**; to classify arable lands according to quality.

*[நிலம் + அடக்கு.]*

**நிலமடந்தை** *nila-madandai*, பெ. (n.) *நிலமகள்[2]* பார்க்க **(திவ்.பெரியதி.4.4.8.)**; see *nila-magal*.

*[நிலம் + மடந்தை.]*

**நிலமண்** *nila-man,* பெ. (n.) மனைத்தளத்தை நிரப்புமண் (யாழ்ப்.); earth forming the floor of the house.

*[நிலம் + மண்.]*

**நிலமண்டிலஆசிரியப்பா** *nila-maṇḍila-āširiyappā,* பெ. (n.) *நிலைமண்டில* வாசிரியப்பா பார்க்க; see *nilaimaṇḍila-v-āšriyappā.*

*[நிலைமண்டில வாசிரியப்பா → நிலமண்டில ஆசிரியப்பா.]*

**நிலமண்டிலவாசிரியப்பா** *nilamaṇḍila-v-āširiyappā,* பெ. (n.) *நிலைமண்டில* வாசிரியப்பா பார்க்க; see *nilai -maṇḍila-v-āširiyappā.*

*[நிலைமண்டில வாசிரியப்பா → நிலமண்டில வாசிரியப்பா.]*

**நிலமதிப்பு** *nila-madippu,* பெ. (n.) தரை மதிப்பு; ground value.

*[நிலம் + மதிப்பு.]*

**நிலமயக்கம்**[1] *nila-mayakkam,* பெ. (n.) ஒரு நிலத்துக்குரிய காலம் உரிப்பொருள் கருப் பொருள்கள் மற்ற நிலத்துக்குரிய அப்பொரு ளுடன் கலந்துவரப் பாடலமைக்கையாகிய திணைமயக்கம் (சீவக.48.உரை.); harmonious blending of the features of one tiṇai with those of another.

*[நிலம் + மயக்கம்.]*

பழந்தமிழர் தம் வாழ்வுமுறையையும் நிலத்தின் தன்மைக்கேற்பவே பகுத்திருந்தனர். ஐவகை நிலப்பாகுபாட்டை ஐவகை ஒழுக்கலாறாகவேக் கருதினர். அவற்றைச் செய்யுளிலமைத்துப் பாடுங்கால் ஒரு திணைக்குரிய ஒழுக்கம் மற்றொரு திணையில் மயங்கி வருதலுண்டு. அதையே நில மயக்கம் என்றனர்.

**நிலமயக்கம்**[2] *nila-mayakkam,* பெ. (n.) மண்கலப்பு; mixing of soils.

*[நிலம் + மயக்கம்.]*

**நிலமருந்து** *nila-marundu,* பெ. (n.) அவுரி; indigo plant.

*[நிலம் + மருந்து.]*

**நிலமளந்தோன்** *nilam-aḷandōṉ,* பெ. (n.) திருமால்; Tirumal as having measured the earth "நீணில மளந்தோ னாடிய குடமும்" (சிலப்.6:55.).

*[நிலம் + அளந்தோன்.]*

மாவலிப் பேரரசனின் செருக்கடக்க, குறளனாய்த் தோற்றரவு செய்து மாவலியிடம் மூன்றடி மண்கேட்க, அவனும் அதற்கிசைய, நெடுமாலாந் திருமால் வானுயர்ப்பேருரு கொண்டு ஓரடியால் மண்ணுலகையும், அடுத்தவடியால் விண்ணு லகையும் அளந்து பின் மூன்றாமடி வைக்க இடமின்மையால் மாவலியின் தலைமீது காலூன்றி அவனையுங்கொண்டாரென்பது தொன்மக்கதை.

**நிலமறி—தல்** *nilam-aṟi-,* 2 செ.கு.வி. (v.i.) சூதாட்டத்தில் வெற்றியடைவிக்கும் இடன் அறிதல் (வின்.); to know the lucky side in gambling.

*[நிலம் + அறி—,]*

**நிலமாந்தர்** *nila-māndar,* பெ. (n.) *நிலமக்கள்* பார்க்க; see *nila-makkaḷ*

*[நிலம் + மாந்தர்.]*

மாந்தரெனினும் மக்களெனினு மொக்கும்.

## நிலம் நீர்வாழ் விலங்குகள்



தவளை





ஆமை





முதலை



**நிலமாளிகை** *nila-māḷigai,* பெ. (n.) நிலவறை (இ.வ.); cellar.

தெ. நேலமாலிகா.

*[நிலம் + மாளிகை.]*

**நிலமானியம்** *nila-māṉiyam,* பெ. (n.) கொடையாய் வழங்கிய இறையிலி நிலம்; emolument given as land.

*[நிலம் + மானியம்.]*

வ. மானியம் த. இறையிலி.

**நிலமிதி** *nila-midi,* பெ. (n.) **1.** ஒரு நாட்டை அடைகை; entering a region, as treading on it. "*நிலமிதி தானே அறிவை யுண்டாக்கும்*" (ஈ.டு.). **2.** இடத்தின் தன்மை; peculiarity of a place, as affecting health or disposition. **3.** நடைவாகு (யாழ். அக.); accessibility.

*[நிலம் + மிதி.]*

**நிலமுதல்** *nila-mudal,* பெ. (n.) நிலஅடங்கற்குறிப்பு; land register.

*[நிலம் + முதல்.]*

**நிலமெடு—த்தல்** *nilam-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) வீடுகட்டுதற்கோ, கோயிலமைப்பதற்கோ, கிணறு தோண்டுதற்கோ அன்றி பிற வற்றிற்கோ உரிய இடத்தைக் கணியம்மூலம் கணித்தறிந்து தேர்வு செய்தல் (வின்.); to select by astrological calculations an auspicious site for a house, temple or well.

*[நிலம் + எடு.]*

**நிலமை** *nilamai,* பெ. (n.) நிலஉடைமை; (யாழ்ப்.); landed property.

**நிலயம்** *nilayam,* பெ. (n.) நிலையம் பார்க்க; see nilaiyam.

*[நிலையம் – நிலயம்.]*

**நிலயம்பிடி—த்தல்** *nilayam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *நிலையம் பிடி—த்தல்* பார்க்க; see *nilaiyam-piḍi-,*

*[நிலையம் → நிலயம் + பிடி—.]*

**நிலயனம்** *nilayaṉam,* பெ. (n.) நிலையம் 1,2,3,4,5 (யாழ்.அக.) பார்க்க; see nilaiyam.

*[நில் → நிலை → நிலையனம் → நிலயனம்.]*

**நிலலோசபற்பாந்தம்** *nilalōšaparpāndam,* பெ. (n.) **1.** நறும்பிசின்; a fragrant resin or gum. **2.** குந்திரிக்கம் பார்க்க; see kundirikkam. (சா.அக.).

**நிலவடலி** *nila-vaḍali,* பெ. (n.) சிறுபனை (சங். அக.); young palmyra tree.

*[நிலம் + வடலி.]*

**நிலவடி** *nila-v-āḍi,* பெ. (n.) கையினா லடிக்கும் கதிரடிப்பு; threshing grain with the hand. **2.** களத்திற் கையாலடித்த கூலமணி; grain threshed by the hand on the threshing-floor.

*[நிலம் + அடி.]*



**நிலவடுப்பு** *nila-v-aḍuppu,* பெ. (n.) நிலத்தில் அமைக்கும் அடுப்புவகை (வின்.); a pit or hole dug in the ground, used as the fire-place.

*[நிலம் + அடுப்பு.]*

நில் → நிலம் = ஓடாது நிலைத்து நிற்பது. அடுதல் = சுடுதல், சமைத்தல். அடு → அடுப்பு. நிலவடுப்பு = நிலத்திலமைக்கும் அடுப்பு.



**நிலவம்மான்பச்சரிசி** *nila-v-ammāṉ-paccariši,* பெ. (n.) பூடுவகை (a.); kind of plant- euphorbia indica.

*[நிலம் + அம்மான்பச்சரிசி.]*

**நிலவர்** *nilavar,* பெ. (n.) 1. நீரின் நிலையை முழுகியறிபவர்; persons employed in sounding the depths of water. as in river, *'சமுத்திரத்தே நிலவராயிருக்குமவர்கள் முழுகி மண்கொள்ளுமாபோலே'* (திவ்.திருநெடுந். 18:143.). 2. நிலத்துள்ளவர்; human-beings. *"நிலவரையாற்றி"* (பரிபா.15.6.).

*[நிலம் → நிலவர்.]*

நீர்நிலையில் நிலம்வரை மூழ்குபவரும் நிலமிசை வாழ்பவரும் நிலவர் எனப்பட்டனர்.

**நிலவரண்** *nila-v-araṇ,* பெ. (n.) 1. நீரும் நிழலுமில்லாத மருநிலமாகிய அரண்வகை (குறள்,742.உரை.); natural defences consisting of arid expanse of earth etc.,

*[நிலம் + அரண்.]*

அரண்கள் நான்கு:

1. எஞ்ஞான்றும் வற்றாத மணிநீரரண்.
2. நீருநிலமுமில்லா மதிலரண்.
3. செறிந்த காட்டரண்.
4. நிலைத்த மலையரண்.

**நிலவரம்[1]** *nilavaram,* பெ. (n.) 1. நிலைவரம், 1 பார்க்க; see nilaivaram. *"பாக்கியங்க ணிலவரமென் றுன்னுகின்ற நெஞ்சன்"* (சிவரக.சிவதன்ம.4.). 2. நிலைவரம், 3 பார்க்க; see nilaivaram. *"குறுநில வரத்தைத் தேர்ந்து கொள்வாய்"* (குற்றா.குற.64.3.). 3. அன்றாட விலை (இ.வ.); current price.

தெ. நிலவரமு.

*[நிலைவரம் → நிலவரம்.]*

**நிலவரம்[2]** *nilavaram,* பெ. (n.) 1. (நாடு, வீடு முதலியவற்றின்) நடப்புநிலை, சூழ்நிலை; condition (of the country, home, etc.), நாட்டு

நிலவரம் தெரியாத கிணற்றுத் தவளையாக இருக்கிறாயே. (உ.வ.). வீட்டு நிலவரம் நன்றாக இருந்திருந்தால் மகளை மேல்படிப்புக்கு அனுப்பியிருப்பேன். (உ.வ.). கலவரம் நடந்த இடத்தின் நிலவரத்தை அறிந்து கொள்ள அமைச்சர் வந்திருந்தார். (உ.வ.) **2.** (விற்பனை, அளவு முதலியவற்றின்) நிலைமை; report. நேற்றைய நிலவரப்படி ஆறகழூர் அணையின் நீர்மட்டம் **18** அடியாக இருந்தது. (உ.வ.).

**நிலவரி** *nilavari,* பெ. (n.) விளைச்சல் பாசன வசதி அடிப்படையில் விளை நிலத்துக்காக அரசு தண்டும் ஆண்டு வரி; land revenue. இந்த ஆண்டு நிலவரித் தண்டலில் சேலம் மாவட்டம் முதலிடத்தைப் பிடித்தது. (உ.வ.).

*[நிலம் + வரி.]*

**நிலவருந்தி** *nilavarundi,* பெ. (n.) நிலாமுகிப்புள்; greek partvidege. "*புதுநிலவருந்தியும்*" (திருப்பு.843.).

*[நிலவு + அருந்து → நிலவருந்து → நிலவருந்து → நிலவருந்தி.]*

**நிலவலயம்** *nilavalayam,* பெ. (n.) *நிலவலையம்* பார்க்க; see *nila-valaiyam.* நிலவலயந் தாங்கு நளன் (நளவெண்.காப்பு.).

*[நிலம் + வலயம். வலையம் → வலயம்.]*

**நிலவலையம்** *nila-valaiyam,* பெ. (n.) நில மண்டிலம்; terrestrial globe, the earth.

*[நில் → நிலம்.*
*வல் → வள் → வளை →*
*வளையம் → வலையம்.*
*நிலம் + வலையம்]*

**நிலவழி** *nila-vaḻi,* பெ. (n.) வாகனங்கள் செல்லவும், மக்கள் நடக்கவும் ஏற்றதாகத் தரையில் அமைக்கப்படும் வழி; சாலை; road intended for vehicles and public.

*[நிலம் = தரை. வழி = பாதை*
*நிலம் + வழி.]*

**நிலவழிப்போக்குவரத்து** *nila-vaḻi-p-pōkku-varattu,* பெ. (n.) தரைவழியாய் அமையும் போக்குவரத்து, சாலைப் போக்குவரத்து; system of conveying people, goods etc from place to place by road; road transport, road ways.

*[நிலம் = தரை. வழி = பாதை. நிலவழி + போக்குவரத்து.]*

**நிலவளம்** *nila-vaḷam,* பெ. (n.) மண்ணின் வளம்; fertility of the land.

*[நிலம் + வளம்.]*

ஒவ்வொரு நிலத்தின் தன்மையினையும் அத் தன்மையின் மிகுதியினையும் குறிப்பிடுவது நிலவளம்.

**நிலவளவங்கி** *nila-vaḷa-vaṅgi,* பெ. (n.) வேளாண்மைப் பிரிவினருக்குதவும் வங்கி (இக்.வழ.); land development bank.

*[நிலவளம் + வங்கி.]*

நிலவளம் என்பது ஆகுபெயராய் நிலத்தை வளப்படுத்தி நாட்டின் வளஞ் சேர்க்கும் வேளாண் பிரிவினரைக்குறித்தது. அப் பிரிவிரினரின் வேளாண்மை மேம்பாட்டுக்குக் கடன் உதவி பெறுவதற்காக அரசால் அமைக்கப்பட்டுக் கடனுதவி வழங்கும் வைப்பகம் நிலவள வங்கி. இதனை நிலவள வைப்பகம் எனலே சரி.

**நிலவளி** *nila-vaḷi,* பெ. (n.) இயற்கை எரிவளி; natural gas used as fuel.

*[நிலம் + வளி.]*

**நிலவறை** *nila-v-arai,* பெ. (n.) 1. நிலத்துள் ளமைந்தஅறை; cellar, subterranean hall. "*நிலவறை செயச்சிலர் விரைவார்*" (செவ்வந்திப்பு.உறையூரழித்.62.). 2. எரி எண்ணெயைத் தேக்கி வைக்க நிலத்தடியில் அமைக்கப்படும் அறை; bunker.

*[நிலம் + அறை.* நில் → நில → நிலம். அறு → அறை.*]*

**நிலவாகை**[1] *nila-vāgai,* பெ. (n.) செடிவகை (மலை.); tirunelveli senna-cassia angustifolia.

*[நிலம் + வாகை.]*

**நிலவாகை**[2] *nila-vāgai,* பெ. (n.) நிலப்பாகல் எனும் பாகல் வகை; balsam-apple.

*[நிலப்பாகல் → நிலப்பாகை → நிலவாகை.]*

**நிலவாகைச்சூரணம்** *nilavāgai-c-cūraṇam,* பெ. (n.) நில ஆவாரையைப் பொடியாக்கி மலமிளக்கக் கொடுக்கப்படும் மருந்து; senna powder given as a purgative. (சா.அக.).

**நிலவாசி** *nila-vāši,* பெ. (n.) நிலத்தன்மை; quality of the soil.

*[நிலம் + வாசி.* நில் → நிலம். வதி → வசி → வாசி.*]*

**நிலவாடகை** *nila-vāḍagai,* பெ. (n.) மேலெழுப்புங் கட்டடத்துக்கன்றி நிலத்துக்கு மட்டுமேயுரிய வாடகை; தரை வாடகை; ground rent.

*[நிலம் + வாடகை. நிலம் = தரை.]*

**நிலவாடை**[1] *nila-vāḍai,* பெ. (n.) *நிலவாசி* (இ.வ.) பார்க்க; see *nila-vāši.*

*[நிலம் + வாசி – நிலவாசி → நிலவாசை நிலவாடை.]*

**நிலவாடை**[2] *nila-vāḍai,* பெ. (n.) மண்ணின் மணம்; fragrance of soil.

*[நிலம் + வாடை.]*

**நிலவாமியம்** *nila-v-āmiyam,* பெ. (n.) சீதா செங்கழுநீர்; purple Indian water lily-nymphae odorata. (சா.அக.).

**நிலவாய்வு** *nila-vāviu,* பெ. (n.) *நிலவளி* பார்க்க; see *nila-vaḷi.*

*[நிலம் + வாய்வு. (கொ.வ.).]*

த. வளி, வ. வாயு.

**நிலவாயு** *nila-vāyu,* பெ. (n.) *நிலவளி* பார்க்க; see *nila-vaḷi.*

*[நிலம் + வாயு.]*

த. வளி.

வ. வாயு

**நிலவாரம்** *nila-vāram,* பெ. (n.) மேல்வாரம் (வின்.); owner's share of the produce of land.

*[நிலம் + வாரம்.]*

**நிலவாவிரை** *nila-v-āvirai,* பெ. (n.) *நிலவாகை,*1 (மலை.) பார்க்க; see *nila-vāgai.*

*[நிலம் + ஆவிரை.]*

**நிலவாழை** *nila-vāḻai,* பெ. (n.) பூடுவகை (வின்.); a kind of plant.

*[நிலம் + வாழை.]*

**நிலவிந்தை** *nila-vindai,* பெ. (n.) பூடுவகை (சங்.அக); a kind of plant.

*[நிலம் + விந்தை.]*

**நிலவிப்பனை** *nilavi-p-paṉai,* பெ. (n.) *நிலப்பனை* பார்க்க; see *nila-p-paṉai.* (சா.அக.).

**நிலவியல்** *nila-v-iyal,* பெ. (n.) நிலத்தின் மேற்பரப்பாக அமைந்திருக்கும் மண், பாறை போன்றவற்றை விளக்கும் ஆய்வுத்துறை; soil science; geology.

*[நிலம் + இயல்.]*

**நிலவிரிசு** *nila-viriśu,* பெ. (n.) தரையில் வைத்துக் கொளுத்தும் வாணவெடிவகை (இ.வ.); a kind of fire-work set on the ground.

*[நிலம் + விரிசு.]*

திரியில் தீ மூட்டியதும் விரைந்தும் விரிந்தும் செல்வதால் வாணம் விரிசு எனப்பட்டது.



**நிலவிலந்தை** *nila-v-ilandai,* பெ. (n.) இலந்தை என்னும் முள்மரவகை (மூ.அ.); jujube-tree.

*[நிலம் + இலந்தை.]*

**நிலவிழுது** *nila-viḻudu,* பெ. (n.) நிலப்பனை எனும் செடி வகை; moosly or weavil root.

*[நிலம் + விழுது.]*

**நிலவிளா** *nila-viḷā,* பெ. (n.) **1.** விளா; wood apple. **2.** நாய் விளா எனும் நிலைத்திணை; must-deer plant.

*[நிலம் + விளா.]*

**நிலவிளாத்தி** *nila-vḷātti,* பெ. (n.) *நிலவிளா,* (யாழ்.அக.) பார்க்க; see. *nila - viḷā,.*

*[நிலம் + விளாத்தி. நில் → நிலம். விள் → விள → விளா → விளாத்தி.]*

**நிலவிறிசு** *nila-viṟiśu,* பெ. (n.) *நிலவிரிசு,* (யாழ்.அக.) பார்க்க; see *nila - viriśu.*

*[நிலவிரிசு → நிலவிறிசு.]*

**நிலவிறை** *nila-v-iṟai,* பெ. (n.) நிலவரி; land tax,.

*[நிலம் + இறை.]*

**நிலவீரம்¹** *nila-vīram,* பெ. (n.) பூ நீறு; a kind of medicinal plant.

*[நிலம் + வீரம். நில் → நிலம். விள் → வில் → விர் → வீர் → வீரம்.]*

**நிலவீரம்²** *nila-vīram,* பெ. (n.) **1.** நிலத்தின் கொடுமை; the virulity of the soil. **2.** குட்டிவேர்; சல்லிவேர்; side roots under the earth. (சா.அக.).

**நிலவீரம்³** *nila-vīram,* பெ. (n.) நிலத்தின் ஈரத்தன்மை; wetly land.

*[நிலம் + ஈரம்.]*

நிலம் + ஈரம் என்பது உடன்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே என்னும் விதிப்படி நிலமீரம் என வழங்குதல் வேண்டும் எனினும் மவ்வீறு ஒற்றொழிந்து உயிரீறு ஒப்பவும் என்னும் விதிப்படி வகர உடம்படுமெய் பெற்றது.

**நிலவீரியம்** *nila-viriyam,* பெ. (n.) *நிலவீரம்[3]* பார்க்க; see *nilaviram.*

*[நிலவீரம் + நிலவீரியம்.]*

**நிலவு[1]—தல்** *nilavu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிலைத்திருத்தல்; to be permanent, fixed; *"யாரு நிலவார் நிலமிசை மேல்"* (நாலடி, 22.). 2. நின்று சிறத்தல்; to stay *"இறுதியு மிடையு மெல்லா வுருபும் நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்"* (தொல். சொல். 103.). 3. வழங்குதல்; to exist, to be in use, in vogue or in circulation, as a word; to be extant, in force or practice, as a religion. *"நிலவு மரபினை யுடையது"* (வின்.). 4. ஒளிவிடுதல்; to emit rays; to shine. 5. பரவுதல்; (வின்.); to spread, extend, pervade.

*[நுல் → நில் →நில → நிலவு (வே.க. 3:45.).]*

**நிலவு[2]—தல்** *nilavu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அறியக்கூடிய வகையில் காணப்படுதல்; to be (in existence.) prevail. *பருவ மழை பெய்யாமல் நாட்டில் வறட்சி நிலவுகிறது.* (உ.வ.). *சட்டசபையில் இன்று ஒரு மணி நேரம் குழப்பம் நிலவியது.* (உ.வ.). *தேர்தல் நடத்துவது பற்றி நாட்டில் முரண்பட்ட கருத்துகள் நிலவுகின்றன.*(உ.வ.). 2. அமைதல், ஏற்படுதல்; to be established or formed. *எல்லா நாட்டிலும் மக்களாட்சி நிலவ வேண்டும்.* (உ.வ.). *நாட்டில் அமைதி நிலவ வேண்டுமென அனைத்து மதத்தினரும் கடற்கரையில் கூடி மன்றாட்டு செய்தனர்.* (உ.வ.).

**நிலவு[3]** *nilavu,* பெ. (n.) 1. நிலா; moon. "நிலவுப் பயன்கொள்ளு நெடுமணன் முற்றத்து". (நெடுநல். 95.). 2. நிலவொளி; moon light.

*[நுல் – ஒளிர்தற்கருத்துவேர்.*
*நுல் → நில் → நிலா → நிலவு.]*

**நிலவு[4]** *nilavu,* பெ. (n.) 1. தெரிநிலை வினைப்பகுதி; verb expelicitly denoting tense by a tense-sign. opp. to kurippu-vinai. 2. நிலைபெறுகை; to be stability. *"நீரொலித்தன்ன நிலவு வேற்றானையொடு"* (மதுரைக். 369.).

*[நில் → நில →நிலவு.]*

**நிலவுகாய்[1]—தல்** *nilavu-kāi-,* 2 செ.கு.வி. (v.i.) நிலவின் ஒளி படர்தல்; to spread of the moon light.

*[நிலவு + காய்—, நில் → நிலவு.*
*கனல் → கனய் → காய்.]*

**நிலவுகாய்[2]** *nilavukāy,* பெ. (n.) 1. எருக்கங்காய்; fruit of sun plant caltropis gigantia. 2. உகாய் மரம்; mahomadon tooth brush tree - salvadora persica. (சா.அக.).

**நிலவுதயம்** *nilavudayam,* பெ. (n.) *நிலவெழுகை* (வின்.) பார்க்க; see *nilavu-elugai.*

*[நிலவு + (skt.) உதயம்.]*

**நிலவுநாழிகை** *nilavu-nāḻigai,* பெ. (n.) நிலவின் நிழலைக் கொண்டு கணிக்கும் நாழிகை (யாழ்.அக.); time, as measured by the moon's shadow.

*[நிலவு + நாழிகை.]*

**நிலவுப்பயணம்** *nilavu-p-payaṇam,* பெ. (n.) பிற கோள்களை ஆய்வு செய்வதற்காகச் செல்லும் பயணம், விண்வெளிப் பயணம்; space research voyage.

*[நிலவு + பயணம்.]*

**நிலவுபடுதல்** *nilavu- paḍudal,* பெ. (n.) நிலவு அடிவானில் மறைகை (வின்.); setting of the moon.

*[நிலவு + படுதல்.]*

நுல் → நில் → நில → நிலவு + படுதல்

படுதல் = மறைதல், அழிதல்.

**நிலவுபார்-த்தல்** *nilavu-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** மூன்றாம் பிறை பார்த்தல்; to see the crescent moon, appearing on the third day after new moon. **2.** சில நோன்பு நாட்களில் பகலில் பட்டினியிருந்து இரவில் உணவு கொள்ளுமுன் நிலவைப் பார்த்தல்; to see the moon after a day long not taking anything, taking supper after seeing the moon.

*[நுல் → நில் → நிலவு + பார்-,]*

**நிலவுபிறை**[1] *nilavu-piṟai,* பெ. (n.) கூர்மையான முனைகளோடு வளைந்த கீற்றாகத் தோற்றமளிக்கும் நிலவு; crescent moon.

*[நிலவு + பிறை.*
*நுல் → நில் → நில → நிலவு.*
*புள் → புறு → புறை → பிறை.]*



**நிலவுபிறை**[2] *nilavu-piṟai,* பெ. (n.) தலையின் இடப்பக்கத்தில் மகளிர் அணிந்து கொள்ளும் மணிபதித்த பொன்னணி வகை; ornament of gold set with precious stones, worn on the left side of the head by women. நெற்றிச் சுட்டியும் நிலவுபிறையும். (இ.வ).

*[நிலவு + பிறை.]*



**நிலவுமரி** *nila-v-umari,* பெ. (n.) கோழிப்பசளை என்னும் கீரைவகை; sea-blite.

*[நிலம் + உமரி.]*

**நிலவுலகம்** *nila-v-ulagam,* பெ. (n.) மண்ணுலகம்; the earth.

*[நிலம் + உலகம்.]*

**நிலவூமத்தை** *nila-vūmattai*, பெ. (n.) நீல ஊமத்தை; blue flower datura. (சா.அக.).



**நிலவூறணி** *nila-v-ūṟaṇi*, பெ. (n.) *நிலவூறல்* பார்க்க; see *nila-v-ūṟal.*

*[நிலவூறல் + நிலவூறணி.]*

**நிலவூறல்** *nila-v-ūṟal*, பெ. (n.) மண்ணிலேற்படும் நீர்க்கசிவு (யாழ்.அக.); dampness of soil.

*[நிலம் + ஊறல்.]*

**நிலவெக்கை** *nila-vekkai*, பெ. (n.) வெயில் காய்வதால் நிலத்தில் உண்டாகும் காங்கை (வெப்பம்); earth's heat on account of hot sun.

*[நிலம் + வெக்கை.]*

**நிலவெடிப்பு** *nila-veḍippu*, பெ. (n.) கடும் வறட்சியினால் ஏற்படும் தரைப் பிளப்பு; splitting of earth due to heavy drought.

*[நிலம் + வெடிப்பு.]*

**நிலவெடுப்பு** *nila-veḍuppu*, பெ. (n.) முதலுழவு (யாழ்ப்.); breaking new soil.

*[நிலம் + எடுப்பு. நில் → நிலம்.*
*எடு → எடுப்பு. எடுப்பு = தொடங்குதல், தொடங்கின செயல்.]*

**நிலவெரி-த்தல்** *nilavu-eri-*, 4 செ.கு.வி. (v.i.) *நிலவுகாய்-தல்* பார்க்க; see *nilavu-kāi-,*

*[நிலவு + எரி-.]*

**நிலவெரிக்கை** *nilaverikkai*, பெ. (n.) நிலவின் ஒளி; moon light.

*[நிலவு + எரிக்கை.]*

**நிலவெழுகை** *nila-v-eḻugai*, பெ. (n.) நிலவு தோன்றுகை; moon rise.

*[நில் → நில → நிலவு + எழுகை.]*

**நிலவெழுத்து** *nila-v-eḻuttu*, பெ. (n.) தரையிற் பிள்ளைகளெழுதும் எழுத்து (வின்.); letter written on the ground by school boys.

*[நிலம் + எழுத்து.]*

திண்ணைப் பள்ளி நடைமுறையிலிருந்த காலத்தில் அரிவரியைத் தரையில் மணல் பரப்பி அம்மணலில் விரலால் எழுதிப் பழகினர்.

**நிலவேம்பு** *nila-vēmbu*, பெ. (n.) **1.** செடிவகை; french chiratta-Andrographis paniculata. **2.** செடிவகை; chiretta - Swertia chirata.

தெ. நேலவேமு. க. நெலபேவு. ம. நிலவேப்பு.

*[நிலம் + வேம்பு.]*

**நிலவேர்[1]** *nila-vēr*, பெ. (n.) மரம் பூண்டு ஆகியவை முளைக்கும் போதே நீண்டு நிலத்தினுள் நேரே ஊடுருவிச் செல்லும் முகாமையான மூலவேர் அல்லது நடுவேர்;

central root of a tree or a plant which begins to penetrate right down into the earth from its growth; tap-root.

*[நிலம் + வேர்.]*

**நிலவேர்²** *nila-vēr,* பெ. (n.) **1.** நாங்கூழ், நாக்குப் பூச்சி (நாமதீப. **266.**); earth-worm. **2.** நாக்கில்லாபூச்சி; tongueless worm. **3.** ஆண்; male. **4.** குற்றி விளா; a variety of wood apple. (சா.அக.)

*[நிலம் + வேர்.]*

**நிலன்** *nilaṉ,* பெ. (n.) *நிலம்* பார்க்க; see *nilam.*

*[நிலம் – நிலன்*

*ம > ன போலி, கடைப்போலி.]*

**நிலா** *nilā,* பெ. (n.) **1.** திங்கள் (நிலவு.); moon. *"துணிநிலா வணியினான்"* (திருவாச. **35. 5.**). **2.** நிலவொளி; moon light. *"விசும்பி னகனிலாப் பாரிக்குந் திங்களுஞ்"* (நாலடி,**151.**). **3.** ஒளி; light, splendour. *"நிலாவிரித்து முச்சக முற்றும் நிழல் செய"* (திருநூற். **78.**).

**ம.** நிலா. **தெ.** நெல.

*[நிலவு → நிலா.]*

**நிலாக்கல்** *nilā-k-kal,* பெ. (n.) நிலவொளியில் நீர் கால்வதாகிய கல்வகை; moonstone, a crystal , said to emit water when exposed to moon-light, as moon-beloved. *"நின்றொளி திகழ்வதோர் நிலாக்கல் வட்டமும்"* (சூளா. இரத. **74.**).

*[நிலா + கல்.]*

**நிலாக்கொழுந்து** *nilā-k-koḻundu,* பெ. (n.) இளம்பிறை (வின்.); the young moon, crescent moon.

*[நிலா + கொழுந்து.]*

**நிலாச்சாப்பாடு** *nilā-c-cāppāḍu,* பெ. (n.) *நிலாச்சோறு* பார்க்க; see *nilā-c-cōṟu.*

*[நிலா + சாப்பாடு. நில் → நிலா.*
*சப்பு → சப்பிடு → சாப்பிடு → சாப்பாடு.]*

**நிலாச்சோறு** *nilā-c-cōṟu,* பெ. (n.) நிலவொளி யில் உண்ணும் உண்டி; moonlight picnic.

*[நிலவு + சோறு.*
*நிலவு → நிலா.]*

**நிலாத்திரி** *nilā-t-tiri,* பெ. (n.) மத்தாப்பு; light displayed in fire-works. *"தடத்து நீர் நிலாத்திரி"* (கைவல். சந். **41.**).

*[நிலா + திரி.]*

**நிலாப்பதிவு** *nilā-p-padivu,* பெ. (n.) கரும் பக்கம் (கிருட்டிண பக்கம்) (வின்.); dark fortnight.

*[நிலா + பதிவு.]*

**நிலாப்பூச்சி** *nilā-p-pūcci,* பெ. (n.) நிலவொளியில் நிற்கும் போது எதிர்க் கட்சியினரால் தொடப்படின் தோல்வி யுறுவதாகக் கருதப்படும் சிறுவர் விளை யாட்டுவகை; a game like 'prisoner's base' in which one party of children is considered to be defeated it, as they stand in moon light, they are touched by the opposing party.

*[நிலா + பூச்சி.]*

**நிலாபார்—த்தல்** *nilā-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) *நிலவு பார்—த்தல்* பார்க்க; see *nilavu-pār-*,

*[நிலவு → நிலா. நிலா + பார்—,]*

**நிலாமண்டபம்** *nilā-mandapam*, பெ. (n.) *நிலாமுற்றம்* பார்க்க; see *nilā-murram.* *'மாடமிசை யோங்க நிலா மண்டபத்தே மகிழ்ந்தேன்."* (அருட்பா, VI. தலைவி வருந்தல், 10.).

*[நிலா + மண்டபம்.]*

**நிலாமண்டலம்** *nilā-mandalam*, பெ. (n.) நிலவு மண்டிலம் (யாழ்.அக.); sphere of the moon.

*[நிலா + மண்டலம்.]*

**நிலாமணக்கு** *nilāmaṇakku*, பெ. (n.) பூடுவகை (சங். அக.); a plant.

*[நிலம் + ஆமணக்கு.]*

இச்செடி ஆமணக்குச் செடியைப் போன்றே தோற்றமளிக்கும் வெற்றுச் செடி.

**நிலாமணி** *nilā-maṇi*, பெ. (n.) நிலவொளியில் நீர் கால்வதாகிய கல்வகை; moonstone, a crystal and to emit water when exposed to moon light, as moon-beloved.

*[நிலா + மணி.]*

**நிலாமாடம்** *nilā-māḍam*, பெ. (n.) நிலா முற்றம் பார்க்க; see nilāmurram. *"முழுநிலா மாடத்து முடிமுத றழுவ"* (பெருங். உஞ்சைக். 54. 13.).

*[நிலா + மாடம்.]*

**நிலாமுக்கி** *nilā-mukki*, பெ. (n.) நிலாமுகி (நாமதீப. 245.) பார்க்க; see nilā-mugi.

*[நிலா + முக்கு → நிலாமுக்கு → நிலாமுக்கி.]*

**நிலாமுகி** *nilā-mugi*, பெ. (n.) நிலாவொளிச் (கிரணங்கள்) சிதறலை உணவாகக் கொண்டு வாழ்வதாகக் கருதப்படும் புள்வகை (திவா.); cakōra, the greek patridge, caccabis gracca, as feeding on as moon-beams.

*[நிலா + முகி.*

*நில் → நிலா.*

*முக்கு → முகி.*

*முக்குதல் – உண்ணுதல்.]*

**நிலாமுற்றம்** *nilā-murram*, பெ. (n.) நிலவின்பம் துய்க்கும் திறந்த மேன்மாடம் (திவா.); terrace for enjoying the moonlight. *"நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினாள்"* (திவ். பெரியதி. 8. 2. 2.). 2. நிலாக்காலத் துலாவச் செய்யும் வீட்டின் வெளி; court yard of a house for enjoying the moon light

*[நிலா + முற்றம்.]*

**நிலாவாரை** *nilā-vārai*, பெ. (n.) *நிலவாகை;* Indian senna. (சா.அக.).

**நிலாவிரை** *nilāvirai*, பெ. (n.) *நிலவாகை* (பதார்த்த. 1059.) பார்க்க; see *nilavāgai.*

*[நிலம் + ஆவிரை.]*

**நிலாவிழுது** *nilā-viḷudu*, பெ. (n.) நிலப்பனை பார்க்க; *see nila-p-paṉai.* (சா.அக.).

**நிலாவிளையாட்டு** *nilā-viḷaiyāṭṭu*, பெ. (n.) நிலாப்பூச்சி (இ.வ.) பார்க்க; see nilā-p-pūcci.

*[நிலா + விளையாட்டு.]*

**நிலாவு[1]–தல்** *nilāvu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிலவு, 1 பார்க்க; see nilavu. நிலாவாப் புலாற்றானம் (தேவா. 1224. 2.).

*[நிலவு → நிலாவு.]*

**நிலாவு[2]–தல்** nilāvu-, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒன்றித்தல் (தியானித்தல்); to meditate upon. "*நானிலாவியிருப்ப னென்னாதனை*" (தேவா. 4. 5.). 2. ஒப்பாதல்; to resemble. "*மானிலாவிய நோக்கியர்*" (திருவிசை. 5. 4.).

*[நிலவு → நிலாவு–.]*

**நிலுவை[1]** niluvai, பெ. (n.) 1. தங்குகை; standing, staying. "*நோயு நிலுவை கொண்டது*" (திருப்பு. 1111.). 2. மிச்சம்; balance, as of dues; arrears. ஏது குடிநிலுவை (பணவிடு. 169.). 3. இறுத்து மிஞ்சின தொகை; excess amount left over. பேரிடருக்காக நடுவணரசு வழங்கிய தொகையில் பத்தாயிரம் நிலுவை இருக்கிறது. (உ.வ.).

**தெ.** நிலுவ. **ம.** நிலவு.

*[நில் → நிலுவை.]*

**நிலுவை[2]** niluvai, பெ. (n.) தரப்படாமல் அல்லது நோக்கின்றி இருக்கும் கிடப்பு நிலை; something pending. நிலுவையிலுள்ள வழக்குகளை உடனடியாகத் தீர்க்குமாறு அறமன்றம் ஆணையிட்டது. (உ.வ.).

*[நில் → நிலுவை.]*

**நிலுவைஅஞ்சனா** niluvai-añjaṉā, பெ. (n.) நிலுவையஞ்சனா பார்க்க; niluvai-y-anja.

*[நிலுவை →அஞ்சனா.]*

**நிலுவைக்காரன்** niluvai-k-kāraṉ, பெ. (n.) 1. கடன்காரன்; debtor (வின்.); நிலுவையைத் தண்டுபவன்; debtor; one who collects arrears.

*[நிலுவை + காரன்.]*

**நிலுவையஞ்சனா[4]** niluvai-y-añjaṉā, பெ. (n.) விளைச்சல் மதிப்பு (c.c.); estimate of the probable out-turn of standing crops.

*[நிலுவை + அஞ்சனா.]*

**நிலுவையறுவிடு–தல்** niluvai-y-aṟuviḍu-, 20 செ.கு.வி. (v.i.) நிலுவையைத் தண்டுதல்; to recover arrears.

*[நிலுவை + அறுவிடு–.]*

**நிலை[1]–தல்** *nilai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீண்ட காலத்திற்கு நீடித்து அமைதல்; stay for long; last. *இந்த ஆட்சி நிலைக்கும் என்பதில் ஐய மில்லை. (உ.வ.). முறையற்றவகையில் சேர்த்த பணம் நிலைக்காது. (உ.வ.). ஒரு வேலையிலும் அவன் நிலைக்க மாட்டான். (உ.வ.).* 2. (பார்வை) ஓர் இடத்திலேயே பதிதல்; (of eyes) get fixed on smoothing or someone பாதி திறந்திருந்த கண்கள் அருகில் நின்ற மகனின் மேல் நிலைத்தன. (உ.வ.). 3. (பெயர் சொல் முதலியவை) உறுதிப்பட்டு வழங்குதல்; gain currency. தேவநேயருக்கு இயற்பெயர் மறைந்து பாவாணர் என்னும் பட்டப்பெயரே நிலைத்துவிட்டது. (உ.வ.). 4. (குழந்தையைக் குறிப்பிடும் போது) உயிரோடுதங்குதல்; (of one's children) be left alive. ஐந்து குழந்தையில் ஒன்றும் நிலைக்கவில்லை; இந்த குழந்தையாவது நிலைத்ததே. (உ.வ.).

*[நீள் → நிள் → நில் → நிலை.]*

**நிலை²–தல்** *nilai-,* 4 செ.கு.வி. (v.i.) நிலைத்து நிற்றல்; to remain permanent; to stay. *"உம்மை நிலையு மிறுதியான"* (தொல்.எழுத்து.189.).

*[நில் → நிலை.]*

**நிலை³–த்தல்** *nilai-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** நிலை நிற்றல்; to obtain a footing; to be settled, lasting. **2.** காலந்தாழ்த்துதல் (வின்.); to delay, stay too long in a place. **3.** ஆளளவுக்கு நீர் இருத்தல்; to be just deep enough to allow a man to stand, as a river. *தண்ணீர் ஆளுக்கு நிலைக்கும்.* (உ.வ.).

க.நெலசு.

*[நில் → நிலை.]*

**நிலை⁴** *nilai,* பெ. (n.) **1.** நிற்கை; standing, staying, *"பனை நிலை முனைஇ"* (புறநா.23.). **2.** உறுதி; firmness, fixedness, stability, permanence, durability. *"நீக்கமு நிலையும்"* (திருவாச.3.9.) **3.** தன்மை (பிங்.); character; quality; temper; nature. *"திருந்துநிலை யாரத்து"* (பெரும்பாண்.46.). **4.** நிலைமை; condition, state, situation, *"நன்னிலைக்கட்டன்னை நிறுப்பானும்"* (நாலடி,248.). **5.** தொழில் (வின்.); profession, vocation, calling. **6.** இடம்; place, seat, location. *"நின்னிலைத் தோன்றும்"* (பரிபா.2:27.). **7.** தங்குமிடம்; stopping place, station, stand, residence *"நெடுந்தேர் நிலைபுகுக"* (பு.வெ.6.2.). **8.** நிலம் (பிங்.); earth. **9.** நிலைத்திணை (நாமதீப. 373.) பார்க்க; see nilai-t-tiṇai. **10.** வீடு, தேர்களின் தட்டு; storey, floor, as of a building; sitting room in a car. *"இழிந்து கீழ்நிலை"* (சீவக.2673.). **11.** கதவுநிலை; door-frame. *"ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை"* (நெடுநல்.36.). **12.** தூண் (நாமதீப.448.); pillar. **13.** விளக்கு. முதலியவற்றின் தண்டு (வின்.); standard, as of a lamp. **14.** ஒழுக்க நெறி; prescribed path. *"நிலையிற்றிரியா தடங்கியான் றோற்றம்"* (குறள்,124.). **15.** வழக்கு (அக.நி.); usage, custom. **16.** வாழ்க்கை நிலை; stages of religious life. *'பிரமசரிய முதலிய நிலைகளினின்று'* (குறள், பரிமே. உரைப்பா.). **17.** குலம்; family, tribe, *"காணிகைக் கொண்ட மறுநிலை மைந்தனை"* (கல்லா.43,20.). **18.** கால்வழியுரிமை (பரம்பரைப் பாத்தியம்); inheritance, hereditary right. *"தன்பாட்டன் நிலையாய் வருகிறகாணி"* (S.I.I. II; 310.). **19.** இசைப்பாட்டு வகை (சீவக.650 உரை.); a kind of song. **20.** பொழுது (அக.நி.); time. **21.** முழுத்தம்; a unit of time. *"ஒரு நிலைகாறு முள்ளே யொடுக்கி"* (பெருங். உஞ்சை.34.63.). **22.** ஒருவகை நிலவளவு (யாழ்ப்.); a land measure for dry lands. **23.** ஒருவன் நிற்கக்கூடிய நீராழம்; depth of water allowing one to stand in opp. to niccu *'நீர்நிலை காட்டுங் காலத்து'* (பெரும்பாண், 273. உரை.). **24.** பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என நால்வகைப் பட்டனவான வீரர் அம்பெய்யும் நிலை (திவா.); attitude in archery, numbering four, viz., paicācam, maṇḍalam, āliḍam, pirattiyāliḍam. **25.** அணிகலத் தொங்கல் (வின்.); a pendant of a jewel. **26.** ஆன் ஒருதடவை கழிக்கும் சாணி (தஞ்.); cowdung evacuated at a time.

தெ. நெலவு. க. நிலி. ம. நில.

*[நீள் → நிள் → நில் → நிலை.]*

**நிலை⁵** *nilai,* பெ. (n.) **1.** இருக்கும் தன்மை; state. தாத்தா வீடு இப்போது என்ன நிலையில் இருக்கிறது (உ.வ.). **2.** இருப்பின் முறை; condition. உட்கார்ந்த நிலையிலேயே மறுமொழி சொன்னான் (உ.வ). **3.** இருப்பு;

position. அகரமுதலித் துறையிலிருந்த தேக்க நிலை மாறிவிட்டது (உ.வ). 4. சூழ்நிலை; situation, environment. சண்டையின்போது வீட்டை விட்டு வெளியே செல்லமுடியாத நிலை(உ..வ.). இன்று நிலை தலைகீழாய் மாறிவிட்டது (உ.வ.). 5. (பலபிரிவுகளாக உள்ளவற்றுள்) ஒருகட்டம், பிரிவு; stage. அலுவலர்களின் வேலைநீக்கம் முதல்நிலை நடவடிக்கைதான். (உ.வ.) 6. சமநிலை; equilibrium, balance. அவன் ஒரு நிலையில் இல்லை (உ.வ.). நிலை தடுமாறி கீழே விழுந்தான். (உ.வ.)

*[நீள் → நிள் → நில் → நிலை.]*

**நிலைக்கட்டு—தல்** *nilai-k-kaṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) நிலைக்கச்செய்தல் (இ.வ.); to establish, make permanent.

*[ நிலை + கட்டு நீள் → நிள் → நில் → நிலை. கள் → கட்டு → கட்டு–,]*

**நிலைக்கடகம்** *nilai-k-kaḍagam,* பெ. (n.) உறுதியானபெருங்கூடை (யாழ்ப்.); a durable large basket.

*[ நிலை + கடகம்.]*

*நில் → நிலை – உறுதி. குள் → குண் → குணம் → குடம் – வளைவு, உருண்டகலம், சக்கரக்குறடு. குடந்தம் – வளைவு, வணக்கம். குடக்கு → குடக்கி – வளைவானது. (குடகம்) → கடகம் – வட்டமான பெருநாற்பெட்டி. (வ.மொ.வ.6.).*

**நிலைக்கண்** *nilai-k-kaṇ,* பெ. (n.) இமையாக்கண் (சிமிட்டாக்கண்); fixed eyes-no reflex action. (சா.அக.).

*[ நில் → நிலை. கள் (கருமை) → கண் = கருமணி கொண்ட பார்வையுறுப்பு. ஒ.நோ; உள் → உண். நள் → நண். பெள் → பெண்.]*

**நிலைக்கண்ணாடி** *nilai-k-kaṇṇāḍi,* பெ. (n.) உடல் முழுதும் பார்க்கும்படி ஓரிடத்து நாட்டப்பட்ட பெரிய கண்ணாடி; a large fixed mirror. "*கட்டிற் றவிசொடு நிலைக்கண்ணாடி*" (சீவக.558.).

க. நிலுகண்ணாடி.

*[நிலை + கண்ணாடி. நில் → நிலை – நிற்கை, உறுதி. காண் + ஆடி – காணாடி → கண்ணாடி.]*



**நிலைக்கதவம்** *nilai-k-kadavam,* பெ. (n.) நிலையிலமைந்த கதவு; door fixed on a frame. "*முழுநிலைக்கதவ மகற்றிமுன்னின்று*" (பெருங்.மகத.13,71.).

*[ நிலை + கதவம். நில் → நிலை. கடவு – கதவு, கடந்து செல்லும் வழி, வாயில், வாயிலிலமைந்த கதவு. கதவு → கதவம்.]*

**நிலைக்கல்[1]** *nilai-k-kal,* பெ.(n.) நிலைப்படிக்கீழுள்ள கல் (இ.வ.); stone base for door-frame.

*[ நிலை + கல். நில் → நிலை. கதவுநிலை, கதவுநிலையின் கீழமைந்த கல்.]*



**நிலைக்கல்**[2] *nilai-k-kal,* பெ. (n.) ஆட்டுக்கல்; அரைக்கும்கல்; grinding stone.

*[நிலை + கல்.]*



**நிலைக்களப்போலி** *nilai-k-kaḷa-p-pōli,* பெ. (n.) ஓரெழுத்து நின்ற இடத்தில் அதற்குப் போலியாய்வரும் மற்றொரு எழுத்து (யாழ்.அக.); a letter substituted for another.

*[நிலைக்களம் + போலி. போல வருவது போலி.]*

**நிலைக்களம்**[1] *nilai-k-kaḷam,* பெ. (n.) தங்குமிடம்; stand, standing place. "போர்யானை யாக்கு நிலைக்களம்" (ஏலாதி,12.).

*[நிலை + களம். நில் → நிலை = நிற்கை, உறுதி. உல் → உத்தல் = பொருந்துதல். உத்தி = விளையாட்டில் இருவர் சேர்ந்து வரும் சேர்க்கை. உல் → குல் → குலவுதல் – கூடுதல். கள் → களம் –கூட்டம், கூடும் ஏர்க்களம், கூடுமிடம், இடம்.*

**நிலைக்களம்**[2] *nilai-k-kaḷam,* பெ. (n.) (ஒன்றின்) இருப்பிடம்; source of seat (of something). அன்பின் நிலைக்களம் அம்மா. (உ.வ). தமிழும் வடமொழியுங் கலந்த மணிப்பவள நடை மேலோங்கிய காலத்துத் தமிழை மீட்பதற்குத் தனித்தமிழியக்கந் தொடங்கி அதற்கு நிலைக்களமாயிருந்தவர் நிறைமலையாம் மறைமலையடிகளார். (உ.வ.).

*[நிலை + களம்.]*

**நிலைக்களம்**[3] *nilai-k-kaḷam,* பெ. (n.) அரசிறை தண்டுஞ் சாலை (தெ. க. தொ. 2:353.); office for collection of revenue.

*[நிலை + களம்.]*

**நிலைக்களன்** *nilai-k-kaḷaṉ.* பெ. (n.) இடம்; place

*[நிலை + களன். களம் → களன்.]*

**நிலைக்கால்**[1] *nilai-k-kāl,* பெ. (n.) **1.** கட்டில் முதலியவற்றின் கால்; stand, as of a sofa. *"நிலைக்காலமைந்த நிழறிகழ் திருமணி கயிற்குரல் வளைஇய கழுத்திற் கவ்விய பவழ விழிகைப் பத்திக் கட்டத்துப் பட்டு நிணர் விசித்த கட்டமை கட்டிலுள்"* (பெருங்.மகத.14.54). **2.** நிலை 11 (வின்.) பார்க்க; see nilai.

*[நிலை + கால். நில் → நிலை = விளக்கு முதலியவற்றின் தண்டு. குல் – தோன்றற் கருத்துவேர். குல் → கல் → கால். தோன்றல், வளர்தல், நீட்சிப்பொருள்.]*

**நிலைக்கால்[2]** *nilai-k-kāl,* பெ. (n.) ஆட்டுக்கால் பார்க்க; see āṭṭu-k-kāl. (சா.அக.).

**நிலைக்கிடாரம்** *nilai-k-kiḍāram,* பெ. (n.) எளிதாய் இடம் பெயர்க்கவியலாத பெரியதோர் ஏனம்; a big vessel kept stationary.

*[நிலை + கிடாரம். நில் → நிலை = இருப்பு, இருப்பின் முறை, இருக்கும் தன்மை. குடம் → கடம் → கடாரம் → கிடாரம் (வாயகன்ற பெரிய ஏனம்,) ஆரம் சொல்லாக்க ஈறு. ஒ.நோ: கூடு → கூடாரம்.]*

**நிலைக்கிடை** *nilai-k-kiḍai,* பெ. (n.) நடனத்தில் (நாட்டியத்தில்) உட்காரும் நிலை (விறலிவிடு.413.); a sitting pose, in dancing.

*[நிலை + கிடை. நில் → நிலை = தன்மை, நிலைமை. கிட → கிடை.]*

**நிலைக்குடி** *nilai-k-kui,* பெ. (n.) **1.** பழங்குடி (யாழ்.அக.); settled or ancient inhabitants. **2.** நிலவுடைமையாளரின் நிலைத்த குடிகள் (இ.வ.); permanent servants of a landlord engaged in agricultural operations.

*[நிலை + குடி. நில் → நிலை = நிலைத்த, பழைய, மூத்த. குட → குடி. குட = வளைந்த. சுற்றிலும் காப்பமைத்துக் கொண்டு வளைவில் இருப்பு அமைத்துக்கொண்டுவாழ்ந்தோரே குடி எனப்பட்டனர்.]*

**நிலைக்குத்து[1]–தல்** *nilai-k-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) இறக்குந்தறுவாயில் விழிமுதலியன அசைவின்றி நிற்றல் to be fixed or regid, as the eye at the dying stage.

*[நிலை + குத்து –. நில் → நிலை. குல் → குத்து.]*

**நிலைக்குத்து[2]–தல்** *nilai-k-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** அசையாது நிற்றல்; to stand firmly. **2.** குடியேறுதல்; to immigrate. **3.** பயிர்கள் நிலைத்துப் போதல்; to withstand as a crop, after its blighted stage.

*[நிலை + குத்து –,. நில் → நிலை. குல் → குத்து.]*

**நிலைக்குழு** *nilai-k-kuḻu,* பெ. (n.) சிக்கல்கள் எப்போது எழுந்தாலும் அதைப் பற்றி ஆய்வு செய்ய அமைக்கப்படும் நிலையான குழு; (any) standing committee. நாடாளுமன்ற நிலைக்குழு நாளை சென்னை வருவதாய்ச் சொன்னார்கள். (உ.வ.)

*[நிலை + குழு. நில் → நிலை. குல் → குள் → குழு.]*

**நிலைக்கூடம்** *nilai-k-kūḍam,* பெ. (n.) **1.** பித்தளை; brass. **2.** ஒகநிலையிலிருக்கும் தனியோர் (பிரத்தியேக) இடம்; a secluded hall intended or set apart for yoga practice. (சா.அக.).

*[நிலை + கூடம்.]*

*[நில் → நிலை. கூடு → கூடம் = இடம்.]*

**நிலைகலங்கு–தல்** *nilai-kalaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிலைகுலை–, 1, பார்க்க; see nilai-kulai-, "*ஐந்துபுலனிலை கலங்குமிடத்து*" (பெரியபு. திருஞான.301.).

*[நிலை + கலங்கு –. நில் → நிலை குல் → கல் → கல → கலங்கு.]*

**நிலைகுலை[1]–தல்** *nilai-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** நிலைமை தவறுதல்; to be ruined in circumstances. **2.** நெறிவழுவுதல்; to swerve from the path of virtue. **3.** தயங்குதல்; to be discouraged; to lose self-command; to be disconcerted, perplexed. **4.** நிலைமை தளர்தல்; to lose hold; to be unstrung. வச்சிரமுட்டிதன் னிலைகுலைந்து விழுதலின் (கம்பரா. முதற்போர். 55.). **5.** சிதறுண்ணுதல்; to be routed, as an army.

*[ நிலை + குலை–. நில் → நிலை. குல் → குலை → குலை–,]*

**நிலைகுலை[2]–தல்** *nilai-kulai-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** கட்டுப்பாட்டுடன் இருக்கும் சமநிலையை இழத்தல்; lose balance, upset. *சாலையின் குறுக்கே குழந்தை ஓடிவந்ததைக் கண்டு வண்டியைச் சட்டென நிறுத்தியதில் நிலைகுலைந்து போனான். (உ.வ.). அம்மாவின் இறப்புச் செய்தியைக் கேட்ட ஆல்துரை நிலைகுலைந்தார் (உ.வ.).* **2.** சீர் கெடுதல், சீர் குலைதல்; get disrupted. *அளவுக்கு அதிகமாக இறக்குமதி செய்வதால் உள்நாட்டுப் பொருளாதாரம் பெரிதும் நிலைகுலைகிறது. (உ.வ.).*

*[ நிலை + குலை–,]*

**நிலைகுலை[3]–த்தல்** *nilai-kulai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** நிலைமையழித்தல்; to ruin. **2.** கற்பழித்தல்; to seduce, ravish. **3.** ஒழுக்கங் கெடுத்தல்; to cause to swerve from the path of virtue or to neglect religious observances. **4.** சிதறவடித்தல்; to rout, as an army. **5.** தயங்கச் செய்தல்; to intimidate, disconcert.

*[ நிலை + குலை–,]*

**நிலைகேடு** *nilai-kēḍu,* பெ. (n.) கெட்டுப்போன நிலைமை; straitened circumstances, loss of position.

*[ நிலை + கேடு.]*

**நிலைகொள்(ளு)[1]–தல்** *nilai-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) **1.** உறுதியாதல்; to be permanent; to remain firm. **2.** தன்னிலையடைதல்; to come into its natural state, as a diseased mind. **3.** நிற்குமளவு ஆழமாதல்; to be just deep enough to allow one to stand in.

க. நிலிகொளா.

*[ நிலை + கொள்–,]*

**நிலைகொள்(ளு)[2]–தல்** *nilai-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) **1.** ஓரிடத்தில் நிலையாக இருத்தல், தங்குதல்; come to stay, settle down. செயற்கைக்கோள் இன்னும் *ஒருவாரத்தில் தனக்குரிய சரியான சுற்றுப்பாதையில் நிலைகொள்ளும். (உ.வ.)* **2.** (பெரும்பாலும் எதிர்மறையில்) அமைதியாக இருத்தல்; ஒன்றில் கவனம் செலுத்துதல்; to be peaceful or undisturbed. இரவு வெகு நேரமாகியும் அலுவலகம் சென்ற கணவன் வராததால் அவள் நிலைகொள்ளாமல் தவித்தாள். (உ.வ.). தான் ஏமாற்றப்பட்டு விட்டதை அறிந்த பிறகு கண்ணனுக்கு நிலைகொள்ளவில்லை. (உ.வ.).

*[நிலை + கொள்.]*

**நிலைகோலு–தல்** *nilai-kōlu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** அணிவகுத்தல்; to array, as force. **2.** இடஞ்தேடுதல்; to seek shelter.

*[ நிலை + கோலு–,]*

**நிலைச்செண்டு** *nilai-c-cenḍu,* பெ.(n.) நிலத்தில் நின்றெறிந்து விளையாடும் பந்து; a kind of ball played standing on the ground. *"நிலைச் செண்டும் பரிச்செண்டும் வீசி மிக மகிழ்வெய்தி"* (பெரியபு. சேரமான்.126.).

*[நிலை + செண்டு.]*

**நிலைச்செரு** *nilai-c-ceru,* பெ. (n.) இடையறாப் போர்; continuous engagement in war operation. *"நிலைச் செருவினாற் றலையறுத்து"* (பதிற்றுப். ஐந்தாம். பதி.).

*[நிலை + செரு.]*

**நிலைசெல் (லு) –தல்** *nilai-cel(lu)-,* 14 செ. கு.வி. (v.i.) நிலைகொள்–, பார்க்க; see nilai-koḷ-,

*[நிலை + செல்–,]*

**நிலைத்தண்ணீர்** *nilai-t-taṇṇīr,* பெ. (n.) நிலையாயுள்ள நீர்; standing water, as in pools, tanks.

*[நிலை + தண்ணீர்.]*

தண்ணீரெனினும் நீரெனினும் ஒக்கும். நீரெனலே தமிழுக்குச் சாலும்.

**நிலைத்தானம்** *nilai-t-tāṉam,* பெ. (n.) கோயில்; shrine. *"கானும்பலபதியுமந்நிலைத் தானங்கள்"* (பெரியபு. திருஞான. 340.).

*[நிலை + தானம்.]*

**நிலைத்திணை** *nilai-t-tiṇai,* பெ.(n.) **1.** இயங்கு திணைக்கு எதிரிடையான இயங்கா (அசையா) திணை; the category of the immovables, as the vegetable kingdom, opp.to iyangu-tiṇai. *'இறைவன் இயங்கு திணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு'* (தொல். எழுத்து. 46. உரை.). **2.** பயிரிகள்; flora.

*[நிலை + திணை.]*

*நில் → நிலை – நிலைத்து நிற்பது, இயங்காதது.*

**நிலைத்திருவமிர்து** *nilai-t-tiru-v-amirdu,* பெ. (n.) கோயிலில் நாளும் படையலுக்கென விடப்படும் நிலைக்கொடை (தெ.க.தொ. 3:96.); permanent endowment for daily offerings in a temple.

*[நிலை + திருவமிர்து.]*

**நிலைத்துத்தி** *nilai-t-tutti,* பெ. (n.), நிலத்துத்தி பார்க்க; see nila-t-tutti. (சா.அக.).

**நிலைத்துறை** *nilai-t-tuṟai,* பெ.(n.) வழக்கமாயிறங்கும் நிலையாழமுள்ள நீர்த்துறை; the usual bathing-ghat. *"நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்"* (மலைபடு. 280.).

*[நிலை + துறை.*
*நில் → நிலை.]*

**நிலைத்தேர்** *nilai-t-tēr,* பெ. (n.) ஒப்பனை செய்து நிறுத்தப்படும் தேர் (திருவினை. திருமணப். 62.); standing decorated car. *"விளக்குறு நிலைத்தேர் செய்தார்"* (பிரபுலிங்.சூனிய. இருந்த. 40.).

*[நிலை + தேர்.]*

**நிலைத்தேர்மூடு** *nilai-t-tēr-mūḍu,* பெ. (n.) தேரை வழக்கமாய் நிறுத்துமிடம் (இ.வ.); the place where a temple car ordinarily stands.

*[நிலை + தேர்மூடு.]*

**நிலைதடுமாறு-தல்** *nilai-tadu-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) நிலைகுலை-, பார்க்க; see nilai-kulai-,

*[நிலை + தடுமாறு-,]*

**நிலைதவறு-தல்** *nilai-tavaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) நிலைகுலை-, பார்க்க; see nilai-kulai,

*[நிலை + தவறு-,]*

**நிலைதளம்பு-தல்** *nilai-taḷambu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிலையற்றிருத்தல்; to be unstable. 2. கலக்கமுற்றிருத்தல்; to be unsettled, as a family, a government. 3. நிலைகுலை-,1,2, பார்க்க; see nilai-kulai-, 4. பேணாது கிடத்தல்; to be neglected, as one's property or affairs.

*[நிலை + தளம்பு-,]*

**நிலைதளர்-தல்** *nilai-taḷar-,* 2 செ.கு.வி. (v.i.) நிலைகுலை-, பார்க்க; see nilai-kulai-,

*[நிலை + தளர்-,]*

**நிலைதிரி-தல்** *nilai-tiri-,* 2 செ.கு.வி. (v.i.) முறைகெடுதல்; to swerve from principle. "*யாது நிலைதிரியான்*" (ஏலாதி, 3.).

*[நிலை + திரி-,]*

**நிலைநாட்டு-தல்** *nilai-nāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிலைகொள்ளும்படி செய்தல், நிலைக்கச் செய்தல், நிறுவுதல்; enforce (peace, law and order; establish rights, facts etc.) கலவரம் நடக்கும் பகுதியில் அமைதியை நிலைநாட்ட பட்டாளம் அனுப்பப்பட்டுள்ளது. (உ.வ.). இது அறத்தை நிலைநாட்ட நடக்கும் போராட்டம். (உ.வ.). அவர் தன் கட்டுரையில் பாவாணரின் கருத்துகளைத் திறம்பட நிலைநாட்டியுள்ளார். (உ.வ.).

*[நிலை + நாட்டு-,]*

**நிலைநில்-தல் (நிலைநிற்றல்)** *nilai-nil-,* 14 செ.கு.வி. (v.i.) 1. கொள்கை முதலியவற்றில் உறுதியாய் நிற்றல்; to stand firm, as in one's principles; to maintain consistency. 2. நிலை பெறு-, பார்க்க; see nilai peṟu-,

*[நிலை + நில்-,]*

**நிலைநிறுத்து-தல்** *nilai-niṟuttu-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. நிலைநாட்டு; to set up, establish. "*கீர்த்தி நிலைநிறுத்திக் கொண்டோம்*" (தனிப்பா. 1. 216. 2.). 2. முடிவாய் எண்பித்தல்; to prove conclusively.

*[நிலை + நிறுத்து-,]*

**நிலைநீச்சு** *nilai-nīccu,* பெ. (n.) ஒருவகை நீச்சு; a kind of swimming.

*[நிலை + நீச்சு.]*

**நிலைநீர்[1]** *nilai-nīr,* பெ. (n.) 1. ஓட்டமில்லா நீர்; still water, as in a tank. "*கூடவ நீணிலைநீர்களும் பசையறக் குடித்தான்*" (திருவிளை. அன்னக்.7.). 2. கடல் (கல்லா. 21. 1. மயிலேறும்.); ocean.

*[நிலை + நீர்.]*

**நிலைநீர்[2]** *nilai-nīr,* பெ. (n.) முட்டளவுள்ள நீர்; knee-deep water.

*[நில் → நிலை = ஓரளவு, தாளளவு. நிலை + நீர்.]*

**நிலைநீர்ப்பாட்டம்** *nilai-nīr-p-pāṭṭam,* பெ. (n.) ஏரிப்பாய்ச்சல் வரி (கல்.); tax on tank-water used for irrigation, opp. to oḻukku-nīr-p-pāṭṭam.

*[ நிலை + நீர்ப்பாட்டம்.]*

**நிலைப்பட்டம்** *nilai-p-paṭṭam,* பெ. (n.) நிலையான அல்லது மாறா உரிமை; absolute title, as to a property; permanent interest.

*[ நிலை + பட்டம்.]*

**நிலைப்படம்** *nilai-p-paḍam,* பெ. (n.) இயக்கமற்ற பொருள்களைக் காட்டும் ஓவியம்; still life.

*[நிலை + படம்.]*

**நிலைப்படி** *nilai-p-paḍi,* பெ. (n.) கதவு நிலையின் அடிப்படி; sill, threshold. "*வன்மீகன் சந்துரைத்துநின்ற நிலைப்படியா யிருந்தேனில்லை தீவினையே*" (தனிப்பா.).

*[ நிலை + படி.]*



**நிலைப்படு-தல்** *nilai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **1.** நிலையாதல்; to become permanent; stationary. **2.** உறுதியாதல்; to be fixed, steady; to remain firm. **3.** உறுதிப்படுதல்; (வின்.) to become definite or certain.

*[ நிலை + படு-,]*

**நிலைப்படுத்து-தல்** *nilai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நிலை நிறுத்து-பார்க்க; see nilai-niṟuttu-, **2.** உறுதியாக்குதல் (வின்.); to make firm or steady. **3.** உறுதிப்படுதல் (வின்.); to make certain.

*[ நிலை + படுத்து-,]*

**நிலைப்படை** *nilai-p-paḍai,* பெ. (n.) காவற்குத் தலைநகரிலேயே நிறுத்திவைக்கப்பட்ட படைப்பிரிவு (கல்.); standing army stationed in the capital of a country.

*[ நிலை + படை.]*

**நிலைப்பதம்** *nilai-p-padam,* பெ. (n.) *நிலைமொழி* (நன். **242.** மயிலை.) பார்க்க; see *nilai-moḻi.*

*[ நிலை + பதம்.]*

**நிலைப்பந்தம்** *nilai-p-pandam,* பெ. (n.) தீவட்டிவகை (புதுக்.கல்.307.); a kind of torch.

*[ நிலை + பந்தம்.]*

**நிலைப்பரப்பு** *nilai-p-parappu,* பெ. (n.) ஒருவகை நிலவளவை (யாழ்ப்.); a measure of land.

*[ நிலை + பரப்பு.]*

**நிலைப்பல்லி** *nilai-p-palli,* பெ. (n.) ஓரிடத்திலே பலகாலுஞ் சொல்லிக் கொண்டிருக்கும் பல்லி (ஈடு.4.9.3.); lizard that chirps frequently from the same place.

*[ நிலை + பல்லி.]*

**நிலைப்பாடு** *nilai-p-pāḍu,* பெ. (n.) 1. நிலைமை; condition, state. *"தம்மிறைக் கியன்ற நிலைப்பாடெல்லாம் நெஞ்சுணக் கேட்டு"* (பெருங்.வத்தவ.4,32.). 2. உறுதிப்பாடு (வின்.); firmness, permanence, durability.

*[ நிலை + பாடு.]*

**நிலைப்பு** *nilaippu,* பெ. (n.) 1. உறுதிப்பாடு; permanance, continuance, durability 2. விடாமுயற்சி (வின்.); perserevance, persistence.

*[ நிலை → நிலைப்பு.*
*ஒ.நோ: உழை → உழைப்பு.*
*அழை → அழைப்பு.]*

**நிலைப்பூட்டு** *nilai-p-pūṭṭu,* பெ. (n.) கதவில் தைக்கப்பட்ட பூட்டுவகை (இ.வ.); a kind of lock fitted on a door.

*[ நிலை + பூட்டு.]*



**நிலைப்பெறு–தல்** *nilai-p-peṟu-,* 20 செ. கு.வி. (v.i.) சலியாதிருத்தல்; to be at rest *"நிலைப்பெற்றென் னெஞ்சம்"* (திவ்.திருவாய். 3.2.10.).

க. நிலெவெறு.

*[ நிலை + பெறு–,]*

**நிலைப்பொலியூட்டு** *nilai-p-poli-y-ūṭṭu,* பெ. (n.) நிலைபொலியூட்டு பார்க்க; see nilai-poli-y-ūṭṭu.

*[ நிலை + பொலியூட்டு.]*

**நிலைபரம்[1]** *nilaiparam,* பெ. (n.) 1. உறுதி; certainly. 2. நிலைமை; state.

**நிலைபரம்[2]** *nilai-param,* பெ. (n.) அடிப்படை (ஆதாரம்); foundation.

*[ நிலைவரம் → நிலைபரம்.]*

**நிலைபிடி[1]–த்தல்** *nilai-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1.தொழில் முதலியனபெற்று நிலையாயிருத்தல்; to settledown, as by seeing an office or residence for oneself. 2. குறிக்கோ ளெய்துதல்; to reach the goal.

*[ நிலை + பிடி –,]*

**நிலைபிடி[2]–த்தல்** *nilai-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வளம்பிடித்தல்; to get productiveness, luxuriance.

*[ நிலை + பிடி.]*

**நிலைபெறு[1]–தல்** *nilai-peṟu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நிலையாய்த் தங்குதல்; to stay firmly. *"வேற்றுமையுருபு நிலைபெறு வழியும்"*

(தொல்.எழுத்து.132.). 2. துன்பமற்ற நிலையை யடைதல்; to gain a resting place; to secure peace. "*நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா*" (தேவா.727.3.). 3. நீடித்தல் (வின்.); to endure. 4. ஒன்று நிற்கக் கூடியவளவு ஆழமுடைத்தாதல்; to be fathomable "*கழைநிலைபெறாஅக் குட்டத் தாயினும்*" (பதிற்றுப்.86.9.).

*[ நிலை + பெறு–,]*

**நிலைபெறு²–த்தல்** *nilai-peṟu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. நிலைநிறுத்து–பார்க்க; see nilai-niṟuttu-. 2. காத்தல் (சூடா.); to maintain, protect, "*உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும்*" (கம்பரா. சிறப்.1.).

**நிலைபேறு¹** *nilai-pēṟu,* பெ. (n.) 1. உறுதி; permanence, stability. 2. நிலைப்பிடம்; firm footing or situation. 3. தூண் (வின்.); pillar or post. 4. துறக்கம் (அக.நி.); final bliss. 5. மானம் (அக.நி.); honour, reputation.

*[ நிலை + பேறு.]*

**நிலைபேறு²** *nilai-pēṟu,* பெ. (n.) நிலைத் திருப்பது; everlasting. *செல்வம் நிலை பேறுடையது அல்ல என்றனர் அறிஞர்கள்.* (உ.வ.).

*[ நிலை + பேறு–,]*

**நிலைபொலியூட்டு** *nilai-poli-y-ūṭṭu,* பெ. (n.) நிலைவட்டி (I.M.P.Cg.1048.); interest secured permanently, as on a deposit.

*[ நில் → நிலை – நிலையான, உறுதியான. புல் → பொல் → பொலி. பொலிதல் = பெருகுதல், மிகுதல், செழித்தல். பொலி – பொலிசை – ஊதியம், வட்டி. பொலிசை யூட்டு → பொலியூட்டு. (தெ.க.தொ.2;82.) நிலை + பொலியூட்டு.]*

**நிலைபோடு¹–தல்** *nilai-pōḍu-,* 20 செ. குன்றாவி. (v.t.) தொடங்குதல் (யாழ்.அக.); to begin.

*[ நிலை + போடு–,]*

**நிலைபோடு²–தல்** *nilai-pōḍu-*, 20 செ. குன்றாவி. (v.t.) மாடு சாணி போடுதல்; to evacuate the dung, as cow or an ox. இரண்டு நாட்களாக வயிற்றுக்கோளாறிலிருந்த மாடு இன்றுதான் நிலைபோட்டது.

*[ நில் → நிலை – மாடு ஒரு தடவை கழிக்குஞ் சாணம். நிலை + போடு–,]*

**நிலைமக்கள்** *nilai-makkaḷ,* பெ. (n.) போரின்கண் பின்வாங்காது நிலைத்து நிற்கும் மறவர்; untottered warrriors. "*நிலைமக்கள் சால வுடைத்தெனினும் தானை தலைமக்க ளில்வழி யில்*" (குறள்,770.).

*[ நிலை + மக்கள். நில் → நிலை = தாக்குதலுக்கு அஞ்சாது நிலையாக இருக்கும் தன்மை. மக → மக்கள்.]*

**நிலைமடக்கு** *nilai-maḍakku,* பெ. (n.) அணிவகை (திவா.); a figure of speech.

*[ நிலை + மடக்கு.]*

**நிலைமண்** *nilai-maṇ,* பெ. (n.) இட்டு நிரப்பப்படும் கொட்டு மண்ணுக்கு எதிரான, இயற்கையான மண் (யாழ்ப்.); natural soil, opp.to koṭṭu-maṇ.

*[ நிலை + மண்.]*

**நிலைமண்டிலம்** *nilai-maṇḍilam,* பெ. (n.) *நிலைமண்டிலவாசிரியப்பா* பார்க்க (இலக்.வி.734.); see *nilaimaṇḍila-v āširiyappā.*

*[ நிலை + மண்டிலம்.]*

**நிலைமண்டிலவாசிரியப்பா** *nilaimaṇḍila-v-āširiyappā,* பெ. (n.) சீர்கள் தம்மில் அளவொத்த அடிகளையுடைய ஆசிரியம். (இலக். வி. 734, உரை.); a kind of āširiyappā, in which all the lines have the same number of feet.

*[ நிலைமண்டிலம் + ஆசிரியப்பா.]*

நில் → நிலை.

முல் → முள் → முண் → மண் → மண்டு → மண்டலம். மண்டலம் → மண்டிலம்– வட்டம், செய்யுள் வகை. இறுதியடியின் அல்லது இறுதிப் பாட்டின் இறுதி எழுத்து அசை சீர் என்பனவற்றுள் ஒன்று, முதலடியின் அல்லது முதற்பாட்டின் எழுத்து அசை சீர் என்பவற்றுள் ஒன்றாய் வருமாறு செய்யுளிசைத்தல். மண்டில யாப்புத் தொல்காப்பியத்திலேயே (தொல்.செய். 114 or 116.) சொல்லப் பட்டிருத்தலையும் *'என்மனார் புலவர்'* என்னும் முன்னூல் பலவற்றைக் குறிக்குந் தொடரையும் ஊன்றி நோக்குக.

நிலைமண்டில ஆசிரியப்பா அடிமறிமண்டில ஆசிரியப்பா என்னும் அகவற்பா வகைகள், தொன்று தொட்டு வழங்கி வருவன. தமிழ் யாப்புமுறை முற்றும் ஆரியச் சார்பற்றது. (வே.க. 3:84.).

**நிலைமண்டு–தல்** *nilai-maṇḍu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. அயலூரில் நீடித்துத் தங்குதல்; to make a long stay as in a foreign place. 2. ஓரிடத்தைப் பற்றிக்கொள்ளுதல்; to stick to a place, as a person or animal.

*[ நிலை + மண்டுதல்*

*முல் → முள் → முண்டு → மண்டு. மண்டுதல் – வளைதல், வட்டம்.]*

**நிலைமாலை** *nilai-mālai,* பெ. (n.) 1. கடவுளர்க்குச் சாத்தும் பெரிய பூமாலைவகை; a big garland put on a deity. 2. கழுத்திலிருந்து கால்வரைத் தொங்கும் நீண்ட மாலை; a graland from neck to bottom.

*[ நிலை + மாலை.]*



**நிலைமாறு–தல்** *nilai-māṟu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. இடம் முதலியவற்றினின்றும் மாறுதல்; to change in place, principles or circumstances. 2. சொல்லில் எழுத்துகள் இடம் பிறழ்தல் (வின்.); to be transposed as letters in words, as சதை for தசை.

*[ நிலை + மாறு–,]*

**நிலைமை** *nilaimai,* பெ. (n.) 1. படித்திறம்; condition; state, as of affairs, of one's feelings. பண்பு மேம்படு நிலைமையார் (பெரியபு. திருநீலநக். 23) 2. இயல்பு (திவா.); quality; property; character. *வலியி னிலைமையான் வல்லுருவம்* பெற்றம் புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று (குறள்,273.). 3. வாழ்விலுள்ள நிலை; station,

rank, degree. 4. நிற்குநிலை; standing posture. *"நிலைமையிலுண லுடையவர்களும்"* (தேவா. 815, 10.). 5. திண்மை; strength. *"நேரார் படையி னிலைமை"* (பு.வெ. 7.22.). 6.உறுதி; firmness. *"நிலைமையினெஞ்சத்தான்"* (நாலடி, 87.). 7. மெய் (திவா.); truth, veracity, probity. 8. புகழ்; fame. *"நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச் செல்கென விடுக்குவ னல்லன்"* (பொருந. 176.). 9. துறக்கம்; final bliss. *"நிலைமை நீடுதல் தலைமையோ வன்றே"* (ஞானா. பாயி. 3.). 10. நிலவுடைமை (வின்.); landed property.

*[ நில் → நிலை → நிலைமை.]*

**நிலைமைக்காரன்** *nilaimai-k-kāraṉ,* பெ. (n.) 1. நிலச்சொத்துள்ளவன்; man of landed property. 2. நேர்மையுள்ளவன்; man of principle.

*[ நிலைமை + காரன்.]*

*நில் → நிலை →நிலைமை. காரன் = உடைமைகுறித்த ஆண்பாலீறு.*

**நிலைமைப்பத்திரம்** *nilaimai-p-pattiram,* பெ. (n.) புலவர் முதலியோர்க்கு உரிமை யேற்படுத்தி அவ்வுரிமை நிலைக்க எழுதப்படும் ஆவணம் (சங்.அக.); a deed of gift made to learned men in recognition of their merits.

*[ நிலைமை + பத்திரம்*

*நில் → நிலை → நிலைமை.]*

*த. ஆவணம். வ. பத்திரம்.*

**நிலைமொழி** *nilai-moḻi,* பெ. (n.) சொற்புணர்ச்சிக்கண் முதனிற்குமொழி; antecedent word, the first of two words in a euphonic combination. *"நிலைமொழி முன்னர் வேற்றுமையுருபிற்கு"* (தொல். எழுத்து. 173.).

*[ நிலை + மொழி*

*நில் → நிலை.]*

**நிலையக்கலைஞர்** *nilaiya-k-kalaiñar,* பெ. (n.) வானொலி நிலையத்தில் அமர்த்தம் பெற்றுப் பணிசெய்யும் கலைஞர், permanent paid staff artists in radio station.

*[ நிலையம் + கலைஞர்.]*

**நிலையகம்** *nilai-y-agam,* பெ. (n.) மனை; (அக.15) house, abode.

*[ நிலை + அகம். நில்→ நிலை. அகழ்தல் =தோண்டுதல். அகைதல்=ஒடிதல். அகைத்தல் = அறுத்தல்.]*

*ஒருகா. அகு → அகம் = உட்டுளை, உள், குடி, வீடு.*

*ஒ.நோ: புரை = துளை, வீடு.*
E. hold = small mean dingy abode.

**நிலையங்கி** *nilai-y-aṅgi,* பெ. (n.) 1. முகமதியர் அணியும் நீண்ட சட்டை (உ.வ.); gown reaching at the ankles, chiefly worn by muhamadans. 2. திருவுருவச் சிலைக்கு அணியும் மெய்யுறை; a metallic cover put on idols. 3. திருவுருவச் சிலைக்கு செய்யு மொப்பனை; full decoration of an idol. 4. முழுஉடலையும் மூடுகிறசட்டை; long jacket.

*[நிலை+ அங்கி.]*

skt. அங்கி.

**நிலையஞ்சி** *nilai-y-añji,* பெ. (n.) பிறப்புநின்ற நிலையை அஞ்சி; instability. "நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை". (குறள்,325.).

*[நிலை + அஞ்சி.]*

பிறப்பு நின்ற நிலையாவது, இயங்குவ, நிற்ப என்னும் இருவகைப் பிறப்பினும் இன்பமென்ப தொன்றன்றி உள்ளன எல்லாந் துன்பமேயாய நிலைமை.

**நிலையடி¹** *nilai-y-aḍi,* பெ. (n.) களநெல்லின் தலையடி (நெல்லை); first threshing of harvested sheaves of paddy.

*[நிலை + அடி.]*

**நிலையடி²** *nilai-y-aḍi,* பெ. (n.) தேர் நிறுத்தி வைக்கப்படும் இடம், தேரடி; station for a temple ear. பொழுதுசாயுமுன் ஊர்வலம் முடிந்து தேர் நிலையடிக்கு வந்துவிட வேண்டும். (உ.வ.).

மறுவ. தேரடி,தேர்முட்டி.

*[நிலை + அடி.]*



**நிலையப் புலவர்** *nilaiya-p-pulavar,* பெ. (n.) நிறுவனத்தில் நிலையாயப் பணி செய்யும் புலவர்; permanent paid scholar

*[நிலையம் + புலவர்.]*

**நிலையம்¹** *nilaiyam,* பெ. (n.) **1.** தங்குமிடம்; house, habitation, abode, seat, place, room. *"நியாயமத் தனைக்குமோர் நிலய மாயினான்"* (கம்பரா.கிளை.55.). **2.** கோயில்; temple. *"நல்லூ ரகத்தே திண்ணிலயங்கொண்டு நின்றான்"* (தேவா. 414.5.), **3.** மருதநிலத்தூர் (சூடா.); agricultural town or village. **4.** இலக்கு; object, aim; direction. *'அவன் நிலையம் பார்த்து நிற்கிறான்' (வின்.)* **5.** படி (வின்.); degree, stage. **6.** கூத்து (திவா.); acting; dancing; dramatic exhibition. *"முன்கைவந்த நிலையம்'* (கோயிற்பு. பதஞ்.34.). **7.** தொடர்வண்டி நிலையம்; railway station. இனி எல்லா வண்டிகளும் இந்த நிலையத்தில் நின்று செல்லும். (உ.வ.). **8.** பேருந்து நிலையம்; bus stand. ஆறகழூர் பேருந்து நிலையம் அண்மையில் புதுப்பிக்கப் பட்டது. (உ.வ.). **9.** வாடகை வண்டிகளுள்ள கடை; a shop providing vehicle for hire, as bicycles. கண்ணன் மிதிவண்டி நிலையத்தில் ஒரு வண்டியை வாடகைக்கு எடுத்துவா. (உ.வ.). **10.** நிலையம்; plant அணுமின் நிலையம். (உ.வ)

*[நில்–நிலை–நிலையம்.]*

வடமொழியாளர் திருட்டுத் தனமாகவும் ஏமாற்றுத்தனமாகவும் நிலையம் என்னும் தென்சொல்லை நி+லயம் என்று பகுத்து, ஓரிடத்தோடு ஒன்றிப் போதல் என்று பொருள்கூறி, வடசொல்லாகக் காட்டுவர். அம்முறையையே பின்பற்றிச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகரமுதலியும் நிலயம் என்னும் தவற்று வடிவையே மேற் கொண்டுள்ளது. (வே.க.3:45.).

**நிலையம்²** *nilaiyam,* பெ. (n.) **1.** மக்களுக்குக் குறிப்பிட்ட தொண்டினை அளிக்க அமைந்திருக்கும் கட்டடம்; house or building (for any public service). தொலைக்காட்சி நிலையம், வானொலிநிலையம். **2.** (போக்குவரத்து குறித்து வருகையில்) பயணிகளை அல்லது சரக்குகளை ஏற்றிச் செல்வதற்கு உரிய முறையில் அமைக்கப்

பட்டிருக்கும் இடம்; (in combination (bus) stand; (railway) station: (airport) பேருந்து நிலையம, தொடர்வண்டி நிலையம், வானூர்தி நிலையம். 3. மக்களுக்குத் தேவையான பணிகளைத் தொழில்முறையில் மேற் கொள்ளும் இடம்; place where one can hire something or get some service. மிதிவண்டி நிலையம், முடிதிருத்தும் நிலையம், உலர்சலவை நிலையம்.

*[நில் → நிலை → நிலையம்]*

**நிலையம்காட்டி** *nilaiyām-kāṭṭi,* பெ. (n.) குறியிடச் சுட்டுமுள், வரைபடங்களில் இடஞ்சுட்ட உதவும் முக்கவர் கோணவடிவக் கருவி; station pointer.

*[நிலையம் + காட்டி.]*

**நிலையம்பிடி–த்தல்** *nilaiyam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இடங்காணுதல்; to find quarters. 2. நிலைப்படுதல்; to settle oneself. 3. மருந்து முதலியவற்றின் அளவை மதிப்பிடுதல்; to ascertain or hit, by guess or practice, the right proportion, as the giving medicine.

*[நிலையம் + பிடி –,]*

**நிலையல்[1]** *nilaiyal,* பெ. (n.) நிலைபெற்று நிற்றல்; state of permanence "*நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே*" (தொல்.பொருள்.44.).

*[நில் → நிலை → நிலையல். அல் – தொழிற் பெயரீறு.]*

**நிலையல்[2]** *nilaiyal,* பெ. (n.) நிற்கை; abiding, staying. "*பிறிதவ ணிலையலும்*" (தொல். சொல்.253.).

*[நில் → நிலை → நிலையல். 'அல்' தொழிற்பெயரீறு.]*

**நிலையலை** *nilai-y-alai,* பெ. (n.) அளவுமாறா அலை; standing wave.

*[நிலை + அலை.]*

**நிலையவித்துவான்** *nilaiya-vidduvāṉ,* பெ. (n.) 1. நிலையக்கலைஞர் பார்க்க; see nilaiya-k-kalaiñjar. 2. நிலையப் புலவர் பார்க்க; see nilaiya-p-pulavar.

*[நிலையம் + வித்துவான். ]*

*skt. வித்துவான்.*

**நிலையழி[1]–தல்** *nilai-y-aḻi-,* 2 செ.கு.வி. (v.i.) நிலைகுலை–, பார்க்க; *see nilai-kulai* "*நிலையழிந்த சிந்தையராய்*" (பெரியபு. அப்பூதி.13.).

*[நிலை + அழி–,]*

குல் – குலை = அவிழ்தல், கலைதல், நிலைகெடுதல், அழிதல். குலைதல் அழிதலெனவும் வழங்கப்படும்.

**நிலையழி[2]–தல்** *nilai-y-aḻi-,* 2 செ.கு.வி. (v.i.) தோற்றல்; to defeat.

*[நிலை + அழி. தன்னிலையில் தாழ்தல், இழிதல், தோற்றுப்போதல்.]*

**நிலையழிவு** *nilai-y-aḻivu,* பெ. (n.) 1. தோல்வி; defeat. 2. நிலைகேடு; loss of position.

*[நிலை + அழிவு.]*

**நிலையற்றவன்** *nilai-y-aṟṟavaṉ,* பெ. (n.) 1. உறுதியில்லாதவன் (உ.வ.); fickle minded person; unstable unreliable man. 2. சாய்காலகற்றவன்; a man of no status.

*[நிலை + அற்றவன். நில் → நிலை = உறுதி, சாய்கால், செல்வாக்கு.]*

**நிலையறி–தல்** *nilai-y-aṟi-,* **2** செ.கு.வி. (v.i.) **1.** எண்ணமறிதல்; to know the idea. **2.** நிலைவரமறிதல் ; to know the condition.

*[நிலை + அறி . நில்→ நிலை = எண்ணம், நிலைவரம்.]*

**நிலையனம்** *nilaiyaṉam,* பெ. (n.) நிலையம் பார்க்க; *see nilaiyam.*

*[நில் → நிலை → நிலை + அன் + அம் . அன்–சாரியை; அம்– சொல்லாக்க ஈறு.]*

**நிலையாடி**[1] *nilai-y-āḍi,* பெ. (n.) **1.** நெய்வார் கருவியுளொன்று (யாழ்.அக.); weaver's swoft.

**நிலையாடி**[2] *nilai-y-āḍi,* பெ. (n.) நிலைக்கண்ணாடி பார்க்க; *see nilai-k-kaṇṇāḍi.*

*[நிலை + ஆடி. ஆடி –கண்ணாடி.]*

**நிலையாணி**[1] *nilai-y-āṇi,* பெ. (n.) நகைகளில் பதித்திருக்கும் ஆணிவகை (தெ.க.தொ.2:15.); fixed pin, in jewels dist. from ōḍāṇi.

*[நிலை + ஆணி. நில் → நிலை.நிலை யாய்ப் பதிந்திருப்பது; ஓடாணிக்கு எதிராயது.]*

**நிலையாணி²** *nilai-y-āṇi,* பெ. (n.) பெரிய தலையுள்ள ஆணி: stud.

*[நிலை + ஆணி.]*



**நிலையாணை** *nilai-y-āṇai,* பெ. (n.) ஒரேவகையான சூழல்களுக்கு எப்போதும் செயற்படுத்தும் வண்ணம் பிறப்பிக்கப்பட்ட ஆணை; standing order.

*[ நிலை + ஆணை.]*

**நிலையாப்பொருட்பிணி** *nilaiyā-p-poruṭpiṇi,* பெ. (n.) நிலையுதலில்லாத பொருட்பற்று; impermanence. ***"ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும் மலையுடைக் கான நீந்தி நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசினோரே"*** **(குறுந்.350.).**

*[ நிலையா + பொருட்பிணி]*

**நிலையாமை** *nilaiyāmai,* பெ. (n.) உறுதியாயிராமை; நிலையாயில்லாமை (குறள்,அதி.34.). instabilily, as of riches; transitoriness. **2.** உறுதியின்மை (யாழ்.அக.); fickleness, wavering.

*[நிலை + ஆ + மை.]*

ஆ– எதிர்மறை இடைநிலை.

நிலையாமையாவது, நிலவுலகத்தில் தோன்றும் அறுவகையுயிர்களும் பிறிதோருயிராற் கொல்லப்படாவிடத்தும், எப்பருவத்தும் பிணியாலும், பிணியில்லாது வாழ்நாள் நீடினும் தத்தம் இனத்திற்குரிய கால வெல்லையில் மூப்பாலும், ஒருவகை யானும் தடுக்கப்பெறாது தம்முடம்பினின்று நீங்கி

நிலையாமற்போதல். மயக்கத்தினால் தானென்று நினைத்திருக்கின்ற யாக்கையும் தனதென்று நினைத்திருக்கின்ற பொருளும் நிலை நில்லாமை (குறள். மணக்குடவர். அதிகார, முன்னுரை.).

நிலையாமை மூன்று வகைப்படும், செல்வநிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என (குறள்,332. மணக்குடவர் உரை.).

நிலையாமையாவது அறம், பொருள், இன்பம், இளமை, யாக்கை, உயிராதி நிலையாமை (வீரசோ.100.).

தோற்றம் உடையனயாவும் நிலையுதல் இலவாம் தன்மை (குறள், அதிகாரம்– 34. அதிகார, முன்னுரை.).

**நிலையாவாரை** *nilai-y-āvārai,* பெ. (n.) நிலாவாரை பார்க்க; *see nilā-vārai.* (சா.அக.)

*[நிலாவரை → நிலையாவரை.]*

**நிலையாள்** *nilai-y-āḷ,* பெ. (n.) நிலைத்த வேலையாள்; பதிவான பணியாள்; permanent servant. "*நிலையாள் என்றுகாட்டி*" (தெ.க.தொ.11:140.).

*[நிலை + ஆள். நில் → நிலை.]*

**நிலையாற்றல்** *nilai-y-āṟṟal,* பெ. (n.) செயல்திறன் மிக்க ஆற்றல்; potential energy.

*[நிலை + ஆற்றல்.]*

**நிலையாறு–தல்** *nilai-y-āṟṟal-,* 4 செ.கு.வி. (v.i.) அமைதியுறுதல்; to be pacified. "*வானவருநின்று நிலையாறினார்கள்*" (கம்பரா.மூலபல.155.).

*[நிலை + ஆறு–,]*

**நிலையிடு–தல்** *nilai-y-iḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) **1.** நிலைநிறுத்து–, பார்க்க; *see nilai niruttu-,* "*மால்சமயத்தை மண்மேல் நிலையிட்ட*" (இருசமய.கடவுள்வாழ்த்து.2.). **2.** அளந்தறிதல்; to determine, measure. "*நிலங்க டாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்*" (கம்பரா.அயோத்தி.மந்திரப்.60.).

*[நிலை + இடு–,]*

**நிலையியற்பொருள்** *nilai-y-iyaṟ-poruḷ,* பெ. (n.) நிலைத்திணை (நன்.259. உரை.) பார்க்க; *see nilai-t-tiṇai.*

*[நிலை + இயற்பொருள்.]*

**நிலையில்லாமை** *nilai-illāmai,* பெ. (n.) உறுதியின்மை, திண்ணமிலாநிலை, ஐயப்பாட்டு நிலை; uncertainty.

*[நிலை + இல்லாமை.]*

**நிலையிலாச்சம்** *nilaiyilāccam,* பெ. (n.) வரகு நாற்றங்கால் (யாழ்.அக.); seed-bed where ragi in sown.

*[நிலை + இலாச்சம்.]*

**நிலையின்மை** *nilai-iṉmai,* பெ. (n.) *நிலையில்லாமை* பார்க்க; *see nilai-y-illāmai.*

*[நிலை + இன்மை.]*

**நிலையீடு** *nilai-y-īḍu,* பெ. (n.) ஒன்றின் நிலைபற்றிய மதிப்பீடு; *estimation, valuation.*

*[நிலையிடு → நிலையீடு .]*

**நிலையுடைக்கட்டை** *nilai-y-uḍai-k-kaṭṭai,* பெ. (n.) முளையாணி (வின்.); pivot.

*[நிலை + உடை + கட்டை.]*



**நிலையுடைமை[1]** *nilai-y-uḍaimai,* பெ. (n.) **1.** தகுதிப்பாடு; quality. **2.** உறுதிப்பாடுடைமை; certainty, stability.

*[நில் → நிலை + உடைமை.]*

**நிலையுடைமை[2]** *nilai-y-uḍaimai,* பெ. (n.) எண் (சூளா.நி.8:40.); number.

*[நில் → நிலை + உடைமை.]*

**நிலையுதல்** *nilaiyudal,* பெ. (n.) நிலை பெறுகை; being stable or permanent. ***'தோற்ற முடையனயாவும் நிலையுதலிலவாந் தன்மை'*** (குறள், அதி. 34, அவதா.).

*[நில் → நிலை → நிலையுதல்.]*

**நிலையுமல்** *nilai-y-umal,* பெ. (n.) தொம்பை (யாழ்ப்.); a large basket for grain, kept stationary.

*[நில் → நிலை + உமல். உம் → உல் = ஓலைப்பை, ஓலைக் கூடை அது போன்றமைந்துள்ள தொம்பை.]*



**நிலையுயர்கடவுள்** *nilaiyuyar-kaḍavuḷ,* பெ. (n.) உயர்ந்தகடவுள்; a high God. ***"மலைமகள் மகனை நின் மதிநுதன் மடவரல் குலமலை யுறைதரு குறவர்தம் மகளார் நிலையுயர் கடவுணின் னிணையடி தொழுதேம் பலரறி மணமவர் படுகுவ ரெனவே"*** (சிலப்.24:17.).

*[நிலையுயர் + கடவுள்.]*

**நிலையுரல்[1]** *nilai-y-ural,* பெ. (n.) பெருவிரல்; thumb.

*[நில் → நிலை உல் → உர் → உரல். உல் = குத்துதல், பதித்தல். ஆளறியடை யாளமாகப் பெருவிரல் வரிகையைப் பதிவதால் இப்பெயர் பெருவிரலுக்கு மாயிற்று. குத்துதல்—பதித்தல். கைவரிகை ஆளாளுக்கு மாறுவது மட்டுமின்றி வாணாளிறுதி வரை மாறாத்தன்மையது என்பதும் கருத்திற் கொள்ளத்தக்கது.]*



**நிலையுரல்²** *nilai-y-ural,* பெ. (n.) நிலத்திற் புதைத்து வைக்கும் பெரியவுரல் (யாழ்.அக.) a large mortar, often junk in the ground.

**தெ.** நிலவுரோலு.

*[நிலை + உரல்.]*

*[நில் →நிலை. உல் → உர் → உரல் உல் = குத்துதல்.]*



**நிலையுருக்காண்(ணு)—தல்** *nilai-y-uru-k-kāṇ(ṇu)-,* 11 செ.கு.வி. (v.i.) பதிவுக்குறிப்பில் உள்ளபடி பண்டங்களை எண்ணிக் கணக்கிடுதல்; to check and verify the stock account. ஸ்ரீபண்டாரஞ் சோதிச்சு ஸ்ரீபண்டாரப் பொத்தகப் படி நிலையுருக்கண்டு (தெ.க.தொ.7:447.).

*[நில்→ நிலை = பதிவு. உல் = தோன்றுதல் உல் → உர் → உரு. நிலை + உரு + காண்.]*

**நிலையுறுதி** *nilai-y-urudi,* பெ. (n.) இடஉறுதிப்பாடு; ஓரிடத்திற் பொருத்தப்பட்ட பொருள்; இணைத்துக்கட்டப்பட்ட பொருள் பந்தயத்திட்டம் செய்யப்பட்டுள்ள காலம்; fixture. எந்தக் கட்சியுடனும் கூட்டணியில்லை என்ற நிலையுறுதியைத் தலைவர் இப்போது தளர்த்தி விட்டார். (உ.வ.).

*[நிலை + உறுதி.]*

**நிலையூன்று—தல்** *nilai-y-ūṉṟu-,* 14 செ.கு.வி. (v.i.) **1.** உறுதிப்படுதல்; to obtain a firm footing, become firmly settled in a place. **2.** மரமுதலிய வேரூன்றுதல்; to become firmly. rooted, as a tree.

*[நிலை + ஊன்று. நில்→நிலை.உவல் → (உவன்று) → ஊன்று—,]*

**நிலையெடு—த்தல்** *nilai-y-eḍu-,* 4 செ.கு.வி (v.i.) பெருமை பெற்று விளங்குதல்; to be in the zenith of one's fame. "*நிலையெடுத்து நெடுநிலத்து நீயிருக்க*" (கம்பரா. சூர்ப்பநகை.101.)

*நிலை + எடு—,*

*[நில் → நிலை. உல் → எல் → எள் → எடு = மேலெடு, தூக்கு, வெளிப்படுத்து, நீங்கு, விளங்கு,ஒளிவிடு, ]*

**நிலைவரம்** *nilaivaram,* பெ. (n.) **1.** நிலைபேறு; permanence, firmness. **2.** உறுதி; certainty, assurance, sureness. "*வானகம் புகுவது நிலைவரம்*" (இராமநா. அயோத்.16.). **3.** நிலைமை; state, condition, circumstances.

**தெ.** நிலவரமு.

*[நில்→ நிலை → நிலை+வரம்.]*

**நிலைவரி** *nilai-vari,* பெ. (n.) இசைப்பாட்டு வகை; a kind of song. "*முகமுமுரியுந் தன்னோடு முடியும், நிலையை யுடையது நிலையெனப்படுமே.*" (சிலப்:7:13. உரை)

*[நிலை + வரி]*

**நிலைவரிச்செய்யுள்** *nilai-vari-c-ceyyuḷ,* பெ. (n.) நிலைவரி பார்க்க; see nilai-vari.

*[ நிலைவரி + செய்யுள்]*

**நிலைவாகை** *nilaivāgai,* பெ. (n.) செடிவகை; tinnevelly senna.

*[நிலை + வாகை]*

**நிலைவிடு–தல்** *nilai-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மனைக்கு வாயில்நிலை அமைத்தல் (இ.வ.); to set up the door-frame of the main entrance of a house in construction.

*[நிலை + விடு–.]*

நில் → நிலை – கதவுநிலை.

**நிலைவிளக்கு**[1] *nilai-viḷakku,* பெ. (n.) குத்துவிளக்கு; lamp fixed to a stand, as in front of a temple. "*நிலைவிளக்கு..... கிடந்திலங்கும்*" (திருவிசை.கருவூர்த்.7.5.).

*[நிலை + விளக்கு.]*

நில் → நிலை = நிற்கை. விள் – (ஒண்மைக் கருத்துவேர்) விள் – விள – விளங்கு – விளக்கு (வே.க.3:135.).



**நிலைவிளக்கு**[2] *nilai-viḷakku,* பெ. (n.) சட்டவிளக்கு; lamp fixed to a stand. as in front of a lemple.

*[நில் → நிலை = கதவுநிலை. நிலை + விளக்கு.]*



**நிவ**[1]**–த்தல்** *niva-,* 12 செ.கு.வி. (v.i.) 1. உயர்தல்; to rise; to be elevated; to become high. "*மாக்கட னிவந் தெழுதருஞ் செஞ்ஞாயிற்றுக் கவினை*" (புறநா.4.). 2. வளர்தல்; to grow. "*ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்*" (கலித்.56.). 3. படர்தல்; to spread. "*பைங்கறி நிவந்த பலவி னீழல்*" (சிறுபாண்.43.). 4. மேலாதல்; to be exalted, distinguished. "*நிலமகள் கணவன் வேந்தர் குழாத்திடை நிவந்திருந்தான்*" (சீவக.2566.). 5. மேல்வழிதல்; to swell, overflow inundate. "*நிவந்தது நீத்தம்*" (பரிபா.12:34.). 6. தோன்றுதல்; to appear, occur, arise. "*உண்ணிவந்த கருத்து முணர்ந்தனன்*". (கம்பரா. நகர்நீங்கு.229.).

க. நெகபு.

**நிவ**[2]**–த்தல்** *niva-,* 12 செ.கு.வி. (v.i.) ஓடுதல்; to run. "*புள்ளுறவு வொசிந்த பூமயங் கள்ளற் கழிச்சுரம் நிவக்கும் இருஞ்சிறை இவுளி*" (நற்.63.).

**நிவ**[3]**–த்தல்** *niva-,* 12 செ.குன்றாவி. (v.t.) நீரின்மேலே வருதல்; to come upon water. "*இருஞ்சேற்றீரளை அலவள் நிவப்ப வழங்குநர் இன்மையிற் பாடான்றன்றே*" (அகநா.350.)

**நிவக்கும்** *niva-k-kum,* வி.எ. (adv.) உயர்ந்த, to be high. "பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்" (குறுந்.9.). "கான யானை கைவிடு பசுங்கழை மீனெறி தூண்டிலின் நிவக்கும்" (குறுந்.54.).

*[நிவ → நிவக்கும்.]*

**நிவகம்** *nivagam,* பெ. (n.) கூட்டம் (உரி. நி.); company, multitude, assembly, flock.

**நிவந்து** *nivandu,* வி.எ. (adv.) உயர்ந்து; high *"என்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற் கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி நிவந்தாங் கொருமுழ நீணிலை நீங்கிப் பவுந்தரு பாசங் கவுந்தி கெடுகென்" (சிலப்.10:208.).*

*[நிவ → நிவந்து]*

**நிவந்தோங்குயர்** *nivan-tōṅguyar,* வி.எ (adv.) மிக ஓங்கி வுயர்ந்த; to be high. to be very highly. *"பயந்தோளிடுக்கண் களைந்த புள்ளின் நிவந்தோங்குயர்கொடிச் சேவலோய்"* (பரிபா 3:17.). *"நிவந்தோங் கியமத்து நீலப்பைஞ்சுனைப் பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்"* (பரிபா.5:48.).

*[நிவந்து + ஓங்கு + உயர்.]*

ஒருபொருட்பன்மொழி

**நிவப்பு** *nivappu,* பெ. (n.) புகழ்; repute. *"புகழ், சிறப்பு புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின் பொதியிற் றென்றல் போடிலா தீங்கு மதுரைத் தென்றல் வந்தது காணீர்"* (சிலப்.13:130.). *"உயர்ச்சி மலைகண்டன்ன நிலைபுணர் நிவப்பின்"* (நற்.60.).

**நிவப்புத்தூக்கு** *nivappu-t-tūkku,* பெ. (n.) ஐஞ்சீருள்ள இசைப்பாட்டு (சிலப். 3:16. உரை.); a stanza of five feet.

*[நிவ → நிவப்பு + தூக்கு.]*

*"ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் துணிபு நாற்சீர் கோயில், ஐஞ்சிர் நிவப்பா மறுசீர் கழாஅலே எழுசீர் நெடுந்தூக் கென்மனார் புலவர்"* (சிலம்பு3:16. உரை.)

எழுவகைத்தூக்கு:

1. செந்தூக்கு.
2. மதலைத்தூக்கு.
3. துணிபுத்தூக்கு.
4. கோயிற்றூக்கு.
5. நிவப்புத்தூக்கு.
6. கழாற்றூக்கு.
7. நெடுந்தூக்கு.

**நிவம்** *nivam,* பெ. *(n.)* தோண்மேல்; (நாமதீப.583.); top of th shoulder

*[நிவ → நிவம்]*

**நிவர்—தல்** *nivar.* 2 செ.கு.வி, (v.i.) ஓங்குதல்; (திவ். இரண்டாந்.திருவந்.78.). to highly.

*[இவர் → நிவர்–,]*

**நிவர்த்ததாளம்** *nivartta-taḷam,* பெ. (n.) ஒன்பது தாளத்தொன்று (பரத.தாள.6.); a variety of time-measure, one of nava-taḷam, (q.v.).

**நிவரை** *nivarai,* பெ. (n.) கன்னி (யாழ்.அக.); a maiden

*[நவரை → நிவரை; நவரை= இளமை; நுகு → நாகு = இளமை; நுகு → நுரு → நறு → நாறு → நாற்று. நாற்று= இளம்பயிர். நகு → நவ → நவரை → நிவரை.]*

**நிவறு—தல்** *nivaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பொடியாதல் (அக.நி.); to be powdered. **2.** மொய்த்தல் (சது.); to swarm, gather thick.

*[நீறு → நிவறு*
*நீறு = பொடி*
*நீறுதல் = பொடியாதல்.]*

**நிவா** *nivā,* பெ. (n.) நடுநாட்டிற் செல்லுமோ ராறு; a river in naḍunāḍu. "*பெருநீர் நிவாபுந்தி*" (திவ்.பெரியதி.3.2.9.).

*[நிவ + ஆ.]*

**நிவி** *nivi,* பெ. (n.) மாமரம் (சங்.அக.); mango tree,

**நிழத்து¹—தல்** *niḻattu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** முன்னுள்ள நிலையினின்றும் நுணுகுதல் (தொல்.சொல்.330.); to ware, decrease; to be reduced. "*நிலவரையல்ல னிழத்த*" (பரிபா.10.3.).

*[நில் → நில → நிழல் → நிழற்று — நிழற்று + நிழத்து—,]*

**நிழத்து²—தல்** *niḻattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** தின்றழித்தல்; to reduce. as by eating. "*வாய்மடுத் திரும்புன நிழத்தலின்*" (குறிஞ்சிப்.157.). **2.** இல்லையாக்குதல்; to cause to disappear; to lose; to be deprived of. "*அருவி மாமழை நிழத்தவும்*" (பொருந.235.).

*[நில் → நில → நிழல் → நிழற்று → நிழத்து.]*

**நிழல்¹—தல்(நிழற்றல்)** *niḻal-,* 3 .செ.கு.வி. (v.i.) **1.** சாயை வீழ்த்தல்; to cost shadow; to shadow. '*வண்டுந் தேன்களு நிழன்றுபாட*' (சீவக.1270.). **2.** காப்பாயமைதல்; to give shelter. '*ஏரோர்க்கு நிழன்ற கோலினை*' (சிறுபாண்.233.). **3.** ஒளி செய்தல்; to shine. '*நெய்த்தலை கருங்குழ னிழன்று*' (சீவக.1101.). **4.** படிவடிவிடுதல்; (பிரதிபலித்தல்) (வின்.); to be reflected, as an image.

*[நுல் → நெல் → நில் → நில → நிழல்]* (வே.க.3:22.).

**நிழல்²** *niḻal,* பெ. (n.) ஒளி; light. "*நிழன் மணி*" (சீவக.321.). '*நிழல் கானெடுங்கனின்ற மன்றமும்*' (சிலப் 5:127.).

*[நில் → நிழ → நிழல்.]*

**நிழல்³** *niḻal,* பெ. (n.) **1.** சாயை; shade, shadow. "*நாணிழற் போல*" (நாலடி,166.). **2.** படிவடிவம் (பிரதி பிம்பம்); image, reflection, as in a mirror. "*நிழனோக்கித் தாங்கல் மகிழ்தூங்கி*" (சீவக.2790.). **3.** அச்சு (வின்.); type, representation, counterpart. **4.** ஒளி; lustre. "*நிழல்கா னெடுங்கல்*" (சிலப்.5:127.). **5.** குளிர்ச்சி (சூடா.); coolness. **6.** அருள்; grace, favour, benignity. "*தண்ணிழல் வாழ்க்கை*" (பட்டினப்.204.). **7.** நயன்மை; (பிங்.); justice. **8.** புகலிடம்; protection, asylum, refuge, **9.** இடம் ; place. "*நீரு நிழலும்*" (நல்வழி.21.). **10.** இடம் (சூடா.); wealth, prosperity, affluence. **11.** மரக்கொம்பு (அக.நி.); branch of a tree. **12.** நோய் (அக.நி.); disease, ailment. **13.** பேய்; devil.

**ம.** நிழல், நிழலிக்க (எதிர்ஒளி வருதல்); **க.** நெழல், நெரள், நெள்ளு; **தெ.** நிட; **து.** நெரெளு, கிரெளு; **கோத.** நொல்; **து.** நெச்; **குட.** நெள; **கொலா.** நீண்ட; **நா.** நீண்ட; **பா்.** நீளு; **கட.** நிகா்; **கோண்.** நிரா; **பட.** நாலு.

*[நுல் → நில்→நில→நிழல் (வே.க.3:22.).]*

**நிழல்⁴** *nil̲al,* பெ. (n.) பேய்; devil.

*[நில் → நிழல் = சாயை, பேய்.]*

**நிழல்கான்மண்டிலம்** *nil̲al-kāṉ-maṇḍilam,* பெ. (n.) கண்ணாடி; mirror, as having a reflecting surface. "*நிழல்கான் மண்டிலந் தம்மெதிர் நிறுத்தி*" (சிலப்.28:30.).

*[நிழல் + கால் + மண்டிலம்.]*

**நிழல்நாவல்** *nil̲al-nāval,* பெ. (n.) நிழனாவல் பார்க்க; *see nil̲aṉāval*

*[நிழல் + நாவல்.]*

**நிழல்விழு–தல்** *nil̲al-vil̲u-,* 2 செ.கு.வி. (v.i.) நிழல்வீசுதல்; to cast a shadow, to shade.

*[நிழல் + விழு–,]*

**நிழலடங்கும்பொழுது[1]** *nil̲al-aḍaṅgum-pol̲udu,* பெ. (n.) 1. உச்சிப்பொழுது; noon. 2. கதிரவன் தோற்றத்திற்கு முற்பொழுது; வைகறை.

*[நிழல் + அடங்கும் + பொழுது.]*

தன் நிழல் தன் காலடியிலேயே அடங்கும் நேரம்.

**நிழலடங்கும்பொழுது[2]** *nil̲al-aḍaṅgum-pol̲udu,* பெ. (n.) மாலையந்தி; dusk.

*[நிழல் + அடங்கும் + பொழுது]*

நிழல் = ஒளி, வெளிச்சம். வெளிச்சம் அடங்கும் மாலைநேரம்.

**நிழலாட்டப்பாவை** *nil̲al-āṭṭa-p-pāvai,* பெ. (n.) தோற்பாவைக்கூத்து (நாடகத்தமிழ். பக்.9.); puppet show.

*[நிழல் + ஆட்டம் + பாவை.]*

**நிழலாட்டம்[1]** *nil̲al-āṭṭam,* பெ. (n.) 1. ஆள் நடமாடுவதால் ஏற்படும் நிழலின் அசைவு; movement of a person's shadow. '*குறுவிழிக்கொண்டு வந்தார்போனார் நிழலாட்டம் பார்த்துக்கொண்டு கிடக்கையிலே*' (திவ்.பெரியாழ்.2.5.3.வ்யா. பக்.340.). 2. புகைப் படங்களின் அசைவுகளாலமைந்த காட்சி; cinema. 3. தோற்பாவையாட்டம்; a kind of puppet show.

*[நிழல் + ஆட்டம்.]*

*[நுல் → நில் → நில → நிழல். ஆடு – ஆட்டம். ஆடுதல் – அசைதல். ஆடு + அம் – ஆட்டம். அம்– சொல்லாக்க ஈறு.]*

**நிழலாட்டம்[2]** *nil̲al-āṭṭam,* பெ. (n.) 1. மங்கினபக்கம் (வின்.); shade in painting. 2. மாதிரி (வின்.); typical representation. 3. மெய்ம்மையற்றது (வின்.); a mere phantom.

*[நிழல் + ஆட்டம் .]*

*[நுல் → நில் → நில → நிழல். அண் → அட்டு – நெருங்கியிருத்தல் ஒத்திருத்தல், ஒத்திருக்குந்தன்மை. அட்டு → ஆட்டு → ஆட்டம் – போன்றிருத்தல், ஒத்திருத்தல்.]*

**நிழலாடு[1]–தல்** *nil̲al-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) தெளிவின்றித் தோன்றுதல்; to appear vaguely; to be overshadowed by something. *வற்கடத்தால் மக்கள் படப்போகும் துன்பம் என்கண்முன் நிழலாடியது. (உ.வ.). சோகம் நிழலாடும் முகம் கண்டேன். (உ.வ.).*

*[நில் → நிழல் + ஆடு–,]*

**நிழலாடு[2]–தல்** *nil̲al-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. எதிரொளித்தல் (பிரதிபலித்தல்); to be reflected. 2. படிவடிவம் (பிரதிபிம்பம்) தோன்றுமாறிருத்தல்; to be reflective, as a

surface. *சுவர் நிழலாடுகிறது.* (உ.வ.). **3.** நிழல்மட்டும் தெரியும்படி பார்வை குன்றுதல்; to be dim in sight, as eyes. *கண் நிழலாடுகிறது.* *(உ.வ.).*

*[நிழல் + ஆடு –.]*

**நிழலி** *nilali,* பெ. (n.) **1.** ஒளி (திவா.); lustre; light. **2.** நயன்மை (பிங்.); virture, morality. **3.** காற்று (பிங்.); wind. **4.** நோய் (சூடா.); disease.

*[நிழல் → நிழலி.]*

**நிழலிடாவிளக்கு** *nilalitdā-vilakku,* பெ. (n.) நிழலிடாத முகிழ்விளக்கு; astral lamp.

*[நிழல் + இடா + விளக்கு.]*

**நிழலிடு–தல்** *nilal-idu-,* 20 செ.கு.வி. (v.i.) **1.** நிழலைக் கொடுத்தல்; to cast a shadow; to shade. **2.** எதிரொளித்தல் (பிரதிபலித்தல்) (வின்.); to be reflected. **3.** ஒளிவிடுதல்; to throw light or lustre. *"நிழலிடு குண்டலம்" (கம்பரா.மிதிலைக்.43).*

*[நிழல் + இடு–,]*

**நிழலு–தல்** *nilalu-,* 3 செ.கு.வி. (v.i.) *நிழல்²–* பார்க்க; see *nilal-,*

*[நிழல் –, → நிழலு–,]*

**நிழலுலர்த்தல்** *nilal-ularttal,* பெ. (n.) நிழலில் மருந்து முதலியவைகளை உலர வைக்கை; drying in the shade, as medicines. *வெள்ளைத் துணியை வெளுத்து நிழலுலர்த்தலாக உலர்த்தினால் மங்காமல் இருக்கும்.* *(உ.வ.).*

*[நிழல் + உலர்த்தல்.]*

**நிழலொதுக்கு** *nilal-odukku,* பெ. (n.) இளைப்பாறுதற்குரிய நிழலிடம் (யாழ்.அக.); shade cover or retreat.

*[நிழல் + ஒதுக்கு.]*

*[நில் → நில → நிழல். ஒதுக்கம் → ஒதுக்கு. ஒதுக்கம் = இடம்.]*

**நிழலோடுதல்** *nilal-ōdudal,* பெ. (n.) **1.** நிழல் நீளுகை; lengthening of a shadow. **2.** கதிரவன் மறைவு நெருங்குகை; approach of sunset.

*[நிழல் + ஓடுதல்/]*

கதிரவன் மறையுங்காலத்து, தரையில் பொருளின் நிழல் உச்சமாய் நீண்டிருக்கும். அதனையே நிழலோடுதல் என்றனர். (ஓடுதல்–நீளுதல்.)

**நிழற்குடை** *nilar-kudai,* பெ. (n.) (போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் காவலருக்கு அல்லது நிறுத்தத்தில் காத்திருக்கும் பயணிகளுக்கு) நிழல் தருவதற்காக வட்டமான அல்லது நீள் செவ்வகக் கூரையுடைய அமைப்பு; shelter (for the traffic police or for the passengers at a bus stop.).



**நிழற்கூத்து** *nil̠ar̠-kūttu,* பெ. (n.) பாவையின் நிழலைத் திரையில் விழச் செய்து நடத்தும் ஆட்ட வகை; *shadow play.*

*[நிழல் + கூத்து.]*

**நிழற்சரிவு** *nil̠ar̠-šarivu,* பெ. (n.) **1.** நிழலின் சாய்பு; declining of a shadow. **2.** சாயுங்காலம்; evening.

*[நிழல் + சரிவு.]*

**நிழற்சாய்ப்பு** *nil̠ar̠-šāippu,* பெ. (n.) நிழலொதுக்கு (வின்.) பார்க்க; *see nil̠al-odukku.*

*[நிழல் + சாய்ப்பு.]*

**நிழற்சாய்வு** *nil̠ar̠-šaivu,* பெ. (n.) நிழலொதுக்கு (திவ்.திருநெடுந்.6.வியா.) பார்க்க; *see nil̠al-odukku.*

*[நிழல் + சாய்வு.]*

**நிழற்சுருங்கி** *nil̠ar̠-surungi,* பெ. (n.) பூடுவகை; (அபி.சிந்.1480.); a kind of plant.

*[நிழல் + சுருங்கி.]*

**நிழற்செய்–தல்** *nil̠ar̠-cey-,* **1.**செ.கு.வி. (v.i.) **1.** சாய்கை விழுதல்; நிழற்படுத்தல்; being in the shade, as in jurious to plants. **2.** மந்தாரம் போடுதல்; to be clouded to rain.

*[நிழல் + செய்–,]*

**நிழற்படக்கருவி** *nil̠ar̠pada-k-karuvi,* பெ. (n.) நிழற்படமெடுக்கும் கருவி; camera.

*[நிழற்படம் + கருவி.]*



**நிழற்படச்சுருள்** *nil̠ar̠pada-c-curul,* பெ. (n.) நிழற்படமெடுக்க உதவும் படச்சுருள்; film roll.

*[நிழற்படம் + சுருள் ]*



**நிழற்படத்தாள்** *nil̠ar̠-pada-t-tāl,* பெ. (n.) நிழற்படச் சுருளில் பதிவு செய்த காட்சியைப் படமாகஆக்கப் பயன்படும் ஒருவகைத் தாள்; paper used for printing the image from the negative.

*[நிழற்படம் + தாள் .]*

**நிழற்படம்** *nil̠ar̠-padam,* பெ. (n.) ஒருகாட்சி யிலிருந்து அல்லது உருவத்திலிருந்து வரும் ஒளியை ஆடிகள் பொருத்தப்பட்ட ஒரு கருவியின் மூலம் புகைப்படச் சுருளில் பதிவு செய்து வேதியியல் மாற்றங்களுக்கு உள்ளாக்கிப் படியெடுக்கப்படும் படம்; photograph.

*[நிழல் + படம் .]*

புகைப்படம் என்று முன்னர் மொழி பெயர்க்கப்பட்ட நிழற்படம் இக்கால் ஒளிப்படம் என்று பெயர்த்துரைக்கப் படுவது செம்மைவடிவமாகும்.

**நிழற்பயிர்** *nil̲ar̲-payir,* பெ. (n.) நிழற்கீழ் விளையும் பயிர் (இ.வ.); crops growing in the shade of trees.

*[நிழல் + பயிர் .]*

**நிழற்பாடு** *nil̲ar̲-pāḍu,* பெ. (n.) நிழல் படுகை (யாழ்ப்.); being in the shade as injurious to plant.

*[நிழல் + பாடு*

நில்→நில→நிழல்.

படு→ஆடு*]*

நிழலில் பயிர் வளர்ந்து பயன் தருவதில்லை. அத்தகைய நிழல் விழும் பகுதியை விளை நிலத்தின் நிழற்பாடு என்றழைப்பர்.

**நிழற்பாவை** *nil̲ar̲-pāvai,* பெ. (n/) திரைச் சீலையில் சாயல் விழும்படி வைத்து ஆட்டும் பாவை (வின்.); திரைச் சீலைக்குள் விட்டாட்டும் பாவை; puppet whose image is projected on a screen.

*[நிழல் + பாவை .]*

**நிழற்பிடி—த்தல்** *nil̲ar̲-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *நிழற்படு—தல்* பார்க்க; *see nil̲ar̲-paḍu-,*

*[நிழல் + பிடி —, ]*

**நிழற்போடு—தல்** *nil̲ar̲pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நிழலிடு— பார்க்க; *see nil̲aliḍu-,*

*[நிழல் + போடு —, ]*

*போக்கு→போடு.*

**நிழற்றல்¹** *nil̲ar̲r̲al,* பெ. (n.) நிரம்பா மென்சொல் (திவா.); lisping, as of children.

*[ மிழற்று → நிழற்று → நிழற்றல் . ]*

அல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நிழற்றல்²** *nil̲ar̲r̲al,* பெ. (n.) நிழல் விழச்செய்தல்; to shade.

*[நிழ → நிழற்றல்.]*

இது பிறவினை வடிவம்.

**நிழற்றாங்கல்** *nil̲ar̲r̲āṅgal,* பெ. (n.) பந்தல் (நாஞ்.); a temporary shed; a pandal.

*[நிழல் + தாங்கல். ]*

**நிழற்று¹—தல்** *nil̲ar̲r̲u-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஒளிவிடுதல்; to shed radiance. *"பசும்பொ னவிரிழை பைய நிழற்ற"* (ஐங்குறு. 74.).

*[நிழல் → நிழற்று —, ]*

**நிழற்று²—தல்** *nil̲ar̲r̲u-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நிழற்செய்தல்; to shade. *"கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்"* (புறநா. 9.). 2. காத்தளித்தல் (வின்.); to protect, defend. 3. மணி முதலியன அடித்தல்; to ring as bells. *"நெடுநா வொண் மணி நிழற்றிய நடுநாள்"* (முல்லைப். 50.).

*[நிழல் → நிழற்று —, ]*

**நிழற்று³—தல்** *nil̲ar̲r̲u-,* 5 செ.குன்றாவி. (v.t.) அடங்குதல் (முல்லை. 50. உரை.); to be still, calm.

*[நிழல் → நிழற்று—, ]*

**நிழறு—தல்** *ni̱la̱ru-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஒளிவிடுதல்; to shine. *"திண்சக்கர நிழறு தொல்படையாய்"* (திவ். திருவாய். 6. 2. 5.).

*[ நிழல் → நிழலு—, → நிழறு—, ]*

**நிழன்ற** *ni̱la̱ṉra,* வி.எ. (adv.) நிழல் செய்த; to make a shade.

*[ நிழல் → நிழன்ற ]*

**நிழனாவல்** *ni̱la̱ṉāval,* பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a kind of shurb.

*[ நிழல் + நாவல் .]*

**நிற்க** *ni̱ṟka* வியங்.வி. (opt.v.) **1.** இயங்கிக் கொண்டிருக்கிற அல்லது நடந்து கொண்டிருக்கின்ற ஒருவரை நிற்க வைக்கக் கூறும் ஏவற் சொல்; a word used to stop the person, who walking or doing. ***2.*** அமர்ந்திருக்கிற ஒருவரையோ பலரையோ நோக்கி எழச் சொல்லும் ஏவற்சொல்; a word used to stand up the person, who in sitting down. ***3.*** போக்குவரத்தைக் கட்டுப்படுத்தும் காவல்துறையினர் கையில் காட்டிநிறுத்தும் வட்டப்பலகையில் எழுதியிருக்கும் சொல்; a word on the sound board used to show and control by the traffic police man. **4.** (மடலில்) ஒரு செய்தி முடிவடைந்து அடுத்தது தொடங்குகிறது என்பதைத் தெரிவிக்கப் பயன்படும் சொல்; a connective used mostly in letters to indicate the ending of a subject and the beginning of another. நீ சேலம் சென்று சேர்ந்திருப்பாய். நிற்க. இங்கு நேற்று பெய்த பெருமழையில் ஆற்றில் வெள்ளம் கரை புரண்டு ஓடியதால் நமது ஊர் ஏரி நிறைந்துவிட்டது. **5.** ஒழுகுதல்; behavior. *'கற்றபின் நிற்க அதற்குத்தக'* (குறள்.391)

*[ நில்→ நிற்க. ]*

**நிற்காங்கு** *ni̱ṟkāṅgu,* பெ. (n.) நிருவாலி பார்க்க; *see niruvāli.* (சா.அக.).

**நிற்குண்டி** *ni̱ṟkuṇḍi,* பெ. (n.) நொச்சி மரம் (தைலவ. தைல. 16); stalked leafiet chaste tree.

**நிற்கை** *ni̱ṟkai,* பெ. (n.) நிற்றல் (பழமலை யந்தாதி); standing.

*[ நில்→ நில்கை= நிற்கை ]*

**நிற்ப** *ni̱ṟpa,* பெ. (n.) (உலகப் பிறப்பிரு வகையுள்) மரஞ்செடி கொடிகளாக நிற்பன; immovable as the vegetable kingdom.

*[ நில் – நிற்பன – நிற்ப. கடைக்குறை. ]*

நிலைத்திணை, இயங்குதிணை எனுமி ரண்டனுள் இயங்காது ஓரிடத்து நின்று வளர்ந்து மடியும் நிலைத்திணையைக் குறிக்கும் சொல்.

**நிற்பது** *ni̱ṟpadu,* பெ. (n.) நிலைத்திணை; the immovables, as the vegetable kingdom. *"நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க"* (திருவாச. 3. 53.).

*[ நீள் → நிள் → நில். (வே.க. 3:43.) நில் – இடம் பெயராதிரு. நிற்பது – இடம் பெயராதிருப்பது. ஓரிடத்தில் நிலையாக நிற்பது. ]*

**நிற்பன[1]** *ni̱ṟpaṉa,* பெ. (n.) இயங்காதன; (நிலைத்திணை) immovable. அது மர முதலியன. *"உலகினிடை நிற்பனவு நடப்பனவு நெறியினீந்த"* (இராமா. மாரிசன்வதை. 2.)

*[ நில் → நில்பன → நிற்பன. ]*

**நிற்பன[2]** *nirpana,* பெ. (n.) நிற்ப பார்க்க; see nirpa.

*[ நில்→ நிற்பன ]*

**நிற்பாட்டம்** *nir-pāttam,* பெ. (n.) **1.** நிறுத்துகை (இ.வ.); delay, stop. **2.** நேராக நட்டு வைக்கை; setting up, erecting. **3.** சாரமரத்தில் நாட்டும் கொம்பு (சென்னை); post setup in scaffolding.

*[நீள் → நிள் → நில். நில் → நிற்பு → நிற்பாட்டு → நிற்பாட்டம்.]*

**நிற்பாட்டு[1]-தல்** *nirpāttu,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நிறுத்துதல்; to leave, as an employment; to stop, as a carriage. *இறங்க வேண்டிய நிறுத்தம் வந்துவிட்டது வண்டியை நிற்பாட்டு* (உ.வ.). **2.** காலந் தாழ்த்துதல்; to delay, procrastinate. **3.** நேராக நடுதல் (சென்னை); to setup, erect, as posts in sacffolding.

*[ நிற்பு+ஆட்டு .]*

நீள்→நிள்→நில். நில்→நிற்பு→நிற்பாட்டு (வே.க. 3:46.).

**நிற்பாட்டு[2]** *nirpāttu,* பெ. (n.) நிறுத்துகை; stopping.

*[ நில்→ நிற்பு→ நிற்பாட்டு. ]*

**நிற்பாடு** *nirpādu,* பெ. (n.) நிறுத்துகை; stopping.

*[ நில்→ நிற்பு→ நிற்பாட்டு→ நிற்பாடு. ]*

**நிற்பின்** *nirpin,* வி.எ. (adv.) நின்றால்; same position or condition.

*[ நிற்பு → நிற்பின். ]*

**நிற்பு** *nirpu,* பெ. (n.) நிறுத்திவைப்பு; ceasing, stopping.

*[ நில் →நிற்பு (வே.க. 3:46.). ]*

**நிற்றம்** *nirram,* பெ. (n.) நிலைப்பு; standing, staying.

*[ நில் →நிற்றம் .]*

ஒ.நோ. வெல்→ வெற்றம்.
கொல் →கொற்றம் (வே.க. 3:46.).

**நிற்றல்[1]** *nirral,* பெ. (n.) நிற்கை; staying. *"அவற்றொடு சிவணி நிற்றலு முரித்தே"* (தொல். எழுத்து. 177.).

*[ நில் → நிற்பு = நிற்றல் .]*

ஒ.நோ:

நில் → நிற்றம்.
கொல் →கொற்றம்.
வெல் → வெற்றம்.
நிற்றம் → நிற்றல்.
நில் + தல் – நிற்றல் எனினுமாம்.

**நிற்றல்[2]** *nirral,* பெ. (n.) ஒழிதல்; cease.

*[ நில்+ தல் ]*

**நிற்றல்[3]** *nirral,* பெ. (n.) **1.** நின்று கொண்டிருக்கும் நிலை; standing position இருக்கை (ஆசன) வகை; sitting posture.

நிற்றலிருத்தல் கிடத்த னடத்த லென்
றொத்த நான்கி னொல்கா நிலைமையொ
டின்பம் பயக்குஞ் சமய முதலிய
அந்தமில் சிறப்பினாசன மாகும்.
(சிலப். 14:11. உரை.).

**நிற்றலும்** *nirralum,* வி.எ. (adv.) நித்தலும் பார்க்க *see nittalum.* "குணபத்திரன்றாள் நிற்றலும் வணங்கி" (சூடா. 7. 76.)

*[ நித்தல்→ நிற்றல்→ நிற்றலும் .]*

**நிற்றிகா** *nirriga,* பெ. (n.) சிற்றேலம்; small cardamom. (சா.அக.).

**நிற—த்தல்** *nira-,* 11 செ. கு.வி. (v.i.) 1. நிறம் பிடித்தல்; to take on colour as fruits or leaves to be tinged as flowers. '*நிறத்தகாய்*'. 2. நிறம் முற்றுதல், to deeper in colour. 3. புதுப் பொலிபோடு இருத்தல்; to be distinguished, brilliants to be bright and fresh in appearance. '*சத்துவ குணப் பிறப்பினர் புவிமே னிறத்து வாழ்வது*' (ஞானவா.திதி.1.). 4. பயனளித்தல்: to have effect. நான் செய்ததொன்றும் நிறக்கவில்லை. (உ.வ.).

*[ நில்→ நிற–,]*

**நிறக்கதிர்** *nira-k-kadir,* பெ. (n.) வண்ண மிகுதியுடைய கதிர்; colour ray. '*வானவில் ஏழு நிறக்கதிர்களைக் கொண்டது*'. (உ.வ.).

*[ நிறம் + கதிர் .]*

**நிறக்குமஞ்சள்** *nirakku- mañjal,* பெ. (n.) கப்பு மஞ்சள், பூசு மஞ்சள்; turmeric (சா.அக.).

*[ நிறக்கும் + மஞ்சள் .]*

**நிறக்குருடு** *nira-k-kurudu,* பெ. (n.) குறிப்பிட்ட சில வண்ணங்களை உணரவியலமை; unable to distinguish certain colour: colour- blind.

*[ நிறம் + குருடு.]*

**நிறக்குறியீடு** *nira-k-kuriyidu,* பெ. (n.) வண்ணத்தால் குறிக்கப்படும் ஒரு குழூஉக் குறி; colour code.

*[ நிறம் + குறியீடு. ]*

**நிறக்கேடு** *nira-k-kēdu,* பெ. (n.) புகழ்க் குறைவு; loss of repute. '*இவனோடு சம்பந்திக்கை நிறக்கேடாம்*' (ஈடு, 4. 9. 3.).

*[ நிறம் + கேடு. நிறம் – புகழ். கெடு → கேடு→ அழிவு, குறைவு.]*

**நிறங்குணம்** *niran-gunam,* பெ. (n.) இயல்பு (வின்.); characteristics, traits of character, properties. '*நிறங்குணமறிந்து உறவாடு*' (பழமொழி).

**நிறங்கொடு[1]–த்தல்** *niran-kodu-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. நிறமூட்டுதல்; to tinge, give colour. 2. நிறமுடைத்தாதல்; to be coloured, have a colour. 3. மேனியாதல்; to be sleek, smooth, plump, as a person in health.

*[ நிறம் + கொடு –, ]*

**நிறங்கொடு[2]–த்தல்** *niran-kodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒளிரச் செய்தல்; to give lustre, brilliance, as to an occasion.

*[ நிறம் + கொடு –, ]*

**நிறஞ்சனாதிமூலி** *nirañjanādi -mūli,* பெ. (n.) சிவ துளசி; shivas basil-ocimum hirsutum. (சா.அக.).

**நிறஞ்சோதி** *nirañjōti,* பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric-coscinium fenestratum. (சா.அக.).

*[நிறம் + சோதி.]*

**நிறத்தகண்காரி** *nirattakankāri,* பெ. (n.) குண்டுமணி, குன்றிமணி; wild licorice-abrus precatorius. (சா.அக.).

**நிறத்தகை** *nira-t-tagai,* பெ. (n.) நிறவழகு; handsome body. *"மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோ் ஞாயிற்றோ் நிறத்தகை நளினத்துப் பிறவியை".* (பரிபா. 5:12.).

*[நிறம் + தகை.]*

**நிறநீக்கி** *niranikki,* பெ. (n.) வண்ணம் போக்கி; bleaching powder.

*[நிறம் + நீக்கி.]*

**நிறப்பிறழ்ச்சி** *nira-p-piralcci,* பெ. (n.) வண்ணத்தினால் உண்டாகிற நிலையினின்று விலகுதல்; chromatic aberration.

*[நிறம் + பிறழ்ச்சி.]*

**நிறப்பெயர்ச்சி** *nira-p-peyarcci,* பெ. (n.) நிறம் மாறுகை; change of colour.

*[நிறம் + பெயர்ச்சி.]*

**நிறப்பேதிப்பு** *nira-p-pēdippu,* பெ. (n.) நிறப் பெயர்ச்சி பார்க்க; *see nira-p-peyarcci.*

*[நிறம் + பேதிப்பு.]*

**நிறம்**[1] *niram,* பெ. (n.) **1.** வண்ணம்; complexion., colour. *"நிறங்கொள் கண்டத்து நின்மலன்"* (தேவா. 370:4.). **2.** சாயம்; dye, tincture. **3.** இயல்பு; quality, property, temper, nature. *"விின்னிறவாணுதல்"* (திருக்கோ. 58.). **4.** ஒளி (சூடா.); light, lustre. *"நிறப் பெரும் படைக்கலம்"* (கம்பரா. தைல. 30.). **5.** புகழ்; fame, reputation. *'இவனோடு சம்பந்திக்கை தரமன்று; நிறக்கேடாம்'.* (ஈடு. 4. 9. 3.). **6.** இசை (ஈடு, 2. 6. 11.); harmony in music. **7.** மார்பு; bosom, breast. *"செற்றார் நிறம்பாய்ந்த கணை"* (கலித். 57.). **8.** நடுவிடம்; middle place. *"கடலிற் றிரை நிறஞ்சேர் மத்தின்"* (திருமந். 2313.). **9.** உயிர்நிலை (அக.நி.); vital spot. **10.** உடல்; body. *"மெல்லியலை மல்லற் றன்னிற மொன்றி லிருத்தி நின்றோன்"* (திருக்கோ. 58.). **11.** தோல்; skin. *"புலிநிறக் கவசம்"* (புறநா. 13:2.).

**க.** நெற; **தெ.** நெறனு (மந்தனம்); **து.** நெரவு (ஆண் பிறப்புறுப்பு); **கோண்.** (ஆண் விலங்கின் பிறப்புறுப்பு)

*[நில் → (நிரை) → நிறை = நிறைதல் =நிறைந்திருத்தல். நிறை → நிறம் = வண்ணம் நிறைந்திருக்கும் நிலை.]*

**நிறம்**[2] *niram,* பெ. (n.) **1.** இயற்கையாக அமைந்து அல்லது செயற்கையாக ஊட்டப் பட்டு ஒளியின் உதவியால் கண்ணுக்குத் தெரியும் கறுப்பு, சிவப்பு, மஞ்சள் போன்ற வற்றின் பொதுப் பெயர்; colour. *விலங்கு களுக்கு மாந்தர்களைப் போல் நிற வேறுபாட்டை அறியும் ஆற்றல் இல்லை.* (உ.வ.). **2.** (உடல் நிறத்தைக் குறிக்கையில்) கறுப்பு அல்லாத வெளிர் நிறம்; fair comoplexion. *பெண் நல்ல நிறமாக இருக்கிறாள்.* (உ.வ.).

**நிறம்நீக்குபவர்** *niram-nikkubavar,* பெ. (n.) சாயம் போக்குபவர்; வெளிரச் செய்யும் வண்ண நீக்குபவர்; bleacher.

*[நிறம் + நீக்குபவர்.]*

**நிறம்படுகுருதி** *niram-padukurudi,* பெ. (n.) மார்பிற் வழியும் அரத்தம் blood drawn from the chest. *"நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர் நிறம்படு குருதி நிலம்படார்ந்தோடி"* (நற். 49:10.). *"நிறம்படு குருதி புறம்படி னல்லது"* (நற். 79:16.).

*[நிறம்+ படு+ குருதி.]*

**நிறம்பூசு—தல்** *niṟam -pūsu-,* 5 செ.கு.வி. (v.i.) வண்ணம் பூசுதல்; to apply colour கோயிற் கோபுரத்திற்கு நிறம் பூசும்பணி தொடங்கிய பிறகு குடமுழுக்கு நடத்த நாள் குறித்தல் நலம். (உ.வ.)

*[நிறம் + பூசு—,]*

**நிறம்பெயர்—தல்** *niṟam-peyar-,* 4 செ.கு.வி. (v.i.) நன்னிறமாதல் (வின்.); to improve in colour, become vivid of hue.

*[நிறம் + பெயர் —,]*

**நிறம்போக்கி** *niṟam-pōkki,* பெ. (n.) *நிறநீக்கி* பார்க்க; see *niṟanīkki.*

*[நிறம்+ போக்கி.]*

**நிறம்போடு—தல்** *niṟam-pōḍu-,* 19. செ.குன்றாவி. (v.t.) நிறங் கொடுத்தல்; to tinge, give colour.

*[நிறம் + போடு.]*

**நிறமாலை** *niṟa-mālai,* பெ. (n.) வெண்ணிற ஒளி முப்பட்டகக் கண்ணாடியை ஊடுருவிச் செல்லும் போது ஏற்படும் ஏழு நிறத்தொகுப்பு; spectrum.

*[நிறம் + மாலை.]*

**நிறமானபழத்தி** *niṟamāṉa- paḻatti,* பெ. (n.) மணித்தக்காளி; black berried solanum-solanum nigrum. (சா.அக.).

**நிறமி** *niṟami,* பெ. (n.) (தோல், முடி, இலை முதலியவற்றிற்கு) நிறம் தரும் இயற்கையான நுண்பொருள் அல்லது (பொருளுக்கு) நிறம் கொடுக்கும் நுண்ணிய வேதிப் பொருள்; pigment (which gives something a particular colour).

*[நிறம் → நிறமி.]*

**நிறமேற்று—தல்** *niṟam-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வண்ணமேற்றுதல்; to make colouring.

*[நிறம் + ஏற்று.]*

**நிறவாளத்தி** *niṟa-v-āḷatti,* பெ. (n.) இசையின் ஆலாபனவகை (சிலப். 3. 26. உரை.); an elaboration of musical modes.

*[நிறம் + ஆளத்தி .]*

*[ஆள் + அல் — ஆளல் 'அல்' தொழிற் பெயரீறு. ஆளல் — பாடிப் பாடிப் பழகிப் பண்படுத்திக்கொள்ளுதல். ஆளல் → ஆளத்தி — ஒரு பண்ணை ஆண்டு பாடுவது. ஆளத்தி — பாடிப்பழகி இனிமை மிகுவிக்கப்பட்ட ஓசையழகு.]*

ஆளத்தி செய்யுமிடத்துத் தென்னா வென்றும் தெனாவென்றும் இரண் டிசையுங் கூட்டித் தென்னாதெனா வென்றும் பாடப் படும். இவைதாம் காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தி என மூன்று வகைப்படும். இவற்றுட் காட்டாளத்தி அச்சுடனிகழும் நிறவாளத்தி நிறம் குலையாமற் பாரணை யுடனிகழும். பண்ணாளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும். (சிலப். 3:26. உரை.).

**நிறவெறி** *niṟa-veṟi,* பெ. (n.) மாந்தவினத்தில் சில இனத்தினர் உடல் நிற அடிப்படையில் தங்களை உயர்வானவர்களாகக் கருதிப் பிற நிறத்தவரைத் தாழ்வாக நடத்தும் முனைப்பான போக்கு; racism.

*[நிறம் + வெறி.]*

**நிறவேற்றுமை[1]** *niṟa-vēṟṟumai,* பெ. (n.) *நிற வேறுபாடு [1]* பார்க்க; *see niṟa-vēṟupāḍu.*

*[நிறம் + வேற்றுமை.]*

**நிறவேற்றுமை[2]** *niṟa- vēṟṟumai,* பெ. (n.) மாந்தவினத்தின் நிறத்தைக் கொண்டு உயர்வு தாழ்வு என்று வேற்றுமை கற்பிக்கும் போக்கு; discrimination on the grounds of colour (of skin). ***தென்னாப்பிரிக்காவின் இன ஒதுக்கல் கொள்கை நிற வேற்றுமையின் அடிப்படையில் ஏற்பட்டது.*** (உ.வ.).

*[நிறம் + வேற்றுமை.]*

**நிறவேறுபாடு[1]** *niṟa-vēṟupāḍu,* பெ. (n.) வண்ணங்களின் வேறுபாடு; difference of colour. *விலங்குகளுக்கு நிறவேறுபாடு தெரியாது.* (உ.வ.).

*[நிறம் + வேறு + பாடு.]*

**நிறவேறுபாடு[2]** *niṟa-veṟupāḍu,* பெ. (n.) மாந்தருக்குள் பிறப்பை (நிறத்தை) அடிப்படை யாகக் கொண்டு காணும் வேற்றுமை; racial discrimination; apartheid.

*[நிறம் + வேறுபாடு.]*

**நிறன்** *niṟaṉ,* நிறம்; colour. பெ. (n.) வண்ணம்; colour. ஒன்னார் உடங்குண்ணுங் கூற்றம் உடலே பொன்னேர் பவிரழல் நுடக்கதன் நிறனே (பரிபா. 2:51.).

[நிறம் – நிறன்.]

ம்–ன்–கடைப்போலி.

ஒ.நோ: கடம்→கடன்.

**நிறா** *niṟā,* பெ. (n.) நறா (யாழ்.அக.); hardness in fruit.

*[*நறவு → நறா → நிறா.*]*

**நிறீஇ** *niṟii,* வி.எ. (adv.) நிறுத்தி (பத்துப்பா); stopness. 2. நிறுவி; to prove.

*[நில் → நிறுவி → நிறீஇ.]*

**நிறு–த்தல்** *niṟu-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. தூக்குதல்; to weigh, poise, balance. 2. தீர்மானித்தல்; to decide, determine. "*நாள்வரை நிறுத்து*" (கலித். 31:23.). 3. படைத்தல், அமைத்தல்; to create, construct. "***காமர்சாலை தனி நிறுமின் (சீவக.306 4. வைத்தல்;*** to put, set, place. *நிறுத்த முறையானே*" (நன். 109. மயிலை.). 5. துலைதூக்கி எடை பார்த்தல்; to weigh by using a balance.

*[நில் → நிறு. நில் → நிலு → நிலுவை = தங்குகை, கட்டளை, எச்சம். நிலு → நிறு–,]*

**நிறுத்தகாமவாயில்** *niṟutta-kāma-vāyil,* பெ. (n.) ஒத்த அன்பு; ஒத்த காதல் நிலை; similar affection. "பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு உருவு நிறுத்த காமவாயில்" (தொல்.பொருள்.மெய்.25.).

*[*நிறுத்த = தோன்றி நின்ற. காமம் = அன்பு. நிறுத்தம் + காமம் + வாயில்.*]*

**நிறுத்தசொல்** *niṟutta-šol,* பெ. (n.) நிலை மொழி பார்க்க. *see nilai-moḻi.* "*நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்று*" (தொல். எழுத்து. 10.).

*[நில் → நிலு → நிறு → நிறுத்து → நிறுத்தம். நிறுத்தம் + சொல்.]*

**நிறுத்தம்¹** *niṟuttam,* பெ. (n.) **1.** நிறுத்துகை (வின்.); stop, pause, as in reading. **2.** நிற்கு மிடம்; stopping place. ***அடுத்த நிறுத்தத்தில் இறங்க வேண்டும். (உ.வ.).*** **3.** தடுப்புக் கருவி, முட்டுக்கட்டை; instrument for retarding motion of wheel on vehicle, brake.

*[நிறுத்து → நிறுத்தம்.]*

**நிறுத்தம்²** *niṟuttam,* பெ. (n.) (பேருந்து) ஊர்தியில் மக்களை ஏற்றிக்கொள்ளவும் இறக்கிவிடவும் குறிப்பிடப்பட்ட இடம்; (bus) stop. கலைஞர் கருணாநிதி நகரில் பாவாணர் இல்லம் என்பதும் பேருந்து நிறுத்தங்களுள் ஒன்று. (உ.வ.). அண்ணா நகர் ஐயப்பன் கோயில் நிறுத்தத்திற்கருகில் அகரமுதலி இயக்கக அலுவலகம் அமைந்துள்ளது. (உ.வ.).

*[நிறுத்து → நிறுத்தம்.]*

**நிறுத்தமை** *niṟuttamai,* பெ. (n.) நிலை நாட்டுதல் (பிரதிட்டை செய்தல்); erection. "இராகவனீடிலிங்கம் மிதியாமை நிறுத்தமை பேசுவ னென்று பேசும்" (சேதுபு. இராமனருச் 5.).

*[நிறுத்து→ நிறுத்தமை]*

**நிறுத்தல்** *niṟu-t-tal,* பெ. (n.) தடுத்தல்; stop. ஒறுப்ப ஓவலை நிறுப்ப நில்லலை புணர்ந்தோர் போலப் போற்றுமதி நினக்கியான் கிளைஞன் அல்லனோ நெஞ்சே (அகநா. 342.).

*[ நிறுத்து → அல்.]*

**நிறுத்தலளவை¹** *niṟuttal-aḷavai,* பெ. (n.) **1.** நிறையளவு; weighing. **2.** நிறுத்தல் வாய்பாடு; table of weighing.

*[நிறுத்தல் + அளவை.]*

**நிறுத்தலளவை²** *niṟuttal-aḷavai,* பெ. (n.) பொருள்களின் எடையைக் கணக்கிடு வதற்கான முறை; measure of weight.

*[நிறுத்தல் + அளவை.]*

**நிறுத்தளத்தல்** *niṟuttaḷattal,* பெ. (n.) நிறுத்தலளவை பார்க்க (தொல். எழுத்து. 7. உரை.); see *niruttal-aḷavai.*

*[நிறுத்து + அளத்தல்.]*

**நிறுத்தி** *niṟutti,* வி.எ. (adv.) **1.** தடை செய்தல்; to stop. உன் புகைப் பழக்கத்தை உடனே நிறுத்தி விடு (உ.வ.). **2.** தகுந்த இடை வெளிவிட்டு, மெதுவாக; giving pause; slowly ***பாடத்தைச் சற்று நிறுத்திப்படி (உ.வ.). நெல்லை நிறுத்தி அளந்துபோடு. (உ.வ.).***

*[நில் → நிறுத்து + இ.]*

**நிறுத்திக்கொள்(ளு)–தல்** *niṟutti-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) **1.** நிறுத்து– பார்க்க, *see niruttu-,* **2.** நிறைவேற்றுதல் (வின்.); be bring about; to accomplish an object. **3.** மதிப்பிடுதல் (உத்தேசித்தல்) (வின்.); to make an estimate, form a plan in the mind.

*[நிறுத்தி + கொள் –,]*

**நிறுத்திச்சொல்(லு)–தல்** *niṟutti-c-col(lu)-,* 8 செ.குன்றாவி. (v.t.) வேகமின்றித் தெளிவாய்ச் சொல்லுதல்; to pronounce slowly and distinctly with proper pauses.

*[நிறுத்தி + சொல் –,]*

**நிறுத்திப்பிடி[1]–த்தல்** *nirutti-p-pidi-*, 4 செ.கு.வி. (v.i.) **1.** கண்டிப்பாதல் (வின்.); to be rigid, strict, sharp. **2.** நிலைநிற்றல் (யாழ்.அக.); to stand firm, persist.

*[நில் → நிறு → நிறுத்து → நிறுத்தி. நிறுத்தி + பிடி –,]*

**நிறுத்திப்பிடி[2]–த்தல்** *nirutti-p-pidi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **1.** சிறு குற்றங்களைக் கவனித்தல்; to go minutely, as into ones little faults. **2.** தூக்கிப் பிடித்தல் (யாழ்.அக.); to hold aloft.

*[நில் → நிறு → நிறுத்து – நிறுத்தி + பிடி –,]*

**நிறுத்தியெழுது–தல்** *nirutti-y-eludu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **1.** செவ்வையாயிருக்கும் படி மெதுவாய் எழுதுதல்; to write legibly and slowly. **2.** இடம் விட்டெழுதுதல் (வின்.); to leave proper speces in writing. **3.** எழுத்துகள் சாய்வின்றி நிமிர்ந்து நிற்கும்படி எழுதுதல் (வின்.); to write an upright hand.

*[நிறுத்தி + எழுது–,]*

**நிறுத்திவிடு–தல்** *nirutti-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) நிகழ்ந்து கொண்டிருக்கும் ஒன்றை நிலையாக நிறுத்தி விடுதல்; to stop constantly.

*[நிறுத்தி + விடு.]*

**நிறுத்திவை–த்தல்** *nirutti-vai*, 4 செ.குன்றாவி. (v.t.) தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கும் ஒரு செயலை இடைக்காலமாக நிறுத்துதல்; to stop temprorily the continuious process.

*[நிறுத்தி + வை.]*

**நிறுத்து[1]–தல்** *niruttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நிமிர நிற்கச் செய்தல்; to setup, raise erect, plant. *"வெயில் வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடை"* (அகநா. 37.). **2.** நிலை நாட்டுதல்; to fix on a firm basis; to set up, establish in life. நீதானா என் குடும்பத்தை நிறுத்தியவன்? (உ.வ.). **3.** முடிவுசெய்தல்; to determine, resolve. **4.** மனத்தை ஒருநிலையில் இருத்துதல்; to concentrate, as the mind. **5.** பணியமர்த்தல்; to appoint, place in office. **6.** பேணுதல் (வின்.); to maintain, support. **7.** சீர்திருத்துதல் (வின்.); to restore to better circumstances; to re-establish; to reform. **8.** தழுவிக் கொள்ளுதல் (இறை. களவி. 12.); to keep one on friendly terms. **9.** ஒப்புவித்தல் (வின்.); to place under ones charge. **10.** மேற் செல்லாதிருக்கச் செய்தல்; to stop as a person; to arrest progress. **11.** தள்ளி வைத்தல் (வின்.); to put off; defer, postpone. **12.** படிக்கும் போதும் பாடும் போதும் உரியவிடங்களில் நிறுத்துதல் (வின்.); to make proper pauses, as in reading or singing. **13.** விலக்குதல்; to dismiss, suspend. அவரைப் பணியிலிருந்து நிறுத்திவிட்டார். (உ.வ.) **14.** செய்யாதொழிதல்; to put an end to. மதுகுடிப்பதை எப்போதோ நிறுத்தி விட்டான். (உ.வ.). **15.** அவித்தல்; to put out, extinguish, as a lamp. *"விளக்கமெய்யிற் காற்றினா னிறுத்தி"* (உபதேசகா. சிவத்துரோ. 492.).

க. நிரிசு. ம. நிறுத்துக.

*[நில் → நிறு → நிறுத்து–,]*

**நிறுத்து[2]–தல்** *niruttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) (பொருளைத் துலையில் வைத்து) எடையைக் கணக்கிடுதல், எடை போடுதல்; to weigh. பழைய நகையை நிறுத்துப் பார்த்தபோது தேய்மானத்தால் எடை குறைந்திருப்பது தெரிய வந்தது. (உ.வ.).

*[ நில் → நிறு → நிறுத்து–, ]*

**நிறுத்து³–தல்** *niṟuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **1.** (ஒரு நோக்கத்திற்காக) நிற்கச் செய்தல்; to stop (a vehicle, etc.) *போக்குவரத்துக் காவலர் கையைக் காட்டியதும் வண்டியை நிறுத்தி விட்டார். (உ.வ.). மாடு குறுக்கே வருகிறது, வண்டியை நிறுத்து. (உ.வ.).* **2.** (பேச்சை) மேற்கொண்டு நிகழாதபடி செய்தல்; to stop (in activity.) *பேச்சை நிறுத்து. (உ.வ.). குழந்தை அழுவதை நிறுத்தி விட்டுச் சிரித்தது (உ.வ.). போராட்டத்தில் ஈடுபட்ட அரசு ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு நிறுத்தப் பட்டது. (உ.வ.).* **3.** (மின் விசிறி, மின்விளக்கு போன்றவற்றின்) செயல்பாட்டை நிற்கச் செயல்; to stop (the functioning of something); to switch off. *இருக்கையை விட்டுச் செல்லும் போதும் தேவையில்லாத போதும் விளக்கையும் விசிறியையும் நிறுத்திவிட்டுச் செல்வதே பண்புடைய செயல். (உ.வ.).* **4.** (வண்டியை, படை முதலியவற்றை அல்லது வீரர் முதலியோரை ஓரிடத்தில்) இருக்க விடுதல்; to park (a vehicle); station (an army, a sentty). *மிதிவண்டியை ஓரமாக நிறுத்து. (உ.வ.). எல்லைப் பகுதியில் பட்டாளத்தை நிறுத்தி வைத்துள்ளனர். (உ.வ.). தேர்தலின் போது எல்லா வாக்குச் சாவடிகளிலும் காவலர்கள் நிறுத்தப் படுவார்கள். (உ.வ.).* **5.** (ஒருவரைக்) காத்திருக்கச் செய்தல்; to make (some one) wait (so as to join him or her later) *அம்மாவைக் கடை முன்னால் நிறுத்திவிட்டு வந்துள்ளேன் விரைந்து திரும்ப வேண்டும். (உ.வ.).* **6.** (மற்றொருவர் முன் ஒருவரைக்) காணும்படி வைத்தல்; to produce (someone before someone). *கொலையாளியைக் கண்டுபிடித்து என் முன் கொண்டுவந்து நிறுத்த வேண்டுமெனக் கட்டளையிட்டார். (உ.வ.) அவருடைய பாடல் இயற்கையழகை நம் முன் நிறுத்துகிறது. (உ.வ.).* **7.** (மனத்தை ஒன்றில்) நிலைக்கச் செய்தல்; to focus (mind on something) மனத்தை அலை பாயவிடாமல் நிறுத்த ஊழ்கம் உதவுகிறது. (உ.வ.). **8.** (தேர்தலில்) போட்டியிட வைத்தல்; to putup (a candidate in an election) to field. *'எங்கள் கட்சி எல்லாத் தொகுதிகளிலும் வேட்பாளரை நிறுத்தும்'* என்று எதிர்க்கட்சித் தலைவர் அறிவித்தார். (உ.வ.).

*[நில் → நிறு → நிறுத்து–,]*

**நிறுத்து⁴** *niṟuttu*, பெ. (n.) இசைப்பாட்டின் சிறுபகுதி (இ.வ.); a single unit of a musical piece.

*[நிறு → நிறுத்து.]*

**நிறுத்துக்கட்டு–தல்** *niṟuttu-k-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) அளவிடுதல் (யாழ்.அக.); to make an estimate; to determine; to fathom.

*[நிறு – தூக்கு, தூக்கி அளவிடு, அளவிடு. நிறு → நிறுத்து + கட்டு–.]*

**நிறுத்துகட்டை** *niṟuttu-kaṭṭai*, பெ. (n.) ஓட்டத்தைத்தடுத்து நிறுத்தும் கட்டை: stop log.

*[நிறுத்து + கட்டை.]*



**நிறுத்துப்பார்¹–த்தல்** *niṟuttu-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) எடையளவை ஆய்ந்து பார்த்தல்; to weigh, examine the weight of. *அந்தக் கடையில் வாங்கிய நகையை நிறுத்துப் பார்த்த பிறகுதான் எடை குறைவாயிருப்பது தெரியவந்தது. (உ.வ.).*

*[நிறு → நிறுத்து + பார்–,]*

**நிறுத்துப்பார்²–த்தல்** *niṟuttu-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) **1.** கருதிப் பார்த்தல்; to cosider. *இருதரப்பையும் நிறுத்துப் பார்த்துத் தீர்ப்புச் சொல். (உ.வ.).* **2.** ஆழ்ந்து ஆராய்தல்; to deliberate. *நன்றாக நிறுத்துப் பார்த்துத் தீர்வு செய். (உ.வ.).* **3.** தீர எண்ணிப்பார்த்தல்; to ponder. *எதையும் நிறுத்துப் பார்த்த பின்பே முடிவுக்கு வரவேண்டும். (உ.வ.).* **4.** ஒப்பிடுதல்; to compare. *அவரை இவரோடு நிறுத்துப் பார்த்தல் நன்றன்று. (உ.வ.).*

*[நிறுத்து + பார்.]*

**நிறுத்துமுள்** *niṟuttu- muḷ*, பெ. (n.) துலையின் நடுமுள் (புதுவை.); middle of a scale.

*[நிறுத்து + முள். நில் → நிறு.]*

**நிறுத்துமுள்ளு** *niṟuttu- muḷḷu*, பெ. (n.) *நிறுத்துமுள்* பார்க்க; see *niṟuttua-muḷ.*

*[நிறுத்து + முள்ளு. முள் → முள்ளு.]*

**நிறுதிட்டம்** *niṟu-tiṭṭam*, பெ. (n.) **1.** நேர்நிற்கை; erectness, perpendicularity, uprightness. **2.** விறைப்பு; stiffness in posture or carriage.

*[நில் → நிறு → நிறுவு + திட்டம்.]*

**நிறுப்பான்** *niṟuppāṉ*, பெ. (n.) **1.** துலை (பிங்.); balance. **2.** துலையோரை (திவா.); libra in the zodiac.

*[நில் → நிறு → நிறுப்பான்.]*



**நிறுப்பு¹** *niṟuppu*, பெ. (n.) **1.** நிறுவுதல்; establish. **2.** நிறுத்துகை; erection, stop.

*[நில் → நிறு → நிறுப்பு.]*

**நிறுப்பு²** *niṟuppu*, பெ. (n.) சுணக்கம் (தாமதிப்பு); late.

*[ நில் → நிறு → நிறுப்பு ]*

**நிறுபூசல்** *niṟu-pūšal*, பெ. (n.) **1.** *நிறைபூசல்* (வின்.) பார்க்க; *see niṟaipūšal,* **2.** மும்முரம் (யாழ். அக.); condition of being in full swing.

*[நிறு + பூசல்.]*

**நிறுவனம்** *niṟuvaṉam*, பெ. (n.) **1.** ஊழியர், தொழிலாளர் முதலியோரைக் கொண்டு வணிகம், தொண்டு முதலியவற்றை மேற்கொள்வதற்கான ஆளுகை அமைப்பு; firm, concern. *ஆடை ஏற்றுமதி நிறுவனம் ஒன்றில் அவர் வேலை செய்கிறார். (உ.வ.). இந்த நிறுவனம் தன் தொழிலாளர்களுக்கு அதிக ஊக்கத் தொகை அளிக்க முன்வந்துள்ளது. (உ.வ.).* **2.** கல்வி, ஆய்வுப்பணி அமைப்பு;

(educational, research) institution, establishment. *அஞ்சல் வழிக் கல்வி நிறுவனம். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். தனியார் கல்வி நிறுவனங்கள்.*

*[ நில் → நிறு → நிறுவு*
*நிறுவு → நிறுவனம். ]*

**நிறுவு¹–தல்** *niṟuvu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **1.** (மாதிகை, தாளிகை, அமைப்பு போன்றவற்றை முதன் முதலாக) தொடங்குதல், ஏற்படுத்துதல்; to found, to start, to constitute. *தென்மொழி மாதிகையை நிறுவியவர் பாவலரேறு பெருஞ்சித்திரனார். **(உ.வ.).** பாவாணர் பெயரில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஓர் அறக் கட்டளையை நிறுவப் பலரும் கொடையளித்தனர். **(உ.வ.).** இந்த உசாவற்குழு எதற்காக நிறுவப்பட்டதோ அதிலிருந்து திசைமாறிச் செல்கிறது. **(உ.வ.).*** **2.** (கட்டடம், வரவேற்பு வளைவு முதலியவற்றை ஓரிடத்தில்) உருவாக்குதல், எழுப்புதல்; to be erect, to set up. *பாவாணர் பிறந்த ஊரில் பாவாணர் கோட்டத்தை நிறுவிட தமிழக அரசு நிதி ஒதுக்கிடவுள்ளது. **(உ.வ.).** முதல்வரின் வருகையை ஒட்டிச் சாலையில் பல ஒப்பனை வளைவுகள் நிறுவப்பட்டுள்ளன. **(உ.வ.).*** **3.** (எந்திரம், பொறி, சிலை முதலியவற்றைக் கொண்டுவந்து ஓரிடத்தில்) பொருத்துதல், அமைத்தல்; to install (a statue, machinery etc.). *மொழிப் போராளிகளின் சிலை நிறுவப்படும். **(உ.வ.).** தொழிற்சாலை ஆட்சிக்குழு நச்சு நீக்கும் கருவியை நிறுவ ஒப்புக் கொண்டுள்ளது. **(உ.வ.).*** **4.** (ஒரு கருத்தைத் தக்க சான்றுகளுடன்) நிலை நாட்டுதல், வலியுறுத்தல்; establish (a fact one's argument etc.). *பல்லவர் காலத்தில் தமிழகத்தில் கலைகள் சிறந்திருந்தன என்பதை நிறுவுக. **(உ.வ.).** அவர் தன் கருத்தைப் பிறர் மறுக்க முடியாதபடி நிறுவுவதில் வல்லவர். **(உ.வ.).***

*[நில் → நிறு → நிறுவு.]*

**நிறுவு²–தல்** *niṟuvu-*, **5.** செ.குன்றாவி. (v.t.) நிறுத்து**–**, பார்க்க; see niṟuttu-.

*[நில் → நிறு → நிறுவு–,]*

**நிறுவுகை** *niṟuvugai-*,பெ.(n.) கோட்பாட்டை மறுப்புக்கிடமின்றி தக்க சான்றுகளுடன் நிலைநாட்டுகை; prove the theory with proper evidence.

*[நில் → நிறு → நிறுவு → நிறுவுகை–,]*

**நிறுவுதல்** *niṟuvudal-*, பெ. (n.) *நிறுவுகை* பார்க்க; see *niṟuvugai.*

*[ நிறு → நிறுவு → நிறுவுதல்–,]*

**நிறுவை** *niruvai-*, பெ.(n.) **1.** எடையிடும் முறை; method of weighing. **2.** எடைக்கல்; weighing unit. **3.** எடையிடும் கருவி; weighing machine.

*[ நில் → நிறு → நிறுவை–,]*

**நிறை¹–தல்** *niṟai-*, **2.**செ.கு.வி. (v.i.) **1.** நிரம்புதல்; to become full, to be replete. "*நிறையின்ன முதை*" (திருவாச. **27:4.**). **2.** மிகுதல்; to abound; to be copious, plenteous, profuse. **3.** எங்கும் நிறைந்திருத்தல் (வியாபித் திருத்தல்); to be every where; to pervade. **4.** பொந்திகையாதல்; to be satisfied, contended. "*நிறைந்த மனத்து மாதரும்*" (திருவாலவா. **38.5.**). **5.** அமைதியாதல்; to be silent. நிறைந்திருங்கள் (வின்.).

**க.** நிரி **ம.** நிறியக.

*[நில் → நிறு → நிறை.]*

**நிறை²—தல்** *nir̤ai-*, 2 செ.கு.வி. (v.i.) **1.** நிரம்புதல்; to be or become full. ***மழை பெய்ததால் ஏரி குளங்கள் நிறைந்தன. (உ.வ.) வயிறு நிறைந்துவிட்டது. (உ.வ.).*** **2.** (குறிப்பிட்ட அகவை) முடிதல்; to complete (years of life). இந்த ஆண்டுடன் என் மகளுக்குப் பத்து அகவை நிறைகிறது. (உ.வ.).

*[நில் → நிறு → நிறை—,]*

**நிறை³—தல்** *nir̤ai-*, 2 செ.கு.வி. (v.i.) **1.** நிறை வடைதல்; முழுமையாதல் (சூ.நிக.8:15.); to complete. **2.** பெருகுதல்; fill. "*நிறைதலொடு குறைதலாய்*" (சிவரக. **1.** கணபதிவுந். **19.**).

*[நில் → நிறு → நிறை—,]*

**நிறை⁴—த்தல்** *nir̤ai-*, 11 செ.குன்றாவி. (v.t.) **1.** நிரம்பச்செய்தல்; to fill, make full; to supply abundantly. "*குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும் நெட்டெழுத் திம்பர் ஒத்த குற்றெழுத்தே*" (தொல். எழுத்து. **41.**). **2.** பரவச் செய்தல் (வின்.); to diffuse, cause to pervade, suffuse. **3.** திணித்தல் (வின்.); to stuff, cram.

**ம.** நிறுக்க.

*[நில் → நிறை—.]*

**நிறை⁵** *nir̤ai*, பெ. (n.) **1.** நிறுக்கை (பிங்.); weighing. **2.** துலை (பிங்.); scale, balance. **3.** துலை ஓரை (திவா.); libra, in the zodiac. **4.** எடை; standard weight. "*காவெனிறையும்*" (தொல்.எழுத்து. **169.**). **5.** நூறு பலங் கொண்ட அளவு (சூடா.); weight of 100 palam.**6.** வரையறை (திவா.); measure, standard, degree.

*[நில் → நிறு → நிறை.]*

**நிறை⁶** *nir̤ai*, பெ. (n.) **1.** சிதைவுபடா முழுமை (பூர்த்தி); completion. completeness. "நிறைப் பெருஞ் செல்வத்து நின்றக்கடைத்தும்" (நாலடி, **360.**). **2.** எண்வகைப் பாடற் பயன்களுள் ஒன்று (சிலப். **3:16**, உரை.); fulness repletion, copiousness, one of eight pāḍar̤payan̠ **3.** மாட்சிமை; excellence, splendour, "*வானவரேத்து நிறைகழலோன்*" (திருவாச. **13:13.**). **4.** அடுத்தடுத்துவரும் பண்; note repeated often in siging a musical piece. **5.** இரண்டு தாக்குடைய தாளவகை (பரிபா. **17:18.**). a time-measure consisting of two beats. **6.** நீர்ச்சால் (சூடா.); large water-pot. **7.** நாட்கதிரும் நெல்லும் ஒரு பானையிலிட்டு நிறைக்கும் நிகழ்வு. (நாஞ்.); the ceremony of filling up a pot with nāt-kadir and paddy. **8.** ஆசை (அக.நி.); desire.

**க.** நெறெ.

*[நில் → நிறை—,]*

**நிறை⁷** *nir̤ai*, பெ. (n.) **1.** நிறுத்துகை; bringing to stand; stopping. "*நிறையருந் தானையொடு*" (மணிமே. **9:26.**). **2.** வைத்து அமைக்கை; fixed position or arrangement. "*நிறைக்கற் றெற்றியும்*" (மணிமே.**6:6.**). **3.** மனத்தைக் கற்புவழியில் நிறுத்துகை; firm adherence to a life of chastity. "*நிறைகாக்குந் காப்பே தலை*" (குறள், **57.**). **4.** ஆடுஉக் குணம் நான்கனுள் ஒன்றான காப்பனகாத்துக் கடிவன கடியுந் திண்மை (பிங்.), (இறை. **2:29.**); strength of mind, moral firmness, one of four āḍū-u-k-kuṇam. **5.** மனவடக்கம்; complete self control. "*நிறையெனு மங்குசம்*" (கம்பரா.

மிதிலை.40.). **6.** கற்பு; chastity, marital fidelity. *“நிறையிற் காத்துப் பிறர்பிறர்க் காணாது”* (மணிமே.18:100.). **7.** சூளுரை (சபதம்); vow. “இண்டை புனைகின்ற மாலை நிறையழிப்பான்” (தேவா.1040:4.). **8.** வலிமை; strength. *“கன்னிறையழித்த மொய்ம்பு”* (கந்தபு. இரண்டாநாள். சூர. யுத். 24.). **9.** அறிவு (அக.நி.); knowledge. **10.** மறைபிற ரறியாமை (கலித்.133.); non-betrayal of one's secrets, silent enduring of one's troubles. **11.** அழிவின்மை (சூடா.); indissolubility, imperishableness. **12.** சமன்மை (வின்.); equity, **13.** நிமிர் நேர்வு; uprightness **14.** கூறுபடா முழுமை; integrity. **15.** மனஒருமை; concentration. *“கழல்களை நிறையால் வணங்க”* (தேவா. 502:6.).

*[நில் → நிறை.]*

**நிறை[8]** *niṟai,* பெ. (n.) மிகுதி; abundance. *“நிறையென்று மிகுதியாய்”* (ஈடு.1,2,3.).

*[நில் → நிறு → நிறை.]*

**நிறைக்குளப்புதவு** *niṟai-k-kuḷa-p-pudavu,* பெ. (n.) நீர் நிறைந்திருத்தலையுடைய குளத்தின் வாய்த்தலை; head-sluice of a water tank. *“நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெனாகி”* (புறநா. 376.).

*[நிறைக்குளம் + புதவு]*

**நிறைக்கோற்றுலாம்** *niṟai-k-kōṟṟulām,* பெ. (n.) நிறுக்கும் துலாக்கோல்; balance, scale. *“நிறைக்கோற் றுலாத்தர் பறைக்கட் பராரையர்”* (சிலப்.14:208.).

*[நிறைக்கோல் + துலாம்.]*



**நிறைகட்டு[1]—தல்** *niṟai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** எடைகட்டுதல்; to make up a weight equal to given thing. **2.** மதிப்புக்குத் தக்கவாறு பண்டமாற்றம் செய்தல் (வின்.); to barter, give commodities of equal value in return for other commodities.

*[நிறை + கட்டு—,]*

**நிறைகட்டு[2]—தல்** *niṟai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பாலொடு நீரைக்கலத்தல்; to mix the water with milk.

*[நிறை + கட்டு—,]*

**நிறைகட்டியபால்** *niṟai-kaṭṭiya-pāl,* பெ. (n.) நீர் கலந்த பால்; water mixed milk.

*[நிறை + கட்டிய + பால்.]*

கறந்த பாலுக்கு மறுதலையானது.

**நிறைகர்ப்பம்** *niṟai-karppam,* பெ. (n.) நிறைகருப்பம் பார்க்க; see *niṟai-karuppam.*

*[நிறை + கர்ப்பம்.]*

**நிறைகர்ப்பிணி** *niṟai-karppiṇi,* பெ. (n.) நிறைகருப்பிணி பார்க்க; see *niṟai-karuppiṇi.*

*[நிறை + கர்ப்பிணி. சூல் கொண்டவளைச் சூலி என்றழைப்பதே தமிழ்வழக்கு.]*

**நிறைகரகம்** *nirai -karagam,* பெ. (n.) மாரியம்மன் முதலிய பெண் தெய்வங்களின் பொருட்டுத் தலைமேல் வைத்து ஆடிக் கொண்டு எடுத்துச் செல்லப்படுவதும் நீர் நிரம்பப் பெற்றதும் பூக்களால் ஒப்பனை செய்யப்பட்டதுமான குடம் (வின்.); vessel filled with water decorated with flowers and carried on one's head for propitiating mariamman and other deities.

*[நிறை + கரகம்.]*



**நிறைகருப்பம்** *nirai-karuppam,* பெ. (n.) முழுவளர்ச்சியடைந்த கருப்பம்; advanced pregnancey.

*[நிறை + கருப்பம்.]*

**நிறைகருப்பிணி** *nirai-karuppini,* பெ. (n.) முழுமையான கருப்பமுடையவள்; woman in advanced pregnancy.

*[நிறை + கருப்பிணி.]*

**நிறைகல்** *nirai-kal,* பெ. (n.) எடைக்கல், படிக்கல்; standard weight.

*[நிறை + கல்.]*



**நிறைகல்நகை** *nirai-kal -nagai,* பெ. (n.) மதிப்பு மிகு மணிக்கற்களை மிகுதியாக வைத்திழைத்த நகை; ornament set profusely with precious stones, as dist. fr. currukkal-nagai.

*[நிறை + கல் + நகை.]*

**நிறைகலவை** *nirai-kalavai,* பெ. (n.) செழுமையாகக் கலக்கப்பட்ட கலவை: rich mixiture.

*[நிறை + கலவை.]*

**நிறைகலை** *nirai-kalai,* பெ. (n.) **1.** குறைவிலா முழுமை; fulness. completion of the parts. **2.** தெய்வப் படிமையின் முகத்திற் காணப் பெறும் ஒளிவட்டம்; splendour in the face of an idol from a supposed divine immanence. **3.** முழு நிலவு; வெள்ளுவா; full moon. **4.** தெய்வ வெறி; possession of a person by a deity or demon. **5.** முழு வெறி (வின்.); being intoxicated; top-heaviness. **6.** முழுத் தோற்றரவு; (பூரணாவதாரம்); the manifestation of a deity in its full glory.

*[நிறை + கலை.]*

*நில் → நிறை.*

குல் → கல்→கலை.

குல்= தோற்றம், பொலிவு, அழகு, முழுமை ஆகியவற்றைக் குறிக்கும் வேர்.

**நிறைகன்றுத்தாய்ச்சி** *nir̠ai-kan̠r̠u-t-tāycci,* பெ. (n.) கன்றொடு கூடிய ஆன் (யாழ்ப்.); cow with calf.

*[நிறை + கன்று + தாய்ச்சி.]*

**நிறைகாவல்** *nir̠ai -kāval,* பெ. (n.) காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகுதல் (இறை. 27.); முழுமையான காப்பு; complete security. (உ.சொ.களஞ்.).

*[நிறை + காவல்.]*

**நிறைகுடம்** *nir̠ai-kuḍam,* பெ. (n.) நீர் (நிறைந்தளவுள்ள) குடம்; a pot full of water. "நிறைகுடத்திட்ட கை புல்லினும் போதினும் நெகிழாமற் புணர்ந்தனராயும் நிரையினர்கள்" (சிலப்.1:58. உரை.).

*[நிறை + குடம்.*
*நில் → நிறை*
*குல் → குள் → குடம்.]*

**நிறைகுறை** *nir̠ai-kur̠ai,* பெ. (n.) ஆளத்தித் தொழில்கள்; mode of musics, improvised introduction to a melody. "*பாடினி முரலும் பாலையங் குரலின் நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற ஒரு திறம்*" (பரிபா. 17:18.).

*[நிறை + குறை]*

**நிறைகோல்** *nir̠ai-kōl,* பெ. (n.) துலைக்கோல்; balance. "*நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்*" (நன்.26.).

*[நிறை + கோல்.]*

நில் → நிறை = எடை. குல் → குலவு. குலவுதல் = வளைதல். குலவு → குலாவு. குலுத்தல் = வளைந்த காயுள்ள கொள். குலுக்கை = உருண்டு திரண்டகுதிர். குல் → (கொல்) →கோல் = உருட்சி, திரட்சி, உருண்டு திரண்ட நீண்டகோல். நீண்ட கோலின் இருபுறமும் தட்டு களைத் தொங்கவிட்டுத் துலையாகப் பயன் படுத்தியமையால் துலைக் கோலையும் கோலெனவே வழங்கினர்.



**நிறைச்சளவு** *nir̠aiccaḷavu,* பெ. (n.) சரியான அளவு (தெ.க.தொ. ii: 107.); full and correct measure.

*[நிறை → நிறைத்த → நிறைச்ச+அளவு.]*

**நிறைசபை** *nir̠ai-šabai,* பெ. (n.) பெரியசபை; large assembly.

*[நில் → நிறை = முழுமை, பெருமை. அவை → சவை → சபை. ]*

**நிறைசன்னி** *nir̠ai-šan̠n̠i,* பெ. (n.) இசிவு நோய் (வின்.); severe fit of apoplexy.

*[நிறை + சன்னி.]*

**நிறைசெல்வம்** *nir̠ai-šelvam,* பெ. (n.) நிரம்பிய சொத்து; abundant wealth.

*[நிறை + செல்வம்.]*

**நிறைசெல்வன்** *niṟai-šelvaṉ,* பெ. (n.) 1. நிறைந்த சொத்துடையவன்; (குபேரன்) (உரி.நி.); Kubera, as a person of immense wealth 2. மணமகன்; bridegroom.

*[நிறை + செல்வன்.]*

**நிறைசெலுத்து–தல்** *niṟai-šeluttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கொண்டு செலுத்துதல் (நெல்லை); to bring to fruition, contending against difficulties.

*[நிறை + செலுத்து–,]*

**நிறைசூல்** *niṟai-šūl,* பெ. (n.) 1. முழு வளர்ச்சி யடைந்த கருப்பம்; advanced pregnancy. 2. மேகம் பொழிதற்குக் கருக் கொண்டுள்ள நிலை; heaviness of a cloud ready to drop rain. 3. மிகுதியாகப் பூக்கும் நிலை (வின்.); teeming with buds ready to blossom or bear.

*[நிறை + சூல்*
*நில் → நிறை = முழுமை, நிறைவு.]*

**நிறைசூலி** *niṟai-šūli,* பெ. (n.) முழுமையான கருப்பமுடையவள்; woman in advanced pregnancy.

*[நிறை + சூலி. நில் → நிறை. சூல் → சூலி.]*

**நிறைசெறிவு** *niṟai-šeṟivu,* பெ. (n.) தெவிட்டு நிலை; saturation, state of being saturated.

*[நிறை + செறிவு.]*

**நிறைதப்பு** *niṟai-tappu,* பெ. (n.) வழுவான நயன்மை (யாழ்.அக.); miscarriage of justice.

*[நிறை + தப்பு.]*

**நிறைதருதுறு** *niṟaitarutuṟu,* பெ. (n.) சீந்தில்; moon creeper-menispermum cordifolium alias tindsphora cardifolium. (சா.அக.).

**நிறைந்தகுணம்** *niṟainda-guṇam,* பெ. (n.) 1. பொந்திகையுள்ள மனத்தன்மை; satisfied, contended state of mind. 2. மகிழ்ச்சியுள்ள (சித்தம்) மனநிலை; cheerful disposition.

*[நிறைந்த + குணம்.]*

*[நிறை + குணம். நில் → நிறை = நிறைவு, பொந்திகை. உல் → குல் → குணம் = வளைவு, அடங்கிய தன்மை, பணிவு, ஒத்துவருமியல்பு, நலம், மேன்மை மேம்பட்டு விளங்கும் திறம், அறிவு.]*

**நிறைந்தன்று** *niṟaintaṉṟu,* பெ. (n.) நிறைந்தது; fullfil. "*துகில் சேர் மலர் போல் மணிநீர் நிறைந்தன்று*" (பரிபா. 12:93.).

*[நிறை → நிறைந்து → நிறைந்தன்று]*

**நிறைந்திடு–தல்** *niṟaindiḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) நிறை–, பார்க்க; *see niṟai-,*

*[நிறைந்து + இடு.]*

**நிறைந்தவீடு** *niṟainda-vīḍu,* பெ. (n.) 1. மங்கல மனை; house in prosperity. 2. திருமண வீடு (வின்.); marriage house.

*[நிறைந்த + வீடு.]*

**நிறைந்தமனம்** *niṟainda -maṉam,* பெ. (n.) நிறைந்த குணம் பார்க்க; *see niṟainda guṇam.*

*[நிறைந்த + மனம்.]*

**நிறைந்தமனிதன்** *niṟainda -maṉidaṉ,* பெ. (n.) நிறைந்த மாந்தன் பார்க்க; see *niṟanda- māndaṉ.*

*[நிறைந்த + மனிதன்.]*

**நிறைந்தமாந்தன்** *niṟainda -māndaṉ,* பெ. (n.) உயர்குணமுடையான் (வின்.); perfect man; noble minded person.

*[நிறைந்த + மாந்தன். நில் → நிறை = நிறைவு, பொந்திகை, உயர்வு, உயர் குணம்.]*

**நிறைநரம்பு** *niṟai-narambu,* பெ. (n.) ஏழு சுரமுள்ள பண் (திவா.); primary melody, heptatonic. opp. to kuṟai narambu.

*[நிறை + நரம்பு.]*

**நிறைநாழி** *niṟai-nāḻi,* பெ. (n.) மங்கலக் குறியாக நெல் வைத்து நிரப்பிய நாழி; a measure filled with paddy, used on auspicious occasions.

*[நிறை + நாழி.]*



**நிறைநாழிவை[1]–த்தல்** *niṟai-nāḻi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) திருமண முதலியவற்றில் மங்கலக் குறியாகப் படியில் கூலத்தை நிரம்பப் பெய்தல்; to place a measure filled with paddy, as at a marriage, deemed auspicious. *"பொற்கோலமிட்டு நிறைநாழி வையாய்"* (குமர. பிர. மீனாட். குறம். 6.).

*[நிறை + நாழி + வை–,]*

**நிறைநாழிவை[2]–த்தல்** *niṟai-nāḻi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) சாச் சடங்கி னொன்று; a kind of ceremony on death.

*[நிறை + நாழி + வை–,]*

**நிறைநிலவு** *niṟai-nilavu,* பெ. (n.) முழுநிலவு; வெள்ளுவா; full moon.

*[நிறை + நிலவு.]*

**நிறைநீர்வேலி** *niṟai-nīr-vēli,* பெ. (n.) 1. கானல்நீர்,பேய்த்தேர்; mirage. *"நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்த"* (சிலப். 11:69.). 2. உடை குளம்; breached tank. "அறையும் பொறையு மாரிடை மயக்கமும் நிறைநீர் வேலியு முறைபடக்கிடந்தே" (சிலப். 11:69.).

*[நிறை + நீர் + வேலி.]*

**நிறைநீராவி** *niṟai-nīrāvi,* பெ. (n.) ஈரத் தன்மை மிகுந்த நீராவி; saturated steam.

*[நிறை + நீர் + ஆவி.]*

**நிறைப்பு** *niṟappu,* பெ. (n.) உடம்பிற்கு ஊட்டமூட்டும் மருந்து; a medicine that gives tone to the system-tonic. (சா.அக.).

**நிறைபடி** *niṟai-paḍi,* பெ. (n.) தலைதட்டாத படி, தலை வெட்டாமல் அளக்கும்படியளவு; (while using a measure) with the partion of grain above the brim. நிறைபடியாய் அளந்து போடு.(உ.வ.)

*[நிறை + படி.]*

கூலங்களை யளக்க படி, மரக்கால், வள்ளம் போன்றவைப் பயன் பாட்டிலிருந்தன. அதனைக் கொண்டளக்கும் போது கூலங்கள் நிறையளவாய் இருக்கும் வகையில் அளக்கப்பட்டது. பதின்ம அளவையாகிய மெட்ரிக் அளவை வழக்கிற்கு வந்ததும், தலையைத் தட்டியளக்கும் வழக்கம் நடைமுறைக்கு வந்துவிட்டது. கூலத்தை அளக்கும் போது வழிய வழிய அளந்தால் மேன்மேலும் பெருகுமென்பது பண்டையர் நம்பிக்கை போலும்.

**நிறைபணி** *nirai-paṇi,* பெ. (n.) இந்திரனை வழிபடுவதற்காகத் திருவாரூர்க் கோயிலில் தியாகேசருக்கு நிறைபணி பூட்டிப் புரட்டாசி உவா நாளன்று கொண்டாடும் திருவிழா (இ.வ.); a festival celebrated in the temple at Tiruvārūr on the full moon day in the month of purattasi when Indran is believed to worship Tiyakēsar.

*[நிறை + பணி.]*

**நிறைபாரம்** *nirai-pāram,* பெ. (n.) **1.** பெருஞ் சுமை; heavy load. **2.** அணி, அம்மை முதலியன உடல் முழுதும் நிறைந்திருக்கை; being loaded as a person with jewels, a tree with fruit, the bady with pustules in small-pox. நிறைபாரமாக அணிந்திருக்கிறாள். (உ.வ.). **3.** நிரம்ப உண்ணுகை; eating to the full.

*[நிறை + பாரம்.]*

**நிறைபிள்ளைத்தாய்ச்சி** *nirai-pillai-t-tāycci,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; see *nirai-šūli.*

*[நிறை + பிள்ளை + தாய்ச்சி.]*

**நிறைபூசல்** *nirai-pūšal,* பெ. (n.) பேரொலி (வின்.); great noise, bustle.

*[நிறை + பூசல்.]*

**நிறைபூத்தி** *nirai-pūtti,* பெ. (n.) கோடகசாலை எனுஞ்செடி; a very small plant. called kōḍaga sālai. (சா.அக.).

**நிறைபூரணம்** *nirai-pūraṇam,* பெ. (n.) முழுப் பொந்திகை; full satisfaction.

*[நிறை + பூரணம்.]*

**நிறைபொங்கல்**[1] *nirai-pongal,* பெ. (n.) மங்கலக்குறியாகப் பொங்கலன்று பொங்கல் மிகுதியாகப் பொங்குகை; abundant overflow of pongal at the pongal festival.

*[நிறை + பொங்கல், நில் → நிறை = மிகுதி, நிறைவு.]*

**நிறைபொங்கல்**[2] *nirai-pongal,* பெ. (n.) பல பானைகளிலிடும் பொங்கல்; rice boiling in a series of pots, as at a temple.

*[நிறை + பொங்கல். செழிப்பின் அறிகுறியாகப் பல பானைகளில் பொங்கலிடுவதென்பது தமிழகத்தில் பெருவழக்கு. பலருக்குப் படையலிடவும் பல பானைகளில் பொங்கலிடுவர்.]*

**நிறைமணி** *nirai-maṇi,* பெ. (n.) **1.** பிள்ளையாருக்குச் செய்யும் முழுக்காட்டுடன் கூடிய வழிபாடு; a profuse bath and offering, especially given to Ganēša. **2.** கண்டிக்கை; taking a person to task. *அவனுக்கு நிறை மணி யாயிற்று* (இ.வ.).

*[நிறை + மணி.]*

**நிறைமதி** *niṟai-madi,* பெ. (n.) முழுநிலவு, முழுத்திங்கள்; full moon. *"நிறைமதி போல"* (பெருங். மகத. 3. 14.). *"பிறைவளர் நிறைமதி யுண்டி அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வனி"* (பரிபா. 3:52.)

மறுவ. வெள்ளுவா.

*[நிறை + மதி.]*

**நிறைமதியம்**[1] *niṟai-madiyam,* பெ. (n.) நண்பகல்; உச்சிப்பொழுது (யாழ்ப்.); noon.

*[நில் → நிறை = மிகுதி, உச்சம்; நிறை + மதியம்.]*

**நிறைமதியம்**[2] *niṟai-madiyam,* பெ. (n.) முழு நிலவு நாள், வெள்ளுவா நாள்; full moon day.

*[நிறை + மதியம். மதி → மதியம் = நிலவு.]*

**நிறைமாசக்கருப்பிணி** *niṟaimāšа-k-karuppiṇi,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; *see niṟaišūli.*

*[நிறைமாசம் + கருப்பிணி. நில் → நிறை மாதம்→ மாசம் (கொ.வ.).]*

**நிறைமாசக்காரி** *niṟai -māša-k-kāri,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; see *niṟai-sūli.*

*[நிறை + மாசம் + காரி.]*

**நிறைமாசச்சூலி** *niṟai-māša-c-cūli,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; *see niṟai-šūli.*

*[நிறை + மாசம் + சூலி.]*

**நிறைமாசம்** *niṟai-māšam,* பெ. (n.) *நிறைசூல்* பார்க்க; *see niṟai-šūl.*

*[நிறை + மாசம். மாதம் → மாசம்.]*

**நிறைமாதக்கருப்பிணி** *niṟaimāda-k-karuppiṇi,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; *see niṟai-šūli.*

*[நிறைமாதம் + கருப்பிணி. கரு → கருப்பிணி. நிறைமாதம் – நிறைந்த மாதம். சூல் → சூலி.]*

**நிறைமாதச்சூலி** *niṟai-māda-c-cūli,* பெ. (n.) *நிறைசூலி* பார்க்க; *see niṟai-šūli.*

*[நிறைமாதம் + சூலி*
*சூல்→சூலி=சூலினை யுடையவள்.]*

**நிறைமாதம்** *niṟai-mādam,* பெ. (n.) முழு வளர்ச்சி யடைந்த குழந்தையை ஈன் றெடுக்கும் பத்தாவது மாதம்; the last month of pregnancy. *அவள் நிறைமாதமாக இருக்கிறாள்.* (உ.வ.).

*[நிறை + மாதம். நில் → நிறை = நிறைவு, முழுமை. முழுவளர்ச்சியடைந்த சூலினைத் தாங்கியிருக்கும் பெண்ணைக் குறிப்பது.]*

**நிறைமொழி** *niṟai-moḻi,* பெ. (n.) பயன்கள் தவறாத வாக்கு; prophetic words of holy persons which are sure to take effect. *"நிறைமொழி மாந்தர் பெருமை"* (குறள், 28.). 2. வேதம் (திவ். பெரிய. 11:6:3.); vedic.

*[நிறை + மொழி.]*

**நிறைமொழிமாந்தர்** *niṟai-moḻi-māndar,* பெ. (n.) சொல்லாலும் செயலாலும் பிறன்கேடு சூழா மாந்தர்; noble man. "நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த மறைமொழி தானே மந்திரம் என்ப" (தொல். பொருள். 488.).

*[நிறை + மொழி + மாந்தர். நில் → நிறை = பெருமை, முழுமை. மொழி = சொல்.]*

சொல்லாலும், செயலாலும் பிறன்கேடு சூழாதவர் மொழிவதே சொற்கட்டாய் அமையும் மந்திரம்.

சொல்லியன சொல்லியாங்கு நிறைவேறு மாறு குறைவறப் பொருள் பயக்கும் சொற்களைப் பேசுவோராகிய சான்றோரே நிறைமொழி மாந்தராவார்.

*'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டி விடும்'* –என்றார் திருவள்ளுவரும்.

**நிறைமொழியாளர்** *niṟaimoḻi-y-āḷar,* பெ. (n.) **1.** முனிவர் (வின்.); holy persons, sages. **2.** புலவர் (அக.நி.); scholars.

*[நிறை + மொழி + ஆளர்.]*

**நிறைய** *niṟaya,* வி.எ. (adv.) நிரம்ப; abundantly, plentifully. *"தலைநிறைய பூச்சூடி"* (நாலடி, 43.).

*[நிறை → நிறைய.]*

**நிறையருந்தானை** *niṟai -yaruntāṉai,* பெ. (n.) நிறுத்தற்கரிய படை; viberated army. "நிறை யருந் தானை வேந்தரைத் திறை கொண்டு பெயர்க்குஞ் செம்மலு முடைத்தே" (புறநா. 156.). "நிறையருந் தானை வெல்போர் மாந்தரன், பொறையன்" (அகநா. 142:4–5.). "நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து". (சிலப். 28:178.).

*[நில் → நிறை + அருந்தானை.]*

**நிறையவை** *niṟai-y-avai,* பெ. (n.) எல்லாப் பொருளையும் அறிந்து எதிர்வரும் மொழிகளை எடுத்துரைக்க வல்லவர் குழுமிய அவை (யாப்.வி.பக். 515.); assembly of the great.

*[நிறை + அவை.]*

**நிறையழி–தல்** *niṟai,- y-aḻi-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** கற்பழிதல்; to lose chastity. **2.** ஒழுக்கங் கெடுதல்; to degenerate in character. **3.** யானை மதம் பிடித்தல்; to rut, as an elephant. *"நிறையழி கொல்யானை"* (கலித். 56.).

*[நிறை + அழி–,]*

**நிறையளவு** *niṟai-y-aḷavu,* பெ. (n.) நிறுத்தறியுமளவு; measure of weight.

*[நில் → நிறு → நிறை + அளவு.]*

**நிறையறிகருவி** *niṟai-y-aṟi-karuvi,* பெ. (n.) **1.** கட்டளைக்கல் (திவா.); touch-stone. **2.** துலை (வின்.); balance.

*[நிறை + அறி + கருவி.]*

நில் → நிறு → நிறை + அறிகருவி. நிறை யறியுங்கருவி என்க.

**நிறையாமை** *niṟai-yāmai,* பெ. (n.) குறைவு; incompleteness.

*[நில் → நிறை. நிறை + ஆ + மை. 'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

**நிறையிலி** *niṟaiyili,* பெ. (n.) சிற்றூர் வரி வகை; (i.m.p.) a kind of village cess.

*[நிறை + இலி.]*

**நிறையுடைமை** *niṟai -yuḍaimai,* பெ. (n.) சால்புடைமை; noblety. நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை போற்றி யொழுகப் படும் (குறள்,154.).

*[நிறை + உடைமை.]*

**நிறையுரை** *nirai-y-urai,* பெ. (n.) எடையும் மாற்றும்; weight and quality of precious metals. "*நிறையுரை பார்த்துப் பொன் முதலியவை வாங்கவேண்டும்*" (உ.வ.).

*[நிறை + உரை.]*

நிறுத்துப்பார்க்குங்கால் எடையும் உரைத்துப் பார்க்குங்கால் தரமும் அளந்து அளவிட வியலும்.

**நிறையுவா** *niraiyuvā,* பெ. (n.) முழுமதி; full moon. "எண்மதி நிறையுவா இருண்மதிபோல நாள் குறைபடுதல் காணுநர் யாரே" (பரிபா.11:37.)

*[நிறை + உவா.]*

**நிறையுள்ளவன்** *nirai-y-uḷḷavaṉ,* பெ. (n.) பொறுமைசாலி; man of patience.

*[நிறை + உள்ளவன்.]*

அறிவும் பண்பும், குணமும் நிறைந் தோனுக்குச் சினம் மேலோங்காது. சினம் மேலோங் காதெனின் பொறுமையே மேலோங்கும். அத்தகையோனை அறிவும் பண்பும் குணமும் நிறைந்த வனென்பது நல்லுலகோர் பண்பு. நிறையெனின் இச்சால்பு நிறைதலையே குறிக்கும்.

**நிறையெடு–த்தல்** *nirai-y-eḍu-,* 4 செ. குன்றாவி. (v.t.) நிறுத்தல்; to weigh. தட்சிண மேருவிடங்கன் என்னுங்கல்லால் நிறை யெடுத்தும். (தெ.க.தொ.ii; 178.).

*[நிறை + எடு–,]*

**நிறைவாகரம்** *niraivāgaram,* பெ. (n.) *நிறைவு,* 1, 2 (வின்.) பார்க்க; see *niraivu.*

*[நிறைவு + ஆகரம்.]*

**நிறைவிளக்கு** *nirai-viḷakku,* பெ. (n.) ஏற்றாத விளக்கு (இ.வ.); unlit lamp.

*[நிறை + விளக்கு.]*

விளக்கேற்றி வினை தொடங்குத லென்பது தமிழப்பண்பு. வினை தொடங்கி நடக்குங்கால் ஏற்றிய விளக்கு கெட்ட தெனின் தீக்குறியா யெண்ணி மாழ்குவர். அத்தகைய தீக்குறியினைத் தவிர்த்தற் பொருட்டு தேய்த்துக் கழுவிப் பொட்டும் பூவுமிட்ட விளக்கில் நெய்யுந் திரியுமிட்டு வினைத் தொடங்குவ தென்பது வழக்கு. அதையே நிறை விளக்கு என்றனர். இங்கு நிறை யென்பது அனைத்தும் நிறைந்த தென்பதே.

**நிறைவு[1]** *niraivu,* பெ. (n.) 1. முழுமை fullness, completeness, perfection. "*குறைவிலா நிறைவே*" (திருவாச. 22.5.). 2. மிகுதி; abunance, copiousness, profusion. 3. நிரப்புகை; filling, diffusing. 4. பொந்திகை; satisfaction, contentment. "*செல்வமென்பது சிந்தையினிறைவே*" (குமர. பிர. சிதம்.மும். 25.). 5. மகிழ்ச்சி; joy, gladness. "*முனிவர்க ணிறைவு கூர்ந்து*" (திருவாலவா. 1. 36.). 6. மாட்சிமை (திவா.); excellence, glory. 7. துறக்கம் (மோட்சம்); final bliss. "*வினைபோகும் வண்ண மிறைஞ்சுந் நிறைவாமே*" (தேவா. 241:2.).

தெ. நெரவு.

*[நில் → நிறை → நிறைவு.]*

**நிறைவு[2]** *niraivu,* பெ. (n.) 1. அமைதி; peace. (தொல். பொருள். 206 இளம்.), 2. அறிவோடு கூடிய ஒழுக்கம் (பேரா. திரு. 18; 1.), (உ.சொ களஞ்.); good behaviour with wisdom.

*[நிறை → நிறைவு.]*

**நிறைவுகுறைவாகியவெண்பொருட்டாரணை** *niṟaivu-kuṟāivāgiya-veṇ-poruṭṭāraṇai,* பெ. (n.) ஒகவகை (தாரணை) ஒன்பதினு ளொன்று (திவா.); one of navatāraṇai. nine modes in the art of meditation.

*[நிறைகுறை + ஆகிய + வெண்பொருள் + தாரணை.]*

**நிறைவுரை** *niraivurai,* பெ. (n.) விழாவிலோ, கருத்தரங்கிலோசிறப்புரையாய் நிகழ்த்தப்பெறும் சொற்பொழிவு;special address in a function or seminar.

*[நிறைவு + உரை]*

**நிறைவுவிழா** *niṟaivu-viḻā,* பெ. (n.) ஒன்று முடிவுபெறும் நாளில் நிகழ்த்தப்படும் விழா; concluding function (of a series) *விளையாட்டுப் போட்டியின் நிறைவு விழாவில் முதலமைச்சர் பரிசுகளை வழங்கினார்.* (உ.வ.).

*[நிறைவு + விழா.]*

**நிறைவேற்றம்** *niṟaivēṟṟam,* பெ. (n.) 1. முற்றுகை; fulfilment. 2. நடத்துகை; performance, execution.

*[நிறைவேறு → நிறைவேற்று → நிறைவேற்றம்.]*

**நிறைவேற்று¹–தல்** *niṟaivēṟṟu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. முற்றச்செய்தல்; to fulfil, complete. 2. நடத்துதல்; to perform, execute, effect. கட்டளையை நிறைவேற்றினான். (உ.வ.).

*[நிறைவு + ஏற்று → நிறைவேற்று.]*

**நிறைவேற்று²–தல்** *niṟaivēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. முடிவு பெறும்படி அல்லது பயன்கிடைக்கும்படி நடவடிக்கை மேற்கொள்ளுதல்; செயற்படுத்துதல்; to carry out, to fulfil, to implement. இந்தத் திட்டத்தை நிறைவேற்ற ஏராளமாகச் செலவாகும். (உ.வ.). வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டுமென்பதில் ஆளுங்கட்சி ஆர்வமாக உள்ளது. (உ.வ.). தங்களது கோரிக்கைகளை ஆட்சிக்குழு நிறைவேற்றும்வரைப் போராடுவதெனத் தொழிற்சங்கம் முடிவெடுத்தது. (உ.வ.). 2. (கடமையை, வேலையைச்) செய்தல், நிகழ்த்துதல்; to perform (ones duty) அரசு அலுவலர் தம் பணியை நிறைவேற்றவிடாமல் தடுப்பது சட்டப்படிக் குற்றமாகும். (உ.வ.).

*[நில் → நிறை → நிறைவேற்று–,]*

**நிறைவேறு¹–தல்** *niṟaivēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. முற்றுதல்; to be fulfilled, accomplished, completed. 2. நன்னிலை அல்லது நற்பேறடைதல்; to attain heavenly bliss. அவன் நற்செயலால் முன்னோர் நிறைவேறிப் போனார்கள். (உ.வ.).

**தெ.** நெறவேறு.

*[நிறை → நிறைவு + ஏறு–.]*

**நிறைவேறு²–தல்** *niṟaivēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. (மேற்கொண்ட நடவடிக்கையால்) முடிவு அல்லது பயன் கிடைத்தல்; to be completed, to get fulfilled. இந்தத் திட்டங்கள் நிறைவேற மூன்றாண்டுக் காலம் ஆகும். (உ.வ.). உன்னுடைய ஆசைகள் நிறைவேறும் காலம் வந்துவிட்டது. (உ.வ.). 2. (கடமை) செய்யப்பட்டு முடிதல்; (of duty) to be done. என் கடமை நிறைவேறியது; இனி என் பொறுப்பும் விட்டது. (உ.வ.). 3. (தீர்மானம், சட்டமுன்வடிவு முதலியவை) பெரும்பான்மை உறுப்பினர்களின் ஒப்புதல் பெறுதல்; (of a bill, amendment) to be passed.

*[நில் → நிறை → நிறைவேறு–,]*

**நிறோவடி** *nirōvaḍi,* பெ. (n.) பொன்னாங் காணி; sessila plant - illecebrum sessile. (சா.அக.).

**நின்** *nin,* பெ. (n.) உனது; yours.

*[நீன் → நின்.]*

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற் போல், நீன் என்பது நின் என்று வேற்றுமை உருபேற்கக் குறுகும். நீன் என்பது இலக்கண வறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப் படுகிறது. நானும் நீனும் செல்வோமா? (உ.வ.)

**நின்பம்** *ninbam,* பெ. (n.) வேம்பு; neem tree-margora tree. (சா.அக.).

**நின்றசீர்நெடுமாறன்** *ninra-šīr-neḍumāran,* பெ. (n.) திருஞானசம்பந்தர் காலத்தவரும் பாண்டியவரசரும் நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவருமான அடியார்; a cononized šaiva saint, Pandiya king and contemporary of Tiruñānašambandamoorti nāyanār of 63. *"நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன்"* (தேவா. 737, 8.).

**நின்றசொல்** *ninra-šol,* பெ. (n.) மாறாவாக்கு; promise.

*[நில் → நின்ற + சொல்.]*

**நின்றசொல்லர்** *ninra-šollar,* பெ. (n.) சொன்ன சொல் மாறா மாண்பினர்; the man who keeps his promise; honest man. *"நின்ற சொல்லர் நீடுதோன்றினியர்"* (நற். 1.).

*[நின்றசொல் → நின்றசொல்லர். 'அர்' உடைமைப் பொருள்பற்றிய மதிப் பொருமை ஈறு.]*

**நின்றதிருக்கோலம்** *ninra-tirukkōlam,* பெ. (n.) திருமால் திருக்கோலம் மூன்றனுள் நின்றருளும் நிலை; standing posture of Viṣṇu, one of three tiru-k-kōlam.

*[நில் → நின்ற + திருக்கோலம்.]*

**நின்றது** *ninradu,* பெ. (n.) 1. நிலைத்த பொருள்; that which is permanent. *"நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்து"* (நாலடி, 47.). 2. நிலைத்திணை; category of immovables. *"நின்றனவுந் திரிந்தன"* (கம்பரா. கையடை. 13.). 3. எஞ்சியது; remainder, as standing over. *"நின்றதிற் பதினையாண்டு பேதை பாலகன தாகும்"* (திவ். திருமாலை. 3.).

*[நில் → நின்றது.]*

**நின்றநிலை** *ninra-nilai,* பெ. (n.) 1. நிற்கும் நிலை; standing posture. 2. ஒரே நிலை; same position or condition. 3. முரண்டு (பிடிவாதம்); obstinacy.

*[நின் → நின்ற + நிலை.]*

**நின்றவடி** *ninra-v-aḍi,* பெ. (n.) 1. நின்ற இடம்; standing place. 2. காலடி; foot-print.

*[நில் → நின்ற + அடி.]*

**நின்றவிடந்தீய்ஞ்சான்** *ninra-v-idan-tīyñjān,* பெ. (n.) குருவிச்சை என்னுஞ் செடி; box-leaved, ivory wood.

*[நில் → நின்ற + இடந்தீய்ஞ்சான். தீய்ந்தான்> தீய்ஞ்சான்.]*

**நின்றாடல்** *ninrāḍal,* பெ. (n.) அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல் என்ற அறுவகைப்பட்ட நின்றாடுந் தெய்வக் கூத்து (சிலப். 3:14, உரை.); divine dance in standing posture, of six kinds, viz., alliyam, koṭṭi, kuḍai, kuḍam, pāṇḍaraṅgam, mal.

*[நில் → நின்று + ஆடல்.]*

**நின்றால்மேனி** *ninṟāl -mēṉi,* பெ. (n.) மாந்தர் நிழல்விழுந்தால் பொன்னிறமாகுமொரு பூடு. இதில் இரசங்கட்டும். வங்கம் சுண்ணமாகும்; a plant that turns to golden colour when mens shadow fall on it. it is capable of binding mercury and calcifying tin. (சா.அக.).

**நின்றாற்சிணுங்கி** *ninṟaṟ-ciṇuṅgi,* பெ. (n.) சிறியா நங்கை (பதார்த்த. 247.) எனுஞ்செடி; a species of small milkwort, a herb that is continuously emitting water.

*[நின் → நின்று → நின்றால் + சிணுங்கி.]*

இது பாம்பின் நஞ்சினை முறிப்பதோடு பெண்ணைத் தன்வயப்படுத்தவுமுதவும் என்பது குறிப்பு.

**நின்றாற்போல்** *ninṟāṟpōl,* வி.எ. (adv.) திடீரென்று; suddenly. *நின்றாற்போல் விழுந்து விட்டான்.* (உ.வ.).

**நின்றிடம்தீஞ்சான்** *ninṟiḍam -tīñjāṉ,* பெ. (n.) *1. நின்றவிடம் தீய்ஞ்சான் பார்க்க; ninṟa-v-iḍam tīyñjaṉ.* 2. பல்லிப்பூடு; lizard plant-buchnere asiatica or strigalutea (lour.) (சா.அக.).

*[நின்றவிடந்தீஞ்சான் → நின்றிடம் தீஞ்சான். தீய்ந்தான் → தீஞ்சான் (கொ.வ).]*

**நின்றிதம்** *ninṟidam,* பெ. (n.) தரைப்பசலி; malabar night shade. (சா.அக.).

**நின்று**[1] *ninṟu,* வி.எ. (adv.) எப்பொழுதும்; always, permanently. *"நிறைமய னொருங்குட னின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே"* (பரிபா. 15, 7.).

*[நில் → நின்று.]*

**நின்று**[2] *ninṟu,* இடை. (part.) ஐந்தாம் வேற்றுமைப் பொருள்பட வரும் ஓரிடைச்சொல் (திருக்கோ. 34, உரை.); a particle used in the ablative sense. *மரத்தினின்று பழம் விழுந்தது.*

*[நில் → நின்று.]*

**நின்று**[3] *ninṟu,* பெ. (n.) 1. நிற்றல். standing. *2. நிறுத்தல்* stop.

**நின்றுசிணுங்கி** *ninṟu-ciṇuṅgi,* பெ. (n.) *நின்றாற்சிணுங்கி பார்க்க;* see *ninṟāṟ-ciṇuṅgi.*

*[நில் → நின்று + சிணுங்கி.]*

**நின்றுபயனின்மை** *ninṟu-payaṉ-iṉmai,* பெ. (n.) நூற்குற்றம் பத்தனுள் சொல் அல்லது தொடர் பொருட்பேறின்றி இருத்தலாகிய குற்றம் (நன். 12.); the state of being purposeless, as of a word or phrase, one of ten nūr-kuṟṟam.

*[நில் → நின்று + பயன் + இன்மை.]*

**நின்றுபிடி—த்தல்** *ninṟu-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தாக்குப்பிடித்தல் (யாழ்ப்.); to withstand. **கட்டடம் எந்தப் புயலுக்கும் நின்றுபிடிக்கும்.**

*(உ.வ.). இந்தத் துணி இரண்டு வெள்ளைக்கு நின்று பிடிக்காது, வெளுத்துவிடும். (உ.வ.).*

*[நின்று + பிடி –,]*

**நின்றுபோ[1]—தல்** *ninṟu- pō-,* 8 செ.கு.வி. (v.i.) வேலை முதலியன நடவாதுபோதல்; to stop, cease as work. *வேலை நின்றுபோய்விட்டது. (உ.வ)*

*[நில் → நின்று + போ.]*

**நின்றுபோ[2]** *ninṟu-pō,* வி.எ. (adv.) ஓரிடத்தைக் கடக்குமுன் விழிப்பாய்க் கட; stop and go.

*[நின்று + போ.]*

**நின்றும்** *ninṟum,* வி.எ. (adv.) ஐந்தாம் வேற்றுமை யினீக்க வுருபுகளினொன்று; a particle used in the ablative sense. *ஊர்தியினின்றும் இழிந்தான். (உ.வ.).*

*[நின்று → நின்றும்.]*

**நின்றுவற்று—தல்** *ninṟu- vaṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சொல் அல்லது தொடர் இருந்தும் பயனிலதாதல் (குறள், 825, உரை.); to be wanting in significance, as a word or phrase in a sentence.

*[நில் → நின்று + வற்று –,]*

**நின்றுவா—தல் (நின்றுவருதல்)** *ninṟu- vā-,* 18 செ.கு.வி. (v.i.) 1. காலந்தாழ்ந்து வருதல் (உ.வ.); to delay in coming. 2. விட்டு விட்டு வருதல்; to come intermittently. *காய்ச்சல் நின்றுவருகிறது. (உ.வ).*

*[நின்று + வா –,]*

**நின்றுவிடு—தல்** *nindṟu- vidu-,* 18 செ.குன்றா. வி. (v.t.) *நின்று போ–,* பார்க்க; see *ninṟu-pō-.*

*[நில் → நின்று+ விடு.]*

**நின்றுவெட்டி** *ninṟu- vetti,* பெ. (n.) மண்வெட்டி வகை; a long-handled hoe.

*[நில் → நின்று + வெட்டி.]*

மண்வெட்டியின் காம்பு நின்று மண்வெட்டுவதற்குப் பெரிதாகவும், குனிந்து வெட்டுவதற்குச் சிறிதாகவும் இருக்கும்.



**நின்றேத்துவார்** *ninṟēttuvār,* பெ. (n.) நின்று கொண்டு அரசரின் புகழ்பாடுவோர் (சிலப். 3:48, உரை.); panegyrists who stand and praise their king.

*[நில் → நின்று + ஏத்துவார்.]*

**நின்றை[1]** *ninṟai,* இடை. (part.) அசைநிலை (தொல். சொல். 426.); an-expletive.

**நின்றை[2]** *ninṟai,* பெ. (n.) சென்னைக் கருகிலுள்ள தின்னனூர் என்று வழங்கும் திருநின்றவூர்; Tinnanūr, a village near Chennai. *"காளத்தி நின்றைக்கே சென்றக்கால்"* (தொண்டை. சத. 32.).

நின்றவூர் → நின்றை.
ஒ.நோ: தஞ்சாவூர் → தஞ்சை.

**நின்றோசி** *ninṟōši,* பெ. (n.) நாகப்படக் கற்றாழை; thorn less aloe. (சா.அக.).

**நினவ** *ninava,* வி.எ. (adv.) உன்னுடைய; yours. *'நினவ கூறுவல் எனவ கேண்மதி' (புறநா. 35.).*

*[நீ → நின் → நினவ; 'அ' பலவின் பால் விகுதி.]*

**நினை[1]–த்தல்** *ninai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கருதுதல்; to think. *"விளியுமென் இன்னுயிர் வேறெல்லாம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து"* (குறள்,1209.). 2. (ஆலோசித்தல்) கலத்தல்; to consider, reflect, ponder. *"வினை வேறு படாஅப் பலபொரு ளொருசொன் னினையுங் காலைக் கிளந்தாங்கியலும்"* (தொல். சொல். 55.). 3. நினைவிற் கொணர்தல்; to remember. 4. ஒன்றித்திருத்தல் (தியானத்தல்); to medidate. *"நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற், குறித்த பொருளொடு கொளுத்துவது நினைவே"* (சிலப். 14:11, உரை); 5. அறிதல்; to know, understand. *"நீதிகள் சொல்லியு நினைய கிற்கிலார்"* (தேவா. 52. 10.). 6. நோக்கமாகக் கொள்ளுதல்; to intend, design, have in view. 7. போலச் செய்தல் (பாவித்தல்); to imagine, fancy.

க. நெனே.

**நினை[2]–த்தல்** *ninai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. *நினை[1]–* பார்க்க; see *ninai-. "என்கொலோ நினைப்பதே"* (திருவாச.5,75). 2. தீர்மானித்தல்; திகைத்தல் (வின்.); to resolve determine.

ம. நினையுகே. க நீனாசு.

**நினைஇ** *ninai-i-,* வி.எ. (adv.) நினைந்து; to think.

*[நினை + இ; இ – அளபெடை.]*

**நினைத்தகாரியம்** *ninaitta-kāriyam,* பெ. (n.) எண்ணிய பொருள்; thinking matter.

*[நினைத்த + காரியம். கரு → கார் → காரியம்.]*

**நினைதல்** *ninaidal,* பெ. (n.) மனனம்; reflection. *"தெரித னினைத லெண்ண லாகாத் திருமாலுக்கு"* (திவ். திருவாய். 6, 9, 11.).

*[நினை → நினைதல்.]*

**நினைப்பணி** *ninaippaṇi,* பெ. (n.) ஒரு பொருள் ஒப்புமையாற் பிறிதொன்றினை நினைவு படுத்துவதாகக் கூறும் அணிவகை (அணியி. 8.); figure of speech where in an object suggests another similar to it.

*[நினைப்பு + அணி.]*

**நினைப்பாயிரு–த்தல்** *ninaippāy-iru-,* 3 செ.கு.வி. (v.i.) 1. கருத்தாயிருத்தல்; to be mindful, cautious, attentive, thoughtful. 2. மனத்தினை ஒரு முகப்படுத்துதல்; to concentrate ones thoughts.

*[நினைப்பு → நினைப்பாய் + இரு.]*

**நினைப்பாளி** *ninaippāḷi,* பெ. (n.) நினைவாற்றலுடையோன் (வின்.); person of retentive memory.

*[நினைப்பு + ஆள் + இ.]*

ஒ.நோ.முதலாளி.

**நினைப்பிடு–தல்** *ninaippiḍu-,* 20செ.கு.வி. (v.i.) 1. ஆணையிடுதல்; to give command, issue an order. *இராஜா இன்ன மண்டபத்தேயிருந்து நினைப்பிட்டான் என்றால்* (திவ். திருமாலை. 1. வியா. 13.).

*[நினைப்பு + இடு.]*

**நினைப்பீடு** *ninaippīḍu,* பெ. (n.) *நினைப்பு* பார்க்க; see *ninaippu.* சர்வேச்வரன் இவர் களுடைய பூர்வாபராதத்தாலேயிட்ட நினைப்பீடு மாறுகைக்கு ப்ரதான காரணம் மூன்றுண்டு (ரஹஸ்ய. 709.).

*[நினைப்பிடு → நினைப்பீடு.]*

**நினைப்பு[1]** *ninaippu,* பெ. (n.) 1. *நினைவு* பார்க்க; see *ninaivu.* *"நினைப்பெறு நெடுங் கிணற்றை நின்றுநின் றயராதே"* (தேவா. 1145. 8.). 2. (ஏரணம்) *கரணியம் நிகழாது உனக்கிவர் தாயுந் தந்தையும் என்றாற் போலப் பிறர் சொலத் தான் கருதுதலாகிய பிரமாணபாசம்* (மணிமே. 27:75.); fallacious reasoning based only on hearsay, one of eight piramāna pāsam.

*[நினை → நினைப்பு.]*

**நினைப்பு[2]** *ninaippu,* பெ. (n.) சூள்; will. *"நாட்டுக்கிட்ட நினைப்பு அந்தப் புரத்துக்கு அரிதாக வேணுமோ"* (ஈடு, 1, 4, 5, பக். 191.).

*[நினை → நினைப்பு.]*

**நினைப்பு[3]** *ninaippu,* பெ. (n.) 1. (ஒருவரை அல்லது ஒன்றைக் குறித்த) எண்ணம்; thought, idea. *அவர் மறுக்க மாட்டார்; என்னும் நினைப்பில் அதைச் சொன்னேன். (உ.வ.). 'நினைப்பு பிழைப்பைக் கெடுக்கும்'* (பழ.). 2. *நினைவு* பார்க்க; see *ninaivu.*

*[நினை → நினைப்பு.]*

**நினைப்பு[4]** *ninaippu,* பெ. (n.) 1. நினைக்குகை; thought. அது உடற்குற்றம் பதினெட்டி னொன்று (சூ. நி. 2 12: 118.).

**நினைப்பூட்டு[1]-தல்** *ninaippūṭṭu-,*5 செ. குன்றாவி. (v.t.) 1. நினைவுபடுத்துதல்; to put in mind. *மாலையில் முதல்வரைச் சந்திக்க வேண்டு மென்பதைச் செயலருக்கு நினைப்பூட்டினார்.* (உ.வ.). 2. அறிவுறுத்துதல்; to suggest, indicate. *குறித்த காலத்தில் அகரமுதலி வெளிவருதல் கட்டாயமென்பதை இயக்குநர் நினைப்பூட்டினார். (உ.வ.).*

*[நினைப்பு + ஊட்டு.]*

**நினைப்பூட்டு[2]** *ninaippūṭṭu,* பெ. (n.) *நினைவூட்டு* பார்க்க; see *ninaivūṭṭu.*

*[நினைவூட்டு → நினைப்பூட்டு.]*

**நினைவுஅஞ்சலி** *ninaivu-añjali,* பெ. (n.) *நினைவஞ்சலி பார்க்க;* see *ninai-v-añjali.*

*[நினைவு + அஞ்சலி.]*

**நினைவஞ்சலி** *ninai-v-añjali,* பெ. (n.) ஒருவர் இறந்தநாளில் அவரை நினைத்துச் செலுத்தும் இரங்கல்; homage (done on someones death anniversary.).

*[நினைவு + அஞ்சலி.]*

**நினைவற்றுப்போ-தல்** *ninaivaṟṟu-p-pō-,* 8செ.கு.வி. (v.i.) *மறந்துபோதல்;* to forget.

*[நினைவு + அற்று+ போதல்.]*

**நினைவாலயம்** *ninai-v-ālayam,* பெ. (n.) *நினைவாலையம் பார்க்க,* see *ninai-v-ālaiyam.*

*[நினைவாலையம் – நினைவாலயம்.]*

**நினைவாலையம்** *ninai-v-ālaiyam,* பெ. (n.) (புகழ் பெற்றவரின் அல்லது உயர்ந்த நோக்கத் திற்காக உயிர் துறந்தவரின்) நினைவாகக் கட்டப்படும் கட்டடம்; memorial, mausoleum.

*[நினைவு + ஆலையம். ஆல் → ஆலை = சுற்றிவருதல், சுற்றுமதில், மதிலகத்துக் கோயில். ஆலை → ஆலையம். ஆலை = கோயிலின் சுற்றுமதில்.]*



**நினைவில்கொள்(ளு)—தல்** *ninaivil-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) *நினைவிற் கொள்(ளு)—, பார்க்க;* see *niai-vir-koḷ(ḷu)-,*

*[நினைவில் கொள்(ளு) → நினைவிற் கொள்(ளு)—,]*

**நினைவில்வை—த்தல்** *ninaivil-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *நினைவுவை— பார்க்க;* see *ninaivu-vai-.*

**நினைவிற்கொள்ளு—தல்** *ninaivir-koḷḷu-,* 10 செ.குன்றாவி. (v.t.) *1. திட்டமிடல், to plan. 2. எண்ணத்தில் இருத்துதல்; to keep in the mind.*

**நினைவு** *ninaivu,* பெ. (n.) **1.** எண்ணம்; thought, idea. *"நினைவுந் துணிபுமாகும்"* (தொல். சொல். 337.). **2.** உசாவு, கலப்பு, reflection, consideration. *"நினைவிலார் போல நெஞ்ச நெகிழ்த்தியோ"* (கம்பரா. நாகபா. 213.). **3.** நினைவாற்றல்; recollection, remembrance. **4.** பாவனை; imagination. **5.** நோக்கம்; object, design, purpose. **6.** விழிப்பு (கவனம்.); care, attention, thoughtfulness. **7.** ஒன்றிப்பு (தியானம்); meditation, contemplation. *'மனநிலை திரியாமற் குறித்த பொருளொடு கொலுத்த நினைவே'* (தொல். பொருள். 75, உரை.) **8.** வருத்தம்; anxiety, distress. *"நெறிமையிற் கூற நினைவினகன்றான்"* (சீவக. 333.). **9.** அரசர்கட்டளை (கல்.); order, command as of a king. **10.** நினைவுப் பொருள் (வின்.); memorandum, memento. **11.** ஊகம்; supposition. **12.** கருத்து; notion. **13.** கருத்துருவம்; conception. **14.** கற்பனை; fancy.

ம. நினம்.

*[நினை → நினைவு.]*

**நினைவுக்குறிப்பு** *ninaivu-k-kurippu,* பெ. (n.) ஒருவர் தனது சொந்த வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளையும் சந்தித்த பெருமக்களையும் நினைவு கூர்ந்து எழுதிய செய்திகளின் தொகுப்பு; memories.

*[நினைவு + குறிப்பு.]*

**நினைவுகூர்—தல்** *ninaivu-kūr-,* 2 செ.குன்றாவி. (v.t.) நினைவுக்குக் கொண்டு வருதல்; to remember, recollect, to bring ones mind. *தலைவர் தன் இளமைக் காலத்தை நினைவு கூர்ந்தார். (உ.வ.). இது உங்கள் வாழ்க்கையில் என்றும் நினைவு கூரத்தக்க செய்தி. (உ.வ.).*

*[நினைவு + கூர்—,]*

**நினைவுகேடு** *ninaivu-kēḍu-,* பெ. (n.) *நினைவுத்தப்பு* பார்க்க; see *ninaivu-t-tappu.*

*[நினைவு+ கேடு.]*

**நினைவுச்சின்னம்** *ninaivu-c-cinnam,* பெ. (n.) நினைவில் நிறுத்துவதற்காகவும் நன்றியைத் தெரிவிப்பதற்காகவும் அடையாள மாக நிறுவப்படுவது; memorial, monument. ***மொழிப்போரில் உயிர் நீத்த மாவீரர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்பிட தமிழக அரசு ஆணையிட்டுள்ளது.(உ.வ.). இவை விடுதலைப் போராட்ட வீரர்களின் நினைவுச்சின்னம். (உ.வ.).***

*[நினைவு + சின்னம்.]*



**நினைவுத்தடுமாற்றம்** *ninaivu-t-taḍumāṟṟam,* பெ. (n.) **1.** *நினைவுத் தப்பு* பார்க்க; see *ninaivu-t-tappu.* **2.** மயக்கம்; delirium, delirium tremens. **3.** மனநலக்கேடு (பைத்தியம்); பித்து, dementia.

*[நினைவு + தடுமாற்றம்.]*

**நினைவுத்தப்பு[1]-தல்** *ninaivu-t-tappu,* 7செ.கு.வி. (v.i.) மறதியாதல்; to forget.

*[நினைவு + தப்பு-.]*

**நினைவுத்தப்பு[2]** *ninaivu-t-tappu,* பெ. (n.) **1.** நினைவுக்குறைவு; loss of memory. **2.** அறிவு அழிகை; loss of consciousness.

*[நினைவு + தப்பு.]*

**நினைவுத்தூண்** *ninaivu-t-tūṇ,* பெ. (n.) ஒருவரின் நினைவாக நிறுவப் பெறும் தூண்; memorial pillar. ***சங்கப் புலவர்கள் வாழ்ந்ததாக கண்டறியப்பட்ட ஊரில் நினைவுத்தூண் நிறுவும் பணியைத் தமிழ் வளர்ச்சித் துறை மேற்கொள்ளும் என்று முதலமைச்சர் அறிவித்தார். (உ.வ.).***

*[நினைவு + தூண்.]*



**நினைவுதிரும்பு-தல்** *ninaivu-tirumbu-,* 7. செ.கு.வி. (v.i.) (ஒருவர் இழந்த) தன் உணர்வு மீண்டும் வருதல்; to regain consciousness. ***நேற்று நிகழ்ந்த ஏதத்தில் சிக்கிய என் நண்பருக்கு இன்னும் நினைவு திரும்பவில்லை. (உ.வ.).***

*[நினைவு + திரும்பு-.]*

**நினைவுநாள்** *ninaivu-nāḷ,* பெ. (n.) (ஒருவருடைய மறைவிற்கு நினைவேந்தல் (அஞ்சலி) செலுத்துகிற) இறந்தநாள்; death anniversary. ***ஆண்டுதோறும் சனவரி 30ஆம் பக்கல் வரும் அண்ணல் காந்தியடிகளின்***

*நினைவு நாள் தீண்டாமை ஒழிப்பு நாளாகக் கடைபிடிக்கப்படுகிறது.* *(உ.வ.).*

*[நினைவு + நாள்.]*

**நினைவுபடுத்து—தல்** *ninaivu-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நினைவுக்குக் கொண்டு வருதல்; to recollect. *ஏதம் நடந்தபோது என்ன நிகழ்ந்தது என்பதை என்னால் நினைவு படுத்த முடியவில்லை.* *(உ.வ.).* **2.** (ஒன்றை மறந்து விடாமல்) நினைக்கச் செய்தல்; to remind. *நாளை திருமணத்திற்குச் செல்ல வேண்டுமென அமைச்சருக்கு அவர் உதவியாளர் நினைவுபடுத்தினார்.* *(உ.வ.).*

*[நினைவு + படுத்து—.]*

**நினைவுமறதி** *ninaivu-maṟadi,* பெ. (n.) நினைவின்மை (இ.வ.); loss of memory.

*[நினைவு + மறதி.]*

**நினைவுமோசம்** *ninaivu-mōšam,* பெ. (n.) *நினைவுத் தப்பு2* (யாழ்.அக.) பார்க்க; see *ninaivu-t-tappu.*

**நினைவுவை—த்தல்** *ninaivu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** மனம்வைத்தல்; to fix the mind on, concentrate the thoughs on. **2.** நினைதல் (வின்.); to think. **3.** நன்றியின் பொருட்டேனும் அன்பினாலேனும் நினைவு வைத்தல்; to remember with gratitude or affection. **4.** இச்சித்தல்; to hanker after, desire.

*[நினைவு + வை—,]*

**நினைவூட்டிக்கொள்(ளு)—தல்** *ninai-v-ūṭṭi-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) மறந்தவற்றை நினைவுபடுத்துதல்; to remember.

*[நினைவு + ஊட்டிக்கொள்—,]*

**நினைவூட்டு[1]—தல்** *ninaivūṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *நினைவுபடுத்து—,* பார்க்க; see *ninaivu-paḍuttu-,*

*[நினைவு + ஊட்டு—,]*

**நினைவூட்டு[2]** *ninaivūṭṭu,* பெ. (n.) கிடப்பில் உள்ள செய்தியை முடிக்குமாறு எழுதும் மடல்; reminder. அகரமுதலி விற்பனையான செய்தியைத் தெரிவிக்குமாறு கடலூர் மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலருக்குப் பல நினைவூட்டு எழுதியும் மறுமொழி இல்லை. (உ.வ.).

*[நினைவு + ஊட்டு.]*

**நினைவேந்தல்** *ninai-v-ēndal-,* பெ. (n.) **1.** சான்றோரையோ மதிப்புமிக்க குடும்பப் பெரியோரையோ அவரின் மறைவையொட்டி அவரின் பெருமைகளை நினைவு கூர்வதான நிகழ்ச்சி, இரங்கற்கூட்டம்; condolence meeting after the death of respected leader or family head. **2.** மறைந்தவரின் நினைவுநாள்; anniversary commemorative of a person's death.

*[நினைவு + ஏந்தல்]*

**நினைவோட்டம்** *ninai-v-ōṭṭam,* பெ. (n.) மறந்ததை நினைக்கை; remembrance.

*[நினைவு + ஓட்டம்.]*

**நினைவோடு—தல்** *ninaivōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) மறந்தவை நினைவுக்கு வருதல்; to remember.

*[நினைவு + ஓடு.]*

**நீ**[1] *nī,* 'ந்'கர மெய்யும் 'ஈ' கார உயிருங் கூடிய கூட்டெழுத்து; the compound of 'n' and 'ī'.

*[ந் + ஈ.]*

**நீ**[2]**—த்தல்** *nī,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பிரிதல்; to separate from "*நல்லசொல்லி மணந்தினி நீயே னென்ற தெவன்கொல் லன்னாய்*" (ஐங்குறு.22.). 2. துறத்தல்; to renounce, as the world. "*ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு*" (குறள்,21.). 3. தள்ளுதல் (வின்.); to put away, reject. 4. இழித்தல்; to put to disgrace. "*பிள்ளையேயாயினு நீத்துரையார்*" (ஆசாரக்.69.). 5. வெறுத்தல்; to despise, loathe. "*ஊரேது வல்லதே தென்றா னீத்து*" (திருவால.13.13.). 6. விடுதல்; to abandon, leave. "*மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் உயிர்நீப்பர் மானம் வரின்*" (குறள்,969.).

**நீ**[3]**—த்தல்** *nī-,* 4. செ.கு.வி. (v.i.) நீங்குதல்; to be removed. "*மயிர்நீப்பின் வாழாக் கவரிமா*" (குறள்,969.).

**நீ**[4] *nī,* ம.பெ. (pron.) முன்னிலையொருமைப் பெயர்; second person singular "*நீயென வரூஉங்கிளவி*" (தொல்.சொல்.190)

**ம.** நிங்ஙள்;
**க., து., கோத.** நிம்;
**தெ.** ஈறு, மீறு;
**து.** இரு, மிரு;
**கொலா.** நிர்; **நா.** நிர்;
**பர்.** இம்; **கட.** இம்;
**கோண்.**இம்மக், நிம்மத் நிமெக்;
**கூ.**ஈறு;
**குவி.** மீம்பு; **குரு.** நீம்;
**மால.** நம்; **பிரா.** நும்;

நீன் → நீ (கடைக்குறை)

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற் போல நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கணவறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப் படுகின்றது. நீனுக்குப் பன்மை நீம் என்பது (இலக்.கட்.4.).

**நீ**[5] *nī,* பெ. (n.) நீங்கு; remove.

**நீ**[6] *nī,* பெ. (n.) மலைவேம்பு; hill neem-melia composita. (சா.அக.).

**நீக்கப்பெருக்கம்** *nīkka-p-perukkam,* பெ. (n.) நீக்குப் போக்கு (நாஞ்.) பார்க்க; *see nīkku-p-pōkku.*

*[நீக்கம் + பெருக்கம்.]*

**நீக்கப்பொருள்** *nīkka-p-poruḷ,* பெ. (n.) ஐந்தாம்வேற்றுமைப் பொருள்களுளொன் றாகிய நீக்குதற்குரிய பொருள்; case ending of the ablative denoting separation. அது, மலையினின்று நீங்கினான் என்பதிற்போல வரும். (நன்.219,உரை.).

*[நீக்கம் + பொருள்]*

**நீக்கம்**[1] *nīkkam,* பெ. (n.) 1. நீங்குகை; separation, removal, disengagement, liberation. '*நீக்கப்பொருண்மை தீர்தல் பற்று விடுத லென்பனவற்றாற் பெறப்படும்*' (தொல். சொல்.77. சேனா.). 2. பிளப்பு (வின்.); interstice, gap, chink, crack. 3. நீளம் (திவா.); length. 4. முடிவு; end, close '*இயற்கைப் புணர்ச்சியது நீக்கத்துக்கண்*' (திருக்கோ.110, உரை.). 5. தறுவாய்; occasion, opportunity. "*நீக்கங்கிடைத்தால் விடமாட்டான்*" (வின்.).

*[நீங்கு → நீக்கு → நீக்கம்.]*

**நீக்கம்²** *nīkkam,* பெ. (n.) இடைப்பட்ட இடம்; interspace. *"எள்ளிருக்க நீக்கமின்றி"* (கதிரைமலைப் பேரின்பக்காதல்,பக்.12.).

*[நீங்கு → நீக்கம்.]*

**நீக்கம்³** *nīkkam,* பெ. (n.) குறுக்குக் கோடிடுகை, அழிக்கை; cancellation.

*[நீங்கு → நீக்கு→ நீக்கம்.]*

**நீக்கம்⁴** *nīkkam,* பெ. (n.) 1. நீக்கல்; removal. 2. பிரிப்பு (சிவஞானபோத. சூத்.1.); separation.

*[நீக்கு→ நீக்கம்.]*

**நீக்கம்⁵** *nīkkam,* பெ. (n.) காப்பு, நீக்கம், நிறைப்பு என்னும் மூன்றுவகை மருந்துகளில் ஒன்று. நோய்களைத் தீர்க்கும் மருந்து; one of the three kinds of treatment by medicine ie. curing disease. (சா.அக.).

**நீக்கமற** *nīkkam-aṟa,* வி.எ. (adv.) ஓர் இடம்கூட விடாமல்; எங்கும்; everywhere, omnipresent. *காற்று நீக்கமற நிறைந்துள்ளது. (உ.வ.)*

*[நீக்கம் + அற → நீக்கமற.]*

**நீக்கல்¹** nīkkal, பெ. (n.) அகக்கூத்தின் ஒருபிரிவாகிய வடுகிற்குரிய கால்கள் பதினான்கனுள் ஒன்று; one of the dance posture.

வடுகிற்குறிய கால்களின் வகைகள்:

1. சுற்றுதல்.
2. அறிதல்.
3. உடைத்தல்.
4. ஒட்டுதல்.
5. கட்டுதல்.
6. வெட்டுதல்.
7. போக்கல்.
8. நீக்கல்.
9. முறுக்கல்.
10. அணுக்கல்.
11. வீசல்.
12. குடுப்புக்கால்.
13. கத்தரிகைக்கால்.
14. கூட்டுதல்.

(சிலப்.3:15 உரை.).

**நீக்கல்²** *nīkkal,* பெ. (n.) 1. அழிக்கை; destroying *"உலகம் யாவையுந் தாமுளவாக்கலு நிலைபெறுத் தலு நீக்கலும்"* (கம்பரா.சிறப்.1.). 2. மாறுபாடு (வின்.); opposition, disagreement. 3. துளை; opening, hole. நீக்கல்வழியாய்ப் பார் (யாழ்ப்.). 4. படகின் தையலிணைப்பு (யாழ்ப்.); seam of a ship.

*[நீக்கு → நீக்கல்.]*

**நீக்கல்போடு-தல்** *nīkkal-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) தொண்டைப் பயிரைக் காற்றோட்டம் ஏற்பட நீக்கி விடுதல்; to make a gap in the crop field for free circulation of air.

*[நீக்கல் + போடு-.]*

**நீக்கவுருபு** *nīkkavurubu,* பெ. (n.) நீக்கப்பொருளைத்தருமுருபு; oblative case ending.

*[நீக்கல் + உருபு.]*

**நீக்கி** *nikki,* பெ. (n.) ஒழுக்கு; leakage. அறையின் வடமேற்குச்சாரில் ஒரு நீக்கியிருக்கிறது. (உ.வ.).

*[நீக்கு + இ.]*

**நீக்கிலக்கம்** *nikkilakkam,* பெ. (n.) கணக்குவகை (கணக்கதி.); a kind of calculation.

*[நீக்கு + இலக்கம்.]*

**நீக்கு[1]–தல்** *nikku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒழித்தல்; to remove, exclude, put aside, dismiss. "*இளைப்பினையியக்கம் நீக்கி*" (திவ். திருக்குறுந்.18.). 2. (ஒருவரைப்பதவியிலிருந்து) வெளி யேற்றுதல், (ஒருவரின் பெயரைப் பட்டியல் போன்றவற்றிலிருந்து) எடுத்தல்; remove, dismies (a person from his post)/strike off (one's name). அவரைப் பதவியிலிருந்து நீக்க ஆணை வந்துள்ளது. (உ.வ.) வாக்காளர் பட்டியலிலிருந்து என் பெயரை நீக்கி இருக்கிறார்கள். (உ.வ.). 3. விடுவித்தல்; to extricate, liberate, exempt. "*இப்புழுக்கூடு நீக்கெனை*" (திருவாச. 5,100.). 4. கழித்தல்; to deduct. வட்டியை நீக்கிக் கொடுத்தான் (உ.வ.). 5. ஒதுக்குதல் to turn, draw aside, as a curtain. திரையை நீக்கிப் பார்த்தான் (உ.வ.). 6. அழித்தல் (அகநி.); to kill, despatch, destroy. 7. அகலவைத்தல்; to spread out, as the legs, fingers. விரலை நீக்கு (உ.வ.). 8. திறத்தல்; to open, force apart. கதவை நீக்கிக் கொண்டு போ (உ.வ.). 9. பிரித்தல்; to separate. அவர் நட்பை நீக்கிவிட்டான் (உ.வ.). 10. கைவிடுதல்; to give up, abandon. "*மான வருங்கல நீக்கி*" (நாலடி,40.). 11. மாற்றுதல்; to change. *அவனெண்ணத்தை நீக்கி விட்டான்.* (உ.வ.). 12. விதித்திருக்கும் தடையை மாற்றிக் கொள்ளுதல்: வேண்டாம் என விடுதல். lift (sanctions, prohibition etc.,). பொருளியல் தடைகளை நீக்கினால் போதுமா. (உ.வ.)

தெ., க. நீகு. ம. நீக்குக.

*[நீங்கு → நீக்கு.]*

**நீக்கு[2]** *nikku,* பெ. (n.) விலக்கு; separation, removal. "*நீக்கிலாத்துப்பு*" (சூடா.8,46.). 2. பிளப்பு (வின்.); opening, cleft, crack. 3. கழிவு; deduction. 4. மிச்சம்; remainder, balance, *நீக்கு உருவாய் பதினைந்து* (வின்.).

*[நீங்கு → நீக்கு.]*

**நீக்கு[3]** *nikku,* பெ. (n.) நீக்கம் பார்க்க; see nikkam. "*நீக்கற வெடுத்துப் பல்காலின்னண நிரந்து கூறி*" (இரகு. திக்குவி. 218.).

**நீக்குப்பல்லன்** *nikku-p-pallan,* பெ. (n.) 1. குட்டிப்பல்லன்; one having snaggy teeth. 2. சிங்கப்பல்லன்; one having high teeth ie. with one cuspid or point. (சா.அக.).

*[நீக்கு + பல்லன்.]*

**நீக்குப்போக்கு** *nikku-p-pōkku,* பெ. (n.) 1. இணக்கமாயிருக்கை; adaptabiltiy, give-and-take. *அவன் நீக்குப்போக்குள்ளவன்* (உ.வ.). 2. மதிப்புரவு; etiquette, courtesy. *நீக்குப்போக்கறியாதவன்.* (உ.வ.). 3. வழி முறை (உபாயம்); means, expedient, contrivance. *அதற்கு ஒரு நீக்குப் போக்குக் காட்டவேண்டும்.* (உ.வ.). 4. உதவி; help. *அவனுக்கு நீக்குப்போக்குக் கிடையாது* (உ.வ.). 5. சாக்குப் போக்கு (இ.வ.); excuse. 6. இடைவெளி (வின்.); opening, interstice, gap. 7. இளைப்பாறுகை (இ.வ.); leisure, rest. 8. வாலாயம், முறைப்பணி, செயல் வரிசை (காரியக்கிரமம்) (வின்.); routine of business.

*[நீக்கு + போக்கு.]*

**நீகதம்** *nīgadam,* பெ. (n.) கொடிவகை (பதார்த்த.29.); climbing asparagus.

*[நீர் + கதம் = நீகதம்.]*

**நீகம்** *nīgam,* பெ. (n.) 1. தவளை (திவா.); frog. 2. மேகம் (சது.); cloud.

*[நீரகம் → நீகம். நீர் + அகம் – நீருள்வாழ்வது, நீரையுடையது.]*

**நீகாசம்**[1] *nīgāšam,* பெ. (n.) 1. ஒப்பு; resemblance. 2. உண்மை; truth.

**நீகாசம்**[2] *nīgāšam,* பெ. (n.) உறுதி (நாநார்த்த.) certainty.

**நீகாமன்** *nīgāmaṉ,* பெ. (n.) நீகான் (வின்.) பார்க்க; *see nīgāṉ.*

*[நீர் + கலமகன் → நீகாமன்.]*

**நீகாரம்**[1] *nīgāram,* பெ. (n.) நீ என்னும் எழுத்துக் குறியீடு; the letter nī.

*[நீ + காரம்]*

*'காரம்' நெடிற் சாரியை*

**நீகாரம்**[2] *nīgāram,* பெ. (n.) பனி (திவ.); frost, hoarfrost, dew, heavy dew. "*நீகார மழை பொழிய*" (பாரத.காண்டவ.19.).

*[நீர் + காரம்]*

**நீகாரம்**[3] *nīgāram,* பெ. (n.) மும்மலங்களு ளொன்றான ஆணவமலம் (சி.சி.2.80. மறைஞா.); (Saiva) matter which is eternally encasing the soul and lasting till its final liberation, one of mu-m-malam.

**நீகாரம்**[4] *nīgāram,* பெ. (n.) பொருட்டாகக் கருதுகையின்மை (யாழ்.அக.); contempt, disdain.

*[நீங்கு + ஆரம்.]*

**நீகான்** *nīgāṉ,* பெ. (n.) ஓசுநன், மாலுமி; captain, pilot, steersman. (திவா.); "*திசையறி நீகானும் போன்ம்*" (பரிபா.10:55.). "*கோடுயர் திணிமணலகன்றுறை நீகான் மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய*" (அகநா. 255.).

*[நீர் + கலமகன்.*
*கலமகன் → காமான் → கான்*
*ஒ.நோ: பெருமகன் → பெருமான் பெம்மான்*
*குலமகன் → கோமகன் → கோமான்.]*

**நீங்கல்**[1] *nīṅgal,* பெ. (n.) 1. விலகுகை, removing, separating. 2. பிளப்பு (யாழ்ப்.); gap,chink. 3. புறம்பு (யாழ்.அக.); outside.

*[நீங்கு → நீங்கல்.]*

**நீங்கல்**[2] *nīṅgal,* பெ. (n.) காட்டுப்பூவரசு; false fern tree.

**நீங்கல்**[3] *nīṅgal,* பெ. (n.) மாறுதல்; (in astrology) being changed as planets. (சா.அக.).

**நீங்கலாக** *nīṅgalāga,* இடை. (part.) (மற்றவற்றோடு குறிப்பிடப்படுவது) தவிர்த்து, தவிர; except; other than. *பிடிப்பட்டவர்களில் ஒருவர் நீங்கலாக மற்றவர்களைக் காவலர் உடனே விடுவித்து விட்டனர். (உ.வ.). ஆளுங்கட்சி நீங்கலாக மற்ற கட்சிகள் அனைத்தும் போராட்டத்தில் கலந்து கொள்கின்றன. (உ.வ.).*

*[நீங்கு → நீங்கல் → நீங்கலாக.]*

**நீங்கள்** *nīṅgaḷ,* பெ. (n.) முன்னிலைப்பன்மைப் பெயர்; you. "*நூலவையார் போனீங்க ணோக்குமினே*" (சீவக.1045.).

*[நீன் → நீம் → நீங்கள்.]*

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற்போல, நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கணவறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப்படுகின்றது. நீனுக்குப் பன்மை நீம் என்பது. மகரம் பன்மைப் பொருளுரைத்தலை ஆங்கில இலக்கண நூல்களிலும் காணலாம். நீங்கள் என்பது விகுதிமேல் விகுதி பெற்ற இரட்டைப் பன்மை. (இலக்.கட்.4.).

**நீங்காசலமலம்** *nīṅgāšala-malam,* பெ. (n.) கடற்பாசி; sea weeds-*gracilaris lichenoides* alias *G. onfervides.* (சா.அக.).

**நீங்காதவோசையோன்** *nīṅgāda-v-ōšaiyōṉ,* பெ. (n.) சங்கு (யாழ்.அக.); conch.

*[நீங்காத + ஓசையோன்.]*

**நீங்காமை** *nīṅgāmai,* பெ. (n.) பிரியாமை; impatience of separation.

*[நீங்கு + ஆ + மை.]*
மை – பண்பு விகுதி.
'ஆ' எதிர்மறை இடைநிலை.

**நீங்காவிக்கல்** *nīṅgā-vikkal,* பெ. (n.) தொடர்விக்கல்; non-stopping or continous hiccups. (சா.அக.).

*[நீங்கா + விக்கல்]*

**நீங்காவிட்டம்** *nīṅgā-viṭṭam,* பெ. (n.) 1. கூரைக் கைகளை யிணைக்கும் மரம் (இ.வ.); cross-piece connecting the rafters. 2. வீட்டின் கூரையைத் தாங்கும் உத்திரம் (வின்.); a beam strengthen the roof of a house.

*[நீங்கு + ஆ + விட்டம்.]*

'ஆ' எதிர்மறை இடைநிலை



**நீங்கு¹–தல்** *nīṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பிரிதல்; to leave, go, depart, separate from. "*நீங்கிற் றெறூஉம்*" (குறள்,1104.). 2. ஒழித்தல்; to give up, abandon. "*பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்*" (சிலப். 30:186.). 3. கடத்தல்; to pass over. "*நீங்கி னானந்த நெடுநதி*" (கம்பரா.வனம்புகு.36.).

தெ., க. நீகு. ம. நீன்னுக.

*[நீள் → நீங்கு–,]*

**நீங்கு²–தல்** *nīṅgu,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. (பசி, நோய் முதலியவை) இல்லாமற் போதல், தீர்தல்; (of hunger, illness etc.,) to cease end. *வயிறு முட்ட நீர் குடித்த பிறகே பசி நீங்கியது போன்றிருந்தது.* (உ.வ.). 2. (ஒருவரை விட்டு) அகலுதல், ஒன்றிலிருந்து விலகுதல்; to leave, depart (from). *மக்கள் வேலை தேடிச் சொந்த ஊர் நீங்கி நகரத்திற் குவியத் தொடங்கி விட்டனர்* (உ.வ.). *நெஞ்சிலிருந்து நீங்கா நினைவுகள்* (உ.வ.).

*[நீள் → நீங்கு–,]*

**நீங்கு³–தல்** *nīṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** மாறுதல் (வின்.); to turn away; to be warded off. **2.** விடுதலையாதல் (வின்.) ; to be liberated, released. **3.** தள்ளுண்ணுதல்; to be dismissed, discharged. **4.** ஒழிதல் (வின்.); to be excepted excluded. **5.** நடத்தல் (சூடா.); to go, proceed. **6.** நீந்துதல் (யாழ்ப்.); to swim. **7.** பிளவுபடுதல் (யாழ்ப்.); to form, as a gap, crevice, chasm. **8.** விரிந்தகலுதல் (வின்.); to be spread out, as fingers, legs. **9.** சிதறுதல் (வின்.); to be dispelled, scattered.

*[நீள் → நீங்கு–, ]*

**நீச்சக்குட்டை** *nīcca-k-kuṭṭai,* பெ. (n.) நீச்சல்² (இ.வ.) பார்க்க; *see nīccal².*

*[நீச்சல்² + குட்டை.]*

**நீச்சசலம்** *nīcca-šalam,* பெ. (n.) சிறுநீர் ; urine. (சா.அக.).

*[நீச்சம் + சலம். சலசலத்து ஓடுவதால் சலம். ]*

**நீச்சடி¹–த்தல்** *nīccaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) நீந்துதல்; to swim.

*[ நீஞ்சு → நீச்சு + அடி. ]*

**நீச்சடி²–த்தல்** *nīccaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கால்நடைகளைக் குளிப்பாட்டுதல்; to wash as cattle.

*[நீச்சு + அடி –,]*

**நீச்சடி³–த்தல்** *nīccaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மீன், நாற்றம்போன்று நாற்றமடித்தல் (இ.வ.); to smell as fish.

*[நீச்சு + அடி.]*

**நீச்சத்தண்ணி** *nīcca-t-taṇṇi,* பெ. (n.) நீர்ச்சோற்றுத்தண்ணீர் பார்க்க; (இ.வ.) see *nīr-c-cōṟṟu-t-taṇṇir.*

நீர் + சோற்று + தண்ணீர் → நீர்ச்சோற்றுத் தண்ணீர் → நீச்சோற்றுத்தண்ணீர் → நீச்சோத்துத்தண்ணீர் – நீச்சுத்தண்ணீர் →நீச்சத்தண்ணி (கொ.வ.).

**நீச்சத்தாணி** *nīccattāṇi,* பெ. (n.) இதளியம், (வைத்தியபரிபா.) ; mercury.

**நீச்சம்¹** *nīccam,* பெ. (n.) நீந்துகை; swimming.

*[ நீஞ்சு → நீச்சு. ]*

**நீச்சம்²** *nīccam,* பெ. (n.) முடைநாற்றம்; stink offersive smell.

**நீச்சல்¹** *nīccal,* பெ. (n.) நீந்துகை; swimming.

*[ நீஞ்சு → நீஞ்சல் → நீச்சல். ]*

**நீச்சல்²** *nīccal,* பெ. (n.) நீர்ச்சீலை, குளித்துணி (இ.வ.); man's loin cloth.

*[ நீர்ச்சீலை → நீச்சல். ]*

**நீச்சல்குளம்** *nīccal - kuḷam,* பெ. (n.) மகிழ்ச்சிக்காகவும், பயிற்சிக்காகவும் நீந்துவதற்குச் செயற்கையாய் அமைக்கப்பட்ட குளம் ; swimming pool.

*[ நீச்சல் + குளம். ]*



**நீச்சல்போட்டி** *niccal-pōtti,* பெ. (n.) நீந்துவதில் போட்டியிடும் விளையாட்டு; swimming race as a sports. மாநிலங்களுக்கிடையிலான நீச்சல் போட்டியில் தமிழ்நாடு முதலிடம் பெற்றது (உ.வ.)

*[ நீச்சல் + போட்டி.]*



**நீச்சன்** *niccan,* பெ. (n.) நீச்சாள் (இ.வ.) பார்க்க; see niccāḷ.

*[ நீச்சாள் → நீச்சான் → நீச்சன். ]*

**நீச்சாள்** *niccāḷ,* பெ. (n.) நீந்துவோன்; swimmer.

*[ நீச்சு + ஆள்.]*

**நீச்சு**[1] *niccu,* பெ. (n.) **1.** நீந்துகை; swimming. **2.** வெள்ளம்; flood. "*நீச்சாற் பெருத்திடு காவிரியாற்றை*" (தனிப்பா. 1,82,163.). **3.** நீந்தக்கூடிய ஆழம்; swimming depth, as of water. "***நீச்சுநிலை காணாமனிற்கு நாள்***" (தாயு. எந்நாட். ஆனந்த.1).

*[ நீந்து → நீச்சு. ]*

**நீச்சு**[2] *niccu,* பெ. (n.) முடைநாற்றம், மீன்நாற்றம் bad smell of fish. இவனுக்கு மீசை மேலே நீச்சடிக்க வேண்டும். (பழ.)

தெ.நீச்சு.

**நீச்சுக்காரன்** *niccu-k-kāran,* பெ. (n.) நீச்சலடிப்போன் (வின்.); swimmer.

*[ நீச்சல் → நீச்சு. நீச்சு + காரன். ]*

**நீச்சுத்தண்ணீர்**[1] *niccu-t-taṇṇir,* பெ. (n.) *நீர்ச்சோற்றுத்தண்ணீர்* பார்க்க; see *nir-cōṟṟu-t-taṇṇir.*

*[ நீர்ச்சோற்று + தண்ணீர் – நீர்ச்சோற்றுத் தண்ணீர் → நீச்சோற்றுத் தண்ணீர் – நீச்சுத்தண்ணீர் (கொ.வ). ]*

**நீச்சுத்தண்ணீர்**[2] *niccu-t-taṇṇir,* பெ. (n.) நீந்தக்கூடிய ஆழமுள்ள நீர் (வின்.); water of swimming depth.

*[ நீச்சு + தண்ணீர். ]*

**நீச்சுநிலையறி–தல்** *niccu-nilai-y-aṟi-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** ஆழத்தைஅறிதல்; lit., to sound the deep and shallow places. **2.** உள்ள நிலைமையை ஆய்ந்து அறிதல் (வின்.); to investigate a business, examine a position.

*[நீச்சுநிலை + அறி–,]*

**நீச்சோற்றுத்தண்ணீர்** *niccōṟṟu-t-taṇṇir,* பெ. (n.) *நீர்ச்சோற்றுத் தண்ணீர்* பார்க்க; see *nir-c-cōṟṟu-t-taṇṇir.*

*[ நீர்ச்சோற்றுத்தண்ணீர் → நீச்சோற்றுத் தண்ணீர். ]*

**நீசகம்** *niŝagam,* பெ. (n.) தண்ணீர்; water. (சா.அக.).

*[ நீசு + அகம். ]*

**நீசடுவா** *niŝaḍuvā,* பெ. (n.) பால்; milk. (சா.அக.).

**நீசதை** *niŝadai,* பெ (n.) *நீசம்* பார்க்க; see *niŝam.*

**நீசம்** *niŝam,* பெ. (n.) மஞ்சள்; turmeric. (சா.அக.).

**நீசரக்கு** *niŝarakku,* பெ. (n.) *நீசம்* பார்க்க; see *niŝam.* (சா.அக.).

**நீசல்** *niŝal,* பெ. (n.) நீர்ச்சீலை, (இ.வ.); loin cloth.

*[நீர்ச்சீலை → நீச்சல் → நீசல்.]*

**நீஞ்சு-தல்** *niñju-,* 5 செ.கு.வி. (v.i.) 1. *நீந்து-* (வின்.) பார்க்க; see *nindu-,* 2. அருஞ் செயல்களை முடிக்கப் பெருமுயற்சி யெடுத்தல்; to be activity engaged, as in a stupendous work. *வேலையில் நீஞ்சிச் கொண்டிருக்கிறான். (உ.வ.).* 3. மிகுதியாகக் குடித்தல் (வின்.); to drink to excess, especially toddy. *கள் மிடாயில் நீஞ்சக் கூடியவன். (உ.வ.).*

**நீஞ்சுமூசி**[1] *niñcum-ūŝi,* பெ. (n.) *நீந்துமூசி* பார்க்க; see *nindum-ūŝi.*

*[ நீந்தும் + ஊசி →நீந்தும் ஊசி → நீஞ்சும் ஊசி = நீஞ்சுமூசி. ]*

**நீட்சம்** *niṭŝam,* பெ. (n.) குருவி; a kind of sparrow. (சா.அக.).

**நீட்சி** *niṭci,* பெ. (n.) *நீட்டம்* (உ.வ.) பார்க்க; see *niṭṭam.*

*[ நீள் → நீட்டு → நீட்டம் → நீட்சி. ]*

**நீட்சிமை** *niṭcimai,* பெ. (n.) *நீட்டம்* (யாழ்.அக.) பார்க்க ; see *niṭṭam.*

*[ நீள் → நீட்டம் → நீட்சி → நீட்சிமை. ]*

**நீட்டக்கத்தரி** *niṭṭa-k-kattari,* பெ. (n.) கத்தரிக்காய் வகை; long brinjāl.

*[ நீட்டம் + கத்தரி. ]*

நீள் → நீட்டம் + கத்திரி. கத்தரிக்காயைக் கத்திரிக்காய் என்றழைப்பது வழு.

**நீட்டக்காவிதம்** *niṭṭa-k-kāvidam,* பெ. (n.) சுரைக்காய்; bottle gourd-cucurbita lagenaria. (சா.அக.).

*[நீட்டம் + காவிதம்.]*

காவிதம் என்னுஞ் சொல்லிற்குக் கருங் குவளை எனப்பொருள் கூறும் சாம்பசிவம் பிள்ளை மருத்துவ அகர முதலி, நீட்டக்காவிதம் என்ற சொல்லுக்குச் சுரைக்காய் என்ற பொருளைப் பதிவு செய்துள்ளது.

**நீட்டச்சோதி** *nitta-c-cōdi,* பெ. (n.) ஒளிரும் மரம்; a tree luminous in the dark-phosphorous tree. (சா.அக.).

*[நீட்டம் + சோதி.]*

**நீட்டம்**[1] *niṭṭam,* பெ.(n.) **1.** நீளம்; length. *"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனைய துயர்வு"* (குறள், **595.**). **2.** ஓசையின் நீட்சி; elongation of sound. *"நீட்டம் வேண்டின் அவ்வள புடைய கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்" (தொல். எழுத்து. 6.).*

*[நீள் → நீட்டு → நீட்டம். (மு.தா.286).]*

**நீட்டம்**[2] *niṭṭam,* பெ. (n.) **1.** நீட்டுகை; stretching, lengthening. **2.** காலநீட்டிப்பு; procrastination. *"நிலைமை யறிய நீட்ட மின்றி"* (பெருங். மகத. **23:51.**).

*[நீள் → நீட்டு → நீட்டம்.]*

**நீட்டல்**[1] *niṭṭal,* பெ. (n.) தலைமயிரைச் சடையாக்குகை; twisting into matted. locks. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்த தொழித்து விடின் (குறள், **280.**).

*[நீட்டு → நீட்டல்.]*

**நீட்டல்**[2] *niṭṭal,* பெ. (n.) **1.** நீளச்செய்கை; lengthening, extending, stretching **2.** (இலக்.) குற்றுயிரை நெட்டுயிராக இசைக்கும் செய்யுள் திரிபு (விகார) வகை (தொல். சொல். **403.**); (gram.); poetic licence which consists in the lengthening of a short vowel into a long one. **3.** அளவை நான்கனுள் நீட்டி யளக்கும் முழம் காதம் போன்ற அளவு; linear measure, one of four alavai. *"முகத்த னீட்டல்"* (குறள், **280.**). **5.** பெருங்கொடை (பிங்.); liberality.

*[நீள் → நீட்டு → நீட்டல்.]*

**நீட்டல்மானம்** *niṭṭal-māṉam,* பெ. (n.) நீட்டல், (யாழ்.அக.) அளவு; linear measure.

*[நீள் → நீட்டு → நீட்டல் + மானம். மானம் = அளவு.]*

**நீட்டலளவு** *niṭṭal-aḷavu,* பெ. (n.) நீளத்தை அளக்கும் அலகு; linear unit measure.

*[நீள் → நீட்டு → நீட்டல் + அளவு.]*

**நீட்டலளவை** *niṭṭal-aḷavai,* பெ.(n.) நீளத்தை அளக்கும் அளவை முறை; linear measure.

*[நீட்டல் + அளவை.]*

**நீட்டாணம்** *niṭṭāṇam,* பெ. (n.) **1.** உப்புநீர், சாறு; soup. **2,** குழம்பு; (வின்.); pottage,

*[நீட்டு + ஆணம்.]*

நீள் → நீட்டு. நீள் – ஒழுங்கு, அமைப்பு. அள் → அளம் → ஆளம் → ஆணம். அள் → அளம் - சேறு, சாறு, குழம்பு.

இறைச்சியையோ மரக்கறிகளையோ வேகவைத்து உப்பு மிளகு முதலியன இட்டுக் கொதிக்க வைத்து வடித் தெடுத்தச் சாறு. இது குழம்புபோல் கெட்டியாய் இல்லாமல் நீர்த்த தன்மை யுடையதாயிருக்கும்.

**நீட்டாய்நட–த்தல்** *niṭṭāi-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) நேராய் நடத்தல்; to walk straight.

*[நீள் → நீடு → நீட்டு + ஆய் + நட.]*

**நீட்டாய்ப்போ–தல்** *niṭṭāi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) நேராய்ப் போதல் (சென்னை.); to go straight.

*[நீள் → நீடு → நீட்டு + ஆய் + போ–,]*

**நீட்டாள்[1]** *nīṭṭāḷ,* பெ. (n.) வேலையாள்; attendant or waiting servant. *நாட்டாளுக்கு ஒரு நீட்டாளோ? (பழ.).*

*[நீட்டு + ஆள்.]*

நீள் → நீட்டு.
ஆல் → ஆள் – வினையாற்றுபவன், செயல் திறவோன்.

**நீட்டாள்[2]** *nīṭṭāḷ,* பெ. (n.) நெட்டையாள் (உ.வ.); tall person.

*[நீள் → நீளு → நீடு → நீட்டு + ஆள்.]*

**நீட்டி[1]—த்தல்** *nīṭṭi-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. நீளச் செய்தல்; to lengthen. *மடங்கி யிருக்கும் இருப்புக் கம்பியை நீட்டிக்க வேண்டும். (உ.வ.).* 2. நீட்டிப்பேசு–, பார்க்க; see nīṭṭi-p-pēšu. *பேச்சை நீட்டிக்கிறான். (உ.வ.).* 3. காலந்தாழ்த்துதல்; to delay. *"தீம்பால் பெருகு மளவெல்லா நீட்டித்த காரணமென்"* (கலித். 83.). 4. முடித்தல் (அக.நி.); to finish, complete. 5.நெடும் பொழுது செல்லல் (1, 2, வழக்.); to elongate.

*[நீள் → நீளு → நீடு → நீட்டு → நீட்டி –.]*

**நீட்டி[2]—த்தல்** *nīṭṭi-,* 5 செ.கு.வி. (v.i.) நெடுங்காலம் நிலைத்தல்; to be prolonged; to endure long. *"இவ்வுடம்பு நீட்டித்து நிற்கு மெனின்"* (நாலடி, 40.).

*[நீடு → நீட்டு → நீட்டி –.]*

**நீட்டித்திரு—த்தல்** *nīṭṭi-t-iru-,* 3 செ.கு.வி. (v.i.) நீளுதல்; to lengthen. *"கேட்டனை யாயினித் தோட்டார் குழலியொடு நீட்டித்திராது நீபோ கென்றே"* (சிலப். 15:199.).

*[நீட்டித்து + இரு –,]*

**நீட்டிநட[1]—த்தல்** *nīṭṭi-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) மெல்ல நடத்தல்; to walk slowly.

*[நீள் → நீட்டு → நீட்டி + நட –,]*

கால நீட்டிப்பு, சுணக்கம்.

**நீட்டிநட[2]—த்தல்** *nīṭṭi-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) எட்டி நடத்தல்; to take long strides.

*[நீள் → நீட்டு → நீட்டி + நட –,]*

காலைநீட்டி வைத்து நடத்தல்.

**நீட்டிப்படு—த்தல்** *nīṭṭi-p-paḍu-.* 4 செ.கு.வி. (v.i.) 1. உடம்பைப் படுக்கையில் கிடத்துதல்; to lie the body on the bed. *பணிச்சுமை யிலேற்பட்ட களைப்பினைப் போக்க நேற்று நீட்டிப்படுத்து விட்டேன்.* (உ.வ.). 2. செயல் செய்யாது முடங்கிப் போதல்; to strike, refuse to work until a grievance is remedied. *என் கோரிக்கை நிறைவேறும் வரை நீட்டிப்படுத்து விடப் போகிறேன். (உ.வ.).*

*[நீட்டி + படு–,]*

**நீட்டிப்பேசு—தல்** *nīṭṭi-p-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விளக்கிச் சொல்லுதல்; to speak at great length, in great detail. *'நீட்டிப் பேசுதலை நினைக்கவும் பயந்தன னெந்தாய்* (அருட்பா, பிள்ளைப் பெரு.63.). 2. சொற்களை நீட்டிப் பலுக்கிப் பேசுதல்; to drawl out.

*[நீள் → நீட்டு→ நீட்டி+ பேசு.]*

**நீட்டிப்போடு—தல்** *nīṭṭi-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. நடக்கும் போது காலை எட்டி வைத்தல்; to take a big stride in walking. *இந்த வேகத்தில் நடந்தால் ஊரடையு முன் பொழுது அடைந்துவிடும்;*

*நடையைச் சற்று நீட்டிப்போடு.* **(உ.வ.).** 2. கால(ம்) நீட்டித்தல்; to put off. *இந்த வழக்கிற்குத் தீர்ப்பு சொல்வதைக் கொஞ்சம் நீட்டிப் போடு; அதற்குள் அவர்கள் இணக்கமாகப் போகக் கூடும்.* **(உ.வ.).** 3. உட்கார்ந்த நிலையில் காலை நீட்டி மடக்காமல் நீளமாய் வைத்துக் கொள்ளுதல்; to sit by. *காலை நீட்டிப் போட்டுக் கொண்டு பாட்டியைப் போல் அமர்ந்துள்ளாயே.* **(உ.வ.).** 4. பயிர்த் தொழிலில் வேலையாளுக்குரிய பகிர்வை அகலமாய்ப் போடுதல்; to extended in agriculture cooly's shares. எனக்கு மட்டும் மனையை நீட்டிப் போடுவது முறையா. (உ.வ.).

*[நீட்டி + போடு–.]*

**நீட்டிப்பு** *nīṭṭippu-,* பெ. (n.) உரிய காலம் முடிந்த பின்பும் தொடர்வதற்கான காலநீடிப்பு; extension ( time.) *பணியிட நீட்டிப்பு இன்னும் வழங்கவில்லை.* (உ.வ.))

*[நீள்டி → நீட்டு → நீட்டிப்பு–,]*

**நீட்டிமுழக்கு–தல்** *nīṭṭi- muḻakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) (சுருக்கமாகக் கூறாமல்) விரித்துக் கூறுதல், பேச்சை வளர்த்தல்; dwell upon, speak at great length (on something), hold forth. *நீட்டி முழக்காமல் சுருக்கமாய்ச் சொல்.* (உ.வ.).

*[நீட்டி + முழக்கு–.]*

**நீட்டியள[1]–த்தல்** *nīṭṭi-y-aḷa-,* 3 செ.குன்றாவி. (v.t.)எஞ்சாது அளத்தல், குறைவற அளத்தல்; to measure accuratly, *கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை நீட்டியளப்பதோர் கோல்* **(குறள்,796.)**

**நீட்டியள[2]–த்தல்** *nīṭṭi-y-aḷa-,* 3 செ.கு.வி. (v.i.) துணி, இடம் போன்றவற்றை அளக்கும் போது ஏமாற்றாய் அளத்தல்; as measuring the cloth place to cheating. *நான்கு முழத்துணியை ஐந்து முழத்துணியாய் நீட்டியளத்து விட்டான்.* **(உ.வ.)** *நிலத்தை அளக்கும் போது கோலை நீட்டியளந்து என்னுடைய இடத்தையும் சேர்த்துக் கொண்டான்* **(உ.வ.)**

*[நீள் → நீட்டு → நீட்டி+ அள–.]*

**நீட்டியளத்தல்** *nīṭṭi-y-aḷattal,* பெ. (n.) ஓரிடத்தையேனும் பொருளையேனும் கோல் முதலிய கருவிகொண்டு அளக்கை (தொல். எழுத்து. 7. உரை.); measuring by rod, etc.

*[நீள் → நீட்டு →நீட்டி + அளத்தல்.]*

**நீட்டினவிரல்குறித்தான்** *nīṭṭiṉa-viral kuṟittāṉ,* பெ. (n.) கிரந்தி நாயகம் என்னும் நிலைத் திணை (மலை.); a plant-Ruella patula.

**நீட்டு[1]–தல்** *nīṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நீளச்செய்தல்; to lengthen, reach forth, extent; to stretch out. 2. முடக்காமல் நேர் நிறுத்துதல்; to straighten. *கையை நீட்டினான்.* 3. திருப்படையல் முதலியன படைத்தல்; to offer, as oblations. *"தளிகை நீட்டினதெல் லாம்"* (திருவிருத். 33. பக். 204.). 4. கொடுத்தல்; to give. *"பாடிய புலவர்க்குப் பரிசினீட்டின்று"* (பு. வெ. 3. 16. கொளு.). 5. செருகுதல்; to insert, drive into. *"குருதிவாள்... புண்ணுநீட்டி"* (சீவக. 2293.). 6. நீளப்பேசுதல்; to speak at length or too much. 7. இசை முதலியவற்றில் கால நீட்டித்தல்; to prolong, as a note. 8. கால நீட்டித்தல்; to delay, procrastinate, retard, defer.

*[நீள் → நீட்டு–,]*

**நீட்டு²–தல்** *nīṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. முன்நோக்கிக் காட்டுதல்; to brandish, draw (something); put forth. *கத்தியை நீட்டி அச்சுறுத்தினான். (உ.வ.). அவர் கேட்டதும் பணத்தை நீட்டுவதா? (உ.வ.).* 2. (கால அளவில்) தொடர்ந்து நிகழ்த்துதல், (எண்ணிக்கை அளவில்) மிகுதியாதல்; to prolong, extend. பேச்சை நீட்டாதே. (உ.வ.) *பெயர்ப்பட்டியலை இதற்குமேல் நீட்ட வேண்டாம். (உ.வ.).* 3. (பேச்சில், பாட்டில்) சொற்களை இழுத்துப் பலுக்குததல்; (while speaking) to drow out, drawl out, lengthen. *அந்த ஊர்க்காரர்கள் எப்பொழுதும் நீட்டி நீட்டித்தான் பேசுவார்கள்.* (உ.வ.).

*[நீள் → நீட்டு–,]*

**நீட்டு³** *nīṭṭu,* பெ. (n.) 1. நீளம்; length, as of time or space. ஆவணம் நீட்டிலே மடித் திருந்தது. (உ.வ.). 2. தொலைவு (தூரம்); distance. *"மதுரை நீட்டைந்து கூப்பிடு"* (திருவாலவா. 26. 8.). 3. திருமுகவோலை; rescripts, writs, as of a king. *"சித்திர சேனனீட்டவிழா"* (உபதேசகா. சிவத்துரோ. 174.). (T.A.S.II,i,4.).

*[நீள் → நீட்டு.]*

**நீட்டு⁴** *nīṭṭu,* பெ. (n.) 1. நீட்டுகை; extend. 2. தெரிநிலை வினைப்பகுதி; sign of vbl.part.

*[நீள் → நீட்டு]*

**நீட்டுக்கதியோன்** *nīṭṭu-k-kadiyōṉ,* பெ. (n.) வெள்ளாடு; goat. (சா.அக.).

**நீட்டுக்கால்** *nīṭṭukkāl,* பெ. (n.) முடவாட்டுக் கால்; goats foot-ipomea bilobs. (சா.அக.).

**நீட்டுசெடிச்சி** *nīṭṭu - šeḍicci,* பெ. (n.) பேய்த் தும்பை; devil toombay-*leucas linifolia* alias *phlomis zeylanica.* (சா.அக.).

**நீட்டுப்பாவு** *nīṭṭu-p-pāvu,* பெ. (n.) சேலைக்கும் வேட்டிக்கும் உரிய தோய்ச்சல் பாவு; spun thread. esp. for knitting and weaving; yarn.

*[நீட்டு + பாவு.]*



**நீட்டுப்பை¹** *nīṭṭu-p-pai,* பெ. (n.) 1. சுருக்கி விரிக்கக்கூடிய தையற் பை; a long bag or purse opened or closed by means of a string.

*[நீட்டு + பை.]*



**நீட்டுப்பை²** *nīṭṭu-p-pai,* பெ. (n.) பெருவயிறு; capacious stomach. *நீட்டுப்பை சுருக்குப்பை வைத்திருக்கிறான்.* (குஞ்சை.).

*[நீட்டு + பை.*
*பொள் → பொய் → பை. பை போன்ற வயிறு.]*

**நீட்டுப்போக்கு** *niṭṭu-p-pōkku,* பெ. (n.) **1.** நீளவாட்டு; lengthwise direction. **2.** உயரம்; tallness. **3.** திறமை, ஆற்றல், வல்லமை; ability, pecuniary or otherwise. *அவன் நீட்டுப் போக்கான ஆள். (உ.வ.).*

*[நீட்டு + போக்கு.]*

**நீட்டுமிளகாய்** *niṭṭu - miḷagāi,* பெ. (n.) மலை மிளகாய்; chilly.

*[நீட்டு + மிளகாய்.]*



**நீட்டுமுடக்கில்லாதவன்** *niṭṭu-muḍakkillā dāvaṉ,* பெ. (n.) **1.** ஏழை; person in straitened circumstances. **2.** இவறன், நெஞ்சீரமி லாதான் (உலோபி); miser, unaccommodating person. **3.** குடும்பக் கவலையற்றவன்; person free from domestic worries. *மகன் தலை யெடுத்த பிறகு அவன் நீட்டு முடக்கில்லாதவனாகி விட்டான். (உ.வ.).*

*[நீட்டு + முடக்கு + இல்லாதான்.]*

**நீட்டுமுடக்கு** *niṭṭu-muḍakku,* பெ. (n.) **1.** கொடுக்கல் வாங்கல்; giving and receiving; lending and borrowing. **2.** உதவுங்குணம்; accommodating disposition. **3.** நீட்டுப் போக்கு, 3 பார்க்க. *see niṭṭu-p-pōkku.*

*[நீட்டு + முடக்கு.]*

**நீட்டோலை** *niṭṭōlai,* பெ. (n.) திருமுகவோலை; rescripts writs as of a king. *"நீட்டோலை வாசியா நின்றான்"* (மூதுரை.).

*[நீட்டு + ஓலை.]*

**நீட்பம்** *niṭpam,* பெ. (n.) நீளம் (யாழ்ப்.); length.

*[நீள் → நீட்பம்.]*

**நீடசேந்திரன்** *niḍaśēndiraṉ,* பெ. (n.) பருந்து (கருடன்); brahmini kite. (சா.அக.).

**நீடம்**[1] *niḍam,* பெ. (n.) பறவைக் கூடு (இலக்.அக.); birds nest.

*[நீள் → நீடு + அம்*
*தொடர்ந்து தங்குமிடம்.]*



**நீடம்**[2] *niḍam,* பெ. (n.) இடம் (நாநார்த்த); place.

**நீடல்**[1] *niḍal,* பெ. (n.) **1.** காலம் நீட்டித்தல்; to extends the time. **2.** நீளுகை (வழக்); prolongation.

*[நீள் → நீளல் → நீடல்.]*

**நீடல்²** *nīḍal,* பெ. (n.) நீளுகை (வழக்); prolongation.

*[நீள் → நீளல் → நீடல்.]*

**நீடலர்** *nīḍalar,* பெ. (n.) காலம் நீட்டியாார்; time not extender. "பூச்சேரணையிற் பெருங்கவின் றொலைந்த நின் நாடுதுயர் கேட்பின் நீடலர் மாதோ". (குறுந். 253.).

*[நீள் → நீடு + அல் + அர்.]*
*'அல்'* எதிர்மறை இடைநிலை.
*'அர்'* பன்மையீறு.

**நீடாணம்** *nīḍāṇam,* பெ. (n.) நீட்டாணம் (யாழ்.அக.) பார்க்க; *see nīṭṭāṇam.*

*[நீட்டாணம் → நீடாணம்–இடைக்குறை.]*

**நீடாலைக்கோடு** *nīḍālai-k-kōḍu,* பெ. (n.) சூடாலைக்கல் (யாழ்.அக.); a kind of stone.

*[நீடு + ஆலை + கோடு.]*

**நீடி¹–த்தல்** *nīḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீளுதல்; to lengthen time, distance. *வாணாள் நீடிக்க வழியுண்டு. (உ.வ.).* 2. நிலைநிற்றல் (வின்.); to endure, last; to be permanent. *அவர் ஐந்தாண்டு காலம் பதவியில் நீடித்ததே அருஞ்செயல் தான். (உ.வ.).*

*[நீடு → நீடி–.]*

**நீடி²–த்தல்** *nīḍi-,* 4 செ.கு.வி. (v.i.) (கால அளவில்) தொடர்தல்; முடிவுக்கு வருவது தள்ளிப் போதல்; (of time) to last, extend. *பேச்சு மேலும் அரை மணி நேரம் நீடித்தது (உ.வ.). இரு நாடுகளின் நீடித்த நட்பின் அடையாளம் இந்த ஒப்பந்தம் (உ.வ.). சட்டத்தை மேலும் ஓராண்டிற்கு நீடித்து ஆணையிட்டார். (உ.வ.).*

*[நீள் → நீளு → நீடு → நீடி –,]*

**நீடி³** *nīḍi,* பெ. (n.) நீக்கமற நிறைந்திருக்கை; omnipresence. *"தேய நீடி யில்லாமை போல்" (ஞானவா. லீலை. 32.).*

*[நீடு → நீடி.]*

**நீடித்திரு–த்தல்** *nīḍittiru-,* 3 செ.கு.வி. (v.i.) நெடுங்காலத்திற் கிருத்தல்; to be for a long time.

*[நீடித்து + இரு –,]*

**நீடிப்பு¹** *nīḍippu,* பெ. (n.) தொடர்ந்திருக்கை; persistance.

*[நீள் → நீளு → நீடு → நீடி → நீடிப்பு.]*

**நீடிப்பு²** *nīḍippu,* பெ. (n.) பதவி, வேலை போன்றவற்றில் ஒருவர் உரியகாலம் முடிந்த பின்பும் தொடர்ந்து இருப்பதற்கு ஏற்ற வகையில் அளிக்கப்படும் கால அதிகரிப்பு; extension (of service, permit, visa etc.,) *அவருக்கு மேலும் ஓராண்டிற்குப் பதவி நீடிப்புக் கிடைத்துள்ளது. (உ.வ.).*

*[நீள் → நீளு → நீடு → நீடி → நீடிப்பு.]*

**நீடிரும்பெண்ணை** *nīḍirum-peṇṇai,* பெ. (n.) நீண்ட கரிய பனை; a long palmora tree. "நீடிரும் பெண்ணைத் தொடுத்த கூட்டினும் மயங்கிய மையலூரே" (குறுந்.374.).

*[நீடு + இரும் + பெண்ணை.]*

**நீடின்றி** *nīḍiṉṟi,* பெ. (n.) நீடுதலின்றி; without extended the time. "கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம் நீடின்றி ஆங்கே கெடும்" (குறள், **566.**).

*[நீடு + இன்றி]*

**நீடு[1]–தல்** *nīḍu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** நீளுதல்; to grow long; to be lengthened; to be extended through space or time. *"அளபிறந்து யிர்த்தலும் ஒற்றிசை நீடலும் உளவென மொழிப"* (தொல். எழுத்து. **33.**). **2.** பரத்தல்; to spread; to extend. *"நீடாழி யுலகத்து"* (பாரத. சிறப்புப். **1.**). **3.** பெருகுதல்; to abound; to be copious; *நீடிய செல்வம்* (வின்.). **4.** செழித்தல் (யாழ்.அக.); to thrive, grow well. **5.** மேம்படுதல்; to rise high. *"நிலைமை நீடுத றலைமையோ வன்றே"* (ஞானா. பாயி. **3.**). **6.** நிலைத்தல்; to last long; to endure; to be permanent. *"அளி நீடளகம்"* (திருக்கோ. **122.**). **7.** இருத்தல் (வின்.); to exist, subsist. **8.** காலம் நீட்டித்தல்; to delay. *"நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன்றனவே"* (பரிபா. **14:9.**). **9.** கெடுதல்; to become decayed. *"நீடாப் பனைவிளைவு நாமெண்ண"* (திணைமாலை. **5.**).

**தெ.** நெகது **க.** நீடு **ம.** நீடுக

*[நீள் → நீடு. (மு.தா.287).]*

**நீடு[2]–தல்** *nīḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** தாண்டுதல் (திவா.); to pass over; to leap over. **2.** பொழுது கடத்துதல்; to delay. "நீடலை முடியுதென்றான்" (யசோதர.**2:35.**).

*[நீள் → நீடு–,]*

**நீடு[3]–தல்** *nīḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தேடுதல் (அக.நி.); to seek, search.

*[நேடு → நீடு. நேடு = தேடு.]*

**நீடு[4]** *nīḍu,* பெ. (n.) **1.** நெடும் பொழுது; a long time *"நீடுநீர் நெடுஞ்சுனை ஆயமொ டாடாய்"* (அகநா. **358.**) **2.** நெடுங்காலம்; a long time. *"நிலமிசை நீடு வாழ்வார்"* (குறள், **3.**). **3.** நிலைத்திருக்கை; permanence. *"நெடுஞ்செல்வ நீடின்றி யாங்கே கெடும்"* (குறள், **566.**).

*[நீளு → நீடு.]*

**நீடுநினைந்திரங்கல்** *nīḍu-niṉaindiraṅgal,* பெ. (n.) (அகப்.) கூட்டம் வாயாது காலம் நெடிதாகத் தலைவன் தலைவியை நினைந்து இரங்குதலாகிய அகப்பொருட்டுறை (சங்.அக.); theme in which the hero bewails his long separation form the heroine.

*[நீடு + நினைந்து + இரங்கல்.]*

**நீடுநினைந்துருகல்** *nīḍu-niṉaindurugal,* பெ. (n.) நீடுநினைந்திரங்கல் பார்க்க; see nīḍu-niṉaindiraṅgal.

*[நீடு + நினைந்து + உருகல்.]*

**நீடுநீர்** *nīḍu - nīr,* பெ. (n.) துய்ய நீர்; sacred water. *"நீடு நீர்மணி நீரு மல்லவும்"* (சீவக. **2418.**).

*[நீடு + நீர்.]*

**நீடுநீர்வையை** *nīḍu - nīr-vaiyai,* பெ. (n.) ஒழுக்கறா நீருடைய வையையாறு; perennial vaigai river. *"நீடுநீர் வையை நெடு மாலடி யேத்தத் தூவித் துறைபிடியப் போயினாண்மேவி"* (சிலப். **18:4.**).

*[நீள் → நீளு → நீடு.*
*நீடு + நீர் + வையை.]*

**நீடுருவாணி** *nīḍuruvāṇi,* பெ. (n.) சித்தரத்தை; lesser galangal-alpinia galanga (minor). (சா.அக.).

**நீடுவரை** *nīḍuvarai,* பெ. (n.) நெடிய மலை; a long hills. "நீடுவரை யடுக்கத்து நாடுகைக் கொண்டு". (நற். 55:18.).

*[நீடு + வரை.]*

**நீடூர்** *nīḍūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஊர். a village in Tanjavur; dt. "*நீரில் வாளை வரால் குதி கொள்ளும் நிரைநற் கழனிச் செல்வ நீடூர்* " (சுந்தரர். 56–1.).

**நீடூரம்** *nīḍūram,* பெ. (n.) நஞ்சு (பாடாணம்) (சங்.அக.); arsenic.

**நீடூழி** *nīḍūḻi,* பெ. (n.) *நீடூழிக் காலம்* பார்க்க; *see nīḍūḻi-k-kālam.*

*[நீடு + ஊழி.]*

**நீடூழிக்காலம்** *nīḍūḻi-k-kālam,* பெ. (n.) நெடுநாள்; long aeons; long ages.

*[நீடூழி + காலம்.]*

**நீடூழிகாலம்** *nīḍūḻi-kālam,* பெ. (n.) *நீடூழிக் காலம்* பார்க்க; see *nīḍūḻi-k-kālam.*

*[நீடு + ஊழி.]*

**நீடோடநட – த்தல்** *nīḍōḍa-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) நெடுங்காலம் நிகழ்தல் (வின்.); to last, a long time.

*[நீடு + ஓட + நட.]*

**நீண்ட** *nīṇḍa,* பெ.அ. (adv.) (நீளத்தில்) அளவை விட அதிகமான, (காலத்தில்) அதிகமாகச் செல்கிற; (in length and time) long. *நீண்ட கடிதம் (உ.வ.) நீண்ட கூந்தல் (உ.வ.) நீண்ட காலக் கடன்(உ.வ.) நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தோம். (உ.வ.).*

*[நீள் → நீண்ட.]*

**நீண்டகையன்**[1] *nīṇḍa-kaiyaṉ,* பெ. (n.) யானை; elephant.

*[நீண்ட + கையன்.]*



**நீண்டகையன்**[2] *nīṇḍa - kaiyaṉ,* பெ. (n.) களவுப்பழக்கமுள்ளவன்; thief.

*[நீள் → நீண்ட + கையன்.]*

இவன் கை நீளமுள்ளவன் என்னும் வழக்குக் களவாணியைக் குறிக்கும். மேலும் பிழைசெய்தவன், தன் தவறு தெரியாதிருக்க, பேசி கொண்டிருக்கும் போதே அடித்துவிடும் இயல்புடை யானையும் குறிக்கும்.

**நீண்டகையான்** *nīṇḍa-kaiyāṉ,* பெ. (n.) ஒற்றைக்கொம்பன் (காண்டா மிருகம்); rhinoceros. (சா.அக.).



**நீண்டகையானை** *nīṇḍa-kai-yāṉai,* பெ. (n.) ஒற்றைக் கொம்பனின் கொம்பு (யாழ்.அக.); the horn of the rhinoceros.

**நீண்டதும்பை** *nīṇḍa-tumbai,* பெ. (n.) பேய்த்தும்பை; devil toombay-Leucas liniflia alias phlomis zeylanica.

*[நீண்ட + தும்பை.]*

**நீண்டவன்** *nīṇḍavaṉ,* பெ. (n.) திருமால்; višṇu; as one who grew to great height in his dwarf incarnation. *"நீண்டவன் றுயின்ற சூழ லிதுவெனின்"* (கம்பரா. குகப். 41.).

*[நீள் – நீண்டவன்.]*

தோற்றரவில் குறுமையுரு வெடுத்து மூன்றடி மண்கேட்டபின் பேருருக் கொண்டு உலகளந்து மாவலியின் செருக்கடக்கியதான தொன்மக்கதை.

**நீண்டவிலை** *nīṇda-v-ilai,* பெ. (n.) ஆடாதோடை; malabar nut-adthoda vasica. (சா.அக.).

*[நீள் → நீண்ட + இலை.]*

**நீண்டாயம்** *nīṇḍāyam,* பெ. (n.) நீளம் (யாழ்.அக.); length.

*[நீள் → நீண்ட.நீண்ட+ஆயம் நீண்டாயம்.]*

**நீண்டொழுகுமேகம்** *nīṇḍoḻugu - mēgam,* பெ. (n.) *தந்துமேகம்* பார்க்க; see *tandu mēgam.* (சா.அக.).

**நீண்டோன்** *nīṇḍōṉ,* பெ. (n.) *நீண்டவன்* பார்க்க; see *nīṇḍavaṉ.*

*[நீள் → நீண்ட → நீண்டவன் → நீண்டோன்.]*

**நீண்முடி** *nīṇ-muḍi,* பெ. (n.) அரசன்; king, as wearing a high crown. *"நின்றமா மன்னர்க் கெல்லா நீண்முடி யிலக்க மானான்"* (சீவக. 286.).

*[நீள் + முடி.]*

**நீண்மை** *nīṇmai,* பெ. (n.) பழைமை; antiquity, olden times. *"நீண்மைக்க ணின்று வந்த நீதியெலாந் தருவல்"* (சீவக. 1119.).

*[நீள் → நீண்மை.]*

**நீண்மொழி** *nīṇ-moḻi,* பெ. (n.) 1. சூளுரை; vow. *"நீண்மொழிக் குன்றா நல்லிசைச் சென்றோ ரும்பல்"* (மலைபடு. 539.). 2. வீர னொருவன் செய்த வஞ்சினங் கூறும் புறத்துறை (புறநா. 287, தலைப்பு.); a theme describing the vow taken by a warrior. *"நீண்மொழி யெல்லா நீலன் கூற"* (சிலப்.28:109.).

*[நீள் + மொழி.]*

**நீணகர்** *nīṇagar,* பெ. (n.) நீண்ட பெருமனை; a large house. "*நெடுமணிஞ்சி நீணகர் வரைப்பின்*" (பதிற். **68:16.**).

*[நீள் + நகர்.]*

**நீணாளம்** *nīṇāḷam,* பெ. (n.) நீள் புகைக் குழாய் (தைலவ. தைல.); long blow-pipe.

*[நீள் + நாளம்*
*நாளம் – உட்டுளை, தண்டு.]*



**நீணிதி** *nīṇidi,* பெ. (n.) பெருஞ்செல்வம்; great riches. "*நீணிதி வணிகர்*" (சீவக. **615.**).

*[நீள் + நிதி.]*
skt. nidi

**நீணிரை** *nīṇirai,* பெ. (n.) நெடும்பிணக்குவை; collection of carcass."*நிலமிழி நிவப்பி னீணிரை பலசுமந் துருவேழு கூளிய ருண்டு மகிழ்ந்தாட*" (பதிற்றுப். **36:11.**).

*[நீள் + நிரை.]*

**நீணிலங்கடந்தநெடுமுடியண்ணல்** *nīṇilaṅ kaḍanda-neḍumuḍiyaṇṇal,* பெ. (n.) திருமால்; Tirumāl. "*நீணிலங் கடந்த நெடுமுடி யண்ணல் தாடொழு தகையேன் போகுவல் யானென*" (சிலப். **11:148.**).

*[நீள் + நிலம் + கடந்த + நெடுமுடி + அண்ணல்.]*

**நீணிலம்** *nīṇilam,* பெ. (n.) பெருநிலப்பரப்பு; a large area. "*நிரப்பின் றெய்திய நீணிலம்*" (மணிமே. **14:51.**).

**நீணிலமளந்தோன்** *nīṇlilam-aḷandōṉ,* பெ. (n.) (உலகளந்த) திருமால்; Tirumal. "*வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணில மளந்தோ னாடிய குடமும்*" (சிலப். **6:54.**).

*[நீள் + நீளம் + அளந்தோன்.]*

**நீணிலமளந்தோன்மகன்** *nīṇilam-aḷandōṉ magaṉ,* பெ. (n.) திருமாலின் மகனாகிய காமன்; kāmaṉ. "வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணில மளந்தோன் மகன்முன் னாடிய பேடிக் கோலத்துப் பேடு காண்குநரும்" (மணிமே. **3:116.**).

*[நீணிலம் + அளந்தோன் + மகன்.]*

**நீணிலை** *nīṇilai,* பெ. (n.) ஆழம்; depth. "*நீணிலைக் கூவல்*" (கல்லா. **12.**).

*[நீள் + நிலை.]*

**நீணு–தல்** *nīṇu-,* 5 செ.கு.வி. (v.i.) நெடுந் தொலைவு செல்லுதல்; to go a long distance. "*மாலொடு தண்டாமரையானு நீணுதல் செய்தொழிய நிமிர்ந்தான்*" (தேவா. **62. 9.**).

*[நீள் → நீளு → நீணு–,]*

**நீணெறி** *nīṇeṟi,* பெ. (n.) **1.** நீண்டவழி (யாழ்.அக.); long way. "*வேலியில் இடுமுள் ளொன்றைப் பிரித்து அதனை நீங்கிக் காலைக் கடன் கழித்தற்கு நீணெறிக் கண்ணதோர் நீர்நிலைக்கண் தலைப் படுகின்றவனென்க.*" (சிலப். **13:43,** உரை.). **2.** இடைவிடா இன்பத்திற்குரிய நெறி (வின்.); the path of lasting happiness.

*[நீள் + நெறி.]*

**நீணோக்கம்** *nīṇōkkam,* பெ. (n.) விடாமற் பார்த்தல்; seeing without stop. *"நீணோக்கங் கண்டு நிறைமதி வாண் முகத்தைத் தானோர் குரக்குமு மாகென்று போன"* (சிலப். 21:20.).

*[நீள் + நோக்கு+அம்]*

**நீத்தண்ணீர்** *nī-t-taṇṇīr,* பெ. (n.) நீர்ச் சோற்றுத் தண்ணீர் (இ.வ.); water allowed to stand over cooked rice over-night.

*[நீர்ச்சோற்றுத் தண்ணீர் → நீர்த்தண்ணீர் → நீத்தண்ணீர்.]*

**நீத்தம்**[2] *nīttam,* பெ. (n.) 1.நீந்தற்குரிய ஆழிய இடம்; swimming depther place. *"வெள்ளநீர் நீத்தத்து ஞேர்பூர் புழுக்குநரும்."* (பரிபா.11:53.). **2.**வெள்ளம்; flood. *"நிவந்துசென் னீத்தங் குளங் கொலச் சாற்றி"* (மதுரைக். 246.). 3. ஆழம்; depth. *"வெள்ளநீர் நீத்தத்துள்"* (பரிபா. 11:53.). 4. கடல்; sea. (சீவக. 2421, உரை.). 5. மிகுதி; excess, abundance. *"நிறை நறுங் கூந்த னீத்தம்"* (கம்பரா. நாடவி. 59.).

*[நீந்து → நீத்தம்.]*

**நீத்தம்**[2] *nīttam,* பெ. (n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water root, aspargus racemos.

**நீத்தவன்** *nīttavaṉ,* பெ. (n.) 1. துறவி; ascetic. 2. அருகன் (சூடா.); Arhat.

*[நீ → நீக்கு → நீத்தல். நீத்தல் = விடுபடுதல், விலகுதல், துறத்தல். நீத்து → நீத்தவன்.]*

**நீத்தார்**[1] *nīttār,* பெ. (n.) இறந்தவர்; (இக்.வழ.) மறைந்தவர்; the dead. *'நீத்தாருக்கு ஆற்ற வேண்டிய கடன்'* (உ.வ.).

*[நீத்தார் – உயிரை நீத்தவர், இறந்தவர்.]*

நீத்தார் என்பது முற்றத்துறந்த முழு முனிவரையே குறிக்குமெனினும், உயிரைத் துறந்த பின் துறப்பதற் கேதுமின்மை கருதி மறைந்தவரைக் குறிக்கவும் இச்சொல் வழங்குவது இக்கால வழக்கு.

**நீத்தார்**[2] *nīttār,* பெ. (n.) முற்றுந் துறந்த முனிவர், renounced person. *"ஒழுக்கத்து நீத்தார் பெருமை"* (குறள், 21.).

*[நீ → நீக்கு → நீத்தார்.]*

முற்றத் துறந்த முழுமுனிவர். தமக்குரிய ஒழுக்கத்தின் கண் உறைந்து நின்று உலகப் பற்றைத் துறந்த முனிவர்.

**நீத்தார்இறுதிச்சடங்கு** *nīttār-iṟudi-c-caḍaṅgu,* பெ. (n.) இறந்தவரின் பொருட்டு அவர் பிறங்கடைகள் செய்யும் இறப்புக்குப் பிந்தைய கரணம்; performence funeral rites to the death by their heir.

*[நீத்தார் + இறுதிச்சடங்கு.]*

**நீத்தார்கடன்** *nīttār-kaḍaṉ,* பெ. (n.) நீத்தார் இறுதிச் சடங்கு பார்க்க; see nīttār-iṟudi-c-caḍaṅgu.

*[நீத்தார்² + கடன். கடம் → கடன் = செய்யத் தக்கது, செலுத்தத் தக்கது.]*

**நீத்தார்சடங்கு** *nīttār-šaḍaṅgu,* பெ. (n.) நீத்தார் இறுதிச்சடங்கு பார்க்க; *see nīttār-iṟudi-c-caḍaṅgu.*

*[நீத்தார் + சடங்கு.]*

**நீத்தார்பெருமை** *nīttār-perumai,* பெ. (n.) திருக்குறள் அதிகாரங்களுள் ஒன்று; one of the chapters of Tirukkuṟaḷ.

*[நீத்தார் + பெருமை.]*

இறைவன் திருவருளைப் பெற்றவரும், மழை பெயற்கு ஓரளவு கரணியமாகக் கருதப்பெறுபவரும், பேரரசர்க்கும் பெருந் துணையாகும் அறிவாற்றல் மிக்கவரும், மழைக்கு அடுத்தபடியாக நாட்டு நல்வாழ்விற்கு வேண்டியவருமான, முற்றத் துறந்த முழு முனிவரின் பெருமை கூறுதல் (குறள், மரபுரை 1:50).

**நீத்திடு—தல்** *nīttiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பெருக்கிடுதல்; (சீவக. 1382, உரை.); to overflow, flood. 2. மிகுத்திடுதல்; to become excessive. *"இகவாவிட ரென்வயி னீத்திட"* (சீவக. 1382.).

*[நீத்து + இடு—,]*

**நீத்திருணி** *nīttiruṇi,* பெ. (n.) காமப்பால்; semen virile. (சா.அக.)

**நீத்து**[1] *nīttu,* பெ. (n.) பெருக்கம் (ஐங்குறு.); multiplicity.

**நீத்து**[2] *nīttu,* பெ. (n.) 1. நீந்துகை; swimming. *"நீத்துநீ ரிருங்கழி"* (ஐங்குறு.162.). 2. நீந்தக்கூடிய ஆழமுடைய நீர்; water of swimming depth. *"யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப"* (தொல்.சொல்.406,சேனா.). 3. வெள்ளம்; flood.

*[நீந்து → நீத்து.]*

**நீத்துநீர்** *nīttu-nīr,* பெ. (n.) நீந்துதற்குரிய ஆழ்ந்த நீர்; depth of water to be used for swimming. *"பெருங்கடற் கரையது சிறு வெண்காக்கை நீத்து நீர் இருங்கழி இரைதேர்ந்துண்டு பூக்கமழ் பொதும்பிற் சேக்குந் துறைவனொடு"* (குறுந்.313.).

*[நீந்து → நீத்து + நீர்.]*

**நீத்துப்பாகம்** *nīttu-p-pāgam,* பெ. (n.) *நீர்ச் சோற்றுத்தண்ணீர்* பார்க்க; see *nīr-šōṟṟu-t-taṇṇīr*

*[நீர் + பாகம் → நீர்ப்பாகம் → நீற்றுப்பாகம் → நீத்துப்பாகம்.]*

**நீத்தோர்** *nīttōr,* பெ. (n.) பிரிந்தோர்; as divider. "அஞ்சி லோதி யாய்வளை நெகிழ நொந்தும் நம் அருளார் நீத்தோர்க்கு அஞ்சல் எஞ்சினம் வாழீ தோழி" (குறுந்.211.).

*[நீத்து → நீத்தோர்.]*

**நீதகம்** *nīdagam,* பெ. (n.) 1. வெற்றிலைக் கொடி எனும் கொடிவகை; betel-pepper. 2. *நீர்வல்லி* பார்க்க; see *nīr-valli.*

*[நீர் → நீத்தம் → நீதம் → நீதகம்.]*

**நீதச்சிலைச்சூதம்** *nīdaccilai-c-cūdam,* பெ. (n.) துரிசு; blue vitriol, verdigris.

**நீதச்செம்மண்** *nīda-c-cemmaṇ,* பெ. (n.) நிலத்தின் மேல் மண்; the red soil of a table land. (சா.அக.).

*[நீதம் + செம்மண்.]*

**நீதபரிமளம்** *nīda-parimaḷam,* பெ. (n.) சீதாங்கச் செய்நஞ்சு (யாழ். அக.); a mineral poison.

*[நீதம் + பரிமளம்.]*

**நீந்தக்கொடு—த்தல்** *nīnda-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *நீந்தப் பெய்—தல்* பார்க்க; see *nīnda-p-pey-,*

*[நீந்து[2] + கொடு—,]*

**நீந்தப்பெய்–தல்** *ninda-p-pey-,* 1 செ.குன்றாவி. (v.t.) மிகுதியாய்க் கொடுத்தல்; to give or pour in abundance. "*கன்னலு நெய்யு நீந்தப் பெய்து*" (சீவக. 2401.).

*[நீந்து[2] + பெய்.*
நீஞ்சு → நீந்து = கடத்தல், அளவு கடத்தல், மிகுதி. பிள் → பிய் → பெய் = பொழிதல், கொடுத்தல், வழங்குதல்.]

**நீந்தல்** *nindal,* தொ.பெ. (vbl.n.) நீந்துதல் (சூ.நிக.5:25. மூலம்.); to swim.

*[நீர் + நீந்து + அல்.]*

அல்– தொழிற்பெயரீறு.

**நீந்து[1]–தல்** *nindu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கைகால்களாலடித்து நீரில் மிதந்து செல்லுதல்; to swim in water. "*நீந்துபுனல்*" (திவா. 5:68.). 2. பெருகுதல்; to overflow. "நெடும்பெருங்க ணீந்தின நீர்" (பு.வெ.12. பெண்பாற்.8.).

*[நீஞ்சு → நீந்து.]*

**நீந்து[2]–தல்** *nindu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கடத்தல்; to swim across, cross over, escape from. "*பிறவிப் பெருங்கடனீந்துவார்*" (குறள்,10.). 2. வெல்லுதல்; to get over, overcome. "*கலங்கருவிய வரைநீந்தி*" (மதுரைக் 57.). 3. கழித்தல்; to relinquish, give up. "*மணப்பருங் காமந் தணப்ப நீந்தி*" (அகநா. 50.).

**நீந்து[3]** *nindu,* பெ. (n.) பெருங்கடல்; ocean. "*நீந்து நித்தில விதான நிழலான்*" (சீவக.2421.).

**நீந்துபுனல்** *nindu-punal,* பெ. (n.) ஆழமுள்ள நீர் (திவா.); deep water.

*[நீந்து + புனல்.]*

**நீந்துமூசி** *nindum-ūši,* பெ. (n.) காந்தம்; load stone

*[நீந்தும் + ஊசி]*

**நீப்பு** *nippu,* பெ. (n.) 1. துறவு; relinquishment, renunciation. 2. பிரிவு; separation, parting.

*[நீ → நீப்பு]*

**நீப்புரவு** *nippuravu,* பெ. (n.) நீங்குகை; leaving, abudoning. "*யாப்புறு பால்வகை நீப்புரவின்றி*" (பெருங். மகத. 6:63.).

*[நீ → நீப்பு → நீப்புரவு.]*

**நீபம்[1]** *nibam,* பெ. (n.) 1. *நீர்க்கடம்பு* (பிங்.) பார்க்க; see *nir-k-kadambu.* 2. பெண் கடம்பு common Indian oak. 3. செங்கடம்பு; small Indian oak. 4. மரவகை; niepabark. 5. உத்திரட்டாதி (பிங்.) பார்க்க; see uttirattādi.

**நீபம்[2]** *nibam,* பெ. (n.) கரணியம் (பிங்.); cause, reason.

**நீம்** *nim ,* பி. பெ. (pron.) முன்னிலைப் பன்மைப்பெயர்; you. "*நீமே வென்றிக் களிற்றானுழைச் செல்வது வேண்டு மென்றான்*" (சீவக. 1932.).

*[நீன் → நீ → நீம்.]*

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை

இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற் போல் நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கண வறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப்படுகிறது. நீனுக்குப் பன்மை நீம். மகரம் பன்மைப் பொருளுணர்த்தலை ஆங்கில இலக்கண நூல்களிலும் காணலாம் (இலக்.கட்.4.).

**நீம்பயம்** *nīmbayam,* பெ. (n.) பனிதாங்கி; southern wood-artimisa abrotanum. (சா.அக.).

**நீம்பல்** *nīmbal,* பெ. (n.) **1.** இரண்டு பலகையினூடே தோன்றுவது போன்ற பிளப்பு (இ.வ.); interstice, gap, cleft, chink, as between two boards. **2.** வெடியுப்பு (சா.அக.); saltpetre.

*[நுல் → நெல் → நெள் → நெரு →நெகிழ் (நெகிள்) நீள் → நீம் → நீம்பு → நீம்பல்.]*

**நீமம்** *nīmam,* பெ. (n.) **1.** ஒளி; light **2.** பளபளப்பு; lustre. (சா.அக.).

**நீயான்** *nīyāṉ,* பெ. (n.) கப்பலின் தலைவன்; captain of a ship. "*பௌவத்தருங்கலமியக்கு நீயான் போல்*" (பெருங். உஞ்சைக்.49:10.)

*[நீர்கலமகன் → நீகாமன் → நீகான் → நீயான்]*

**நீயிர்**[1] *nīyir,* பி.பெ. (pron.) முன்னிலைப் பன்மைப்பெயர்; you.

நீயிர் என்னும் முன்னிலைப் பன்மைப் பெயர் வேற்றுமைப்படும்போது நும் என்று திரியு மேயன்றி, நும் மென்னும் வேற்றுமைத் திரிபுப் பெயர் நீயிரென்று திரியாது.

| முன்னிலைப் பெயர் | வேற்றுமைத்திரிபு |
|---|---|
| நீ, நீ | நின், நுன், உன் |
| நீம் | நும், உம் |
| நீம் + கள் = நீங்கள் | நுங்கள், உங்கள் |
| நீம் + இர் = நீவிர் | நும், உம். |
| நீயிர், நீவிர்; | |

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற்போல், நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கண வறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப்படுகிறது. நீனுக்குப் பன்மை நீம் என்பது மகரம் பன்மைப் பொருளுணர்த்தலை ஆங்கில இலக்கண நூல்களிலும் காணலாம். நீங்கள் என்பது விகுதிமேல் விகுதி பெற்ற இரட்டைப்பன்மை. (இலக்.கட். 4.).

நீன், நீம், நூன், நூம் என்பன பழந்தமிழ் முன்னிலைப் பெயர்கள். இவற்றின் னகரவீறு ஒருமையையும் மகரவீறு பன்மையையுங் குறிக்கும். இவற்றுள் நீன் என்னுஞ் சொல் இன்றும் தென்னாட்டு வழக்கிலுள்ளது. நூன் நூம் என்பன இருவகை வழக்கும் அறினும், அவற்றின் வேற்றுமைத் திரிபான நுன், நும் என்னும் அடிகள் இன்றுஞ் செய்யுள் வழக்கிலுள்ளன. நீன் என்னுஞ் சொல்லின் கடைக்குறையான நீ என்பது இருவகை வழக்கிலுமுள்ளது.

நீ என்பது சீனமொழியில் '*நி*' எனக் குறுகி வழங்குகின்றது. '*நிமென்*' என்பது இதன் பன்மை.

பொர்னு என்னும் ஆப்பிரிக்க மொழியில் '*நி*' என்பதே முன்னிலை யொருமைப் பெயர்.

சில பழஞ்சிந்திய மொழிகளில் நீ என்னும் பெயர் தமிழிற் போன்றே சிறிதும் திரியாமல் வழங்கிவந்தது.

ஆத்திரேலிய மொழிகளின் முன்னிலை யொருமை '*நின்ன*' '*ஙின்னீ*' '*ஙிந்தெ*' என்பன; இருமை '*நிவ*' '*நுர*' என்பன; பன்மை

*'நிமெதூ'* என்பது. இங்ஙனமே ஏனை யிடப் பெயர்களும் இயல்பு வடிவில் அல்லது திரிபுவடிவில் ஏறத்தாழ எல்லா மொழிகட்கும் பொது வாகவுள்ளன. (மொழி.கட்.14.).

**நீயிர்²** *nīyir,* பி.பெ. (pron.) நீவிர்; you. "*நீயிர்கள் வாய்மையை நிகழ்த்துமென்னவே*" (கந்தபு. சூரனகர்புரி.18.).

**நீயேகூறென்றல்** *nīyē-kūreṉṟal,* பெ. (n.) திருக்கோவையார் கூறும் அகப் பொருள் துறைகளிலொன்று; one of the theme of the love-poetry.

தன் பிரிவைத் தலைவியிடங் கூறுமாறு தலைவன் தோழியிடம் வேண்ட, அதற்கவள் உடம்படாளாய்த், தலைவ, அவளுக்கு நீயே கூறுக' எனுந்துறை.

*[நீயே + கூறு + என்றல்.]*

**நீர்¹-த்தல்** *nīr-,* 11 செ.கு.வி. (v.i.) (நீர்மத்தின்) அடர்த்தியைக் குறைத்தல்; (மோர் போன்ற வற்றில்) நீர் கலந்து நீர்த்தன்மை உடையதாக்குதல்; to dilute (a liquid) make thin (by adding water). *நீர்த்த மோராக இருந்தாலும் குடிப்பதற்குச் சுவையாய் இருக்கிறது. (உ.வ.). மேலும் மேலும் திருத்தங்கள் செய்ததால் கருத்து நீர்த்துப் போய்விட்டது. (உ.வ.). தலைவர்களின் கடைபிடி இன்மையால் கொள்கை நீர்த்துப் போய்விட்டது.* (உ.வ.). 2. (சுண்ணாம்பில்) நீர் சேர்த்துக் குழைத்தல்; slake (lime).

*[நீள் → நீர்.]*

**நீர்²-த்தல்** *nīr-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீராதல்; to become thin or watery, as liquid food in cooking. 2. ஈரமாதல்; to be wet, moist. "*நீர்க்கின்ற செஞ்சடை*" (திருமந்.2121.).

**நீர்³** *nīr,* பெ. (n.) 1. ஐம்பூதங்களிலொன்றான நீர்; water, one of the five elements. "*தீமுரணிய நீரும்*" (புறநா. 2.). 2. கடல்; sea, ocean. "*நீரொலித்தன்ன*" (மதுரைக்.369.). 3. சாறு (இரசம்); juice, liquor. "*கரும்பினை..... யிடித்துநீர் கொள்ளினும்*" (நாலடி, 156.). 4. பனிநீர்; rose water. "*நீரால் வெண்ணிறப் பொடியை மாற்றி*" (சீவக.117.). 5. உடலிலுள்ள அரத்தம், பித்தநீர் முதலிய நீர்மப்பொருள் (வின்.); humours of the body, as serum, lymph. 6. சிறுநீர்; urine. "*இவ்வெல்லையி னீர்பெய்து யான் வருகாறும்*" (பிரமோத்.2.50.). 7. *பூராடம்* (பிங்.) பார்க்க; see *pūrāḍam.* 8. *பூரட்டாதி* (அக.நி.) பார்க்க; see *pūrattādi.* 9. ஈரம் (வின்.); dampness, moisture, humidity. 10. ஒன்பான் மணியொன்றின் (இரத்தினத்தின்) ஒளி; water in a gem. "*நெடுநீர் வார்குழை*" (நெடுநல்.139.). 11. குணம்; nature, disposition. "*அன்ன நீரார்க்கேயுள*" (குறள்,527.). 12. நிலை (வின்.); state, condition. 13. முறைமை; order, manner. "பேர்யாற்றடை கரை நீரிற் கேட்டாங் கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளார்" (சிலப்.10:140.).

**ம., க., கோத., து., கட., குவி.,** நீர்; **தெ.,** நீர்., நீள்ளு; **து., பர்.,** நீர்; **கொலா.,** இர்; **பிரா.,** திர்.,
Skt. nīru = water, juice, liquor.

*[நுல் (நீட்சிக்கருத்துவேர்) நுல் → நெல் → நெள் → நெகு → நெகி (நெகிள்) → நீள் → நீர் (வே.க.3:42).]*

**நீர்⁴** *nīr,* பெ. (n.) தன்மை; nature. "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த முந்நீர் விழவி னெடியோன் நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறநா.9.). "நீர்மிகிற் சிறையு மில்லை தீமி கின் மன்னுயிர் நிழற்று நிழலுமில்லை" (புறநா.9.). "இரங்கு முரசி னினஞ்சால் யானை முந்நீ ரேணி விறல் கெழுமூவரை கடல்" (புறநா.137.). "காரொவ்வா வேனில் கலங்கின் தெளிவரல் நீரொவ்வா வையை நினக்கு" (பரிபா.11:73.).

**நீர்[5]** *nīr,* பெ. (n.) நீ என்ற முன்னிலை ஒருமைச் சொல்லைவிட மதிப்புக் கூடியதாகவும் நீங்கள் என்ற முன்னிலைச் சொல்லைவிட மதிப்பிற் குறைந்ததாகவும் உள்ள முன்னிலைச் சொல். (இக்.வ.); second person pronoun more polite than நீ but less polite than நீங்கள்.

*[நீ → நீர்.]*

**நீர்[6]** *nīr,* பெ. (n.) முன்னிலைப் பன்மைப் பெயர்; you.

*[நீன் → நீ → நீர்.]*

நீன் என்னும் பெயரே நீ என்று குறைந்து வழங்குகின்றது. நீன் என்னும் வடிவை இன்றும் தென்னாட்டுலக வழக்கிற் காணலாம். தான் என்பது தன் என்று குறுகினாற்போல நீன் என்பது நின் என்று குறுகும். நீன் என்பது இலக்கண வறியாமை காரணமாகக் கொச்சையாகக் கருதப் படுகின்றது. நீனுக்குப் பன்மை நீம் என்பது. மகரம் பன்மைப் பொருளுணர்த்தலை ஆங்கில இலக்கண நூலிலும் காணலாம். நீங்கள் என்பது விகுதிமேல் விகுதி பெற்ற இரட்டைப் பன்மை. நீவிர் என்பது இலக்கணப் போலி. நீயிர் என்னும் சொல்லே நீர் என இடைக்குறைந்து நின்றது. (இலக்.கட்.4.).

**நீர்அடைவு** *nīr-aḍaivu,* பெ. (n.) நீர்ப்பெருக்கு; water gain or bleeding.

*[நீர் + அடைவு.]*

**நீர்அளவு** *nīr-aḷavu,* பெ. (n.) நீரின் கொள்ளளவு; water content.

*[நீர் + அளவு.]*

**நீர்அளவை** *nīr-aḷavai,* பெ. (n.) நீரைக்கணக்கிடுகை; water measurement.

*[நீர் + அளவை.]*

**நீர்இயக்கவியல்** *nīr-iyakkaviyal,* பெ. (n.) நீரின் இயக்கம் பற்றிய அறிவியற் பிரிவு; hydro dynamics.

*[நீர் + இயக்கம் + இயல்.]*

**நீர்ஊடுருவாமை** *nīr-vūḍuruvāmai,* பெ. (n.) நீர்ப்புகா இறுக்கம்; water tightness.

*[நீர் + ஊடுருவாமை.]*

**நீர்ஒவ்வாமை** *nīr-ovvāmai,* பெ. (n.) உடம்புக்கு நீர் ஒத்துக்கொள்ளாமையாகிய மாறுபாடு; injuriousness of some kinds of water.

*[நீர் + ஒவ்வாமை. உல் → ஒல் → ஒவ் → ஒவ்வு + ஆ + மை.]*

ஆ – எதிர்மறை இடைநிலை.

**நீர்ஓட்டம்** *nīr-ōṭṭam,* பெ. (n.) நீர்ப்பெருக்கு current (water).

*[நீர் + ஓட்டம்.]*

**நீர்க்கசிவு[1]** *nīr-k-kašivu,* பெ. (n.) ஊற்று பாய்தல்; welling up.

*[நீர் + கசிவு.]*

**நீர்க்கசிவு[2]** *nīr-k-kašivu,* பெ. (n.) கசிவு; dampness.

*[நீர் + கசிவு. கள் → கழி → கசி → கசிவு.]*

**நீர்க்கட்டி[1]** *nīr-k-kaṭṭi,* பெ. (n.) கம்முக்கட்டி; water boil.

*[நீர் + கட்டி.]*

**நீர்க்கட்டி**[2] *nīr-k-kaṭṭi,* பெ. (n.) **1.** நீர்க்கண்டி பார்க்க; see nīr-k-kaṇḍi. **2.** ஆலங்கட்டி (இ.வ.); hail-stone. **3.** கெடுநீர் (சலம்) வைத்த புண் கட்டி (இ.வ.); a cyst.

*[நீர் + கட்டி.]*

குள் → கள் → கட்டு → கட்டி (மு.தா. 244.) கள் – திரளல், பெருகுதல், உருண்டையாதல், உருண்டு கட்டியாதல், திரண்டு பெருகுதலால் தோற்றப் பொலிவு பெறுதல்.

**நீர்க்கட்டு**[1]**–தல்** *nīr-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) புண் சீழ் பிடித்தல் (வின்.); to form pus.

*[நீர் + கட்டு–.]*

குள் → கள் → கட்டு. கள் – திரளல், பெருகுதல், உருண்டையாதல், திரண்டு பெருகுதலால் தோற்றப் பொலிவு பெறுதல்.

**நீர்க்கட்டு**[2]**–தல்** *nīr-k-kaṭṭu-,* பெ. (n.) **1.** சிறுநீர்தடைப்பட்டிருக்கும் நோய் (வின்.); retention or stoppage of urine, stricture of urethra. **2.** நீராலுண்டாம் உடல் வீக்கம் (வின்.); dropsy. **3.** நீர்க்கோவை (இ.வ.); tonsilitis **4.** நீர்நோய் வகை (இ.வ.); inflammation of a synovial membrance, synovitis.

*[நீர் + கட்டு–.]*

**நீர்க்கட்டு**[3] *nīr-k-kaṭṭu,* பெ. (n.) ஏரி முதலியவற்றில் நீர் தேங்கும் அளவு; the maximum height up to which water collects, as in a lake, tank, etc. இந்த ஏரிக்கு நீர்க்கட்டு எவ்வளவு? (உ.வ.).

*[நீர் + கட்டு.]*

**நீர்க்கட்டுக்கொடி** *nīr-k-kaṭṭu-k-koḍi,* பெ. (n.) பெருங்கட்டுக்கொடி; a bigger variety of coagulating creeper-cocaulus villofus. (சா.அக.).

*[நீர் + கட்டு + கொடி.]*

**நீர்க்கட்டுவாதம்** *nīr-k-kaṭṭu-vādam,* பெ. (n.) *நீர்க்கட்டுவூதை* பார்க்க; see *nīr-k-kaṭṭu-ūdai.*

*[நீர்க்கட்டு + வாதம்.]*

skt. vādam › **த.** ஊதை.

**நீர்க்கட்டுவூதை** *nīr-k-kaṭṭu-ūdai,* பெ. (n.) ஊதைநோய் வகை; rheumatism.

*[நீர்க்கட்டு + ஊதை.]*

**நீர்க்கடம்பு** *nīr-kaḍambu,* பெ. (n.) கடப்ப மரவகை (L.); water cadamba tree.

*[நீர் + கடம்பு.*
*நீள் → நீர்*
*கடு → கடம்பு.]*

**நீர்க்கடலை** *nīr-k-kaḍalai,* பெ. (n.) பேய்க்கடலை; bitter bengal gram, devil's gram - cicergenus. (சா.அக.).

*[நீர் + கடலை.]*

**நீர்க்கடவுள்** *nīr-k-kaḍavuḷ,* பெ. (n.) மழைக்கடவுள், வருணன்; varuṇan, as god of the waters. "*வருணன் மேய பெருமண லுலகமும்*" (தொல்.பொருள்.5.), "*கதுமெனக் கண்ட சிங்கனீர்க்கடவுளை நினைந்தான்*" (உபதேசகா. உருத்திராக். 227.).

*[நீர் + கடவுள்.]*

நீள்→நீர்.
கடவு → கடவுள் = இயக்குபவன், செலுத்துபவன்.

கடவுள் என்னும் பெயர், மனமொழி மெய்களையும் எல்லாவற்றையுங் கடந்த முழுமுதற் கடவுளையே குறிக்க எழுந்த சொல்லென்பது அதன் பகுதியாலேயே விளங்கும் (சொ.ஆ.க.87.).

**நீர்க்கடன்** *nīr-k-kaḍaṉ,* பெ. (n.) நீத்தார் பொருட்டுச் செய்யும் நீர்க்கரணம் (சடங்கு); libations of water with sesame seeds and quitch grass or kaus, offered to one's manes. "*நீர்க்கடன் மரபுதாங்கி*" (சீவக.1737.). 2. *சந்தியாவந்தனம்* (இ.வ.) பார்க்க; see *santhiyavanthanam.*

*[நீர் + கடன்.*

நீள் →நீர். கட = இயங்கு, செல். கடம் → கடன் = செய்யத்தக்கது, செலுத்தத் தக்கது. கடம்→கடன்–கடைப்போலி. ஒ.நோ: நலம்→நலன்.*]*

**நீர்க்கடிகை**[1] *nīr-k-kaḍigai,* பெ. (n.) நேரத்தைத் தெரிந்து கொள்வதற்காகப் பழந்தமிழர் பயன்படுத்திய கருவி; clepsydra, ancient clock worked by flow of water; hour-glass.

*[நீர் + கடிகை.]*

கடிகை–சிறிய மட்பானை, நீர்க்கலம், நாழிகை வட்டில்.
குள்→ குண்டு = குழி, ஆழம். குண்டு→ குண்டான் – குழிந்த அல்லது குண்டானகலம். குண்டான் → குண்டா. குண்டு → குண்டிகை → குடிகை → குடிக்கை, குடுவை. குடிகை–நீர்க்கலம் (கமண்டலம்). குடிகை → கடிகை– நீர்க்கலம், நாழிகை வட்டில்.

**நீர்க்கடிகை**[2] *nīr-k-kaḍigai,* பெ. (n.) துறவியர் கையிலேந்தும் வளைந்த கைப்பிடியுடைய மூக்குச் செம்பு; a vessel for holding water used by ascetics.

*[நீர் + கடிகை.]*



**நீர்க்கடியாரம்** *nīr-k-kaḍiyāram,* பெ. (n.) நீர்க்கடிகை பார்க்க; see nīr-k-kaḍigai.

*[நீர் + கடியாரம்.]*

கடிகை + ஆரம் – கடிகையாரம் → கடிகாரம். கடிகை → கழிகை. ஒ.நோ.: வட்டு + ஆரம் – வட்டாரம், கொட்டு+ஆரம்–கொட்டாரம் ஆரம்– சொல்லாக்க ஈறு (வே.க.158.). பழங்காலத்தில் காலம் அறிவதற்குப் பயன்படுத்திய கருவி நீர்க்கடிகை எனப்பட்டது. கடிகை=சிறிய மட்பானை, நீர்க்கலம், நாழிகைவட்டில். கடீயந்திர, கடிகாயந்திர என்னும் வடசொற் புணர்ப் பினின்று கடிகாரம் என்னும் தென்சொல் வந்ததன்று (வ.வ.103.).

**நீர்க்கடுப்பு** *nīr-k-kaḍuppu,* பெ. (n.) சிறுநீரில்சூடுபிடிப்பு; எரிச்சலோடு துளி துளியாய்ச் சிறுநீர் இறங்கும் நோய்வகை; dysury, strangury; urethritis, stricture of urethra.

*[நீர் + கடுப்பு.]*

**மறுவ.** நீர்க்கிரிச்சரம், நீர்க்குத்து, நீர்க்கொதி, நீர்க்கொதிப்பு.

**நீர்க்கடும்புத்தோல்** *nīr-k-kaḍumbu-t-tōl,* பெ. (n.) ஒருவகை மருந்துப் பச்சிலை (மாட்டுவா.); a medicinal herb.

**நீர்க்கண்டகி** *nīr-k-kaṇḍagi,* பெ. (n.) நீர்முள்ளிச் செடி (தைலவ.தைல.135.); a herb growing in moist places.

*[நீர் + கண்டகி.]*

கள் →கண்டு →கண்டகி. கள் – முள். கண்டகி–முட்செடி.

**நீர்க்கண்டம்**[1] *nīr-k-kaṇḍam,* பெ. (n.) நீரில் மூழ்கிப் போதல் முதலிய ஏதம்; peril by water, as drowing.

*[நீர் + கண்டம்.]*

**நீர்க்கண்டம்**[2] *nīr-k-kaṇḍam,* பெ. (n.) பனிக்கட்டி; ice, snow. (சா.அக.).

*[நீர் + கண்டம்.]*

**நீர்க்கண்டி** *nīr-k-kaṇḍi,* பெ. (n.) நீர் பாய்ச்சும் வேலையைக் கவனிக்கும் ஊர் ஊழியக்காரன் (இ.வ.); a village servant who looks to the distribution of water for irrigation.

க. நீர்க்கண்டி.

மறுவ. நீர்ப்பாய்ச்சி, நீராணிக்காரன்.

**நீர்க்கணம்**[1] *nīr-k-kaṇam,* பெ. (n.) செய்யுளின் முதலில் மங்கலமாக அமைக்கத் தக்கதும் நேர்நிரைநிரையென வருவதுமாகிய செய்யுட்கணம் (திவா.); metrical foot of one nēr and two nirai, as kū-viḷaṅ-gaṉi, considered auspicious at the commencement of a poem.

*[நீர் + கணம்.]*

**நீர்க்கணம்**[2] *nīr-k-kaṇam,* பெ. (n.) குழந்தைகட்குவரும் கண நோய்வகை (பாலவா. 41.); a wasting disease, in children.

*[நீர் + கணம்.]*

குள் →குண் → கண் → கண → கணம் (வே.க.187.).

**நீர்க்கதவு** *nīr-k-kadavu,* பெ. (n.) ஏரி முதலியவற்றிலிருந்து நீர் விடுதற்குரிய கதவு; flood gate. (C.E.M).

*[நீர் + கதவு.]*



**நீர்க்கம்பம்** *nīr-k-kambam,* பெ. (n.) காற்றில் சிதறுண்டு மேலெழும் நீர்த்திவலை; rising of water from the sea or lake in spray or gets to a certain level giving the appearance of a pillar due to a violent wind - water spout. (சா.அக.).

*[நீர் + கம்பம்.]*

**நீர்க்கம்மல்** *nīr-k-kammal,* பெ. (n.) நோய்வகை (தைலவ. தைல.34.); a disease.

*[நீர் + கம்மல்*
*செறுமுதல் → செம்முதல் →*
*கெம்முதல் → கெம்மல் → கம்மல்.]*

**நீர்க்கமல்லி** *nirkkamalli,* பெ. (n.) அல்லி (மலை.); water lily.

*[நீர் + கம் + அல்லி.]*

நீர் எனினும் கம் எனினும் ஒக்கும். அம் → கம். அம் = நீர். அல்–இரா. அல் → அல்லி = இரா. ஒ.நோ. அல் → எல் → எல்லி = → இரா. அல் → அல்லி – இரவில் மலரும் பூவகை.

**நீர்க்கரப்பன்** *nir-k-karappan,* பெ. (n.) சொறிப்புண் (சிரங்கு)வகை (m.l.); eczeme.

*[நீர் + கரப்பன்*

கரப்பு→கரப்பான். கரப்பு – சொறி, சுரசுரப்பு.]

**நீர்க்கருநோய்** *nir-k-karu-nōy,* பெ. (n.) சிறுநீரகத்திலுண்டாகும் நோய் வகை; bright's disease.

*[நீர் + கருநோய்*
*நீர்=சிறுநீர்.]*

**நீர்க்கருவியாதி** *nir-k-karu-viyādi,* பெ. (n.) *நீர்க்கருநோய்* பார்க்க; *see nir-k-karau-nōy.*

*[நீர்க்கரு + வியாதி.]*

த. நோய் > skt. வியாதி.

**நீர்க்கரை** *nir-k-karai,* பெ. (n.) 1. ஆறு குளம் இவற்றின் கரை; embankment of a river or tank. "*நீர்க்கரை நின்ற கடம்பையேறி*" (திவ். நாய்ச்.12:5.). 2. நீருள்ள பகுதி; water side.

*[நீர் + கரை.]*

கரு → கரை.
கரு = மேடு, உயரம்.

**நீர்க்கல்லடைப்பு** *nirkkal-adaippu,* பெ. (n.) சிறுநீர்ப்பையில் கல்லுண்டாக்கி நீர்த் துளையினை அடைத்து நீர் இறங்காமை யாகிய நோய்; retention of urine due to the obstruction of calculus or stone in the passage of urethra. this stone is the formation in the bladder.

*[ நீர் + கல்லடைப்பு. ]*

**நீர்க்கலம்** *nir-k-kalam,* பெ. (n.) 1. நீர் இருக்கும் ஏனம்; water vessels. 2. நீரருந்தும் ஏனம்; vessel for drinking water. 3. கமண்டலம்; a vessel for holding water used by ascetics.

*[ நீர் + கலம். ]*

**நீர்க்கவிதை** *nirkkavidai,* பெ. (n.) நீர்க்கோவை; dropsy. (சா.அக.).

**நீர்க்கழலை** *nir-k-kalalai,* பெ. (n.) ஒருவகை இமைக்கட்டி; excrescence on the eyelid.

*[நீர் + கழலை*

கழல்→கழலை. கழல்–கழற்சிக்காய், கழற்சிக்காய் போன்ற கட்டி.]

**நீர்க்கழிவு** *nir-k-kalivu,* பெ. (n.) *நீரிழிவு* (யாழ்.அக.) பார்க்க; see *nir-ilivu.*

*[நீரிழிவு →நீர்க்கழிவு.]*

**நீர்க்கனதி** *nir-k-kanadi,* பெ. (n.) *நீர்க்கனம்* (இ.வ.) பார்க்க; *see nir-k-kanam.*

*[நீர் + கனதி.]*

கல் → கனம் → கனதி.

**நீர்க்கனம்** *nīr-k-kaṉam,* பெ. (n.) சளி; cold.

*[நீர் + கனம்.]*

கனம்–செறிவு, திரட்சி, உறுதி, மிகுதி. கல் → கன். கல் = உறுதிப்பாடு. கன் → கன. கனத்தல் = பளுவாதல், மிகுதியாதல். கன → கனம் = தடிமன், பருமன், பெருமை, செறிவு, திரட்சி, உறுதி, மிகுதி, கூட்டம். சளிப்பிடித்திருத்தலைத் தடுமன் பிடித்துள்ளது என்று கூறுவது முண்டு.

**நீர்க்காக்கை** *nīr-k-kākkai,* பெ. (n.) (நீர் நிலைகளின் கரையில் காணப்படும்) வாத்து போன்ற தோற்றமும், கூரிய அலகுமுடைய மீனை உணவாகக் கொண்டு வாழும் காக்கையினத்தைச் சார்ந்த ஒருவகைக் கருநீலப் பறவை; cormorant. *"செங்காலன்னமும் பைங்காற் கொக்கும் கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும் உள்ளு மூரலும் புள்ளும் புதாவும் வெல்போர் வேந்தர் முனையிடம் போல"* (சிலப். 10:115.).

மறுவ. நீர்நிறக்காக்கை.

*[நீர் + காக்கை.]*

**நீர்க்காகம்** *nīr-k-kāgam,* பெ. (n.) *நீர்க்காக்கை* பார்க்க ; see *nīr-k-kākkai.*

*நீர் + காகம்.*
*காக்கை → காகம்.*

**நீர்க்காங்கு** *nīr-k-kāṅgu,* பெ. (n.) காட்டுப் பூவரசு மரம் ; false fern free.

*நீர் + காங்கு.*

*கோங்கு → காங்கு.*

**நீர்க்காசம்** *nīr-k-kāšam,* பெ. (n.) ஈளை (காச) நோய்வகை; a kind of asthma, consumption.

**நீர்க்காணம்** *nīr-k-kāṇam,* பெ. (n.) நீர்வரி (கல்வெட்டு); water cess.

*[நீர் + காணம். கண் → காணி = காணப்படுவது, கண்காணிக்கப்படுவது, பேணுகையில் உள்ள நிலம். வெறுந் தரையாயிருந்து யாரும் நுழைந்திட இடங்கொடாமல், ஒருவரின் காப்பிலிருப்பது காணி. அக்காணிக்கு இறுக்கப்படும் இறை, காணம்.]*

**நீர்க்காப்பு** *nīr-k-kāppu,* பெ. (n.) நீர்புக வழியளிக்காத காப்பு; water proof.

*[நீர் + காப்பு.*
*நீள் → நீர்*
*கா → காப்பு.]*

**நீர்க்காய்** *nīr-k-kāy,* பெ. (n.) நீர்த்தன்மை மிகுந்துள்ள காய்; vegetables with more water content.

*[நீர் + காய்.]*
சுரை, வெள்ளரி, பூசணி முதலான காய்களில் நீர்த்தன்மை மிகுந் திருத்தலின் இவை நீர்க்காய்கள் எனப்படுகின்றன.

**நீர்க்காய்ச்சுப்பு** *nīr-k-kāyccuppu,* பெ. (n.) 1. இந்துப்பு; rock salt.

*[நீர் + காய்ச்சு + உப்பு.]*

**நீர்க்காயம்** *nīr-k-kāyam,* பெ. (n.) நத்தை; snail. (சா.அக.)

**நீர்க்காரன்** *nīr-k-kāraṉ,* பெ. (n.) *நீர்க் கொணர்பவன்* பார்க்க; see nīr-k-koṇarbavaṉ.

*[நீர் + காரன்.]*

"காரன்' உடைமைப்பொருள் பின்னொட்டு

**நீர்க்காரி** *nīr-k-kāri,* பெ. (n.) *நீர்க்கொணர்பவள்* பார்க்க; see nīr-k-koṇarbavaḷ.

*[ நீர் + காரி.*
*காரன், காரி என்பன உடைமைப் பொருள் பின்னொட்டு. ]*

**நீர்க்காரிச்சி** *nīr-k-kāricci,* பெ. (n.) *நீர்க்கொணர்பவள்* பார்க்க; see nīr-k-koṇarbavaḷ.

*[ நீர்க் கொணர்பவள் → நீர்க்காரி → நீர்க்காரிச்சி. ]*
காரிச்சி – விகுதிமேல்விகுதி.

**நீர்க்கால்** *nīr-k-kāl,* பெ. (n.) **1.** நீரோடும் வழி; water course. (C.E.M). **2.** வாய்க்கால்; canal, *"நீர்க்கால் கொழுநிழல் ஞாழல்"* (கலித். 56.).

*[நீர் + கால்*
*நீள் → நீர்*
*குல் = தோன்றுதல் கருத்துவேர்.*
*குல் → கல் → கால் = தோன்றுதல், வருதல், பாய்தல், ஓடுதல், பரவுதல், வழி, தடம், பாதை.]*

**நீர்க்கால்சலாகை** *nīr-k-kāl-šalāgai,* பெ. (n.) சந்திர காந்தக்கல் ( சூ. நி.4:41 ); moon stone.

*[நீர் + கால் + சலாகை.]*

**நீர்க்காலி** *nīr-k-kāli,* பெ. (n.) நீர்போற் ஊட்ட மில்லாத பாலைக் கொடுக்கும் ஆன் (உ.வ.); cow which gives watery milk.

*[ நீர் + காலி. ]*

காலி – கால்நடை, கறவை, ஆன்.

**நீர்க்காவி** *nīr-k-kāvi,* பெ. (n.) அடிக்கடி துவைத்து ஈரந் தங்க வைத்தலால் ஆடையிற் பற்றுஞ் செந்நிறம்; a kind of reddish tinge in cloth, produced by frequently washing it in water without allowing it to dry. **2.** கருங் குவளை. (வின்); blue nelumbo.

*[ நீர் + காவி. ]*

**நீர்க்கிண்ணம்** *nīr-k-kiṇṇam,* பெ. (n.) நீர்க்கடிகை (புதுச்.) பார்க்க; see *nīr-k-kḍigai.*

*[ நீர் + கிண்ணம். ]*

**நீர்க்கிரந்தி** *nīr-k-kirandi,* பெ. (n.) நோய் வகை (இங். வை. 166.); a disease.

*[ நீர் + கிரந்தி. ]*

**நீர்க்கிராம்பு** *nīr-k-kirāmbu,* பெ. (n.) செடிவகை; prime rose-willow.

**நீர்க்கிரிச்சரம்** *nīr-k-kiriccaram,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* (m.l.) பார்க்க; *see nīr-k-kaḍuppu.*

**நீர்க்கிரிச்சினம்** *nīr-k-kriccinam,* பெ. (n.) சிறுநீர் தடைப்படுதல்; stricture of urine. (சா.அக.).

**நீர்க்கிழங்கு** *nīr-k-kiḻangu,* பெ. (n.) **1.** சிறு கிழங்கு; small water root. **2.** *தண்ணீர் விட்டான் கிழங்கு* பார்க்க ; *see taṇṇīr -viṭṭāṉ kiḻangu.* (சா.அக.).

*[ நீர் + கிழங்கு. ]*

**நீர்க்கிழவன்** *nīr-k-kiḻavaṉ,* பெ. (n.) *நீர்க்கடவுள்* (திருவிளை. பதிக. 4.) பார்க்க; *see nīr-k-kaḍavuḷ.*

*[ நீர் + கிழவன். ]*

கிழவன் – உரிமையுடையவன்

**நீர்க்கீரி** nīr-k-kīri, பெ. (n.) *நீர் நாய்* பார்க்க; *see nīr-nāy.*

*[ நீர் + கீரி. ]*

**நீர்க்கீரை[1]** *nīr-k-kīrai,* பெ. (n.) நீரிலுண்டாகும் கீரை வகை (வின்.); an edible water-plant.

*[ நீர் + கீரை. ]*

**நீர்க்கீரை[2]** *nīr-k-kīrai,* பெ. (n.) ஆரைக்கீரை; ārai-k-kīrai. (சா.அக.).

*[ நீர் + கீரை. ]*



**நீர்க்கீழ்** *nīr-k-kīḻ,* பெ. (n.) *நீர்த்தானம்* (வின்.) பார்க்க; see *nīr-t-tāṉam.*

*[ நீர் + கீழ். ]*

**நீர்க்குட்டம்** *nīr-k-kuṭṭam,* பெ. (n.) ஒருவகை நோய்; a kind of disease.

*[ நீர் + குட்டம். ]*

**நீர்க்குடத்தி** *nīr-k-kuḍatti,* பெ. (n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water-root, *asparagus racemosus.* (சா.அக.).

*[ நீர் + குடத்தி. ]*

**நீர்க்குடம்** *nīr-k-kuḍam,* பெ. (n.) 1. நீர் முகக்கும் குடம்; water-pot.

**நீர்க்குண்டி[1]** *nīr-k-kuṇḍi,* பெ (n.) 1. சிறுநீர் (முத்திர)குண்டி; in continence of urine-nocturnol enuresis. 2. வயலுக்குச்செல்லும் நீர்மடையைத் திருப்பி நிரவலாகப் பாயவைக்கும் பணியாளன்,மடையான்; one who distributes water for irrigation.

*[ நீர் + குண்டி. ]*

**நீர்க்குண்டி[2]** *nīr-k-kuṇḍi,* பெ. (n.) நொச்சி மர வகை; a species of chaste tree.

*[ நீர் + குண்டி.]*

**நீர்க்குண்டிக்காய்** *nīr-k-kuṇḍi-k-kāy,* பெ. (n.) சிறுநீர் உருவாகும் (உற்பத்தியாகும்) குண்டிக்காய்; an organ that secretes urine-kidney. (சா.அக.).

*[ நீர் + குண்டிக்காய். ]*

**நீர்க்குணபாடம்** *nīrkkuṇa - pāḍam,* பெ. (n.) பதார்த்த குண சிந்தாமணியில் சொல்லியபடி ஆறு, ஏரி, அருவி, கடலிற் பொருந்திய மருத்துவ குணத்தைப் பற்றியதொரு நூல்; the science which deals about the medicinal properties of the principle rivers and different water like tank, lake, shallow well, deep well, stream and sea. (சா.அக.).

*[ நீர்க்குணம் + பாடம். ]*

**நீர்க்குத்தல்** *nīr-k-kuttal,* பெ. (n.) *நீர்க்குத்து* பார்க்க ; *see nīr-k-kuttu.*

*[ நீர் + குத்தல் .]*

**நீர்க்குத்திரம்** *nīr-k-kuttiram,* பெ. (n.) *நீர்ச்சுண்டி* பார்க்க ; see *nīr-c-cuṇḍi.* (சா.அக.).

*[ நீர் + குத்திரம். ]*

**நீர்க்குத்து**[1] *nīr-k-kuttu,* பெ. (n.) **1.** சிறுநீர் தடைப்படுவதால் நீர்வழியிலேற்படும் குத்தல் வலி; an acute pain caused in the urethra from suppression or retention of urine. **2.** கல்லடைப்பினால் நீர்த்தாரையில் உண்டாகும் குத்தல் வலி; pin prick pain felt in the urethra due to obstruction of calculus in the urethra, a urinary disease. **3.** கொப்பூழ் (தொப்புள்); naval. (சா.அக.).

*[ நீர் + குத்து. ]*

**நீர்க்குத்து**[2] *nīr-k-kuttu,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* பார்க்க; see *nīr-k-kaḍuppu.*

*[ நீர் + குத்து. ]*

**நீர்க்குத்து**[3] *nīr-k-kuttu,* பெ. (n.) நீர்நிலைக்கு எதிராக வீட்டுவாயில் அமைந்திருக்கும் நிலை (இ.வ.); position of the entrance of a house being opposite to a tank, well, etc., considered inauspicious.

*[ நீர் + குத்து. ]*

**நீர்க்குதிரை** *nīr-k-kudirai,* பெ. (n.) குதிரை முகம் போன்ற தலையை நீட்டியவாறே நீந்திச் செல்லும் மீன்வகை; sea horse fish - hippo campus.

*[ நீர் + குதிரை ]*

**நீர்க்குப்பி** *nīr-kuppi,* பெ. (n.) *நீர்முள்ளி* (மலை.) பார்க்க; see nīr-muḷḷi.

*[ நீர் + குப்பி. ]*

**நீர்க்கும்பி** *nīr-k-kumbi,* பெ. (n.) *நீர்முள்ளி* பார்க்க; see *nīr-muḷḷi.*

*[ நீர் + கும்பி. ]*

**நீர்க்குமிழம்** *nīr-k-kumiḻam,* பெ. (n.) வெள்விழியில் சங்கம் பழம் போல் கொப்புளத்தை யுண்டாக்கும் ஒரு வகை கண் நோய் (சீவரட். 206.); an eye disease.

*[ நீர் + குமிழம். ]*

**நீர்க்குமிழி** *nīr-k-kumiḻi,* பெ. (n.) நீரிற் றோன்றும் மொக்குள் (திவா.); water bubble. *"நீர்க்குமிழி போலென்னினைவு வெளி வாய்க் கரைய"* (தாயு. பராப. 204.).

*[ நீர் + குமிழி*
கும் → குமி → குமிழ் → குமிழி. *]*

**நீர்க்குரு** *nīr-k-kuru,* பெ. (n.) **1.** வியர்க்குரு; prickly heat-millaria. **2.** நீர்க்கொள் சிறுகுரு; pimple, pastule. **3.** குருப்பொது; any papule **4.** தேரையர் கரிசலில் மருத்துவப்பிரிவுகளுள் ஒன்று; one of the medicinal classification referred to in the karisal work of Theraiyar an authority in Tamil medicine. (சா.அக.).

*[ நீர் + குரு. ]*

**நீர்க்குவை**[1] *nīr-k-kuvai,* பெ. (n.) கடைக் கண்ணில் குளிர் (சிலேட்டும) மொத்தைபோல் சதை வளர்ப்பிக்குமொரு கண்ணோய்; a disease of the inner corner or angle of the eyes marked by a mucous growth. (சா.அக.).

*[ நீர் + குவை. ]*

**நீர்க்குவை**[2] *nīr-k-kuvai,* பெ. (n.) கடைக் கண்ணில் வளரும் தேவையற்ற தசை (சீவரட்.); proud flesh in the corner of the eye.

*[ நீர் + குவை. ]*

**நீர்க்குழாய்** nir-k-kuḻāi, பெ. (n.) நீரினைக் கொண்டு செல்லும் குழாய் ; water-pipe.

*[ நீர் + குழாய். ]*

**நீர்க்குளரி** *nir-k-kuḷari,* பெ. (n.) கல்லாரச் செடி (பெரியபு. தடுத்தா. 173, உரை.); creeper.

*[ நீர் + குளரி. ]*

**நீர்க்குளிரி** *nir-k-kuḷiri,* பெ. (n.) **1.** செடிவகை (திவா.); arrow-head- sagittarai obtusifolia. **2.** பற்றுக்கோடின்மை; want of support. **3.** இழப்பு; loss.

*[ நீர் + குளிரி. ]*

**நீர்க்குளுமையூட்டி** *nir-k-kuḷumai-y-ūṭṭi,* பெ. (n.) நீரோட்டத்தால் அறையின் வெம்மையைத் தணிக்கும் கருவி; water cooler.

*[ நீர் + குளுமை + ஊட்டி. ]*

**நீர்க்குளுவான்** *nir-k-kuḷuvāṉ,* பெ. (n.) *நீர்க் கொளுவான்* (இ.வ.) பார்க்க ; see *nir-k-koḷuvāṉ.*

*[ நீர் + குளுவான்*
கொளுவான் > குளுவான்.*]*

**நீர்க்குறட்டை** *nir-k-kuṟaṭṭai,* பெ. (n.) வயற் பாம்புவகை; checkered snake, as holding the flesh like pincers while biting.

*[ நீர் + குறடு → நீர்க்குறட்டை. ]*



**நீர்க்குறி**[1] *nir-k-kuṟi,* பெ. (n.) **1.** தேரையர் செய்ததொரு தமிழ்மருத்துவ நூல். இது சிறுநீரை ஆராய்ந்து நோயைப் பற்றிக் கூறும்; a Tamil medical work compiled by Theraiyar, it treats of diagnostic examination of urine in detail before ascertaining or determining the disease. **2.** சிறுநீர் ஆய்வு; the medical examination of urine-urinos copy, uroscopy. **3.** தண்ணீர் ஏறுவதையும் இறங்குவதையும் காண்பிக்கும் அடையாளம்; a mark indicating the raise and fall of water-water mark. (சா.அக.).

*[ நீர் + குறி. ]*

**நீர்க்குறி**[2] *nir-k-kuṟi,* பெ. (n.) நீர்க்குறியறியும் நிமித்தம்; art of divining the existence of water under ground.

*[ நீர் + குறி. ]*

**நீர்க்குறிஞ்சா** *nir-k-kuṟiñjā,* பெ. (n.) கழுதைப் பாலை என்னும் நஞ்சறுப்பான் கொடி (வின்.) ; Indian ipecacuanna.

*[ நீர் + குறிஞ்சா. ]*

**நீர்க்குன்று** *nīr-k-kuṉṟu,* பெ. (n.) நத்தை (யாழ்.அக.); snail.

*[ நீர் + குன்று. ]*



**நீர்க்கூட்டை** *nīr-k-kūṭṭai,* பெ. (n.) குளவட்டை, நீரட்டை; small kind of leech.

*[ நீர் + கூட்டை. ]*



**நீர்க்கூலி** *nīr-k-kūli,* பெ. (n.) நீருக்கான தீர்வை (r.t.); water rate.

*[ நீர் + கூலி. ]*

**நீர்க்கைக்கதவு** *nīr-k-kai-k-kadavu,* பெ. (n.) மதகு (வின்.); sluice.

*[ நீர் + கை + கதவு. ]*



**நீர்க்கொணர்பவர்** *nīr-k-koṇarbavar,* பெ. (n.) நீர்சுமந்து கொடுப்பவன்; water-carrier.

*[ நீர் + கொணர்பவர். ]*

**நீர்க்கொணர்பவள்** *nīr-k-koṇarbavaḷ,* பெ. (n.) நீர் சுமந்து கொடுப்பவள்; water supplying women, water women fem. of waterman.

*[ நீர் + கொணர்பவள். ]*

**நீர்க்கொத்தை** *nīrkkottai,* பெ. (n.) ஒருவகை தண்ணீர்ப் பாம்பு; a kind of water snake. (சா.அக.).



**நீர்க்கொதி** *nīr-k-kodi,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* (வின்.) பார்க்க ; see *nīr-k-kaḍuppu.*

*[ நீர் + கொதி. ]*

**நீர்க்கொதிப்பு** *nīr-k-kodippu,* பெ. (n.) *நீர்க் கடுப்பு* (யாழ்ப்.) பார்க்க ; see *nīr-k-kaḍuppu.*

*[ நீர் + கொதிப்பு. ]*

**நீர்க்கொப்புளம்** *nīr-k-koppuḷam,* பெ. (n.) உடலில் ஏற்படும் கொப்புளவகை ; water-blister.

*[ நீர் + கொப்புளம். ]*

**நீர்க்கொம்பன்** *nīr-k-kombaṉ,* பெ. (n.) நீர்க் கொம்பு (இ.வ.) பார்க்க; see nīr-k-kombu.

*[ நீர் + கொம்பன். ]*

**நீர்க்கொம்பு** *nīr-k-kombu,* பெ. (n.) கக்கல் கழிச்சல்; cholera. இந்தப்பாவி நீர்க்கொம்பிலே போக (உ.வ.).

*[ நீர் + கொம்பு. ]*

**நீர்க்கொழுக்கட்டை** *nīr-k-koḻukkaṭṭai,* பெ. (n.) நீராவியில் வெந்ததும் இனிப்பு சேராததுமான கொழுக்கட்டை வகை (இ.வ.); a kind of ball-cake made of pure flour-paste and steamed.

*[ நீர் + கொழுக்கட்டை. ]*

**நீர்க்கொழுந்து** *nīr-k-koḻundu,* பெ. (n.) நீரோட்டம் (சூடா.); head or flow of a current or stream; head of a tide.

*[ நீர் + கொழுந்து. ]*

**நீர்க்கொள்(ளு)–தல்** *nīr-k-koḷ(ḷu)-,* 12 செ.கு.வி. (v.i.) **1.** சளி பிடித்தல்; to feel heavy with cold, as the head. **2.** சீழ்பிடித்தல் (இ.வ.); to suppurate, form pus, as a tumour.

*[ நீர் + கொள்–, ]*

**நீர்க்கொள்கை**[1] *nīr-k-koḷgai,* பெ. (n.) *நீர்க்கனம்* பார்க்க ; see *nīr-k-kaṉam.*

*[ நீர் + கொள்கை. ]*

(கொள் → கொள்ளு → கொள்ளுகை → கொள்கை.)

**நீர்க்கொள்கை**[2] *nīr-k-koḷgai,* பெ. (n.) மாநிலங்களுக்கிடையே ஓடும் ஆற்று நீரைப் பங்கிட்டுக் கொள்ளும் கொள்கை; water policy.

*[ நீர் + கொள்கை. ]*

**நீர்க்கொள்வான்** *nīr-k-koḷvāṉ,* பெ. (n.) *நீர்க் கொளுவான்* (யாழ்ப்.) பார்க்க; see *nīr-k-koḷuvāṉ.*

*[ நீர் + கொள்வான். ]*

**நீர்க்கொளுவான்** *nīr-k-koḷuvāṉ,* பெ. (n.) சின்னம்மை வகை; measles.

*[ நீர் + கொளுவான் ]*

**நீர்க்கோங்கு** *nīr-k-kōṅgu,* பெ. (n.) கோங்கு வகை; iron wood of malabar.

*[ நீர் + கோங்கு. ]*

**நீர்க்கோசம்** *nīr-k-kōšam,* பெ. (n.) சிறுநீர்ப்பை ; urinary bladder. (சா.அக.).

*[ நீர் + கோசம். ]*

**நீர்க்கோத்தை** *nīr-k-kottai,* பெ. (n.) நீர்ப் பாம்பு வகை (யாழ்ப்.); a water snake.

*[நீர் + கோத்தை.]*

**நீர்க்கோப்பு** *nīr-k-kōppu,* பெ. (n.) சளி; cold.

*[நீர் + கோப்பு.]*

**நீர்க்கோவை[1]** *nīr-k-kōvai,* பெ. (n.) நீர்தங்கி நிற்கக் கூடிய நிலப்பகுதி (தெ.க.தொ.3.479.); water-spread.

*[நீர் + கோவை.]*

**நீர்க்கோவை[2]** *nīr-k-kōvai,* பெ. (n.) **1.** சளி; cold. **2.** சிலேட்டும (கப) நோய்; bronchial catarrh. **3.** நீராலுண்டாகும் உடம்பு வீக்கம்; dropsy. *"நீர்ப்பந்த ரழித்தவர் நீர்க்கோவை நோயர்"* (கடம்ப. பு. இலீலா. **148.**).

*[நீர் + கோவை.]*

**நீர்க்கோரை** *nīr-k-kōrai,* பெ. (n.) கோரை வகை (a.); a smooth sedge, leafy at base.

*[நீர் + கோரை.]*

**நீர்க்கோலம்[1]** *nīr-k-kōlam,* பெ. (n.) புனலாட்டின் போது மகளிர் கொள்ளும் ஆடை வகை; dress and adornment of girls for sporting in water.

*[நீர் + கோலம்.]*

**நீர்க்கோலம்[2]** *nīr-k-kōlam,* பெ. (n.) தண்ணீரால் இடப்படும் குறியான கோலம் (இ.வ.); diagrams on the ground made with water, believed to be inauspicious. **2.** நீரிலெழுதும் வரை (இ.வ.); lines drawn on water, as unstable. *"நீர்க்கோல வாழ்வை நச்சி"* (கம்பரா. கும்ப. **154.**).

*[நீர் + கோலம்.]*

**நீர்க்கோலி** *nīr-k-kōli,* பெ. (n.) *தண்ணீர்ப் பாம்பு* (இ.வ.); *water snake.*

*[நீர் + கோலி.]*

**நீர்க்கோழி** *nīr-k-kōḻi,* பெ. (n.) நீர்வாழ் பறவை வகை; water fowl. *"நீர்க்கோழிக் கூய்ப் பெயர்க் குந்து"* (புறநா. **395.**).

*[நீர் + கோழி.]*

நுல் (நீட்சிக்கருத்து வேர்) நுல் → நெல் → நெள் → நெரு → நெகிழ் (நெகிள்) → நீள் → நீர். உள் → உளு துளைக்கும் புழு. உளுத்தல் = புழு மரத்தைத் துளைத்தல். உளு → உழு → உழுதல் = நிலத்தைக் கீறுதல். குள் → குழி → குழை → குடை. குடைதல் = துளைத்தல். குழி → கொழு → கொழுது → கோது. கோது தல் = குடைதல். கொழு = நிலத்தைத் துளைக்கும் ஏருசி. கொழு → கொழி → கோழி = நிலத்தைக் கிளைக்கும் பறவை. கோழி பார்க்க; *see kōḻi.*

**நீர்க்கோன்** *nīr-k-kōṉ,* பெ. (n.) மழைக்கடவுள், வருணன்; rain god. *"நீர்க்கோனொல்லை தாழ்ந்து"* (திருவிளை. நான்மட. **21.**).

*[நீர் + கோன். நீள் → நீர். கோ → கோவன் → கோன்.]*

**நீர்கட்டல்** *nīr-kaṭṭal,* பெ. (n.) சிறுநீர் (மூத்திரம்) அடைபட்டிருக்கும் நோய் (m.l.); retention of urine.

*[நீர் + கட்டல்.]*

அல்– தொழிற்பெயரீறு.

**நீர்கட்டு[1]–தல்** *nīr-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வயல் முதலியவற்றில் நீர் பாய்ச்சுதல்; to irrigate a field, garden bed etc., *மேல் வயலுக்கு நீர் கட்டினாயா?* (உ.வ.).

*[நீர் + கட்டு–,]*

**நீர்கட்டு[2]–தல்** *nīr-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நீர்க் கொப்புளங் கொள்ளுதல்; to form pus; to blister.

*[நீர் + கட்டு.]*

**நீர்கடம்பு** *nīr-kaḍambu,* பெ. (n.) ஒருவகை மரம்; a kind of tree.

*[நீர் + கடம்பு.]*

**நீர்கரந்தசெஞ்சடைக்கடவுள்** *nīrkaranda-šeñjaḍai-k-kaḍavuḷ,* பெ. (n.) சிவன்; sivan. "*ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன் சேடங் கொண்டு சிலர் நின் றேத்தத் தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள் வண்ணச் சேவடி வைத்தலின்*" (சிலப். 26:63.).

*[நீர் + கரந்த + செஞ்சடை + கடவுள்.]*

**நீர்கழி–த்தல்** *nīr-kaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிறுநீர் கழித்தல்; to urinate.

*[நீர் + கழி. நீள் → நீர் = நிலம் போல் ஓரிடத்து நில்லாது நீண்டு செல்லும் புனல், சிறுநீர்.]*

**நீர்கள்** *nīrkaḷ,* பெ. (n.) நீங்கள்; you. (திவ். திருவாய். 7, 3, 9.).

**நீர்காட்டு[1]–தல்** *nīr-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கால்நடைகளை நீர்குடிக்க வைத்தல்; to water as beasts.

*[நீர் + காட்டு.]*

கால்நடைகளைத் தீனியும் நீருங் கலந்த தொட்டியில் நீர்பருகுமாறு அத்தொட்டியின் அணித்தே இட்டுச் சென்று காட்டு வித்தல் நீர் காட்டுதல் எனப்படும்.

**நீர்காட்டு[2]–தல்** *nīr-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. குடிக்கவொட்டாது நீரைக் காட்டுவதை மட்டும் செய்து ஏமாற்றுதல் (வின்.); to deceive over reach, as showing water without allowing one to drink. 2. அலைக்கழித்தல்; to tantalize, harass.

*[நீர் + காட்டு–,]*

**நீர்கிழி** *nīr-kiḻi,* பெ. (n.) தண்ணீரைக் கிழித்துச் செல்லும் கப்பலின் முன்புற முகப்பு; பாலத்தின் அலைதாங்கி முன்விளம்பு; cut water.

*[நீர் + கிழி.]*

**நீர்கிள்ளி** *nīr-kiḷḷi,* பெ. (n.) ஒரு வகைப் பூண்டு; a kind of herb.

*[நீர் + கிள்ளி.]*

**நீர்குடித்தல்** *nīr-kuḍittal,* பெ. (n.) 1. விடாய்க்கு நீரைப் பருகுகை; drinking water for thirst. 2. சூளுறுதற் கறிகுறியாக நீரை உட்கொள் ளுகை; drinking of water, considered a form vow taking. *'நீர் குடித்தலும் ஒரு சூளுற வென்று கொள்க'* (குறிஞ்சிப். 211, உரை.).

*[நீர் + குடித்தல்.]*

**நீர்கொள்ளுதல்** *nīr-kolludal,* பெ. (n.) தடுமன்; cold.

மறுவ. நீர்க்கோவை.

*[நீர் + கொள்ளுதல்.]*

**நீர்கோலு—தல்** *nīr-kōlu-,* 7 செ.கு.வி. (v.i.) கிணற்றிலிருந்து நீரிறைத்தல்; to take up or bale water.

*[நீர் + கோலு—,]*

**நீர்ச்சங்கு** *nīr-c-cangu,* பெ. (n.) ஒருவகைச் செடி (மலை.); mistle-toe berry thorn.

*[நீர் + சங்கு.]*

**நீர்ச்சண்டி** *nīr-c-candi,* பெ. (n.) நீர்ப்பூடு வகை; water mimosa. *desmanthus vergatus.*

*[நீர் + சண்டி.]*

**நீர்ச்சண்டை** *nīr-c-candai,* பெ. (n.) புனற் பூசல், நீர் விளையாட்டாலுண்டாகும் சண்டை; quarrel in water play. (புறநா. 42, உரை.).

*[நீர் + சண்டை.]*

**நீர்ச்சப்பி** *nīr-c-cappi,* பெ. (n.) நீர்க் கக்கி, கெட்ட நீரை இழுக்கும் பூண்டு; a kind of chinese laurel plant *daphriphylluml glancescens.* it is so called from its probebitity of absorbing morbid fluid from the body. (சா.அக.).

*[நீர் + சப்பி.]*

**நீர்ச்சலவை** *nīr-c-calavai,* பெ. (n.) துணிகளை வெள்ளாவி வையாது வெளுக்கை; washing cloth without boiling it lye.

*[நீர் + சலவை.]*

**நீர்ச்சம்மட்டி** *nīr-c-cammatti,* பெ. (n.) குழாய் உள் நீரழுத்த விசை; உள் நீரழுத்த மோதொலி; குழாயுள் நீராவி அழுத்த விசை; water hammer.

*[நீர் + சம்மட்டி.]*

**நீர்ச்சாடி** *nīr-c-cādi,* பெ. (n.) **1.** நீண்டு குறுகிய கழுத்துடைய நீர்க்கலம்; water-monkey. **2.** வாயகன்ற நீர்க்கலம்; நீர்க்கொள் கலன்; water trough; tub, cistern.

*[நீர் + சாடி.]*



**நீர்ச்சாணை** *nīr-c-cāṇai,* பெ. (n.) சாணைக் கல் வகை (வின்.); a kind of stone.

*[நீர் + சாணை.]*

**நீர்ச்சாய்வு** *nīr-c-cāivu,* பெ. (n.) நீர்க் கசிவுள்ள நிலம்; wet soil. "*ஒரூருக்குப் போம்போது நீர்ச்சாய்வையும் நிலச்சாய்வையும் பற்றிப் போவாரைப் போலே*" (திவ். திருநெடுந். 6, வியா.).

*[நீர் + சாய்வு.]*

**நீர்ச்சாரை** *nir-c-cārai,* பெ. (n.) நீர்ப்பாம்பு வகை; a kind of rat-snake.

*[நீர் + சாரை.]*

**நீர்ச்சால்**[1] *nir-c-cāl,* பெ. (n.) தண்ணீர் பூரிக்குஞ் சால் (சூ.நிக.7:64); water trough.

**நீர்ச்சால்**[2] *nir-c-cāl,* பெ. (n.) **1.** நீர் மிடா; large water-pot. ***"நீர்ச்சாலை யொத்த நிறைந்த சுனைகளையுடைய"*** (மலைபடு. **104,** உரை.). **2.** நீரிறைக்குஞ் சால் (வின்.); bucket.

*[நீர் + சால்.]*

**நீர்ச்சாவி**[1] *nir-c-cāvi,* பெ. (n.) வெள்ளக் கெடுதியாலுண்டாம் நெற்பதர் (யாழ்.அக.); blighted crop, due to flood.

*[நீர் + சாவி.]*

**நீர்ச்சாவி**[2] *nir-c-cāvi,* பெ. (n.) நீரின்மையால் உண்டாம் பயிர்ச்சாவி; blighted crop, due to lack of water. ***'ஒரு நீர்ச்சாவி கிடக்கக் கடலிலே*** .(ஈடு. **6, 8, 8.**).

*[நீர் + சாவி]*

**நீர்ச்சி** *nircci,* பெ. (n.) நீர்க்கோவை; containing both serum and purulent matter-sero purulent as in boils. (சா.அக.).

**நீர்ச்சிக்கு** *nir-c-cikku,* பெ. (n.) *நீர்க் கடுப்பு* (வின்.) பார்க்க; see *nir-k-kaḍuppu.*

*[நீர் + சிக்கு.]*

**நீர்ச்சிகரம்** *nir-c-cigaram,* பெ. (n.) நீர் வழங்கீட்டு விசைக்குரிய உயர்முகட்டு நீர்த் தொட்டி; water-tower.

*[நீர் + சிகரம்.]*



**நீர்ச்சிங்கி** *nir-c-cingi,* பெ. (n.) ஒருவகைச் சீழ்ப்புண் நோய்; an ulcer.

*[நீர் + சிங்கி.]*

**நீர்ச்சித்திரம்** *nir-c-cittiram,* பெ. (n.) *நீரடி முத்து* (தைலவ. தைல.116.) பார்க்க; see *niradi muttu.*

*[நீர் + சித்திரம்.]*

**நீர்ச்சிரங்கு** *nir-c-cirangu,* பெ. (n.) சேற்றுப் புண் (யாழ்ப்.); itching sore between the toes, caused by contact with slush or mire.

*[நீர் + சிரங்கு.]*

**நீர்ச்சிலந்தி** *nir-c-cilandi,* பெ. (n.) சிலந்தி வகை (அபி.சிந்.); a kind of spider.

*[நீர் + சிலந்தி.]*

தேங்கிய குளத்துநீர் ஓரத்தில் கூடுகட்டும் இயல்புடையது.

**நீர்ச்சிறுப்பு** *nīr-c-ciṟuppu,* பெ. (n.) *நீர்க் கட்டல்* (வின்.) பார்க்க; see *nīr-k-kaṭṭal.*

*[நீர் + சிறுப்பு*
*செறி → செறு → செறுப்பு → சிறுப்பு.]*

**நீர்ச்சிறை** *nīr-c-ciṟai,* பெ. (n.) 1. அணையிட்டுத் தடுக்கை, குறுக்கணை; check dam. 2. இடைத்தடையிடும் திட்டமிட்ட குண்டுமாரி (படை.); barrage.

*[நீர் + சிறை.]*

**நீர்ச்சின்னி** *nīr-c-ciṉṉi,* பெ. (n.) செடிவகை (மூ.அ.); a plant.

*[நீர் + சின்னி.]*

**நீர்ச்சீலை** *nīr-c-cīlai,* பெ. (n.) குளித்துணி (இ.வ.); loin cloth.

*[நீர் + சீலை.]*

மறுவ. கோவணம்.

**நீர்ச்சுண்டல்** *nīr-c-cuṇḍal,* பெ. (n.) கருக்கு (கஷாயம்) வடிநீர்; decoction.

*[நீர் + சுண்டல்*
சுள் → சுள் + டு → சுண்டு → சுண்டல்
= வற்றுதல், குறைதல்.

**நீர்ச்சுண்டி**[1] *nīr-c-cuṇḍi,* பெ. (n.) 1. சுண்டைக் கீரை floating desmanthus, floating sensitive plant-neptumia genus. 2. நிலப்பூடு வகை; water mimosa-mimosa *virgata alias desmanthus virgata* as opposed to. வறட்சுண்டி. (சா.அக.).

*[நீர் + சுண்டி.]*

**நீர்ச்சுண்டி**[2] *nīr-c-cuṇḍi,* பெ. (n.) கொடி நெட்டிச் செடி (வைத்தியபரிபா.); mimosan.

**நீர்ச்சுரப்பு**[1] *nīr-c-curappu,* பெ. (n.) 1. நீரால் உண்டாம் உடல்வீக்கம் (உ.வ.); dropsy. 2. *நீரிழிவு* (இ.வ.) பார்க்க; see *nīriḻivu.*

*[நீர் + சுரப்பு.]*

**நீர்ச்சுரப்பு**[2] *nīr-c-curappu,* பெ. (n.) நீர்க் கோவை, நீர்ச்சுரப்பினால் காணும் உடல் வீக்கம்; swelling from accumulation of bad fuild oedema. (சா.அக.).

மறுவ. நீர்க்கோவை.

*[நீர் + சுரப்பு.]*

பிடங்கு நாறியிலையால் இந்நோய் தீரும்.

**நீர்ச்சுரம்**[1] *nīr-c-curam,* பெ.(n.) கப்பல் செல்லும் பாதை; கடல் வழி, கடல் நெறி; sea-way, sea faring. "*தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக் கொடுந்திமிற் பரதவர் கோட்டு மீனெறிய*" (குறுந். 304.).

*[நீர் + சுரம்.]*

**நீர்ச்சுரம்**[2] *nīr-c-curam,* பெ. (n.) நீர்க் கோவையால் உண்டாகும் காய்ச்சல்; cold with fever.

*[நீர் + சுரம்.]*

**நீர்ச்சுரவை** *nīr-c-curavai,* பெ. (n.) *நீர்ச்சுரப்பு* (m.l.) பார்க்க; see *nīr-c-curappu.*

*[நீர் + சுரவை.]*

**நீர்ச்சுருக்கு** *nīr-c-curukku,* பெ. (n.) 1. *நீர்க் கடுப்பு* பார்க்க; see *nīr-k-kaḍuppu.* 2. மூத்திரப்பை நோய்வகை; inflammation or irritablity of the urine baldder.

*[நீர் + சுருக்கு.]*

**நீர்ச்சுழல்** *nīr-c-cuḻal,* பெ. (n.) *நீர்ச்சுழி* பார்க்க; see *nīr-c-cuḻi.*

*[நீர் + சுழல்.]*

**நீர்ச்சுழி[1]** *nīr-c-cuḻi,* பெ. (n.) தண்ணீரி லுண்டாம் சுழி; eddy, whirlpool. *'கடிய நீர்ச் சுழியிலே அகப்பட்டான்'* (கலித். 140, உரை.).

*[நீர் + சுழி. நீள்→நீர்*
*சுழி = சுழித்துச் செல்வது.]*

**நீர்ச்சுழி[2]** *nīr-c-cuḻi,* பெ. (n.) மாட்டுச் சுழிவகை (மாட்டுவா. 21.); circular or curved marks on the head or body of cattle, indicating their good or ill luck.

*[நீர் + சுழி.]*

நீரில் தோன்றும் சுழியைப் போன்று மாட்டின் மேற்றோலிற் காணப்படுவதை, நீர்ச்சுழி யென்றே பெயரிட்டழைத்தனர்.

**நீர்ச்சுறுக்கு** *nīr-c-cuṟukku,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* பார்க்க; see *nir-k-kaḍuppu.* (கதி.அக.).

**நீர்ச்சூசம்** *nīr-c-cūšam,* பெ. (n.) *நீரடிமுத்து* பார்க்க; see *nīr-aḍi-muttu.* (சா.அக.).

*[நீர் + சூசம்.]*

**நீர்ச்சூலை** *nīr-c-cūlai,* பெ. (n.) **1.** அண்ட வீக்கம்; hydrocele. **2.** அண்டவாயு; scrotal hernia.

*[நீர் + சூலை.]*

**நீர்ச்செடி** *nīr-c-ceḍi,* பெ. (n.) நீர்வாழ் நிலைத் திணை; aquatic plant.

*[நீர் + செடி.]*

**நீர்ச்செண்டாட்டம்** *nīr-c-ceṇḍā-ṭṭam,* பெ. (n.) நீச்சுக்காரர்கள் இலக்கு வைத்தாடும் கைப் பந்தாட்டம்; water-polo.

*[நீர் + செண்டு + ஆட்டம்.]*



**நீர்ச்செண்டு** *nīr-c-ceṇḍu,* பெ. (n.) நீச்சுக் காரர்கள் இலக்கு வைத்தாடுதற்குப் பயன் படும் பந்து; a kind of bouquet used as ball in water polo.

*[நீர் + செண்டு.]*



**நீர்ச்செம்பை[1]** *nīr-c-cembai,* பெ. (n.) நீர்வளர் செம்பை; sensitive pea-sesbenia aculeate alias coro nillia aculeata. (சா.அக.).

*[நீர் + செம்பை.]*

**நீர்ச்செம்பை[2]** *nīr-c-cembai,* பெ. (n.) செங்கிடை என்னும் ஒருவகை முட்செடி (மூ.அ.); prickly sesban.

*[நீர் + செம்பை.]*

**நீர்ச்செலவு** *nīr-c-celavu,* பெ. (n.) **1.** நீர் விளையாட்டிற்குச் செல்லும் செலவு; journey for sporting in water. **2.** நீர்வழிச் செலவு; journey by ship, seafaring.

மறுவ. நீர்ப்பயணம், நீராத்திரை.

*[நீர் + செலவு.]*

**நீர்ச்செறுப்பு** *nīr-c-ceṟuppu,* பெ. (n.) *நீர் கட்டல் பார்க்க; see nīr-kaṭṭal. "அரத்தமூல நீர்ச்செறுப்பு வெங்கயத்தர்"* (கடம்ப.பு.இலீலா. 128.).

*[நீர் + செறுப்பு.]*

**நீர்ச்சேம்பு** *nīr-c-cēmbu,* பெ. (n.) **1.** நீரில் வாழும் செடிவகை (m.m.); arrow-head, aquatic plant. **2.** பருவெட்டான் பூண்டுவகை; cocco, a coarse herb.

*[நீர் + சேம்பு.]*

**நீர்ச்சோகை** *nīr-c-cōgai,* பெ. (n.) உடல் வீக்கம்; dropsy.

*[நீர் + சோகை.]*

**நீர்ச்சோதனை** *nīr-c-cōdaṉai,* பெ. (n.) நீரைக் கலந்து செய்து பார்க்கப்படும் ஆய்வு; analysis by mixing water.

*[நீர் +* skt. *சோதனை.]*

**நீர்ச்சோபை** *nīr-c-cōbai,* பெ. (n.) உடல் வீக்கம்; dropsy.

*[நீர் + சோபை.]*

**நீர்ச்சோறு** *nīr-c-cōṟu,* பெ. (n.) நீர் கலந்த பழைய சோறு; cooked rice mixed with water and kept overnight. ***'கையாற் பிழிந்து கொள்ளப் பட்ட நீர்ச்சோற்றுத் திரளுடனே'*** **(புறநா. 246, உரை.).**

*[நீர் + சோறு.]*

**நீர்செய்காந்தமணி** *nīr-cey-kāndamaṇi,* பெ. (n.) சந்திரகாந்தக்கல் **(சீவக. 1671.);** moonstone.

*[நீர் + செய் + காந்த + மணி.]*

**நீர்சோதனை** *nīr-šōdaṉai,* பெ.(n.) *நீராய்வு* பார்க்க; see *nīr-āivu.*

**த. ஆய்வு.**

*[நீர் +* skt. *சோதனை.]*

**நீர்சோதிப்பு** *nīr-sōdippu,* பெ.(n.) *நீராய்வு* பார்க்க; see *nīr-āivu.*

*[நீர் +* skt. *சோதிப்பு.]*

**நீர்சோற்றுத்தண்ணீர்** *nīr-šōṟṟu-t-taṇṇīr,* பெ. (n.) அரிசிச் சோறு ஊறிய நீர்; water extracted from cooked rice. mixed with water and kept overnight. water allowed to stand over cooked rice overnight.

*[நீர் + சோறு + தண்ணீர்.]*

**நீர்த்தசுண்ணாம்பு** *nirtta-cuṇṇāmbu,* பெ. (n.) நீர் கலந்த சுண்ணம்; diluted lime.

*[நீர்த்த + சுண்ணாம்பு.]*

**நீர்த்தட்டு** *nir-t-taṭṭu,* பெ. (n.) நீர்ப்பற்றாக் குறை; scarcity of water. ***சென்ற கோடையை விட இந்தக் கோடையில் நீர்த்தட்டு மிகுதி. (உ.வ.).***

*[நீர் + தட்டு; தட்டு – தட்டுப்பாடு.]*

**நீர்த்தட்டுப்பாடு** *nir-t-taṭṭu-p-pāḍu,* பெ. (n.) *நீர்த்தட்டு* பார்க்க; see *nir-t-taṭṭu.*

*[நீர்த்தட்டு + பாடு. படு – பாடு; பாடு – சொல்லாக்க ஈறு.]*

**நீர்த்தடுப்பு[1]** *nir-t-taḍuppu,* பெ. (n.) நீர் இறங்காமை; water proofing.

*[நீர் + தடுப்பு.]*

**நீர்த்தடுப்பு[2]** *nir-t-taḍuppu,* பெ. (n.) பொறி யில் தண்ணீர் வடிவிலுள்ள தடையமைவு; water seal.

*[நீர் + தடுப்பு.]*

**நீர்த்தடை** *nir-t-taḍai,* பெ. (n.) நீரால் விளையும் கேட்டைத் தடுப்பது; water-proof.

*[நீர் + தடை.]*

**நீர்த்ததண்ணீர்** *nirtta-taṇṇir,* பெ. (n.) *நீர்த்த நீர்* பார்க்க; see *nirtta-nir.*

*[நீர்த்தநீர் → நீர்த்ததண்ணீர்.]*

**நீர்த்தநீர்** *nirtta-nir,* பெ. (n.) கரைசல் தன் பதத்தில் திரிந்த நீர்; turning to water as of lost proper congistency of a mixture.

*[நீர்த்த+நீர்.]*

**நீர்த்தருபூசல்** *nir-t-taru-pūšal,* பெ. (n.) நீர் விளையாட்டி லெழும் ஆரவாரம்; polo water noice. "நீர்த்தரு பூச லினம் பழிக்குநரும்" (பதிற்றுப். **22:29.**).

*[நீர்தரு + பூசல்.]*

**நீர்த்தல்** *nirttal,* பெ. (n.) நீராதல்; hydration. ***"ஏட் டொன்றாய் நீர்க்கூட்டி"*** (தைல. தைலவ. **32.**).

*[நீர் → நீர்த்தல்.]*

**நீர்த்தலை** *nir-t-talai,* பெ. (n.) மூளையில் அரத்தம் குறைவாகும் நோய் (m.m.); hydrocephalus.

*[நீர் + தலை.]*

**நீர்த்தளம்** *nir-t-taḷam,* பெ. (n.) நீர்நிலையின் அடித்தரை; bottom of a water tank.

*[நீர் + தளம்.]*

**நீர்த்தாக்கு** *nir-t-tākku,* பெ. (n.) நீர் அதிக மாகத் தேங்கி நிற்குமிடம்; water-logged place.

*[நீர் + தாக்கு.]*

**நீர்த்தாரை[1]** *nir-t-tārai,* பெ. (n.) **1.** சாக்கடை; gutter. **2.** மழைத்தாரை; rain water.

*[நீர் + தாரை.]*

**நீர்த்தாரை²** *nīr-t-tārai,* பெ. (n.) **1.** ஆண் குறி; membrum virile. **2.** மூத்திரப்பை யிலிருந்து சிறுநீர் கொண்டுவருங்குழாய் (C.E.M.); urethra.

*[நீர் + தாரை.]*

**நீர்த்தாரை³** *nīr-t-tārai,* பெ. (n.) உடம்பின் பலவிடங்களில் உள்ள நீரைக் கொண்டு செல்லும் குழல்; ducts or canals conveying liquids or fluids to the various parts of the body.

*[நீர் + தாரை.]*

**நீர்த்தாரைக்கல்** *nīr-t-tārai-k-kal,* பெ. (n.) சிறுநீர்க் குழாயிலுண்டாகும் கல்; calculus obstructing the passage of urine.

*[நீர்த்தாரை + கல்.]*

**நீர்த்தாரைப்புண்** *nīr-t-tārai-p-puṇ,* பெ. (n.) சிறுநீர்ப் பாதையிலுண்டாகும் புண்; ulcer in the urethral passage.

*[நீர்த்தாரை + புண்.]*

**நீர்த்தாரையடைப்பு¹** *nīr-t-tārai-y-aḍaippu,* பெ. (n.) நீர்க்கடுப்பு (M.L.); stricture of urethra.

*[நீர்த்தாரை² + அடைப்பு]*

**நீர்த்தாரையடைப்பு²** *nīr-t-tārai-y-aḍaippu,* பெ. (n.) சாக்கடை யடைப்பு; drainage blocking.

*[நீர்த்தாரை¹ + அடைப்பு.]*

**நீர்த்தாரையெரிச்சல்** *nīr-t-tārai-y-ericcal,* பெ. (n.) சிறுநீர்ப்பாதையிலுண்டாகும் எரிச்சல்; inflammation of urethera-urithritis.

*[நீர்தாரை² + எரிச்சல்.]*

**நீர்த்தாழ்வு** *nīr-t-tāḻvu,* பெ. (n.) *நீர்நிலை* (சூடா. 11. 91.) பார்க்க; see *nīr-nilai.*

*[நீர் + தாழ்வு.]*

நீர்நிற்கும் நிலக்குழி

**நீர்த்தாளி** *nīr-t-tāḷi,* பெ. (n.) நீரில் முளைக்குஞ் செடி; a running plant of the convolvulus genus. (சா.அக.).

**நீர்த்தானம்¹** *nīr-t-tāṉam,* பெ. (n.) நீர் வழங்குகை; giving water.

*[நீர் + தானம்.]*

**நீர்த்தானம்²** *nīr-t-tāṉam,* பெ. (n.) (பிறப்.) பிறப்பிடத்தினின்று நாலாமிடம் (வின்.); (astrol.) the fourth house from the ascendant.

*[நீர் + தானம்.]*

**நீர்த்திசம்** *nirttišam,* பெ. (n.) மஞ்சள்; Indian saffron, *turmeric-curcuma lanfa.* (சா.அக.).

**நீர்த்தித்திப்பு** *nīr-t-tittippu,* பெ. (n.) *நீரிழிவு* (M.L.) பார்க்க; see *nīriḻivu.*

*[நீர் + தித்திப்பு.]*

**நீர்த்திப்பலி** *nīr-t-tippali,* பெ. (n.) திப்பலி வகை (மலை.) (M.M. 997.); water long-pepper, climber.

*[நீர் + திப்பலி.]*

**நீர்த்திமிரம்** *nirttimiram,* பெ. (n.) கண்ணில் நோயையுண்டாக்கிக் கருவிழிப் பக்கங்களில் குத்தலையும் நடுவில் புகைச்சலையும் உண்டாக்கும் ஒரு கண்ணோய்; a disease of the black of the eye marked by lesion of the eye, acute pain and dimness of vision. (சா.அக.).

*[நீர் + திமிரம்.]*

**நீர்த்திரை** *nīr-t-tirai,* பெ. (n.) கடலலை; sea wave. "நீர்த்திரையரங்கத்து நிகர்த்து முன்னின்ற" (சிலப். 6:50.).

*[நீர் + திரை.]*

**நீர்த்திரையரங்கம்** *nīr-t-tirai-yarangam,* பெ. (n.) நீரலையரங்கம்; sea-wave. நீர்த் திரை யரங்கத்து நிகர்த்து முன்நின்ற (சிலப். 6:50.).

*[நீர்த்திரை + அரங்கம்.]*

கரிய கடலினடுவு நின்ற சூரனது வேற்றுருவாகிய வஞ்சத்தையறிந்து அவன் போரைக் கடந்த முருகன் அக்கடனடுவண் திரையே அரங்கமாக நின்று துடி கூத்தாடியதாகத் தொன்மக் கதை.

**நீர்த்திவலை** *nīr-t-tivalai,* பெ. (n.) *நீர்த்துளி* பார்க்க; see *nīr-t-tuḷi.*

*[நீர் + திவலை.]*

**நீர்த்து** *nirttu,* பெ. (n.) நீர்மையுடைத்து தன்மையது; nature. "*உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது தள்ளினுந் தள்ளாமை நீர்த்து*" (குறள், 596.).

*[நீர் → நீர்த்து.]*

**நீர்த்துப்போ—தல்** *nirttu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) நீரின்தன்மையடைதல் (உ.வ.); to become watery, thin, as honey from fermentation.

*[நீர்த்து + போ–,]*

**நீர்த்தும்பல்** *nīr-t-tumbal,* பெ. (n.) ஒரு வகைக் கண்ணோய்; an eye disease. (சா.அக.).

*[நீர் + தும்பல்.]*

**நீர்த்தும்பை** *nīr-t-tumbai,* பெ. (n.) ஒரு வகைத்தும்பை; a kind of tombay of the leucas genus.

*[நீர் + தும்பை.]*

**நீர்த்துரும்பு** *nīr-t-turumbu,* பெ. (n.) பருகும் நீரிலுள்ள துரும்பு போன்ற இடையூறு; obstruction, as a straw in drinking water.

*[நீர் + துரும்பு.]*

**நீர்த்துலக்கி** *nīr-t-tulakki,* பெ. (n.) மகப்பேறு காலத்தில் கருப்பையிலுள்ள நீரை எடுப்பதற்காக பயன்படுத்தும் கருவி; a delicate probe used for causing escape of fluid the womb during labour. (சா.அக.).

**நீர்த்துவாரம்** *nīr-t-tuvāram,* பெ. (n.) நீர்த்துளை பார்க்க; see nīr-t-tuḷai.

*[நீர் + துவாரம்.]*

த.துளை. skt. துவாரம்.

**நீர்த்துவாரவுள்ளரிப்பு** *nīr-t-tuvāra-v-uḷḷarippu,* பெ. (n.) *நீர்த்துளையுள்ளரிப்பு* பார்க்க; see *nīr-t-tuḷai-y-uḷḷarippu.*

*[நீர்த்துவாரம் + உள்ளரிப்பு.]*

**நீர்த்துவையல்** *nīr-t-tuvaiyal,* பெ. (n.) தளர இருக்கும் துவையல்; a kind of strong relish prepared by adding paste of chilli to coconut, ginger, curry leaf or to similar things in semi solid condition.

*[நீர் + துவையல்.]*

**நீர்த்துளக்கி** *nīr-t-tuḷakki,* பெ. (n.) **1.** நீர்க் குழலின் துளக்கி; stilette of probe, a delicate probe. **2.** நீர்க்குழலின் கம்பி; a wire used to stiffen or clear a catheter. **(சா.அக.).**

*[நீர் + துளக்கி.]*

**நீர்த்துளி** *nīr-t-tuḷi,* பெ. (n.) சொட்டு; drop as tears. "*கல்லென அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்கு*" **(புறநா. 160.).**

*[நீர் + துளி]*

**நீர்த்துளை** *nīr-t-tuḷai,* பெ. (n.) **1.** சிறுநீர்ப் பாதையின் துளை; urethral opening. **2.** சிறுநீர் வரும் வழி; opening of the urinary passage.

*[நீர் + துளை.]*

**நீர்த்துளையுள்ளரிப்பு** *nīr-t-tuḷai-y-uḷḷarippu,* பெ. (n.) **1.** சிறுநீர்ப் பாதையிலுண்டாகும் தினவு; itching of the urethra.

*[நீர்துளை + உள்ளரிப்பு.]*

**நீர்த்துறை** *nīr-t-tuṟai,* பெ. (n.) நீர்நிலையில் இறங்குடம்; ghat, a path of descent to a tank or river; ford, ferry; watering-place for cattle; place for bathing or washing clothes. "*ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின் நீர்த்துறை படியும் பெருங்களிறு போல*" **(புறநா. 94.).**

*[நீர் + துறை.]*



**நீர்த்துறையேறு-தல்** *nīr-t-tuṟai-ēṟu-,* **5.** செ.கு.வி. (v.i.) பெண்கள் வீட்டு விலக்காய்த் தீட்டாதல்; to be in ones periods.

*[நீர்த்துறை + ஏறு-.]*

**நீர்த்தூம்பு[1]** *nīr-t-tūmbu,* பெ. (n.) மதகு; sluice. "*செங்குளக் கோட்டுக் கீழ் நீர்த்தூம்பு*" **(களவழி. 2.).**

*[நீர் + தூம்பு.]*



**நீர்த்தூம்பு[2]** *nīr-t-tūmbu,* பெ. (n.) கூரை நீர் வழிந்தோட அமைக்கப்பட்டிருக்கும் குழாய்; water-shoot.



**நீர்த்தெளி** *nīr-t-teḷi,* பெ. (n.) திருக்கோயிலிற் செய்யும் குடமுழுக்கு; ceremony of consecration or purificatum in a temple.

*[நீர் + தெளி.]*

எங்கும் நிறைந்து விளங்கும் பரம்பொருள் வழிபடற்கெளிதாய் ஓமகுண்டத்துத் தீயின்கண் முனைந்து விளங்குவதாகக் கொண்டும் கண்டும் போற்றி, அருகில் புதிய மட்குடங்களில் நிரப்பி வைக்கப் பட்டிருக்கும் நீரின்கண் எழுந்தருளுமாறு வழுத்தி வேண்டி அதனை வழிபட்டு, அந்நன்னீரைக் கோயிலின் உச்சியில் உள்ள கலசத்தின் மீதும் கோயிலில் உள்ள திருமேனிகளின் மீதும் ஊற்றி முழுக்காட்டுதலே கோயிலில் இறைவன் எழுந்தருளுவதாகக் கொள்ளப்படுதலால் அது *'கும்பாபிடேகம்'* எனப்படுகின்றது.

கும்பாபிடேகத்தில் இடம் பெற்றுள்ள கும்பம் என்னுஞ் சொல் வடமொழியில் வழக்கூன்றி இருப்பினும் அது தூய தமிழ்ச் சொல்லேயாம்.

கும்முதல் (கும்) என்னுஞ் சொல் குவிதல் என்னும் பொருளது. கும்→குமி→ குமிழ்→குமிழி என்பவற்றை நோக்குக!

கும் என்பது கும்பு என வளர்ந்தும், கூம்பு என நீண்டும் குவிதற் பொருளை உணர்த்துகின்றது. கும்புதல் → கூம்புதல் - குவிதல்.

கும்பு → கும்பிடு → கும்பிடுதல் = கை குவித்தல்.

கும்பு என்றது கும்பம் என்றாகிக் குடம், தேர்முடி, யானைத்தலைக் குலவு, கட்டடக் குவிமுகடு ஆகியவற்றைக் குறிக்கின்றது. ஆகவே கும்பம் தமிழ்ச் சொல்லேயாதல் தெளியப்படும்.

குவிந்த சுரைக்காய் கும்பச்சுரை எனவும், கீழ்நோக்கிக் குவிந்த உண்கலம் கும்பா எனவும் வழங்கப் பெறுதல் காண்க!

இனி, கும்ப என்னுஞ் சொல் இருக்கு வேதத்திலேயே இடம்பெற்றிருப்பினும் வடவர் அதற்குக் காட்டும் *'கும்ப்'* என்னும் மூலம் கும்பு என்னுந் தமிழ்ச் சொல்லின் சிதைவே. இதற்கு வடவர் கூறும் பொருள் கவிதல் என்பதும் தென்னவர் கூறும் பொருள் குவிதல் என்பதும் ஆகும்.

கவிதல் கீழ்நோக்கியது என்றும் குவிதல் மேல்நோக்கியது என்றும் வேறுபாடு காட்டி விளக்குகிறார் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்.

கும்பம் என்பது தூய தமிழ்ச்சொல்லே யாயினும் அது வடமொழியில் வழக் கூன்றியுள்ளமையால் வடசொல்லாகவே கருதப்படுதலானும் கும்பாபிடேகம் குட முழுக்கு எனத் தமிழ்ப்படுத்தப்பட்டுள்ளது.

ஆயினும் பழந்தமிழ் நூல்களில் மட்டுமன்றி இடைக்கால நூல்களிலுங் கூடக் குடமுழுக்கு, கும்பாபிடேகம் என்னுஞ் சொற்களோ அவற்றைப் பற்றிய வேறு குறிப்புகளோ காணப்படவில்லை.

திருத்தொண்டர் புராணத்தில் அல்லது தொன்மத்தில் பூசலார் நாயனார் கோயில் கட்டியது பற்றிக் கூறப்பட்டுள்ளது. கடைக்கால் போட்டுப் படிப்படியாகக் கட்டி முடிக்கப்பட்ட நாயனாரின் மனக் கோயிலிலோ, அவ்வாறே பல்லவமன்னன் கட்டிய புறக்கோயிலிலோ, இறைவன் எழுந்தருளும் நிகழ்ச்சி, கும்பாபிடேகம் அல்லது குடமுழுக்கு என்னுஞ் சொல்லால் குறிக்கப்படவில்லை.

புதுமனைப் புகுவோர், வீடுகட்டி முடித்து ஒழுங்குபடுத்திய பின் தூநீர் தெளித்துக் குடிபுகுவது இன்றும் வழக்கமாக இருப்பது போலவே கோயில் திருப்பணி

செய்வது வழக்கமாய் இருந்திருக்கிறது. இது நீர்த்தெளி என வழங்கப் பெற்றுள்ளது. என்பது கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது.

**ஆனைமலைக் கல்வெட்டு:**

கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற் பகுதியிலும் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் (768–816) மதுரையை ஆண்ட சடில பராந்தக நெடுஞ்சடையன் என்ற பாண்டிய மன்னனின் மதி யமைச்சனாக விளங்கிய மாறன்காரி என்பவன் மதுரையையடுத்த ஆனை மலையில் நரசிங்கப் பெருமாள் கோயிலொன்று கட்டினான் என்றும், அது முற்றுப்பெறு முன்னரே அவன் இறந்து விட்டமையால், அவனுக்குப் பின் அவ்வமைச்சுப் பதவியை ஏற்ற அவன் தம்பி மாறன் எயினன் என்பவன் அத் திருப்பணியை நிறைவேற்றி நீர் தெளித்தான் என்றும் ஆனைமலை வட்டெழுத்துத் தமிழ்க் கல்வெட்டுக் கூறுகிறது. அதுவருமாறு:

*“கோமாறஞ் சடையற்கு உத்தர மந்திரி களக்குடி வைத்தியன் மூவேந்த மங்கலப் பேரரையன் ஆகிய மாறன் காரி இக் கற்றளி செய்து நீர்த் தெளியாதேய் சு(ஸ்)வர்க்காரோகணம் செய்த பின்றை அவனுக்கு அநுச(ஜ)ன் உத்தர பதமெய்தின பாண்டியமங்கல விசையரையன் ஆகிய மாறன் எயினன் முகமண்டபஞ்செய்து நீர்த்தெளித்தான்.”*

இக்கல்வெட்டில் பல வடசொற்கள் இடம் பெற்றிருந்தும் கும்பாபிடேகம் நீர்த்தெளி என்னும் தமிழ்ச் சொல்லாலேயே குறிக்கப் பட்டிருக்கிறது என்பதும், இக் கல்வெட்டின் அருகில்அவனாலேயே பொறிக்கப் பெற்றுள்ள வடமொழிக் கல் வெட்டிலுங்கூடக் கும்பாபிடேகம் இடம் பெறவில்லை என்பதும் கவனிக்கத் தக்கன.

மாறன்காரி, மாறன்எயினன் என்னும் உடன்பிறந்தார் வடமொழியில் அல்லது வடமொழி மிகுதியும் கலந்த தமிழில் எழுதும் வழக்கமுடையவர்களாய் இருந்தும், அவர்களேகூட இதனைக் கும்பாபிடேகம் எனக் குறியாமையால் ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலும் நீர்த் தெளி என்பதே பெருவழக்காய் இருந்தமை அறியப்படும் எனத் தொல்லியல் அறிஞர் க.குழந்தைவேலன் தமிழிய வாழ்வில் கல்லுஞ் சொல்லும் என்னும் நூலில் உறுதியாய்க் கூறுகிறார். (இத்தரவு, திருக்குறள்மணி இறைக்குருவனாரின் திருக்கோயில் வழிபாடும் தமிழ்க் குடமுழுக்கும் என்னும் நூலிலிருந்து.).

**நீர்த்தெளியான்** *nīr-t-teḷiyāṉ,* பெ. (n.) தரைக்கு நீர் தெளித்துத் தூய்மை செய்யும் வேலைக்காரன்; servant who cleans the floor of a building by sprinkling water. *“நீர்த்தெளியான் நால்வர்க்குப் பேராற் பங்கு அரையாக”* (தெ. க. தொ. 2 : 227.).

மறுவ. நீர்த்தெளியன்.

*[நீர் + தெளியான்.]*

**நீர்த்தெளிவி** *nīr-t-teḷivi,* பெ. (n.) **1.** நீரைத் தெளியச் செய்யும் கருவி; water-filter. **2.** தேற்றான் (தேத்தான்) கொட்டை; water cleaning nut-stry chnos potatorum. (சா.அக.).

**நீர்த்தேக்கம்** *nīr-t-tēkkam,* பெ. (n.) ஆற்றின் குறுக்கே அணை கட்டி நீரைத்தேக்கி வைத்திருக்கும் இடம்; ஆற்றுநீர் அல்லது மழைநீர்தேக்கி வைக்கப்பட்டிருக்கும் ஏரி, குளம் முதலியவை; dam, reservoir, tank அண்மையில் பெய்த பெருமழையில் ஆறகழூர் நீர்த்தேக்கம் நிரம்பியது. (உ.வ.).

*[நீர் + தேக்கம்.]*



**நீர்த்தேள்** *nīr-t-tēḷ,* பெ. (n.) நீரில் வாழும் ஒருவகைத் தேள்; water scorpion.

*[ நீர் + தேள். ]*

**நீர்த்தொட்டி** *nīr-t-toṭṭi,* பெ. (n.) நீர் வைத்திருக்கும் தொட்டி; water butt.

*[ நீர் + தொட்டி. தொடு → தொட்டு → தொட்டி.]*



**நீர்த்தொப்பை** *nīr-t-toppai,* பெ. (n.) ஆறு அல்லது ஏரியின் நீரானது வாய்க்கால் வழியே வந்து ஓரிடத்தில் மேலும் பலகிளைகளாகப் பிரிந்து செல்லுமிடம்; *water canal.*

**மறுவ.** *நீர்த்தொந்தி,*

*[ நீர் + தொப்பை. ]*

**நீர்த்தோசம்** *nīr-t-tōšam,* பெ. (n.) நீர்க்கோப்பு (யாழ்.அக.); cold.

மறுவ. நீர்க்கோவை.

*[ நீர் +* skt. *தோசம். ]*

**நீர்தலைப்படு—தல்** *nīr-talaippaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சந்தியில் வழிபாடு செய்தல்; to perform daily ablutions. ***"நெடு நெறி மருங்கி னீர்தலைப் படுவோன்"*** **(சிலப். 13:45).** **2.** நீர்த்துறையை அடைதல்; to get into the water tank, canal for banking and etc.,

*[நீர் + தலைப்படு—.]*

**நீர்தலைப்படுகை** *nīr-talai-p-paḍugai,* பெ. (n.) நீர்நிலையை அடைகை; getting into water sorces. for bathing and etc., ***"இடுமுள் வேலி நீங்கி யாங்கோர் நெடுநெறி மருங்கி னீர்தலைப் படுவோன்"*** **(சிலப். 13:42.).**

*[நீர் + தலைப்படுகை]*

**நீர்தூவுந்துருத்தி** *nirtūvunturutti,* பெ. (n.) நீர்விடு சிவிறி; water sprinkle.

*[நீர்தூவும் + துருத்தி.]*



**நீர்தெளி—த்தல்** *nīr-teḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) தூய்மை செய்தற்காக நீர் தெளித்தல்; to sprinkle water for purificatum.

*[நீர் + தெளி–,]*

**நீர்தெளித்துவிடு—தல்** *nīr-teḷittu-viḍu-*, 5செ.குன்றாவி. (v.t.) ஒருவனைத் தன்போக்கிற் செல்லும்படி விடுதல்; to leave one to oneself.

*[நீர் + தெளித்துவிடு.]*

**நீர்தொடு—தல்** *nīr-toḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. சிறுநீர் பெய்தபின் பிறப்புறுப்பை நீராற் கழுவுதல்; to clean the parts with water after urination. 2. சிறுநீர் பெய்தல்; to pass urine. *"நீர் தொடுகிற்பான் போமவன் முன்னா"* (பிரமோத். 2, 49.).

*[நீர் + தொடு.]*

வாய்பூசி வந்தான் என்பது போன்ற வழக்காறு.

**நீர்நக்கல்** *nīr-nakkal*, பெ. (n.) ஏரியின் உள் வாய்நீர் தேங்கும் எல்லையிடம்; limit of water-spread of a tank. *"கீழெல்கை சங்கரனேரிக் குளத்து நீர்நக்கலுக்கு மேற்கு"* (T.A.S. I; IV 103.).

*[நீர் + நக்கல்.]*

**நீர்நசைவேட்கை** *nīr-našai-vēṭkai*, பெ. (n.) நீரை விரும்பும் விருப்பம்; desire in water. *"வருநர்ப் பார்க்கும் வன்கண் ணாடவர் நீர்நசை வேட்கையின் நாமென்று தணியும்"* (குறுந். 274.).

*[நீர் + நசை + வேட்கை.]*

**நீர்நரம்பு** *nīr-narambu*, பெ. (n.) நிலத்துட் பாயும் நீரோட்டம்; underground spring or flow of water. *'கடின ஸ்தலதத்திலே நீர்நரம்பு அறியுமவனா கையாலே* (ஈடு, 10, 6, 4, பக். 195.).

*[நீர் + நரம்பு.]*

**நீர்நாகம்** *nīr-nāgam*, பெ. (n.) நீர் ஓரங்களில் காணப்படும் நாகப்பாம்பு; cobra found on the sea coasts-water cobra.

*[நீர் + நாகம்.]*

**நீர்நாங்கல்** *nīr-nāṅgal*, பெ. (n.) நீண்ட மரவகை (nels.); long-leaved large-flowered iron wood.

*[நீர் + நாங்கல். நாங்கு – மரவகை. நாங்கு → நாங்கல்.]*

**நீர்நாங்கள்** *nīr-nāṅgaḷ*, பெ. (n.) *நீர்நாங்கு* பார்க்க; see *nir-nāṅgu*. (சா.அக.).

**நீர்நாங்கு** *nīr-nāṅgu*, பெ. (n.) நாங்கின் ஒருவகை; a kind of ceylon iron wood-mesna ferrea (speciosa). (சா.அக.).

*[நீர் + நாங்கு.]*

**நீர்நாணநெய்வழங்கு** *nīrnāṇa-ney-vaḻaṅgu*, பெ. (n.) மிகுதியாய் நெய்யிடுகை; put more ghee. "நீர்நாண நெய் வழங்கியும் எண்ணாணப் பலவேட்டும் மண்ணாணப் புகழ்ப்பரப்பியும்" (புறநா. 166.). "மண்ணாணப் புகழ் வேட்டு நீர் நாண நெய் வழங்கிப்" (புறநா. 384.).

[நீர்நாண + நெய்வழங்கு]

விலையற்ற நீர் வெட்குமாறு விலைமிக்க நெய் வழங்குதலைக்குறிக்கும்.

**நீர்நாடு** *nīr-nāḍu,* பெ. (n.) நீர்வளமுள்ள சோழநாடு; Cōla country, as well-watered. *"நாவலர் புகழு நீர்நாடு"* (திருவானைக். திருநாட். 1.).

*[நீர் + நாடு.]*

**நீர்நாய்** *nīr-nāy,* பெ. (n.) நீரில் வாழும் ஒரு வகை நாய்வகை; a kind of water dog, otter. "அரிற்பவர்ப் பிரம்பின் விரிப்புற நீர்நாய் வாளை நாளிரை பெறூஉம் ஊரன்" (குறுந். 364). "ஒண்செங் குரலித் தண்கயகங் கலங்கி வாளை நீர்நாய் நாறிரை பெறூஉப்"(புறநா. 283.). "வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்"(அகநா.6:18.).

*[நீர் + நாய்]*

**நீர்நாய்ச்சவ்வாது** *nīr-nāy-c-cavvādu,* பெ. (n.) ஒருவகை நீர்நாயின் நறுமணச் சட்டம்; secretion from the beaver. 2. புனுகு; civet.

*[ நீர்நாய் + சவ்வாது. ]*

**நீர்நாவல்** *nīr-nāval,* பெ. (n.) 1. சிறு மரவகை; munro's apple. 2. நாவல் மரவகை; gardener's black plum.

*[நீர் + நாவல்.]*

**நீர்நாள்** *nīr-nāḷ,* பெ. (n.) 20 ஆவது விண்மீன் பூராடம் (பிங்.); pūrādam.

*[நீர் + நாள்.]*

**நீர்நாற்று** *nīr-nāṟṟu,* பெ. (n.) நீர்பாய்ச்சிய நிலத்தில் உண்டாகும் நாற்று (G.Tj.D. 1. 97); seedlings grown in watered lands.

*[நீர் + நாற்று.]*

**நீர்நிதி**[1] *nīr-nidi,* பெ. (n.) கடல்; sea.

*[நீர் + நிதி. நீரின் மிகுதி, நீரின் குவை, நீராகிய செல்வம்.]*

*[நீர் + (skt.) நிதி]*

**நீர்நிதி**[2] *nīr-nidi,* பெ. (n.) செந்தாமரை; red lotus flower-nelumbrum speciosum. (சா.அக.).

*[நீர் + நிதி. நீரில் உண்டாகும் குவை, செல்வம்.]*

**நீர்நிலஇயக்கம்** *nīr-nila-iyakkam,* பெ. (n.) நிலத்திலும் நீரிலும் வாழ்கை; amphibious.

*[நீர் + நிலம் + இயக்கம்.]*

**நீர்நிலக்காசு**[1] *nīr-nila-k-kāšu,* பெ. (n.) பழைய (வரி) காசாய வகை (தெ. க. தொ. 1:89.); an ancient tax in cash.

*[நீர் + நிலம் + காசு.]*

**நீர்நிலக்காசு**[2] *nīr-nila-k-kašu,* பெ. (n.) நீர் நிலங்களுக்கான வரி; water land tax.

*[நீர் + நிலம் + காசு.]*

நீர் நிலைகளின் நிலங்களுக்கு வரியிட்டு அதனைத் தண்டி அதைக் கொண்டு நீர் நிலைகளைப் பேணி வந்தனர். இது மூன்றாம் இராசராசன் காலத்தில் நடைமுறையிலிருந்தது. (அபி.சிந்.).

**நீர்நிலம்** *nīr-nilam,* பெ. (n.) நன்செய் (கல்); wet land.

*[நீர் + நிலம்.]*

**நீர்நிலை**[1] *nirnilai,* பெ. (n.) ஏரிகுளம் முதலியன; tank, lake, pond etc. "*நிலம் குழிந்த விடத்தே நீர்நிலை மிகும்*" (புறநா. 18, உரை.).

*[நீர் + நிலை.]*



**நீர்நிலை**[2] *nīr-nilai,* பெ. (n.) முத்தின்குற்றம்; a flaw in the pearl. "*அருவியாடியு மகன் சுனை குடைந்தும் என்பதனால் நீர் நிலையும்*" (சிலப். பதி. உரை.). "*காற்றேறு மணலேறு கல்லேறு நீர்நிலை யென்பன மிக்க குற்றங்கள்*" (சிலப். 14:193 உரை.).

**நீர்நிலை**[3] *nīr-nilai,* பெ. (n.) 1. சதுப்பு நிலம் (c.g.); place where water stagnates, marshy ground. 2. ஆழம்; depth of water. '*கையை மேலே கூப்பி முழுகி நீர்நிலை காட்டுங் காலத்து*' (பெரும்பாண். 273, உரை.).

*[நீர் + நிலை.]*

**நீர்நிலைஇயல்** *nīr - nilai - iyal,* பெ. (n.) அமைந்த நிலையில் உள்ள நீர்மத்தின் அழுத்த ஆற்றலமைதி; hydrostatics.

*[நீர் + நிலை + இயல்.]*

**நீர்நிலைக்காவலர்** *nīr-nilai-k-kāvalar,* பெ. (n.) 1. நீர் நிலைகளைக் காப்பவர்; security for water tanks. 2. காப்பு நீர்நிலைகளில் மீன்பிடிப்பதைத் தடுப்பவர்; water-bailiff.

*[நீர்நிலை + காவலர்.]*

**நீர்நிலைச்செறு** *nīr-nilai-c-ceṟu,* பெ. (n.) நீர்வளமிக்க வயல்; fertile field. "அங்ஙனம் ஒலித்தல் செல்லாக் கழனியிற் செந்நெல்லும் கரும்புஞ் சூழ்ந்த இடத்தையுடைய நீர்நிலைச் செறுவி லுண்டாகிய தாமரைக் காட்டி லென்க". (சிலப். 10: 122, உரை.).

**நீர்நிறக்காக்கை** *nīr-niṟa-k-kākkai,* பெ. (n.) நீர்க்காக்கை பார்க்க; see nīr-k-kākkai "*கானக்கோழியு நீர்நிறக் காக்கையும்*" (சிலப். 10:116.).

*[நீர் + நிறக்காக்கை.]*

**நீர்நிறம்**[1] *nīr-niṟam,* பெ. (n.) நீரின் நிறம்; colour of water.

*[நீர் + நிறம்.]*

**நீர்நிறம்**[2] *nīr-niṟam,* பெ. (n.) நீரில் குழைத்து எழுதும் வண்ணம்; water colour.

*[நீர் + நிறம்.]*

**நீர்நீக்கம்** *nīr-nīkkam,* பெ. (n.) நீர்க் கூறகற்றம்; dehydration.

*[நீர் + நீக்கம்.]*

**நீர்நீக்கி** *nīr-nīkki,* பெ. (n.) நீர்க்கூறகற்றி; dehydrator.

*[நீர் + நீக்கி.]*

**நீர்நுங்கு** *nīr-nuṅgu,* பெ. (n.) நீரையுடைய பனநுங்கு; pulpy kernel of a tender palmyra fruit with full of water. "நீர்நுங்கின் கண்வலிப்பக்கானவேம்பின் காய்திரங்கக் கயங்களியுங் கோடையாயினும் ஏலா வெண்பொன் போருறு காலை" (புறநா. 389.).

*[நீர் + நுங்கு.]*

**நீர்நெட்டி** *nīr-neṭṭi,* பெ. (n.) கிடைப் பூடுவகை (யாழ்.அக.); a species of pith.

*[நீர் + நெட்டி.]*

**நீர்நெருப்பு**[1] *nīr-neruppu,* பெ. (n.) கல்லுருவி (சங்.அக.) என்னும் நிலைத்திணை; blistering plant.

*[நீர் + நெருப்பு.]*

**நீர்நெருப்பு**[2] *nīr-neruppu,* பெ. (n.) **1.** நீர்மேல் நெருப்பு; fire on water. **2.** கல்லுருவி; gravel plant-ammrnnia vesi-catoria alies a baccifera. **3.** ஆகாயத் தாமரை; sky lotus-pislia stratotes. **4.** கொட்டைப்பாசி; green moss found on the surface of water. (சா.அக.).

**நீர்நெல்லிக்காய்** *nīr-neḷḷikkāy,* பெ. (n.) நீரில் ஊறவைத்த நெல்லிக்காய்; fruits of myrobalan pickled in water.

*[நீர் + நெல்லிக்காய்.]*

**நீர்நொச்சி** *nīr-nocci,* பெ. (n.) **1.** நொச்சி மரவகை (L.); three-leaved chaste tree. **2.** மரவகை; water peacock's-foot tree. **3.** பீநாறிச்சங்கு; smooth volkameria. **4.** காட்டுச்சீரகம்; purple fleabane.

*[நீர் + நொச்சி.]*

**நீர்ப்பகண்டை** *nīr-p-pagaṇḍai,* பெ. (n.) *நீர்ப் பகன்றை* (வின்.)பார்க்க; see *nīr-p-pagaṉṟai.*

*[நீர்பகன்றை → நீர்ப்பகண்டை.]*

**நீர்ப்பகன்றை** *nīr-p-pagaṉṟai,* பெ. (n.) பகன்றை வகை (யாழ்.அக.); a kind of Indian jalap.

*[நீர் + பகன்றை.]*

**நீர்ப்பகை** *nīr-p-pagai,* பெ. (n.) உடம்புக்கு நீர் ஒத்துக் கொள்ளாமையாகிய மாறுபாடு; நீர் ஒவ்வாமை; injuriousness of some kinds of water; water allergy.

*[நீர் + பகை.]*

**நீர்ப்பச்சை** *nīr-p-paccai,* பெ. (n.) **1.** ஆமை; tortoise. **2.** கடலாமை; sea turtle. **3.** *கடலாரை* பார்க்க; see *kaḍal-ārai.* (சா.அக.).

*[நீர் + பச்சை.]*

**நீர்ப்பசு** *nīr-p-pašu,* பெ. (n.) *காளிந்தி* பார்க்க; see *kāḷindi.* (சா.அக.).

**நீர்ப்பஞ்சு**[1] *nīr-p-pañju,* பெ. (n.) **1.** காந்தச் செய்–நஞ்சு (பாஷாணம்); one of the 32 kind of native arsenic. **2.** தண்ணீரிழுக்கும் பஞ்சு; absorbment cotton. (சா.அக.).

*[நீர் + பஞ்சு.]*

**நீர்ப்பஞ்சு**[2] *nīr-p-pañju,* பெ. (n.) கடற்காளான் (யாழ்.அக.); sponge.

*[நீர் + பஞ்சு.]*

**நீர்ப்பட்டை** *nīr-p-paṭṭai,* பெ. (n.) பிசின் பட்டை; a gum bark. (சா.அக.).

*[நீர் + பட்டை.]*

**நீர்ப்படலம்** *nīr-p-paḍalam*, பெ. (n.) கண்ணோய் வகை (C.E.M); opacity of the cornea, nebula.

*[நீர் + படலம்.]*

**நீர்ப்படுக்கை** *nīr-p-paḍukkai*, பெ. (n.) புண்பட்ட நோயருக்குரிய நீரடைத்த படுக்கை; water-bed for patients who is affected by bed soar.

*[நீர் + படுக்கை.]*

**நீர்ப்படுகை** *nīr-p-paḍugai*, பெ. (n.) ஆற்றோரத்து நிலம்; land on the banks of a river fit for cultivation.

*[நீர் + படுகை.]*

**நீர்ப்படு–த்தல்** *nīr-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) முழுக்காட்டுதல்; to bathe. "*தென் றமிழ் நாடாளும் வேந்தர்..... நங்கை தன்னை நீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மை நீங்கி*" (சிலம்பு. 26:9–15, உரை.).

**நீர்ப்படுபருந்து** *nīr-p-paḍu-parundu*, பெ. (n.) மலை; mountain. "*நீர்ப்படு பருந்தினீர்ஞ்சிறகன்ன*" (பதிற். 12:19.).

**நீர்ப்படுவன்**[1] *nīr-p-paḍuvaṉ*, பெ. (n.) *நீர்ப் பாடு* 1, 2 (வின்.) பார்க்க; see *nīr-p-pāḍu.*

*[நீர் + படுவன்.]*

**நீர்ப்படுவன்**[2] *nīrppaḍuvaṉ*, . பெ. (n.) காலின்கீழ் எப்பொழுதும் நீர் கசிந்து கொண்டிருக்கும் சிலந்திநோய்; an ulcer below the knee marked by constant watery discharge. (சா.அக.).

**நீர்ப்படை** *nīr-p-paḍai*, பெ. (n.) (புறம்) நடுகல்லை நீராட்டித் தூய்மை செய்தலைக் கூறும் புறத்துறை; theme of bathing a nadukal before consecration. "*காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்*" (தொல். பொருள். 60.). "தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப் பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு" (சிலப். 25:121.).

*[நீர் + படை.]*

**நீர்ப்படைக்காதை** *nīr-p-paḍai-k-kādai*, பெ. (n.) சிலப்பதிகாரத்தின் இருபத்தேழாம் காதை; 27th chapter of šilappadikaram.

*[நீர்ப்படை + காதை.]*

**நீர்ப்படைசெய்–தல்** *nīr-p-paḍai-cey-*, 1 செ.குன்றாவி. (v.t.) திருமுழுக்காட்டுதல்; holi bath to an idol. "*கங்கைப் பேர்மாற்றுக் கரையகம் புகுந்து பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை நூற்றிறன் மாக்களி னீர்ப்படை செய்து*" (சிலப். 27:14.).

*[நீர்ப்படை + செய்–,]*

**நீர்ப்பண்டம்** *nīr-p-paṇḍam*, பெ. (n.) நீர்மப் பொருள்; liquid. "*மனம் நீர்மப் பொருளா யுருகி*" (திவ். பெரியாழ். 3, 6, 3, வியா. பக். 675.).

*[நீர் + பண்டம்.]*

**நீர்ப்பண்டமா–தல்** *nīr-p-paṇḍam-ā-*, 6 செ.கு.வி. (v.i.) உருகுதல்; (திவ். திருவாய். 1, 5, 2, பன்னீ.); to become liquid; to melt, as the heart.

*[நீர் + பண்டம் + ஆ.]*

**நீர்ப்பணைப்பு**[1] *nīr-p-paṇaippu*, பெ. (n.) நீர்க் கோப்பு (M.L.); cold in the head.

*[நீர் + பணைப்பு.]*

**நீர்ப்பணைப்பு**[2] *nir-p-paṇaippu,* பெ. (n.) நீர்க்கோவையினால் உடம்பு பருத்துக் காணப் படுகை; corpulency due to accumulation of morbid fluid in the system.

*[நீர் + பணைப்பு.]*

**நீர்ப்பத்தர்**[1] *nir-p-pattar,* பெ. (n.) நீர் பீறிட்டு வெளிப்படுங் குழாய் (திவா.), தூம்பு; water-spout.

*[நீர் + பத்தர்.]*

**நீர்ப்பத்தர்**[2] *nir-p-pattar,* பெ. (n.) அம்மணம் (சூ.நிக. 8:58.); nude, naked, bare.

**நீர்ப்பத்தாயம்** *nir-p-pattāyam,* பெ. (n.) நீர்த் தொட்டி; cistern reservior of water.

*[நீர் + பத்தாயம்.]*

*[பற்று + ஆயம்.]* அடுக்கடுக்காக நெல் கொட்டிவைக்க மரத்தால் அமைக்கப் படுவதைப்பற்றாயம் என்பதும், மண்ணால் அமைக்கப்படுவதைக் குதிர் என்பதும் தஞ்சைமாவட்ட வழக்கு.

**நீர்ப்பதுமம்** *nir-p-padumam,* பெ. (n.) இமையில் வரும் நோய்வகை (சீவரட்.); a disease of the eyelids.

*[நீர் + பதுமம்.]*

**நீர்ப்பந்தர்** *nir-p-pandar,* பெ. (n.) *நீர்ப்பந்தல்* பார்க்க; see *nir-p-pandal.*

*[நீர் + பந்தர்; பந்தல் → பந்தர்– கடைப் போலி.]*

**நீர்ப்பந்தல்** *nir-p-pandal,* பெ. (n.) வேனிற் காலத்தில் வழிச் செல்வோர்க்குக் குடிநீர் முதலியன தந்துதவும் அறச்சாலை; place where drinking-water, butter-milk etc. are given to passers-by during the hot season.

*[நீர் + பந்தல்.]*

**நீர்ப்பயணம்** *nir-p-payaṇam,* பெ. (n.) *நீர்ச் செலவு* பார்க்க; see *nir-c-celavu.*

*[நீர் + பயணம்.]*

**நீர்ப்பயறு** *nir-p-payaṟu,* பெ. (n.) மின்னிப் பயறு; a species of jungle green gram. (சா.அக.).

*[நீர் + பயறு.]*

பை → பையல் → பயிறு.

**நீர்ப்பயிர்** *nir-p-payir,* பெ. (n.) நன்செய்ப் பயிர் (இ.வ.); wet cultivation.

*[நீர் + பயிர்.]*

**நீர்ப்பரிசகம்** *nir-p-parišagam,* பெ. (n.) ஆமை; tortoise. (சா.அக.).

**நீர்ப்பரிசை** *nir-p-parišai,* பெ. (n.) ஆமை (மூ.அ.); tortoise.

**நீர்ப்பருத்தி**[1] *nir-p-parutti,* பெ. (n.) மரவகை (L.); sea-coast rose mallow.

*[நீர் + பருத்தி.]*

**நீர்ப்பருத்தி**[2] *nir-p-parutti,* பெ. (n.) கடற் கரைப் பருத்தி; sea coast rose mellow-hisbiscus tiliaceous. (சா.அக.).

*[நீர் + பருத்தி.]*

**நீர்ப்பற்றாக்குறை** *nīr-p-paṟṟā-k-kuṟai,* பெ. (n.) அணைக்கட்டுகளில் போதுமான நீர் தேங்காமற் போதல்; shortage of water in the reservoir. நீர்ப்பற்றாக்குறைக் காலங்களில் தமிழ்நாடும் கருநாடகமும் காவிரி நீரை எவ்வாறு பங்கிட்டுக் கொள்ள வேண்டு மென இந்தியத் தலைமையமைச்சர் தலைமையிலான காவிரி நடுவர் குழு வரையறை செய்கிறது. (உ.வ.).

*[நீர் + பற்றாக்குறை.]*

**நீர்ப்பறவை[1]** *nīr-p-paṟavai,* பெ. (n.) நீர்நிறக் காக்கை; little cormorant. "***நீர்க் காக்கை***" (சிலம்பு. 10:114–9, உரை.).

*[நீர் + பறவை.]*

**நீர்ப்பறவை[2]** *nīr-p-paṟavai,* பெ. (n.) நீரில் வாழும் பறவை (பிங்.); water-bird.

*[நீர் + பறவை.]*

**நீர்ப்பன்றி** *nīr-p-paṉṟi,* பெ. (n.) பெருமீன் வகை; perpoise.

*[நீர் + பன்றி.]*

**நீர்ப்பனை[1]** *nīr-p-paṉai,* பெ. (n.) பூடுவகை (மலை.); creeping aumanac.

*[நீர் + பனை.]*

**நீர்ப்பனை[2]** *nīr-p-paṉai,* பெ. (n.) புல்லாமணக்கு (வைத்திய பரி.); caster plant.

*[நீர் + பனை.]*

**நீர்ப்பா** *nīr-p-pā,* பெ. (n.) நீரிழிவு நோய்; diabetes.

**நீர்ப்பாக்கு** *nīr-p-pākku,* பெ. (n.) ஊறற் பாக்கு (வின்.); arecanut cured in water.

*[நீர் + பாக்கு.]*

**நீர்ப்பாசனம்** *nīr-p-pāšaṉam,* பெ. (n.) வேளாண்மைக்கு நீரைப் பயன்படுத்துகை; water irrigation. காவிரியில் போதிய நீர்வரத்து இன்மையால் காவிரி நீர்ப்பாசனப் பகுதி இவ்வாண்டு வறண்டது. (உ.வ.).

*[நீர் + பாசனம்.]*

ஆற்றுநீர், ஏரிநீர், கிணற்றுநீர் ஆகிய மூன்றையும் வேளாண்மைக்குப் பயன் படுத்துவர். பாசனமெனலே சாலும்; எனினும், நீர்ப்பாசனமென்றது விளங்கத்தோன்ற.

**நீர்ப்பாசி[1]** *nīr-p-pāši,* பெ. (n.) தண்ணீரில் மிதக்கும் பாசிவகை; moss or morass-weed.

*[நீர் + பாசி.]*

**நீர்ப்பாசி[2]** *nīr-p-pāši,* பெ. (n.) வைப்பு நஞ்சான முப்பத்திரண்டினொன்று; a kind of prepared poison.

*[நீர் + பாசி.]*

**நீர்ப்பாடி** *nīr-p-pāḍi,* பெ. (n.) *நீராரை* பார்க்க; see *nīr-ārai.* (சா.அக.).

*[நீர் + பாடி.]*

**நீர்ப்பாடு[1]** *nīr-p-pāḍu,* பெ. (n.) **1.** கடும் வயிற்றுப் போக்கு; violent diarrhoea, sudden and often fatal. *'நீர்ப்பாடு வந்ததாம்'* (பணவிடு. 300.). **2.** நீரிழிவு (வின்.); diabetes. **3.** நீர்க்குறைவு; shortage of water. நீர்ப் பாடான பயிர் (வின்.).

*[நீர் + பாடு.]*

**நீர்ப்பாடு²** *nir-p-pāḍu,* பெ. (n.) குழந்தை நோய்வகை (பாலவா. 451.); a disease of children.

*[நீர் + பாடு.]*

**நீர்ப்பாண்டு** *nir-p-pāṇḍu,* பெ. (n.) பாண்டு நோய்வகை (பைஷஜ.); dropsy.

*[நீர் + பாண்டு.]*

**நீர்ப்பாம்பு** *nir-p-pāmbu,* பெ. (n.) தண்ணீரில் வாழும் பாம்புவகை; common water-snake. *"அஞ்சாப் புறங்கிடக்கு நீர்ப்பாம்பு"* (வாக்குண். 25.).

*[நீர் + பாம்பு.]*

**நீர்ப்பாய்ச்சல்** *nir-p-pāyccal,* பெ. (n.) 1. ஆறு கால்வாய் முதலியவற்றின் மூலம் ஏற்படும் பாசனம் (உ.வ.); irrigation from a river, stream etc. 2. சீழ் வடிகை (வின்.); discharge of serum from a sore, of water from the eyes, of mucus from the nose. 3. நீர்க்குத்து, (இ.வ.) பார்க்க; see nir-k-kuttu.

*[நீர் + பாய்ச்சல்.]*

**நீர்ப்பாய்ச்சி** *nir-p-pāycci,* பெ. (n.) ***நீர்க்கண்டி*** பார்க்க; see *nir-k-kaṇḍi.*

*[நீர் + பாய்ச்சு → நீர்பாய்ச்சு → நீர்ப்பாய்ச்சி.]*

**நீர்ப்பாய்ச்சிமானியம்** *niṟ-p-pāycci-māṉiyam,* பெ. (n.) நீராணிக் காரற்குரிய இலவய நிலம் (இ.வ.); service avayinām held by a water distributor.

*[நீர்ப்பாய்ச்சி + மானியம்.]*

**நீர்ப்பாய்ச்சுமானியம்** *nir-p-pāyccu-māṉiyam,* பெ. (n.) வரியின்றி நீர்ப் பாய்ச்சிக் கொள்ளும் நிலம் (வின்.); land irrigable free of water-rate.

*[நீர்ப்பாய்ச்சு(ம்) + மானியம்.]*

**நீர்ப்பானை** *nir-p-pāṉai,* பெ. (n.) நீர்ச்சால்; a pot for holding water;water-pot. (சா.அக.).

*[நீர் + பானை.]*

**நீர்ப்பிச்சான்** *nir-p-piccāṉ,* பெ. (n.) நேரப் பிசின்; false zedoary-koemferia rotunda alias k.longa. (சா.அக.).

**நீர்ப்பிடி¹** *nir-p-piḍi,* பெ. (n.) ***நீர்ப்பிடிப்பு*** பார்க்க; see *nir-p-piḍippu.*

*[நீர் + பிடி.]*

**நீர்ப்பிடி²** *nir-p-piḍi,* பெ. (n.) அகந்தை (இ.வ.); arrogance.

*[நீர் + பிடி.]*

**நீர்ப்பிடி³–த்தல்** *nirp-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *நீர்க் கொள்ளு–தல்* பார்க்க; see *nir-k- koḷḷu-,*

*[நீர்க்கொள்ளு–, → நீர்ப்பிடி–,]*

**நீர்ப்பிடிப்பரப்பு** *nir-p-piḍipparappu,* பெ. (n.) அணைக்கு ஆற்று நீர்வரத்துப் பரப்பு; catchment area.

*[நீர்ப்பிடி + பரப்பு]*

**நீர்ப்பிடிப்பு¹** *nir-p-piḍippu,* பெ. (n.) 1. ஏரியில் நீர்பற்றுமிடம்; water-spread of a tank. ஆறகழூர் ஏரியின் நீர்ப்பிடிப்புப் பகுதியில்

இந்த ஆண்டு நல்ல மழை பெய்தது (உ.வ.) **2.** நிலத்தில் நீர் வடியாது நிற்கும் நிலை; water-logged condition, as of land. *நீர்ப்பிடிப்பு நிலம். இந்த வயலில் நீர்ப்பிடிப்பு மிகுந்திருந்தமையால் பயிர் அழுகிவிட்டது.* (உ.வ.). **3.** நீரளவு (வின்.); quantity of water. இந்த ஆண்டு ஏரியின் நீர்ப்பிடிப்பு தாழ்வில்லை. (உ.வ.). **4.** காய்கனிகளிலுள்ள சாறு (வின்.); juiciness of fruits or vegetables. *இந்தப் பழம் நீர்ப்பிடிப்பானது.* (உ.வ.).

*[நீர் + பிடிப்பு.]*

பிடி – கைப்பற்றுதல், நிறுத்திக் கொள்ளுதல், வயப்படுத்தல், பிடி → பிடிப்பு.

**நீர்ப்பிடிப்பு**[2] *nīr-p-piḍippu,* பெ. (n.) நீர்த்தட்டுப் பாடு (இ.வ.); scarcity of water.

*[நீர் + பிடிப்பு.]*

பிடி – உறுதி, இறுக்கம், குறைவு, தட்டுப்பாடு.

**நீர்ப்பிடிப்புநிலம்** *nīr-p-piḍippu-nilam,* பெ. (n.) தண்ணீரில் முழுகிநிற்கும் வயல் (c.g.); land which is liable to frequent submersion. *இந்த நீர்ப் பிடிப்பு நிலத்தில் என்ன வேளாண்மை செய்ய இயலும்.* (உ.வ.).

*[நீர்ப்பிடிப்பு + நிலம்.]*

**நீர்ப்பிடிப்புப்பகுதி** *nīr-p-piḍippu-p-pagudi,* பெ. (n.) நீர்ப்பிடி பரப்பு பார்க்க; see nīr-piḍi-p-parappu.

**நீர்ப்பிடிபரப்பு** *nīr-p-piḍi-parppu,* பெ. (n.) நீர்த்தேக்கங்களில் நிறைவதற்கான மழைநீர் வடிகால் பகுதி; area from which rainfall flows into a river etc.

**நீர்ப்பிணக்கு** *nīr-p-piṇakku,* பெ. (n.) நீர்ப் பிணிப்பு (இ.வ.) பார்க்க; see nīr-p-piṇippu.

*[நீர்[1] + பிணக்கு.]*

**நீர்ப்பிணிப்பு** *nīr-p-piṇippu,* பெ. (n.) நீர்க் கோவையாலுண்டாகும் காய்ச்சல் (இ.வ.); fever due to cold.

*[நீர் + பிணிப்பு.]*

**நீர்ப்பிரமி** *nīr-p-pirami,* பெ. (n.) நீர்க் கொடி வகை (M.M. **1045.**); water hyssop, climber herpestis monniera.

**நீர்ப்பிரமியம்** *nīr-p-piramiyam,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* (யாழ்.அக.) பார்க்க; see *nīr-k-kaḍuppu.*

*[நீர் + பிரமியம். ]*

**நீர்ப்பிளவை** *nīr-p-piḷavai,* பெ. (n.) பிளவை வகை (வின்.); a kind of carbuncle.

*[நீர் + பிளவை. ]*

**நீர்ப்பீனசம்** *nīr-p-pīnaśam,* பெ. (n) சளி நோய்வகை (வின்.); catarrh with offensive discharges of mucus through the nostrils.

*[நீர் + பீனசம். ]*

**நீர்ப்பு** *nīrppu,* பெ. (n.) நீர்த்துப்போனது; diluted.

*[நீர் →நீர்ப்பு]*

**நீர்ப்புட்டை** *nīr-p-puṭṭai,* பெ. (n.) அண்டவீக்கவகை; hydrocele.

*[நீர் + புட்டை*
புடைத்தல் = பெருத்தல், வீங்குதல். புடை— புட்டை.*]*

**நீர்ப்புடையன்**[1] *nīr-p-pudaiyaṉ,* பெ. (n.) நீரில் வாழும் நச்சுப் பாம்புவகை (யாழ்.அக.); a poisonous water-snake.

*[நீர் + புடையன்.]*

**நீர்ப்புடையன்**[2] *nīr-p-pudaiyaṉ,* பெ. (n.) 1. ஆற்றுப்புடையன்; river water snake-hydrus granulatus. 2. புடையன்; water snake.

*[நீர் + புடையன்.]*

இப்பாம்பு அலை வாய்க்கரையொட்டிய நான்கு கல் தொலைவு வரையுங் காணக்கூடும். (சா.அக.).

**நீர்ப்புணைப்பு** *nīr-p-puṇaippu,* பெ. (n.) *நீர்ப்பிணிப்பு* (C.L.) பார்க்க; see *nīr-p-piṇippu.*

*[நீர் + புணைப்பு(கொ.வ.).]*

பிணிப்பு → பிணைப்பு → புணைப்பு (கொ.வ.).

**நீர்ப்புள்** *nīr-p-puḷ,* பெ. (n.) *நீர்ப்பறவை* (நாமதீப.244.) பார்க்க; see *nīr-p-paṟavai.*

*[நீர் + புள்.]*

**நீர்ப்புள்தோசம்** *nīr-p-puḷ-tōšam,* பெ. (n.) நீர்ப்புள்ளூறு பார்க்க; see *nīr-p-puḷ-ūru.*

*த.* ஊறு. skt. தோசம்.

*[நீர்ப்புள் + தோசம்.]*

**நீர்ப்புள்ளூறு** *nīr-puḷ-ūṟu,* பெ. (n.) நீர்வாழ்ப் பறவைகளினாலுண்டாகும் ஊறுபாடு; a disease of children, believed to be caused by aquatic birds.

*[நீர் + புள் + ஊறு.]*

**நீர்ப்புற்று** *nīr-p-puṟṟu,* பெ. (n.) வெள்விழியிற் சதைவளரும் நோய்வகை (சீவரட்.266.); growth of flesh on the cornea of the eye.

*[நீர் + புற்று.]*

இந்நோய்கண்டோரின் கண்கள் நீரை மிகுதியாய் ஒழுகுவித்தலின் இது நீர்ப்புற்று எனலாயிற்று.

**நீர்ப்புன்கு** *nīr-p-puṉgu,* பெ. (n.) புன்கு மரவகை (L.); poonga oil tree.

*[நீர் + புன்கு.]*

**நீர்ப்பூ** *nīr-p-pū,* பெ. (n.) பூவகை நான்கனுள் நீரில் உண்டாவது; aquatic flower, one of four. "*நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ*" (திருவிருத்.55.). "முழு நெறியாகிய மேதகு குவளையுடைய அரும்புகள் சுரும்பு இமிர இதழ் அவிழ்ந்த கழுநீர் முதலிய நீர்ப்பூக்களின் வாசத்தைக் கலந்துண்டு" (சிலப். 2 : 14 உரை.).

*[நீர் + பூ.]*

நால்வகைப்பூக்களாவன:

1. நீர்ப்பூ.
2. நிலப்பூ.
3. கோட்டுப்பூ.
4. கொடிப்பூ. கொடிப்பூவையும் இவர்கொடி, படர்கொடி என இருவகையாய்ச் சொல்லலாம்.

**நீர்ப்பூண்டு** *nīr-p-pūṇḍu,* பெ. (n.) *நீர்முள்ளி* (சங்.அக.) பார்க்க; see *nīr-muḷḷi;*

*[நீர் + பூண்டு.]*

**நீர்ப்பூதம்** *nīr-p-pūdam,* பெ. (n.) ஐவகைப் பூதங்களுள் நீராகிய பூதம்; water.

*[நீர் + பூதம்.]*

**நீர்ப்பூலாஞ்சி** *nīr-p-pūlāñji,* பெ. (n.) நீரில் வாழும் பூலாச்செடிவகை; black-berried featherfoil.

*[நீர் + பூலாஞ்சி.]*

**நீர்ப்பெருக்கு[1]** *nīr-p-perukku,* பெ. (n.) **1.** வெள்ளம்; flood. **2.** கடல்நீரேற்றம் (வின்.); flow of the tide.

*[நீர் + பெருக்கு.]*

**நீர்ப்பெருக்கு[2]** *nīr-p-perukku,* பெ. (n.) நோய்வகை (இராசவைத்.166.); a disease.

*[நீர் + பெருக்கு.]*

**நீர்ப்பை** *nīr-p-pai,* பெ. (n.) சிறுநீர்ப்பை; urine bladder.

*[நீர் + பை*
*நீர் = சிறுநீர்*
*பொல் → பொள் → பொய் → பை.]*

**நீர்ப்பைத்தாபனம்** *nīr-p-pai-t-tāpaṉam,* பெ. (n.) *நீர்ச்சுருக்கு,* 2 (m.l.) பார்க்க; see *nīr-c-curukku.*

*[நீர்ப்பை + தாபனம்.]*

**நீர்ப்போர்** *nīr-p-pōr,* பெ. (n.) நீரின் கண்ணே போலிப் போர் புரியும் விளையாட்டு; the sport of mock-fight played in a tank or river *"புணைபுறந் தழுவித் தூநீர்ப் போர்த்தொழி றொடங்கினாரே"* (சீவக.2655.).

*[நீர் + போர்.]*

**நீர்ப்பௌந்திரம்** *nīr-p-paundiram,* பெ. (n.) சிறுநீர்த் துளையில் உண்டாகும் புண்கட்டி (M.L.); urethral fistula.

*[நீர் + skt. பௌந்திரம்.]*

**நீர்பாய்ச்சு–தல்** *nīr-paiccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வயலுக்கு நீரைப்பாய்ச்சுதல்; to irrigate to the fields. நீர்ப்பற்றாக்குறையினால் கீழ்மடையிலுள்ள நெற்பயிருக்குப் போதுமான நீர் பாய்ச்ச இயலவில்லை. (உ.வ.).

*[நீர் + பாய்ச்சு–,]*

**நீர்பிரி–தல்** *nīr-piri-,* 2செ.குன்றாவி. (v.t.) சிறுநீர் கழிதல்; discharge of urine. அப்பாவுக்குக் கடந்த நான்கு நாட்களாக நீர் பிரியவில்லை. (உ.வ.).

*[நீர் + பிரி–,]*

**நீர்பூசா** *nīr-pūšā,* பெ. (n.) பூடுவகை (மாட்டுவா.109.); a plant.

*[நீர் + பூசா.]*

**நீர்பெய்–தல்** *nīr-pey-,* **1.** செ.குன்றாவி. (v.t.) சிறுநீர்விடுதல்; to pass urine, to urinate. *"நீர்பெய்தவித்துமே"* (துக்கயாகப்.506.).

*[நீர் + பெய்.]*

**நீர்பெய்கலன்** *nīr-pey-kalaṉ,* பெ. (n.) நீரைப் பரிமாறும் ஏனம் (வின்.); water-jug.

*[ நீர் + பெய்கலன். ]*



**நீர்பெயர்வலகு** *nīr-peyar-v-alagu,* பெ. (n.) மிகக் குறைந்த அழுத்தத்தில் ஒரு விரல விட்டமுள்ள குழாய் மூலம் 24 மணிநேரத்தில் வெளியேற்றப்படும் நீரின் அளவு; water-inch.

*[ நீர் + பெயர்வு + அலகு. ]*

**நீர்போகி** *nīr-pōgi,* பெ. (n.) மதகு (பிங்.); sluice.

*[ நீர் + போகி.* போக்கி→போகி. ]

**நீர்மக்குறி** *nīrma-k-kuṟi,* பெ. (n.) நீர்மத்தினால் செய்யப்படும் குறி; water mark.

*[ நீர்மம் + குறி. ]*

**நீர்மஞ்சள்** *nīr-mañjaḷ,* பெ. (n.) மஞ்சள்வகை (சீவக.3076,உரை.); a kind of turmeric.

*[ நீர் + மஞ்சள். ]*

**நீர்மட்டம்**[1] *nīr-maṭṭam,* பெ. (n.) (அணை,ஏரி முதலியவற்றில்) நீர் இருக்கும் அளவின் உயரம்; level of water (in a reservoir, lake,etc.,).

*[ நீர் + மட்டம். ]*

**நீர்மட்டம்**[2] *nīr-maṭṭam,* பெ. (n.) **1.** கொத்தன் நிலவாட்டம் பார்க்குங் கருவி; bricklayers level. **2.** சாதிமட்டப்பலகை; spirit-level.

**தெ.** நீருமட்டமு. **க.** நீர்மட்ட.

*[ நீர் + மட்டம். ]*



**நீர்மட்டம்**[3] *nīr-maṭṭam,* பெ. (n.) கடல் மட்டம்; sea - level.

*[ நீர் + மட்டம். ]*

**நீர்மட்டு** *nīr-maṭṭu,* பெ. (n.) நீர் நிலையில் நீர் நிற்கும் உச்சி; head of water in water tank.

*[ நீர் + மட்டு. ]*

**நீர்மநிலை** *nīrma-nilai,* பெ. (n.) உலகப் பொருள்நிலை மூன்றனுள் நீர்மநிலை; one of three state of object, liquid state.

*[ நீர்மம் + நிலை. ]*

மூன்றுநிலையாவன – நீர்மநிலை, பருமநிலை, வளிமநிலை.

**நீர்மம்** *nīrmam,* பெ. (n.) நீர்ம நிலை; liquid state.

*[ நீர் → நீர்மம். ]*

**நீர்மருத்துவம்** *nīr-maruttuvam,* பெ. (n.) நீரின் உதவியால் நோய் நீக்கும் மருத்துவம்; water cure.

*[நீர் + மருத்துவம்.]*

**நீர்மருத்துவமுறை** *nīrmaruttuva-muṟai,* பெ. (n.) சிலநோய்களுக்கு நீரின் உதவியால் செய்யப்படும் மருத்துவ முறை; water-treatment method.

*[நீர் + மருத்துவம் + முறை.]*

**நீர்மருது** *nīr-marudu,* பெ. (n.) மருதமரவகை; a kind of tree.

*[நீர் + மருது.]*

**நீர்மலர்** *nīr-malar,* பெ. (n.) குவளைப்பூ; purple Indian water-lily. "தீஞ்சுனை நீர்மலர் மிலைந்து மதஞ் செருக்கி" (நற்.70:8.).

*[நீர் + மலர்.]*

**நீர்மலிகண்** *nīr-mali-kaṇ,* பெ. (n.) துன் பத்தாலே நீர் பெருகும் கண்; tearful eyes, grief-stricken. "சூர்மலை நாடன் கேண்மை நீர்மலி கண்ணொடு நினைப்பாகின்றே" (குறுந்.105.).

*[நீர் + மலி + கண்.]*

**நீர்மலிவான்** *nīr-mali-vāṉ,* பெ. (n.) மழைமேகம் சூழ்ந்தவான்; clouded sky. "அக்காலத்து அவர்நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி யென்னு மாற்றிற்கும் குமரி யென்னு மாற்றிற்கும் இடையே எழுநூற்றுக் காவதவாறும் இவற்றின் நீர்மலிவானென மலிந்த" (சிலப்.8:1–2, உரை.).

*[நீர்+மலி + வான்.]*

**நீர்மலை** *nīrmalai,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ள ஒரு சிற்றூர்; a village in Kanjipuram dt. "சேடார் பொழில் சூழ்திருநீர் மலையான்" (நாலா. 1521.).

*[நீர் + மலை.]*

நீர் சூழ்ந்த மலை என்ற காரணத்தினால் நீர் மலை என்பர். திரு என்னும் அடைமொழியுடன் திருநீர்மலை என வழங்கப்படுகிறது.

**நீர்மவரம்பு** *nīrma-varambu,* பெ. (n.) நீர்மப் பொருளின் வரம்பு; limit liquid.

*[நீர்மம் + வரம்பு.]*

**நீர்மறி—த்தல்** *nīr-maṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நீரைத் தடுத்தல்; to stop the water of a channel.

*[நீர் + மறி–,]*

**நீர்மறிப்பு** *nīr-maṟippu,* பெ. (n.) **1.** நீரைத் தடுத்துத் திருப்புகை; diverting the water of a channel by a bund. **2.** *நீரடைப்பு* பார்க்க, see *nīr-aḍaippu.*

*[நீர் +மறிப்பு.]*

**நீர்மனிதன்¹** *nīr-maṉidaṉ,* பெ. (n.) மாந்தன் முகம்போல் முகமுடைய ஒருவகைக் கடலுயிரி; dugong, a cetaceous mammal.

*[நீர் + மனிதன்.]*

Skt. *மனிதன்.* *த.மாந்தன்.*

**நீர்மனிதன்²** *nīr-maṉidaṉ,* பெ. (n.) *நீர்மாந்தன்* பார்க்க; see *nīr-māndaṉ.*

*[நீர் + மனிதன்.]*

**நீர்மமாக்கல்** *nirmam-ākkal,* பெ. (n.) திண்மத்தை நீர்மநிலைக்கு மாற்றுகை; liquefaction.

*[நீர்மம் + ஆக்கல்.]*

**நீர்மாங்காய்** *nīr-māṅgāy,* பெ. (n.) நீரில் ஊறவைத்த வடுமாங்காய் (இ.வ.); mangoes pickled in water.

*[நீர் + மாங்காய்.]*

**நீர்மாடம்** *nīr-māḍam,* பெ. (n.) பள்ளியோடம்; a kind of boat. "*ஓங்குநீர் மாடமொடு நாவா யியக்கி*" (சிலப்.14:74.).

*[நீர் + மாடம்.]*



**நீர்மாதளம்** *nīr-mādaḷam,* பெ. (n.) வில்வம்; lingam tree-cretaeva religiosa. (சா.அக.).

**நீர்மாந்தம்** *nīr-māndam,* பெ. (n.) செரியாமை யாலுண்டாகும் குழந்தை நோய்வகை (சீவரட்.); a disease of children caused by indigestion.

*[நீர் + மாந்தம்.]*

**நீர்மாந்தன்** *nīr-māndaṉ,* பெ. (n.) உலகிய லறிவில்லாதவன் (இ.வ.); person who knows nothing of the affairs of the world as if he lived in the sea.

*[நீர் + மாந்தன்.]*

அகவைக்குத் தகுந்த அறிவில்லாதவனைக் கிணற்றுத்தவளை என்பர். தான் வாழும் நீர்நிலையே உலகென்று இறுமாந்திருக்கும் இயல்பைச் சுட்டி அதுபோல தனக்குத் தெரிந்ததே உலகமென்பாரையும் அவ்வாறே கூறுவர்.

**நீர்மாலை** *nīr-mālai,* பெ. (n.) உயிர்நீங்கிய உடலைக் (பிணத்தை) குளிப்பித்தற்கு நீர்கொண்டுவருஞ் சடங்கு அல்லது செய்கை (இ.வ.); ceremony of bringing water for bathing a corpse before cremation or burial.

*[நீர் + மாலை.]*

**நீர்மாலைக்கடன்** *nīr-mālai-k-kaḍaṉ,* பெ. (n.) *நீர்மாலை* பார்க்க; see *nīr-mālai.*

*[நீர்மாலை + கடன்.]*

**நீர்மாறு-தல்** *nīr-māṟu-,* 4 செ.கு.வி. (v.i.) ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நீரை மாற்றிப் பாய்ச்சுதல்; to lead water, as from one field to another; from one channel to another.

*[நீர் + மாறு-,]*

**நீர்மின்சாரம்** *nīr-miṉšāram,* பெ. (n.) நீரின் விசையாலுண்டாக்கப்படும் மின்னாற்றல்; hydro-electricity.

*[நீர் + மின்சாரம்.]*

**நீர்மின்நிலையம்** *nīr-miṉ-nilaiyam,* பெ. (n.) நீரோட்டவிசையைப் பயன்படுத்தி மின்சாரம் எடுக்கப்படும் இடம்; hydro electric power plant.

*[நீர் + மின் + நிலையம்.]*

**நீர்மின்வாரியம்** *nīr-miṉ-vāriyam,* பெ. (n.) மின்னாற்றலைப் பேணும் வாரியம்; electricity-board.

*[நீர் + மின் + வாரியம்.]*

**நீர்மீட்டான்** *nīr-miṭṭāṉ,* பெ. (n.) தண்ணீர் விட்டான் என்னும் கொடி; climbing asparagus.

*[நீர் + மீட்டான்.]*

**நீர்முகம்** *nīr-mugam,* பெ. (n.) **1.** நீர்த்துறை (வின்.); bathing ghat. **2.** ஆற்றுவாய்த் (சங்கம) துறை (யாழ்.அக.); mouth of a river. **3.** இறங்குதுறை; landing place. "நீர்முகந்திகழ் நீரிலும்" (சேதுபு.கோடி.5.).

*[நீர் + முகம்.]*

**நீர்முட்டான்** *nīr-muṭṭāṉ,* பெ. (n.) *நீர்விட்டான்* பார்க்க; see *nīr-viṭṭāṉ.*

*[நீர் + முட்டான். விட்டான் → முட்டான்.]*

*ஒ. நோ : விழி → முழி*

**நீர்முட்டு[1]–தல்** *nīr-muṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** நீர்நிரம்புதல்; to be full to the brim, as eyes with tears. **2.** சிறுநீர் பெய்தல் (வின்.); to make water, to urinate.

*[நீர் + முட்டு–,]*

**நீர்முட்டு[2]** *nīr-muṭṭu,* பெ. (n.) பூச்சிக் கடியினாலேனும், கண்ணோவினாலேனும் கண்ணினின்று நீர்வடிகை (M.L.); incessant watering in the eyes, as in cases of bites, or corneal inflammation.

*[நீர் + முட்டு.]*

**நீர்முட்டு[3]** *nīr-muṭṭu,* பெ. (n.) நீர்ப்பற்றாக்குறை; water scarcity.

*[நீர் + முட்டு. முட்டுப்பாடு → முட்டு.]*

**நீர்முட்டுப்பாடு** *nīr-muṭṭu-p-pāḍu,* பெ. (n.) *நீர்முட்டு* பார்க்க; see *nīr-muṭṭu.*

*[நீர் + முட்டு + பாடு.]*

**நீர்முழுகி** *nīr-muḻugi,* பெ. (n.) **1.** நீரில் முழுகுவோன்; diver. **2.** மதகுக் கண்களில் அடைபட்ட செத்தை முதலியவற்றை முழுகி எடுப்போன் (W.G.); one who dives down when a tank is full and removes silt and other obstructions in the sluice.

*[நீர் + முழுகு = நீர் முழுகு → நீர்முழுகி.]*

**நீர்முழுகியினாம்** *nīr-muḻugi-y-iṉām,* பெ. (n.) நீர்முழுகிக்குக் கொடுக்கப்படும் இறையிலி நிலம் (W.G.); tax-free land enjoyed by a nīr-muḻugi.

*[நீர்முழுகி + (உருது) இனாம்.]*

**நீர்முள்தையல்** *nīrmuḷ-taiyal,* பெ. (n.) குறுக்குத் தையல்வகை (இ.வ.); herringbone stich, a cross-stich in needle work, chietly used on flannel.

*[நீர்முள் + தையல்.]*

**நீர்முள்ளி[1]** *nīr-muḷḷi,* பெ. (n.) *நீர்க்கும்பி* பார்க்க; see *nīr-k-kumbi.*

*[நீர் + முள்ளி.]*

**நீர்முள்ளி²** *nīr-muḷḷi,* பெ. (n.) பூடுவகை; water thorn.

*[நீர் + முள்ளி.]*

**நீர்முள்ளிக்காடி** *nīr-muḷḷi-k-kāḍi,* பெ. (n.) நீர்முள்ளி இலையை ஊறவைத்துப் பிழிந் தெடுத்த சாறு; expressed juice of the leaves of water thistle plant soaked in vinegar; distilled vinegar combined with juice of the leaves of water thistle plant. (சா.அக.).

*[நீர்முள்ளி + காடி*

கடு → கடி → காடி

கடு = உறைப்பு அல்லது புளிப்பு மிகுதி. *]*

**நீர்மூடிதழ்** *nīrmūḍidaḻ,* பெ. (n.) நீர் அடிப்பு, water closet.

*[நீர் + மூடிதழ்.]*

**நீர்மூழ்கி¹** *nīr-mūḻgi,* பெ. (n.) நீரில் நடந்துலாவும் பறவை; the dipper that can walk about under water-water ozsel.

*[நீர் + மூழ்கி.]*

**நீர்மூழ்கி²** *nīr-mūḻgi,* பெ. (n.) நீர்மூழ்கிக் கப்பல் பார்க்க; see nīr-mūḻgi-k-kappal.

*[நீர்மூழ்கிக்கப்பல் → நீர்மூழ்கி.]*

**நீர்மூழ்கிக்கப்பல்** *nīr-mūḻgi-k-kappal,* பெ. (n.) நீரினுள் அமிழ்ந்து செல்லக்கூடிய கப்பல்; submarine.

*[நீர்மூழ்கி + கப்பல்.]*



**நீர்மூழ்கிவுந்தம்** *nīr-muḻgi-vundam,* பெ. (n.) நீரினுள் அமிழ்ந்திருந்து நீரோற்றும் உந்தம்; submercible motor.

*[நீர்மூழ்கி + உந்தம்.]*



**நீர்மூளி** *nīr-mūḷi,* பெ. (n.) பெருமரவகை (l.); downy many-leaved tree of beauty.

*[நீர் + மூளி.]*

**நீர்மேகம்** *nīr-mēgam,* பெ. (n.) நீர்த்துளையினின்று சீழ்போன்று நீர்வடியும் நோய்வகை (M.L.); gleet.

*[நீர் + மேகம்.]*

**நீர்மேல்எழுத்து** *nīr-mēl-eḻuttu,* பெ. (n.) *நீர்மேலெழுத்து* பார்க்க; see *nīrmēl-eḻuttu.*

*[நீர்மேல் + எழுத்து → நீர்மேலெழுத்து.]*

**நீர்மேல்செவ்வந்தி** *nīr-mēl-šev-andi,* பெ. (n.) செந்தாமரை; red lotus.

*[நீர்மேல் + செவ்வந்தி.]*

**நீர்மேல்நெருப்பு** *nīr-mēl-neruppu,* பெ. (n.) கல்லுருவி என்னும் மூலிகைச் செடி; a medical herb called kal-l-uruvi.

*[நீர்நெருப்பு → நீர்மேல்நெருப்பு.]*

**நீர்மேல்வாழ்க்கை** *nīrmēl-vāḻkkai,* பெ. (n.) பரதவர் வாழ்க்கை; life of sea-man.

*[நீர்மேல் + வாழ்க்கை.]*

**நீர்மேல்வெள்ளி** *nīr-mēl-veḷḷi,* பெ. (n.) ஒருவகைப் புழு; a kind of water-worm. (சா.அக.).

*[நீர் + மேல் + வெள்ளி.]*

**நீர்மேலாண்மை** *nīr-mēlāṇmai,* பெ. (n.) நீரைப் பகிர்ந்தளிக்கும் ஆளுமை; water-management.

*[நீர் + மேலாண்மை ]*

**நீர்மேலூரல்** *nīr-mēlūral,* பெ. (n.) குளுவை எனும் உயிரி (சிலப்.10:114, உரை.); a kind of insect.

*[நீர்மேல் + ஊரல்]*

ஊர்ந்து செல்வது ஊரல்

ஒ.நோ. நீரினுள் வாழ்வது நீரி.

**நீர்மேலெழுத்து** *nīr-mēl-eḻuttu,* பெ. (n.) நிலையற்றதைக் குறிப்பதற்குப் பயன்படும் மரபுத் தொடர்; நீர்மேலெழுதும் எழுத்து; letters written on water, as unstable. *"நீர்மேலெழுத்துக்கு நேர்"* (மூதுரை,2.).

*[நீர்மேல்+ எழுத்து → நீர்மேலெழுத்து.]*

**நீர்மேலேற்று-தல்** *nīrmēl-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கடல் கடந்து நாடு கடத்துதல்; to sentence one to transportation, as sending across the water.

*[நீர் + மேல் + ஏற்று-,]*

**நீர்மேற்செறிப்பு** *nīr-mēṟ-cerippu,* பெ. (n.) கொட்டைப்பாசி (மலை.); a kind of moss.

*[நீர்மேல் + செறிப்பு.]*

**நீர்மேற்பிரிவு** *nīr-mēṟ-pirivu,* பெ. (n.) கடல்கடந்து செல்லுகை; departing by sea.

*[நீர்மேல் + பிரிவு.]*

**நீர்மேனெருப்பு** *nīrmēṉeruppu,* பெ. (n.) கொட்டைப்பாசி (மலையக.); a kind of moss.

*[நீர்மேல் + நெருப்பு.]*

**நீர்மை[1]** *nīrmai,* பெ. (n.) **1.** நீரின்றன்மை (குறள்,195,உரை.); property of water, as coolness. **2.** தன்மை; property, nature, inherent quality. *"நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்"* (குறள்,17.). **3.** சிறந்த குணம்; goodness, essential excellence. *"பயனில னீர்மையுடையார் சொலின்"* (குறள்,196.). **4.** எளிமை; affability. *"ஆவாவென்ற நீர்மையெல்லாம் புகழ்ப்பெறுவ தென்று கெல்லோ"* (திருவாச.27.5.). **5.** அழகு; beauty. *"மெய்ந்நீர்மை தோற்றாயே"* (திவ். திருவாய். 2,1,6.); **6.** ஒளி; brilliance, lustre. *"நெடுநீர் வார்குழை"* (நெடுநல்.139.). **7.** நிலைமை; state, condition. *"என்னீர்மை கண்டிரங்கி"* (திவ். திருவாய்.1,4,4.). **8.** ஒப்புரவு (வின்.); observance of proper rules or established custom.

*[நீர் → நீர்மை.]*

**நீர்மை**[2] *nīrmai*, பெ. (n.) பண்பு; quality. *"நீருரை செய் நீர்மையில் சூளென்றி நேரிழாய்"* (பரிபா.8:73.). *"இசைப்புலவன் ஆலத்தி வைத்த பண்ணீர்மையை முதலும், முறைமையும், முடிவும், நிறைவும், குறையும், கிழமையும், வளைவும், மெலிவும், சமனும், வரையறையும் நீர்மையுமென்னும் பதினொரு பாகு பாட்டினானும்"* (சிலப்.3:41, உரை.).

*[நீர் → நீர்மை.]*

**நீர்மோர்** *nīr-mōr*, பெ. (n.) மோருடன் நீர் பெருக விட்டு வேறுசிலவற்றைச் சேர்த்துண்டான பருகம்; butter milk diluted and mixed with certain ingredients, used as a drink. *"நீர்மோ ரிள நீர்"* (விநாயகபு.39.40.).

*[நீர் + மோர்.]*

**நீர்யானை** *nīr-yāṉai*, பெ. (n.) (ஆப்பிரிக்கக் காடுகளில் காணப்படும்) யானையைப் போன்ற பருத்த உடலையும் பெரிய தலையையும் முடியில்லா தடித்தத் தோலையுமுடைய நீர் வாழ் விலங்கு; hippopotamus.

க. நீரனை.

*[நீர் → யானை.]*



**நீர்ரோகம்** *nīr-rōgam*, பெ. (n.) நீரிழிவு (உ.வ.); diabetes.

*[நீர் + (skt) ரோகம்.]*

**நீர்வஞ்சி**[1] *nīr-vañji*, பெ. (n.) 1. ஆற்றுப்பாலை; four seeded willow. 2. ஆற்றில் வளரும் கொடிவகை; calamus rotang.

*[நீர் + வஞ்சி.]*

**நீர்வஞ்சி**[2] *nīr-vañji*, பெ. (n.) தண்ணீரில் முளைக்கும் பிரம்பு; water rattan-calamus rotang. (சா.அக.).

*[நீர் + வஞ்சி.]*

**நீர்வடி**[1]**—த்தல்** *nīr-vaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஊறிய அரிசி போன்றவற்றிலிருந்து நீரை வடித்தல்; to drain the water from soaked rice etc. 2. வயலில் பாய்ந்த மிகுதியான நீரை வெளியேற்றுதல்; to drain the excess water from the field.

*[நீர் + வடி.]*

**நீர்வடி**[2]**—தல்** *nīr-vaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கண்ணீர் முதலியன வடிதல்; to drain the water from eyes. 2. புண் முதலியவற்றிலிருந்து சீழ் வெளியேறுதல்; to drain the water from wound. 3. கஞ்சி போன்ற நீர்மம் வடிதல்; to drain the soaked rice water.

*[நீர் + வடி.]*

**நீர்வண்டி**[1] *nīr-vaṇḍi*, பெ. (n.) நீர் வழங்கும் வண்டி; water waggon.

*[நீர் + வண்டி.]*



**நீர்வண்டி²** *nīr-vaṇḍi,* பெ. (n.) தெருவில் நீர் தெளிக்கும் வண்டி; watering cart.

*[நீர் + வண்டி.]*



**நீர்வண்டு** *nīr-vaṇḍu,* பெ. (n.) நீரில் வாழும் வண்டு வகை (வின்.); a water-fly; water beetle. Any of a large number of beetles living on or in water, having fringed legs by means of which they swim easily.

*[நீர் + வண்டு.]*

**நீர்வண்டுக்கடி** *nīr-vaṇḍu-k-kaḍi,* பெ. (n.) நீர்வண்டு கடிப்பதனால் கடிவாயில் ஏற்படும் தழும்பு; a kind of ring-worm due to the bite of water beetle. (சா.அக.).

*[நீர் + வண்டு + கடி.]*

**நீர்வண்ணஓவியக்கலை** *nīr-vaṇṇa-ōviya-k-kalai,* பெ. (n.) நிறங்களை நீரில் கரைத்துத் தூரிகையால் தீட்டும் சித்திரக் கலை; water colour painting.

*[நீர்வண்ணஓவியம் + கலை.]*

**நீர்வண்ணஓவியம்** *nīr-vaṇṇa-ōviyam,* பெ. (n.) *நீர்வண்ண ஓவியக்கலை* பார்க்க; see *nīr-vaṇṇa-ōviya-k-kalai.*

*[நீர்வண்ணம் + ஓவியம்.]*

**நீர்வண்ணம்** *nīr-vaṇṇam,* பெ. (n.) நீரில் கலந்தெழுதப்படும் வண்ண நீர்க் கரைசல்; water colour.

*[நீர் + வண்ணம்.]*

**நீர்வரத்து** *nīr-varattu,* பெ. (n.) **1.** வெள்ளப் பெருக்கு (யாழ்.அக.); flood. **2.** நீரின் வருகை; water flow in river etc., நீர்பிடிப்புப் பகுதியில் மூன்று நாளாக நல்ல மழை பெய்ததன் விளைவாய்க், காவிரியில் நீர்வரத்து மிகுந்து காணப்பட்டது. (உ.வ.)

*[நீர் + வரத்து.]*

**நீர்வரி** *nīr-vari,* பெ. (n.) நீரின் பொருட்டு விதிக்கும் வரிவகை; water-rate, water-tax.

*[நீர் + வரி.]*

**நீர்வரிக்குறி** *nīr-vari-k-kuṟi,* பெ. (n.) *நீர்மக் குறி* பார்க்க; see *nīrma-k-kuṟi.*

**நீர்வரும்பரப்பு** *nīr-varum-parappu,* பெ. (n.) நீர்த்தேக்கங்களுக்கான மழை நீரைப் பெரும் பரப்பு; catchment area.

*[நீர் + வரும் + பரப்பு.]*

**நீர்வரைப்பு**[1] *nīr-varaippu,* பெ. (n.) *நீர்வலயம்* (பிங்.) பார்க்க; see nīr-valayam.

**நீர்வரைப்பு**[2] *nīr-varai-p-pu,* பெ. (n.) அலை வாய்க்கரை, கடற்கரை; sea-shore. "கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள் கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும் வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும் பூவும் புகையுமேவிய விரையும்" (சிலப். 5:11.). *"தத்துநீர் வரைப்பிடற் கொற்கைக் கோமான்"* (சிறுபாண். 62.).

*[ நீர் + வரைப்பு ]*

**நீர்வல்லி** *nīr-valli,* பெ. (n.) **1.** வெற்றிலை; bettel pepper. **2.** தண்ணீர்விட்டான் என்னும் கொடி (மலை.); climbing asparagus.

*[நீர் + வல்லி.]*

**நீர்வல்லிக்காலா** *nīr-valli-k-kālā,* பெ. (n.) புல்லூரி; a kind of parasitic plant. (சா.அக.).

*[ நீர் + வல்லி + காலா. ]*

**நீர்வலயம்** *nīr-valayam,* பெ. (n.) கடலாற் சூழப்பட்ட நிலம்; the earth, as surrounded by the sea. *"மருவுநீர்வலய முதலிய உலக மனைத்தையும்"* (கூர்மபு. அந்தகா. 20.).

*[ நீர் + வலயம். ]*

**நீர்வலி** *nīr-vali,* பெ. (n.) பேறு காலத்தில் சிறுநீர் பெய்ய முடியாமல் ஏற்படும் வலி; pain due to the difficulty of urination during childbirth.

*[ நீர் + வலி. ]*

**நீர்வழங்கீட்டுநிறுவனம்** *nīr-valaṅgīṭṭu-niṟuvaṉam,* பெ. (n.) நீர்வழங்கீட்டுப் பணியாளர் குழாம்; water board.

*[ நீர் + வழங்கீட்டு + நிறுவனம். ]*

குடிநீர் தட்டுப்பாட்டு நேரங்களில் பொது மக்களுக்காக அரசே முறையாகக் குடிநீர் அளிக்கும் நிறுவனம்.

**நீர்வழங்கீடு** *nīr-valaṅgīḍu,* பெ. (n.) முறையாக நீர் வழங்குகை; water-supply.

*[ நீர் + வழங்கீடு. ]*

**நீர்வழங்கும்வாய்த்தலை** *nīr-valaṅgum-vāy-t-talai,* பெ. (n.) நீர் மிகுந்த இடம்; abundance of water in a region. *"எவ்வியது நீர்வழங்கும் வாய்த்தலைகளையுடைய மிழலைக் கூற்றத் துடனே வயலகத்துக் கயலை மேயும் நாரை"* (புறநா. 242. உரை.)

*[ நீர் + வழங்கும் + வாய் + தலை .]*

**நீர்வழி** *nīr-vali,* பெ. (n.) கடலில் கப்பல் செல்லும் பாதை; water way;

*[நீர் + வழி.]*

**நீர்வழிப்படும்புணை** *nīrvali-p-paḍum-puṇai,* பெ. (n.) நீரின் வழிச்செல்லும் ஓடம்; a boat passes on the water. "நீர்வழிப்படூஉம் புணைபோ லாருயிர்"(புறநா.192.). "நீர்வழிப்பட்ட புணை"– (நீதிநெறி. 44.).

*[நீர் + வழிப்படும் + புணை.]*

**நீர்வழிப்போக்குவரத்து** *nīr-vali-p-pōkku-varattu,* பெ. (n.) நீரின் வழியாக போதல்; transport by the water.

*[நீர் + வழி + போக்கு + வரத்து.]*

கடல், ஆறு போன்ற நீர் சூழ்ந்த பகுதியினைக் கடப்பதற்குப் பயன்படுத்தும் போக்குவரத்து.

**நீர்வழிப்போக்குவரவு** *nīrvaḻi-p-pōkku-varavu,* பெ. (n.) நீர்வழியில் போகுகை; water-carriage.

*[நீர்வழி + போக்கு + வரவு.]*

**நீர்வழுக்கை** *nīr-vaḻukkai,* பெ. (n.) நீர்ப் பூடுவகை (யாழ்.அக.); an aqutic plant.

*[நீர் + வழுக்கை.]*

**நீர்வள்ளி** *nīr-vaḷḷi,* பெ. (n.) *நீர்வல்லி* (தைலவ. தைல. 94.) பார்க்க; see *nīr-valli.*

*[நீர் + வள்ளி.]*

**நீர்வள்ளிக்கிழங்கு** *nīr-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ. (n.) *தண்ணீர் விட்டான் கிழங்கு* பார்க்க; see *taṉṉīr-viṭṭāṉ -kiḻaṅgu.* (சா.அக.).

*[நீர் + வள்ளிக்கிழங்கு.]*

**நீர்வளம்**[1] *nīr-vaḷam,* பெ. (n.) நீர்நிறைவு (யாழ்.அக.); abundance of water in a region.

*[நீர் + வளம்.]*

**நீர்வளம்**[2] *nīrvaḷam,* பெ. (n.) நேர்வாளம் என்னும் நிலைத்திணை; true croton oil plant. (சா.அக.).

**நீர்வற்றம்** *nīr-vaṟṟam,* பெ. (n.) நீரிறக்கம் (யாழ்.அக.); ebb of the tide.

*[நீர் + வற்றம்.]*

**நீர்வற்றல்** *nīr-vaṟṟal,* பெ. (n.) வற்றல் (வின்.); anything dried.

*[நீர் + வற்றல்.]*

**நீர்வற்றற்றேங்காய்** *nīr-vaṟṟaṟṟēṅgāy,* பெ. (n.) கொப்பரைத் தேங்காய் (யாழ்.அக.); copra.

க. நீருபட்டிடதெங்கிநகாய்.

*[நீர்வற்றல் + தேங்காய்.]*

**நீர்வாகை** *nīr-vāgai,* பெ. (n.) *நீர்வாழை* (M.M. 922.). பார்க்க; see *nīr-vāḻai.*

*[நீர் + வாகை.]*

**நீர்வாங்கு** *nīr-vāṅgu,* பெ. (n.) மடல்வாத்து (இ.வ.); a kind of water-fowl.

*[நீர் + வாங்கு.]*



**நீர்வாங்குதளம்** *nīr-vāṅgu-talam,* பெ. (n.) நீர்த்தேக்கங்களுக்கு நீர்சேரும்பரப்பு; catchment basin.

*[நீர் + வாங்குதளம்.]*

**நீர்வாசி** *nīr-vāši,* பெ. (n.) **1.** *நீர்ப்பாசி* பார்க்க; see *nīr-p-pāši.* **2.** நீரால் நோய் நீக்குதல்; water cure. (சா.அக.).

*[நீர் + வாசி.]*

**நீர்வாசியாக்கு—தல்** *nīr-vāśi-y-ākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** நிலத்து உப்புகள் கலந்துள்ள நீரைக்கொடுத்து நோயைக் குணப்படுத்துதல்; a mode of treating diseases by frequent use of mineral waters both internally and externally-water cure. **2.** நீரை மந்திரித்துக் கொடுத்து நோயைக் குணப்படுத்துதல்; (in mantric science) treating disease by water through magic spell. (சா.அக.)

*[நீர் + வாசி + ஆக்கு—,]*

**நீர்வாட்டம்** *nīr-vāṭṭam,* பெ. (n.) (கட்டட.) கட்டடம் முதலியவற்றில் நீர் தானே யோடு தற்கமைந்த சரிவு; water-fall, amount of slope required for unobstructed flow of water, gradient. இந்தத் தரையில் நீர்வாட்டம் சரியாய் அமையாததால் நீர் தேங்குகிறது. (உ.வ.)

*[நீர் + வாட்டம்]*

**நீர்வாத்து** *nīr-vāttu,* பெ. (n.) வாத்துவகை (வின்.); fenduck.

க. நீருபாடு.

*[நீர் + வாத்து.]*

**நீர்வாதம்** *nīr-vādam,* பெ. (n.) **1.** *நீர்ப்புட்டை* பார்க்க; see *nīr-p-puṭṭai.* **2.** வளி (வாத) நோய்வகை; synovitis.

*[நீர் + வாதம்.]*

**நீர்வாய்ப்பத்தல்** *nīrvāy-p-pattal,* பெ.(n.) நீருள்ள கிணறு; well water. "*சிறுசில வூறிய நீர்வாய்ப்பத்தற் கயிறு குறு முகவை மூயின மொய்க்கும்*" (பதிற். 22:13.).

*[நீர்வாய் + பத்தல்.]*

**நீர்வார்[1]—த்தல்** *nīr-vār-,* 4 செ.கு.வி. (v.i.) தாரைவார்த்துக் கொடுத்தல்; to make a gift by pouring water on the right hand of the donee. "*திரு நெடுமாலோன் .... பெறுநீர் வார்ப்ப மும்முலை யொருத்தியை மணந்து*" (கல்லா. 30. 13.).

*[நீர் + வார்—;]*

**நீர்வார்[2]—த்தல்** *nīr-vār-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** வழிச் செல்வோர் முதலாயினோர்க்கு விடாய்த் தீர்க்க நீர்விடுதல்; to give water for drinking as to travellers. **2.** நோய் நீங்கினோர் முதலாயினோரை நீராட்டி விடுதல்; to give bath, as to a convalescent.

**நீர்வார்[3]—தல்** *nīr-vār-,* 4 செ.குன்றாவி. (v.t.) தொடர்பற நீக்கிவிடுதல்; to wash ones hands of, give up, as a person.

*[நீர் + வார்—,]*

**நீர்வார்கண்** *nīrvārkaṇ,* பெ. (n.) நீர் சொரியும் கண்; crying eye. "*நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய் யாரை யோநீ மடக்கொடி யோ யெண*" (சிலப். 20:48.).

*[நீர்வார் + கண்]*

**நீர்வார்கூந்தல்** *nīr-vār-kūndal,* பெ. (n.) ஈரத்தலைமுடி; wet hair. "*அடும்பி னாய்மல் விரைஇ நெய்தல் நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்*" (குறுந்.).

*[நீர்வார் + கூந்தல்]*

**நீர்வாரம்[1]** *nīr-vāram,* பெ. (n.) *நீர்வஞ்சி* (யாழ்.அக.) பார்க்க; see *nīr-vañji.*

*[நீர் + வாரம்.]*

**நீர்வாரம்**[2] *nīr-vāram,* பெ. (n.) **1.** குளநெல்; a kind of paddy. **2.** தினை; Italian millet. (சா.அக.).

**நீர்வாரி** *nīr-vāri,* பெ. (n.) யானைக் காலிற் கட்டுந்தொடரி (சங்கிலி) (மதுரைக். 382, உரை.); foot chain of an elephant.

*[நீர் + வாரி.]*

**நீர்வாழ்சாதி** *nīr-vāḻ-šādi,* பெ. (n.) *நீர்வாழுஞ்சாதி* பார்க்க; see *nīr-vāḻuñšādi.* *"நீர்வாழ் சாதியு ணந்து நாகே"* (தொல். பொருள். 618.).

*[நீர் + வாழ் + சாதி.]*

**நீர்வாழ்வன** *nīr-vāḻvaṉa,* பெ. (n.) நீர்வாழுயிரி (பிங்.); aquatic creatures.

*[நீர் + வாழ்வன.]*

**நீர்வாழுஞ்சாதி** *nīr-vāḻuñ-šādi,* பெ. (n.) **1.** நீரி; aquatic creatures; nīri. **2.** நெய்தனில மாக்கள்; people of the maritime tract.

*[நீர் + வாழுஞ்சாதி.]*

**நீர்வாழை** *nīr-vāḻai,* பெ. (n.) தண்ணீருதவும் வாழை; travellers palm or madagascar palm.

*[நீர் + வாழை.]*

வாழையைப் போல் நீருள்ளதால் இதற்கு பெயராகலாம். (சா.அக.).

**நீர்வாழைக்காய்** *nīr-vāḻai-k-kāy,* பெ. (n.) மீன் (உ.வ.); fish.

*[நீர் + வாழைக்காய்.]*

**நீர்வாழையங்கம்** *nīr-vāḻai-y-aṅgam,* பெ. (n.) மீனெலும்பு; fish bone. (சா.அக.).

**மறுவ.** மீன்முள்ளு.

*[நீர்வாழை + அங்கம்.]*

**நீர்வாளம்** *nīr-vāḷam,* பெ. (n.) *நேர்வாளம்* பார்க்க; see *nēr - vāḷam.* (சா.அக.).

*[நீர் + வாளம்.]*

**நீர்வாளி** *nīr-vāḷi,* பெ. (n.) **1.** காட்டுப் பூவரசு மரம்; false fern tree. **2.** தண்ணீர்விட்டான் என்னும் கொடி (நாமதீப. 340.); climbing asparagus.

*[நீர் + வாளி.]*

**நீர்விசை** *nīr-višai,* பெ. (n.) பொறிகளை இயக்குதற்குப் பயன்படுத்தப்படும் நீராற்றல்; water-power.

*[நீர் + விசை.]*

**நீர்விசைஉருளை** *nīr-višai-uruḷai,* பெ. (n.) *நீர் விசையுருளை* பார்க்க; see *nir-višai-uruḷai.*

*[நீர்விசை + உருளை.]*

**நீர்விசையாலை** *nīr-višai-y-ālai,* பெ. (n.) நீரின் விசையாலியங்கும் ஆலை; a mill driven by water; water-mill.

*[நீர்விசை + ஆலை.]*

**நீர்விசையியல்** *nīrvišai-y-iyal,* பெ. (n.) நீர்விசையைப் பற்றிய பகுதி; hydraulics.

*[நீர் + விசை + இயல்.]*

# நீர்வாழ் விலங்குகள்



மிதவையுயிர்கள்
கடல்புழு
பவளம்
கடல்வெள்ளரி
பைசேலியா
பேக்கடம்பான்
கணவாய்
கல்சொறி
பார்னக்கிள்
கடல் சாமந்தி
நண்டு
ஒடி நட்சத்திரம்
கடல்பஞ்சு
கடல் முள்ளெலி
திமிங்கலம்
விசிறிக் கிளிஞ்சில்
கடல் நத்தை
கடல்பஞ்சு பார்னக்கிள்
மீன்

**நீர்விசையுருளை** *nīr-viśai-yurulai,* பெ. (n.) **1.** நீரின் விசையாற் சுழலும் சக்கரம்; the wheel moved by water. **2.** உந்தத்தில் நீரை மேலே ஏற்றுஞ்சக்கர உருளை; a roller for raising water in water motor pump.



**நீர்விட்டான்** *nīr-viṭṭāṉ,* பெ. (n.) தண்ணீர் விட்டான் என்னும் கொடி (நாமதீப. 340.); climbing asparagus.

*[நீர் + விட்டான்.]*

**நீர்விட்டுப்போ–தல்** *nīr-viṭṭu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) **1.** நீர்த்துப்போ–, (வின்.) பார்க்க; see nīrttu-p-pō-, **2.** பதனழிந்து சுவை கெடுதல் (யாழ்.அக.); to become tasteless or spoiled, as boiled rice. **3.** மிகுதியாக வியர்த்தல் (இ.வ.); to perspire profusely, as in fever.

*[நீர் + விட்டுப்போ–,]*

**நீர்விடுசிவிறி** *nīr - viḍu-śiviṟi,* பெ. (n.) *நீர் தூவுந் துருத்தி* பார்க்க; see *nīr-tūvun-turutti.*

*[நீர் + விடு + சிவிறி]*

**நீர்விதை** *nīr-vidai,* பெ. (n.) நன்செய்ச் சாகுபடி (இ.வ.); wet cultivation opp. to poḍi-vidai.

*[நீர் + விதை.]*

**நீர்வியாதி** *nīr-viyādi,* பெ. (n.) **1.** *நீர்ச்சுரப்பு* பார்க்க; see *nīr-c-curappu.* **2.** நீரிழிவு பார்க்க; see *nīr-iḻivu.*

*[நீர் + skt வியாதி.]*

**நீர்விலை** *nīr-vilai,* பெ. (n.) நீருக்கான வரி; (தெ.க.தொ.3:142.); water cess.

*[நீர் + விலை.]*

**நீர்விழவு** *nīr-viḻavu,* பெ. (n.) *நீர்விளையாட்டு* (சீவக. 856, உரை.); பார்க்க; see *nīr-viḷaiyāṭṭu.*

*[நீர் + விழவு.]*

**நீர்விழு–தல்** *nīr-viḻu-,* 2 செ.குன்றாவி. (v.t.) மணியில் உள்ளொளி தங்குதல் (வின்.); to be of good water, as gem, diamond.

*[நீர் + விழு–,]*

**நீர்விளா** *nīr-viḷā,* பெ. (n.) **1.** குட்டிவிளா; small wood apple tree-feronia elephantum. **2.** மாவிலங்கை; water wood apple capparis nurvala. (சா.அக.).

*[நீர் + விளா.]*

**நீர்விளாவு¹–தல்** *nīr-viḷāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சரியான சூட்டிற்காக வெந்நீரோடு தண்ணீர் கலத்தல்; adding or mixing cold water with hot water. (சா.அக.).

*[நீர் + விளாவு–.*
*அள → அளவு → அளாவு →*
*விளாவு. அளாவுதல் = கலத்தல்.]*

**நீர்விளாவு²–தல்** *nīr-viḷāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) உணவு கொள்ளுமுன் உள்ளங்கையில் நீரையூற்றி உண்கலத்தைச் சுற்றிச் சிதற விடுதல்; to spread water around the plate, dish or leaf with food before eat.

*[நீர் + விளாவு, வள் → வளை → விளை → விளா = வட்டம், சுற்று, கழனியில் ஒரு சுற்று உழவு. விளாவுதல் = சுற்றுதல்.]*

**நீர்விளையாட்டு** *nīr-viḷaiyāṭṭu*, பெ. (n.) நீச்சல் போட்டி; sporting in water. *"விழவு நீர் விளையாட்டு விருப்பினால்"* (சீவக. 856.).

*[நீர் + விளையாட்டு.]*

**நீர்விளைவமை** *nīr-viḷai-v-amai*, பெ. (n.) உப்பு (சிந்தா.); salt. (கதி.அக). (சா.அக.).

*[நீர் + விளைவமை.*
*விளை → விளைவு → விளைவமை.]*

**நீர்வீசுகருவி** *nīr-vīsu-karuvi*, பெ. (n.) நீர் விளையாட்டில் நீரை வீசுதற்கு உதவுங் கருவி (திவா.); a squirt, used while sporting in water.

*[நீர் + வீசு + கருவி.]*



**நீர்வீழ்ச்சி** *nīr-vīḻcci*, பெ. (n.) மலையருவி (இக்.வ.); water-fall.

*[நீர் + வீழ்ச்சி.]*



**நீர்வெக்கை** *nīr-vekkai*, பெ. (n.) கால்நடைகளுக்கு வரும் நோய்; cattle disease.

*[நீர் + வெக்கை.]*

**நீர்வெட்டி** *nīr-veṭṭi*, பெ. (n.) *நீரெட்டிமுத்து* பார்க்க; see *nīr-eṭṭi-muttu.*

*[நீர் + வெட்டி.]*

**நீர்வெட்டிக்கொட்டை** *nīr-veṭṭi-k-koṭṭai*, பெ. (n.) *நீர்வெட்டிமுத்து* பார்க்க; see *nīr-veṭṭi-muttu.* (சா.அக.).

*[நீர்வெட்டி + கொட்டை.]*

**நீர்வெட்டிமுத்து** *nīr-veṭṭi-muttu*, பெ. (n.) பேயாமணக்கு; red physic nut, m.sh. baliospermum axillare.

*[நீர்வெட்டி + முத்து.]*

**நீர்வெண்ணெய்** *nīr-veṇṇey*, பெ. (n.) சுண்ணாம்பு நீர்த்தைலம் (C.E.M.); liniment of lime.

*[நீர் + வெண்ணெய்.]*

**நீர்வெள்ளரி** *nir-vellari,* பெ. (n.) வெள்ளரிக் காய்; water cucumber, common cucumber. cucumis sativus. (சா.அக.).

*[நீர் + வெள்ளரி.]*

**நீர்வெள்ளை** *nir-vellai,* பெ. (n.) எட்டு திங்களில் விளையும் நெல்வகை (cg.); a kind of paddy that matures in eight months.

*[நீர் + வெள்ளை.]*

**நீர்வேட்கை** *nir-vētkai,* பெ. (n.) நீர்விடாய் (திவா.); thirst. "*அங்ஙனம் அவள் போன பின்பு தாமரைப்பொதியுள் தான் அந்தவிடத்திற் குளிர்ந்த நீரைக்கொண்டு சென்று நீர்வேட்கை யான் வருத்தமுற்ற மடந்தையது வருத்தத்தைத் தீர்த்தென்க*" (சிலப். 11:201, உரை.).

*[நீர் + வேட்கை.]*

**நீர்வேட்டல்** *nir-vēttal,* தொ.பெ. (vbln.) *நீர் வேட்கை* பார்க்க; see *nir-vētkai.* (சா.அக.).

*[நீர் + வேட்டல்.]*

**நீர்வேணிப்பாசி** *nir-vēni-p-pāši,* பெ. (n.) கடற்பாசி; sea moss. (சா.அக.).

*[நீர்வேணி + பாசி.]*

**நீர்வேம்பு** *nir-vēmbu,* பெ. (n.) காளான்வகை (l.); polypody fern family.

*[நீர் + வேம்பு.]*

**நீர்வேலி**[1] *nir-vēli,* பெ. (n.) **1.** கிடங்கு; trench. "*தாழ்நீர் வேலித் தலைச் செங்கானத்து நான் மறை முற்றிய நலம்புரி கொள்கை மாமறை முதல்வன் மாடல னென்போன்*" (சிலப். 15:11.).

**2.** ஏரிக்கரை: bond of a lake. "*அறையும் பொறையு மாரிடை மயக்கமும் நிறை நீர் வேலியு முறைபடக் கிடந்த*" (சிலப். 11:68.).

*[நீர் + வேலி.]*

**நீர்வேலி**[2] *nir-vēli,* பெ. (n.) யாழ்ப்பாணத்திலுள்ள ஓரூர்; a village in Jaffna, ceylon.

*[நீர் + வேலி.]*

**நீர்வேலிமூதூர்** *nirvēi-mūdūr-,* பெ. (n.) சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ள வளமிக்க பழைமையான ஊர்; olden village with fertility.

*[நீர்வேலி + முது(மை) + ஊர்.]*

**நீர்வேலியுத்தரம்** *nir-vēli-yuttaram,* பெ. (n.) சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள ஒரு மாநிலம்; Northern state refered in Silappatikāram. "ஆங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங் கோங்குநீர் வேலி யுத்தர மறீஇப் பகைப் புலம் புக்குப் பாசறை யிருந்த தகைப் பருந்தானை மறவோன்" (சிலப். 26:178.).

*[நீர்வேலி + உத்தரம்.]*

**நீர்வேலியுலகு** *nir-vēli-y-ulagu,* பெ. (n.) கடற்சூழுலகு; the world sourrended with sea. "*மாமழை போற்றுது மாமழை போற்றுதும் நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல் மேனின்று தான்சுரத்த லான்*" (சிலப். 1:7.). "*ஓதங் கரை தவழ் நீர் வேலி யுலகினுள் வேதங் கரை கண்டான் வீற்றிருக்கும்— ஏதம் சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த விடுதடர் வேள்வி யகத்து*" (பு. வெ. 163.). "*வீங்கு நீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன் ஓங்காரணங் காத்த வுரவோன் யாரம்மானை.*" (சிலப். 29:16.).

*[நீர்வேலி + உலகு]*

**நீரகம்**[1] *nīragam,* பெ. (n.) 1. கடல் சூழ்ந்த நிலம்; the earth, as sea-girt. "*நீரகம் பனிக்கு.... கடுந்திறல்*" (மலைபடு. 81.). 2. கச்சியிலுள்ள திருமால் கோயில்களுள் ஒன்று (திவ். திருநெடுந். 8.); a Tirumal shrine in Kāñjipuram.

*[நீர் + அகம்.]*

**நீரகம்**[2] *nīragam,* பெ. (n.) நீர்நிலை; water sources. "*அவிழ் வேண்டுநர்க் கிடையருளி விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப நீர்நிலை பெருத்தவார்மண லடைகரை*" (புறநா.366:18).

**நீரங்காடி** *nīraṅkāḍi,* பெ. (n.) நீராட்டுக்குரிய பொருள் விற்கும் கடை; bathing market. "*ஊரங்காடி யுய்த்துவைத் ததுபோல் நீரங்காடி நெறிபட நாட்டி*" (பெருங். உஞ்ஞைக். 38:56.).

*[நீர் + அங்காடி]*

**நீரங்கொண்டி** *nīraṅgoṇḍi,* பெ. (n.) நொச்சி; five leaved notch-vitex negundo. (சா.அக.).

**நீரசம்**[1] *nīrašam,* பெ. (n.) 1. சுவையற்றது; anything insipid, tasteless. "*நீரசமான செய்யுள்*" 2. மாதுளை (யாழ்.அக.); pome granate.

**நீரசம்**[2] *nīrašam,* பெ. (n.) நீரிலுண்டாகும் தாமரை (யாழ்.அக.); lotus, as produced in water.

**நீரசம்**[3] *nīrašam,* பெ. (n.) நீரக வளி (பாண்டி.); hydrogen.

**நீரசாதிசாத்திரம்** *nīrasādi-sāttiram,* பெ. (n.) மாழை சாத்திரம் (md.); mineralogy.

*[நீரசாதி + (skt) சாத்திரம்.]*

**நீரட்டு-தல்** *nīr-aṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தாரை வார்த்தல்; to pour water in making a gift. *'இவனைக் கண்டுவைத்துக் கடுக நீரட்டிக் கொடாதே'* (திவ். இயற். திருவிருத். 21, 140.).

*[நீர் + அட்டு-,]*

**நீரடி**[1] *nīr-aḍi,* பெ. (n.) நீர்வெட்டிமுத்து (யாழ்.அக.) பார்க்க; see nīr-veṭṭimuttu.

*[நீர் + அடி.]*

மருந்துவகைச் செடி: நீரடிமுத்து நீரெட்டி, நீர்வெட்டி முத்து என்றும் கூறுவர் (hydrocarpus-egdhiarae.). கழலை, பெருநோய், வாதம், சிரங்கு, நமைச்சல் ஆகியனவற்றை நீக்கும்.

**நீரடி**[2] *nīraḍi,* பெ. (n.) நீரடிமுத்து பார்க்க; see nīraḍi- muttu. (சா.அக.).

**நீரடிமுத்தம்** *nīraḍi-muttam,* பெ. (n.) நீரடி முத்து பார்க்க; see nīraḍi - muttu. (சா.அக.)

*[நீரடி + முத்தம். முத்து → முத்தம்.]*

**நீரடிமுத்து** *nīr-aḍi-muttu,* பெ. (n.) பேயாமணக்கு; fish poison tree - hydnocapus incbrians.

**நீரடிமுத்தெண்ணெய்** *nīraḍi - muttenney,* பெ. (n.) நீரடிமுத்துக் கொட்டையினின்று வடித் தெடுக்கும் எண்ணெய்; oil prepard from the kernel of hydnocarpus wightiana nut is almost equal to chaulmoogra oil. (சா.அக.).

*[நீரடிமுத்து + எண்ணெய்.]*



நீலஅல்லி



நீரடிமுத்து தந்தி



நீர் பிரம்மி

**நீரடை**[1] *nīr-aḍai,* பெ. (n.) நீராவியில் வேக வைக்கும் அடைவகை (இ.வ.); rice-cake boiled in stream.

*[நீர் + அடை.]*

**நீரடை**[2] *nīraḍai,* பெ. (n.) பன்றிப் புடல்; hog-snake gourd or small snake gourd-trichosanthes. (சா.அக.).

**நீரடைப்பான்** *nīr-aḍaippāṉ,* பெ. (n.) ஆட்டு நோய்வகை (இ.வ.); a disease affecting sheep.

*[நீர் + அடைப்பான்.]*

**நீரடைப்பு** *nīr-aḍaippu,* பெ. (n.) சிறுநீர்த் தடைநோய்; retention of urine. *"வருநீரடைப்பினுடன் வெகுகோடி சிலை நோயடைத்த வுடல்"* (திருப்பு. 627.).

*[நீர் + அடைப்பு.]*

**நீரண்டம்** *nīr-aṇḍam,* பெ. (n.) *நீர்ப்புட்டை* பார்க்க; see *nīr-p-puṭṭai.*

*[நீர் + அண்டம்.]*

**நீரணங்கு** *nīr-aṇaṅgu,* பெ. (n.) *நீரரமகள்* பார்க்க; see *nīr-aramagaḷ.*

*[நீர் + அணங்கு.]*

**நீரணி** *nīr-aṇi,* பெ. (n.) *நீர்க்கோலம்*[3] பார்க்க; see *nīr-k-kōlam.* *"நீர்கொ ணீரணி நின்று கனற்றலின்"* (சீவக.2668.). *"நீரணி வெறிசெறி மலருறு கமம்தண்"* (பரிபா.11:62.).

*[நீர் + அணி.]*

**நீரணிமாடம்** *nīr-aṇi-māḍam,* பெ. (n.) *நீர்மாடம்* பார்க்க; see *nīr-māḍam.* *"காவிரிப் பேரியாற்று நீரணிமாடத்து நெடுந்துறை போகி"* (சிலப்.10:214–15.).

*[நீர் + அணிமாடம்.]*

**நீரணிவிழவு** *nīraṇi-viḻavu,* பெ. (n.) புதுப்புனலாட்டு; *sporting in water.* *"நீரணி விழவினு நெடுந்தேர் விழவினும் சாரணர் வரூஉந் தகுதி யுண்டாமென"* (சிலப். 10:22.)

*[நீரணி + விழவு.]*

**நீரணை** *nīraṇai,* பெ. (n.) நீரை எதிர்நின்று தடுக்கும் கல்; *water hinder stone.* *"கொல் புனல் சிறையின் கரையைக் கொல்லும் புனலின்கண் நீரணை போல"* (புறநா. 263. உரை).

*[நீர் + அணை.]*

**நீரத்தம்** *nīr-attam,* பெ. (n.) நீரையுடைய வழி; *water path.* *"வயச்சுறா வழங்குநீ ரத்தந் தவச்சின் னாளினன் வரவறி யானே"* (குறுந். 230.).

*[நீர் + அத்தம்.]*

**நீரத்தி** *nīratti,* பெ. (n.) பேயத்தி (வின்.); wild fig.

*[நீர் + அத்தி.]*

**நீரதம்**[1] *nīradam,* பெ. (n.) நீரைக் கொடுப் பதாகிய முகில்; cloud, as giving water.

**நீரதம்**[2] *nīradam,* பெ. (n.) நீரற்றது; that which is waterless. *"நீரத நெறியில் வாவி நிறைந்த நீரென நின்றான்"* (பாரத. திரௌபதி. 5.).

**நீரதி** *nīradi,* பெ. (n.) **1.** கடல்; sea. **2.** சாறு; juice.

**நீரதிசாரம்** *nīr-adiśāram,* பெ. (n.) நீரிழிவு (m.l.) பார்க்க; see nīr-iḻivu.

*[நீர் + அதிசாரம்.]*

**நீரம்** *nīram,* பெ. (n.) நீர் (பிங்.); water. "*ஆறுநாலுகுளிர் நீரமுறை கூறினோம்*" (சேதுபு. பாலோடை.).

*[நீர் + அம். அம் சாரியை.]*

*[நீர் → நீரம். நீரம் என்னும் தமிழ்ச் சொல் வடமொழியில் நீர என்று கடைகுறைந்து ஒலிக்கும் (வே.க. 3:119.).]*

**நீரமுக்குஎந்திரம்** *nīr-amukku-endiram,* பெ. (n.) *நீரியல் அழுத்தி* பார்க்க; see *nīriyal-aḻutti.*

*[நீர் + அமுக்கு + எந்திரம்.]*

**நீரமுக்குப்பொறி** *nīr-amukku-p-poṟi,* பெ. (n.) *நீரியல் அழுத்தி* பார்க்க; see *nīriyal-aḻutti.*

*[நீரமுக்கு + பொறி.]*

**நீரரண்** *nīr-araṇ,* பெ. (n.) அரண் நான்கனுள் நீர் நிறைந்துள்ள அகழி (குறள். 742, உரை.); moat, considered as a defence, one of four araṇ.

*[நீர் + அரண்.]*

**நீரரமகள்** *nīr-aramagaḷ,* பெ. (n.) நீரில் வாழும் தெய்வப் பெண்; water-nymph. "*நீரர மகளிவள்*" (பெருங். வத்தவ. 14:40.). "*புலவி நோக்கத்துப் பூந்தொடி புலம்பி நீரர மகளிரொடு நிரந்துடனின்ற*" (பெருங். உஞ்ஞைக். 40:327.).

*[நீர் + அரமகள்.]*

**நீரரவு** *nīr-aravu,* பெ. (n.) தண்ணீர்ப் பாம்பு (நாமதீப. 257.); water-snake.

*[நீர் + அரா.]*

நீர் + அரவு
அர → அரவு – பாம்பு
அரவுதல் – வருத்துதல்.
அரவு → அரா.

ஒ.நோ: கனவு > கனா
நிலவு > நிலா.

**நீரரா** *nīr-arā,* பெ. (n.) நிரரவு பார்க்க; see *nīr-aravu.*

*[நீரரவு – நீரரா.]*

**நீரருகல்** *nīr-arugal,* பெ. (n.) **1.** சிறுநீர் அருகி இறங்குகை (வின்.); passing urine with difficulty; strangury.

*[நீர் + அருகல்*

*அருகு → அருகல்*
*அருகல் = குறைதல்.]*

**நீரல்லாநீர்** *nīrallā-nīr,* பெ. (n.) சிறுநீர் (மூத்திரம்); urine. "*நீரல்லாத ஈரத்துப்பிணவு பசியால் வருந்த வேட்டை மேற்சென்ற*" (நற். 103; உரை.).

**நீரலரி** *nīr-alari,* பெ. (n.) ஆற்றலரி; alligators rose.

*[நீர் + அலரி*
*அலர் → அலரி – மலர்ந்தபூ,*
*பூவின் அழகு.]*

**நீரலறி** *nīr-alaṟi,* பெ. (n.) ஒருவகை நீர்ப்பூண்டு; a kind of water shrub.

*[நீர் + அலறி.]*

**நீரலை** *nīr-alai,* பெ. (n.) **1.** நீரின் அலை; water-wave. **2.** ஈர்ம்பதக் கூந்தல் அலை. dripped hair.

*[நீர் + அலை.]*

**நீரவர்** *nīravar,* பெ. (n.) அறிவுடையவர்; *man of knowledge, savant, wiseman.* "*நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீர பேதையார் நட்பு*" (குறள், 782.).

*[நீர் + அவர்.]*

நீர்மையுடையவர் நீரவர். நீர்மை = சிறந்த தன்மை. நீர்மையுடையவர் சொலின் (குறள்,195.). என்பதிற்போல நட்பைக் கேண்மை யென்றதினால், அது இனவுறவுபோற் சிறந்ததென்பது பெறப்படும் (குறள்,782, மரபுரை.)

**நீரழிபாக்கம்** *nīraḻi-pākkam,* பெ. (n.) தம் நீர்மையழிந்த பேரூர்; destructed town. "நீசிவந் திறுத்த நீரழிபாக்கம்" (பதிற். 13:12.).

*[நீர் + அழி + பாக்கம்.]*

**நீரழிவு** *nīr-aḻivu,* பெ. (n.) *நீரிழிவு* (நெல்லை.) பார்க்க; see *nīr-iḻivu.*

ம. நீரழிவு.

*[நீரிழிவு → நீரழிவு.]*

**நீரளவி** *nīr-aḷavi,* பெ. (n.) நீரையளக்கும் கருவி; water-meter.

*[நீர் + அளவி. அளப்பது அளவி.]*

**நீரளவு** *nīr-aḷavu,* பெ. (n.) காற்றிலுள்ள ஈரத்தன்மையின் அளவு; moisture content.

*[நீர் + அளவு.]*

**நீரா—தல்** *nīr-ā-,* 6 செ.கு.வி. (v.i.) நீர் மயமாய்ப் போதல்; to become watery, diluted. **2.** நெட்டுருவாதல்; to be committed to memory.

*[நீர் + ஆ.]*

**நீராக்கு—தல்** *nīr-ākku-,* 9செ.கு.வி. (v.i.) **1.** ஒருவனை இரக்கங்கொள்ளும்படி செய்தல்; to make one pity. **2.** மாழை முதலியவற்றை நீர்மமாக்குதல்; to melt the metal into liquid state. **3.** பால் முதலியவற்றிற்கு நீர் கலத்தல்; to dilute, as milk. **4.** நெட்டுருப் பண்ணுதல்; to get by heart.

*[நீர் + ஆக்கு.]*

**நீராகாசிதம்** *nīrākāšidam,* பெ. (n.) நான்முகப்புல்; wild sugarcane four faced stalk grass-saccharum genus. (சா.அக.).

*[நீர் +(*skt.*)அகாசிதம்.]*

**நீராகாரம்** *nīrāgāram,* பெ. (n.) பழஞ்சோற்றிற் கலந்த நீர்; rice water, usually kept overnight.

*[நீர் + ஆகாரம்.]*

இந்நீர் பருகுவதால் வளிமுதலா
எண்ணிய மூன்றும் போவதோடு
ஒளிநீர்சுரப்பு பெருக்கமுண்டாகும்.
(சா.அக.).

**நீராகாரி** *nīrāgāri,* பெ. (n.) *பாலாட்டங்கொடி* பார்க்க; see *pālāṭṭaṅgoḍi.* (சா.அக.).

**நீராசனம்** *nīrāšaṉam,* பெ. (n.) *நீராரத்தி* பார்க்க; see *nīr-āratti.* *"அன்றெதிர் கொண்டு நன்னீராசன மெடுத்து வாழ்த்த"* (பாரத. நிரை. 131.).

**நீராசனை** *nīrāšaṉai,* பெ. (n.) *நீராரத்தி* (திவ். திருவாய், 1, 8, 9, சீ.) பார்க்க; see *nīr-āratti.*

*[நீர் + ஆசனை.]*

**நீராஞ்சனம்** *nīrāñjaṉam,* பெ. (n.) *நீராரத்தி* பார்க்க; see *nīr-āratti.* *"தூபதீபத் தட்டேந்தி பெருவி னீராஞ்சன முதவி"* (பிரமோத். 18. 31.).

*[நீர் + அ + அஞ்சனம்.]*

**நீராஞ்சனை** *nīrāñjaṉai,* பெ. (n.) *நீராரத்தி* (இ.வ.) பார்க்க; see *nīr-āratti.*

**நீராட்டணி** *nīrāṭṭaṇi,* பெ. (n.) *நீர்க்கோலம்,* 3, பார்க்க; see *nīr-k-kōlam.* *"வான் கிளர்ந்தன்ன வளநீராட்டணி"* (பெருங். உஞ்சைக். 37:273.).

*[நீர் + ஆட்டு + அணி.]*

**நீராட்டம்**[1] *nīrāṭṭam,* பெ. (n.) *நீராட்டு* பார்க்க; see *nīrāṭṭu. மார்கழி நீராட்டம்* (உ.வ.).

*[நீராட்டு → நீராட்டம்.]*

**நீராட்டம்**[2] *nīrāṭṭam,* பெ. (n.) காதலர் ஆடும் புனலாட்டம்; young lover's play in the water.

*[நீர் + ஆட்டம்.]*

**நீராட்டரவம்** *nīrāṭṭaravam,* பெ. (n.) குளித்தல் ஒலி; bathing sound.

*[நீராட்டு + அரவம்.]*

பெருங்கதை உஞ்சைக் காண்டத்து நாற்பத் தொன்றாம் காதை. உஞ்சை நகர மாந்தரும் உதயணனும் பிறரும் திருநீர்ப் பொய்கையில் நீராடுதலால் உண்டான முழக்க வகைகளைக் கூறும் பகுதி.

**நீராட்டு**[1]**-தல்** *nīr-āṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முழுக்காட்டுதல்; to bathe, as an idol. *"நீராட்டி யாட்டுபொற் சுண்ணந் திமிர்ந்தள்ளி"* (குமர. மீனாட். பிள்ளைத். செங்கீரை.1.).

*[நீர் + ஆட்டு-.]*

**நீராட்டு**[2] *nīrāṭṭu,* பெ. (n.) குளியல்; bathing. *"நெய்யாட்டரவமுநீரட்டரவமும்"* (பெருங். நரவாண. 6.71.).

*[நீர் + ஆட்டு]*

**நீராடல்** *nīr-āḍal,* பெ. (n.) 1. *நீராட்டு* பார்க்க; see *nīr-āṭṭu.* 2. நீர்விளையாட்டு; sporting in water. *"சுந்தரச் சுண்ணமுந் தூநீராடலும்"* (மணிமே. 2:23.).

*[நீர் + ஆடல்.]*

**நீராடற்காய்** *nīr-āḍaṟ-kāy,* பெ. (n.) முற்றின தேங்காய் (இ.வ.); ripe cocoanut in which the water sounds when shaken.

*[நீர் + ஆடற்காய்.]*

அளவாக முற்றின தேங்காயை உலுக்கிப் பார்த்தால் உள்ளிருக்கும் நீர் ஆடும். அஃதாவது உள்ளிருக்கும் நீரின் அளவைப் பொறுத்துத் தேங்காயின் தன்மையறிவர். தேங்காய் முற்றமுற்ற உள்ளிருக்கும் நீரினளவு குறையும். இளநீர்ப் பதத்தை அடுத்த நிலையிலுள்ள தேங்காயில் முழுஅளவும், அது முற்றிய நிலையில் அளவுகுறைந்தும் காணப்படும். முழுதும் நீரற்ற தேங்காயைச் சமையலுக்குப் பயன் படுத்துவதில்லை. அதை எண்ணெய் எடுப்பதற்குப் பயன்படுத்துவர்.

**நீராடற்பதம்** *nīr-āḍaṟ-padam,* பெ. (n.) நீர் குலுங்கும்படி தேங்காய் முற்றிய பருவம் (வின்.); the stage in the ripening of a coconut when the milk sounds if shaken.

*[நீராடல் + பதம்.]*

**நீராடற்பருவம்** *nīr-āḍaṟ-paruvam,* பெ. (n.) பெண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவம் பத்தனுள் பாட்டுடைத் தலைவி நீராடுதலைக் கூறும் பகுதி; section of peṇpāṟ-piḷḷai-t-tamiḻ, which describes the stage of childhood in which the child delights in bath, one of ten.

*[நீராடல் + பருவம்.]*

**நீராடு[1]–தல்** *nīr-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) எண்ணெய்க் குளியல்; oil bath. "*சனிநீராடு*"

*[நீர் + ஆடு–,]*

**நீராடு[2]–தல்** *nīr-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) குளித்தல்; to bathe (in a river, sea, etc. கடலில் நீராடுவது சிறார்களுக்கு மிகுந்த இன்பம்தரும். (உ.வ.).

*[நீர் + ஆடு–.]*

**நீராடு[3]** *nīr-āḍu,* பெ. (n.) குளியல்; bathing. "நெய்யாட்டரவ நீராட்ட டரவமும்" (பெருங். நரவாண. 6, 71.).

*[நீர் + ஆடு.]*

**நீராடுங்காய்** *nīr-āḍuṅ-gāi,* பெ. (n.) *நீராடற் காய்* பார்க்க; see *nīrāḍaṟ-kāy.*

*[நீர் + ஆடுங்காய்.]*

**நீராணி** *nīr-āṇi,* பெ. (n.) **1.** *நீராணிக்கண்* பார்க்க; see *nīrāṇi-k-kaṉ.* **2.** முந்தைக் காலத்து நீர்வரி; an ancient irrigation tax.

*[நீர் + ஆணி.]*

**நீராணிக்கம்** *nirāṇikkam,* பெ. (n.) **1.** நீர்ப் பாய்ச்சுவோனுக்குக் குடிகள் கொடுக்கும் தொகை; fee paid by ryots to the village servent who distributes water for irrigation. **2.** நீர் வளம்; abundance of water in a region. *நீராணிக்கமான தேயம்* (உ.வ.). **3.** ஈரம் (நாஞ்.); moisture.

*[நீர் + ஆணிக்கம்.]*

**நீராணிக்கன்** *nīr-āṇikkaṉ,* பெ. (n.) **1.** நீர்க் கண்டி, சிற்றூரில் நீர்ப்பாய்ச்சும் பணியாள்; village servent who distributes water for irrigation. **2.** நீர் வளம்; abundance of water in a region. **2.** கொங்குநாட்டு ஏரிமதகின் காவற் காரன் (வின்.); one who is incharge of the sluice of a public tank in the kongu country.

*[நீர் + ஆணிக்கன்.]*

**நீராணிக்காரன்** *nirāṇi-k-kāraṉ,* பெ. (n.) *நீராணிக்கன்* பார்க்க; see *nirāṇikkaṉ.*

*[நீராணி + காரன்.]*

**நீராத்திரை** *nīr-āttirai,* பெ. (n.) *நீர்ச்செலவு* பார்க்க; see *nīr-c-celavu.* "*விரைந்தனர் கொண்ட விரிநீ ராத்திரை*" (பெருங். உஞ்சைக். 38, 1.).

*[நீர் + யாத்திரை.]*

**நீராத்தோற்பலம்** *nīrāttōṟpalam,* பெ. (n.) செங்கழுநீர்; red Indian water lily.

**நீராம்பல்**[1] *nīr-āmbal,* பெ. (n.) ஆம்பல்; water-lily. "*நீரளவே யாகுமா நீராம்பல்*" (வாக்குண். 7.).

*[நீர் + ஆம்பல்.]*

**நீராம்பல்**[2] *nīr-āmbal,* பெ. (n.) *நீராம்பற்கட்டி* (வின்.) பார்க்க; see *nīrāmbaṟ-kaṭṭi.*

*[நீர் + ஆம்பல்.]*

**நீராம்பல்**[3] *nīrāmbal,* பெ. (n.) குளஆம்பல் செடி; water-platter.

*[நீர் + ஆம்பல்.]*

**நீராம்பற்கட்டி** *nīr-āmbaṟ-kaṭṭi,* பெ. (n.) அகட்டு நீர்க்கோவை (மகோதரம்); ascites.

*[நீர் + ஆம்பற்கட்டி.]*

**நீராமம்**[1] *nīr-āmam,* பெ. (n.) நீராம்பற்கட்டி (யாழ்.அக.) பார்க்க; see nīr-āmbaṟ-kaṭṭi.

*[நீர் + ஆமம்.]*

**நீராமம்**[2] *nīrāmam,* பெ. (n.) ஒரு நோய் (வழக்); a kind of disease.

*[நீர் + ஆமம்.]*

**நீராமயம்** *nīr-āmayam,* பெ. (n.) *நீராம்பற்கட்டி* பார்க்க; see *nīr-āmbaṟ-kaṭṭi.*

*[நீர் + ஆமயம்.]*

**நீராமை**[1] *nīr-āmai,* பெ. (n.) கடலாமை (வின்.); sea-turtle.

*[நீர் + ஆமை.]*

**நீராமை**[2] *nīr-āmai,* பெ. (n.) அகட்டு நீர்க் கோவை (மகோதரம்); a kind of dropsy marked by swelling of the abdomen which almost resembles the shell of a tortoise. (சா.அக.).

மறுவ. ஆமைக்கட்டி, கெண்டைக்கட்டி.

**நீராமை**[3] *nīr-āmai,* பெ. (n.) பெண்களுக்கு கருப்பையிற் காணும் கட்டி; overian tumour occuring in women. (சா.அக.).

**நீராமைக்கட்டி** *nīr-āmai-k-kāṭṭi,* பெ. (n.) *நீராம்பற்கட்டி* பார்க்க; see *nīr-āmbar-kaṭṭi.* **2.** சிலந்திக் கட்டி (யாழ்.அக.); tumour.

*[நீராமை + கட்டி.]*

**நீராய்வு** *nīr-āyvu,* பெ. (n.) நீரைப் பகுப்பாய்வு செய்யும் ஆய்வு; water analysis.

*[நீர் + ஆய்வு.]*

**நீராரத்தி** *nīr-āratti,* பெ. (n.) *நீராலத்தி* பார்க்க; see *nīr-ālatti.*

*[நீர் + ஆரத்தி. ஆலத்தி → ஆரத்தி.]*

**நீராரம்** *nīr-āram,* பெ. (n.) *நீராகாரம்* பார்க்க; see *nīr-āgāram.*

*[நீராகாரம் → நீராரம்.]*

**நீராரம்பம்** *nīr-ārambam,* பெ. (n.) நீர்ப் பாய்ச்சல் வாய்ப்பு உள்ள நிலம்; காடாராம் பத்துக்கு எதிரானது. tract having irrigation facilities opp. to kāḍārāmbam.

*[நீர் + ஆரம்பம்.]*

**நீராரம்பலம்** *nīr-ārambalam,* பெ. (n.) *நீராரம்பம்* (தஞ்சை.) பார்க்க; see *nīr-ārambam.*

**நீராரை** *nīr-ārai,* பெ. (n.) கீரைவகை (பதார்த்த. 594.); cryptogamous plant.

**நீராரைக்கீரை** *nīrārai-k-kīrai,* பெ. (n.) ஒரு வகைக் கீரை; a kind of greens. (சா.அக)

அரத்தப்போக்கு, பித்து, நீரிழிவு ஆகிய நோய்களைக் குணமாக்கும்.

*[நீர் + ஆரை + கீரை.]*

**நீரால்** *nīr-āl,* பெ. (n.) ஆலின் ஒருவகை; narrow leaved fig-ficus nervosa. (சா.அக.).

*[நீர் + ஆல்.]*

**நீராலத்தி** *nīr-ālatti,* பெ. (n.) கண்ணேறு கழிப்பதற்காக முன்னால் நின்று இடமுறை யாகச் சுற்றப்படும் மஞ்சள் நீர் மங்கலத்தட்டு அல்லது மஞ்சள் நீரிடை விளக்கிட்ட மங்கலத் தட்டு; ritual of waving turmeric water-plate to avert the blight of the eyes of unlucky persons on marriage or other special occasions, also in front of the idol, after the procession, before if is taken into the temple.

*[நீர் + ஆலத்தி*

*ஆல் + ஆற்று – ஆலாற்று → ஆலாத்து→ ஆலாத்தி → ஆலத்தி. ஆலாற்றுதல் – சுற்றச்செய்தல்.]*

**நீராவி**[1] *nīr-āvi,* பெ. (n.) வெப்பத்தினால் மாறிய நீரின் ஆவி; steam.

*[நீர் + ஆவி. ஆவு – முன்செல், மேலேறு. ஆவு →ஆவி = புகை, நீராவி.]*

**நீராவி**[2] *nīr-āvi,* பெ. (n.) தடாகம் (சிலப். 25:4 அரும்.); tank or well.

**மறுவ.** இலவந்திகை, இலவந்தி.

*[நீர் + ஆவி.]*

ஆவு → ஆவி. ஆவி = சுனை, சுனையிருந்த பள்ளத்தில் தேங்கிய நீர்நிலை.

**நீராவிஆற்றல்** *nīrāvi-āṟṟal,* பெ. (n.) *நீராவி யாற்றல்* பார்க்க; see *nīrāvi-y-āṟṟal.*

*[நீராவி + ஆற்றல்.]*

**நீராவிக்கப்பல்** *nīrāvi-k-kappal,* பெ. (n.) நீராவியாற் செல்லுங்கப்பல்; steamer.

*[நீராவி + கப்பல்.]*

கள் → கய் → கவ். கப்பு → கப்பம் = பள்ளம், குழி. கப்பல் = உட்குழிந்த மரக்கலம்.



**நீராவிக்கொதிகலம்** *nirāvi-k-kodi-kalam,* பெ. (n.) கொதிகலம்; boiler.

*[நீராவி[1] + கொதிகலம்.]*

**நீராவிச்சட்டை** *nirāvi-c-caṭṭai,* பெ. (n.) நீராவியானது இடைவழி ஊடுசென்று வெப்பூட்டும்படி அமைக்கப்பட்ட எந்திர இயக்குருளையின் புறத்தோடு; steamer-jacket.

*[நீராவி[1] + சட்டை.]*

**நீராவிச்சுத்தி** *nirāvi-c-cutti,* பெ. (n.) நீராவியாலியங்கும் சுத்தி; rig by hammer.

*[நீராவி[1] + சுத்தி.]*

**நீராவிச்சூழ்ச்சியப்பொறி** *nirāvi-c-cūlcciya-p-poṟi,* பெ. (n.) நீராவி ஆற்றலால் இயங்கும் பொறி; steam engine.

*[நீராவி[1] + சூழ்ச்சிப்பொறி.]*

**நீராவிச்சோலை** *nirāvi-c-cōlai,* பெ. (n.) சோலைகள்; park "கூடாரப் பண்டியும் கடகத் தண்டும் பல்லக்குமென்னும் இவ்வரிசைகள் பெற்றதேயன்றி நீராவிச் சோலைக் கண்ணே தமக்கு உற்ற துணைவனாகிய அரசனோடு மேவி மெய்தொட்டு விளையாடும் மகிழ்ச்சியும்" (சிலப். 14:126, உரை.).

*[நீராவி[2] + சோலை.]*

**நீராவிப்படகு** *nirāvi-p-paḍagu,* பெ. (n.) நீராவியின் விசையினாலியங்கும் படகு; steam-launch, steam boat, steamer.

*[நீராவி[1] + படகு.]*



**நீராவிப்புண்** *nir-āvi-p-puṇ,* பெ. (n.) வெந்நீர் முதலியன பட்டு உண்டாம் புண்; (M.L.); scald.

*[நீராவி[1] + புண்.]*

**நீராவிமண்டபம்** *nir-āvi-maṇḍabam,* பெ. (n.) ஆறு, தடாகங்களின் நடுவே அமைந்த மண்டபம்; hall in the centre of a tank or river. *"தாமரை சூழ்ந்த நீராவி மண்டபம்"* (சீவக. 2869, உரை.).

*[நீராவி[2] + மண்டபம்.]*

**நீராவியந்திரம்** *nir-āvi-yandiram,* பெ. (n.) 1. நீராவியினாற் செலுத்தப்படும் பொறி; steam engine, 2. நீராவி விசையாக்கப் பொறி; engine which uses steam to generate power.

*[நீராவி[1] + இயந்திரம்.]*

**நீராவியம்** *nirāviyam,* பெ. (n.) பாற்கடுக்காய்; white myrobalan of cudappa-terminalia pallide. (சா.அக.).

**நீராவியாற்றல்** *nirāvi-y-āṟṟal,* பெ. (n.) நீராவியின் ஆற்றல்; steam-power.

*[நீராவி[1] + ஆற்றல்.]*

**நீராழி[1]** *nīr-āḻi,* பெ. (n.) கடல் (பிங்.); sea.

*[நீர் + ஆழி. ஆழ் → ஆழி.]*

நீரென்பது ஆகுபெயராய் நீராலான கடலைக் குறிக்குமேனும், இங்கு ஆழிக்கு அடையாய் வந்தது. ஆல்–சுற்று, சூழ். ஆல்→ஆலி→ஆழி. உலகைச் சுற்றியிருப்பது; நிலத்தைச் சூழ்ந்திருப்பது எனினுமாம்.

**நீராழி[2]** *nīrāḻi,* பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவை.); a disease of cattle. குளம்பில் வரும் **'கோமாரி'** நோய் ஆகலாம்.

**நீராழி[3]** *nīrāḻi,* பெ. (n) *நீராழி மண்டபம்* பார்க்க; see *nīrāḻi-maṇḍabam.*

**நீராழிமண்டபம்** *nīrāḻi-maṇḍabam,* பெ. (n.) ஆறு, தடாகம் இவற்றின் நடுவே அமைந்த மண்டபம்; hall in the centre of a tank or river.

*[நீராழி + மண்டபம்.]*



**நீராளக்கஞ்சி** *nīrāḷa-k-kañji,* பெ. (n.) தடிமனில்லாக்கஞ்சி; water-gruel.

*[நீர் → நீராளம் + கஞ்சி.]*

**நீராளங்கட்டியிறக்கு–தல்** *nīrāḷaṅ-kaṭṭi-y-iṟakku-,* 5 செ.கு.வி (v.i.) மாலைப் பதநீர் இறக்குதல் (இ.வ.); to draw the sweet toddy of the evening from the palmyra tree.

*[நீராளம் + கட்டி + இறக்கு –,]*

**நீராளம்** *nīr-āḷam,* பெ. (n.) **1.** நீர்த்தன்மை; fluidity. **"*நீராளமாயுருக வுள்ளன்பு தந்தது நின்னதருள்*"** (தாயு.பரிபூரண.8.). **2.** நீர்மிகுதி; abundance of water. **"*நீராள வாவிசெறி நாடனைத்தும்*"** (அரிச்.பு.மயா.25.). **3.** நீருடன் கலந்த உணவு; liquid food. **4.** மயக்க மளிக்காத, தித்திப்புக்கள் (வின்.); sweet toddy.

*[நீர் → நீராளம்.]*

**நீராளமாய்விடு–தல்** *nīrāḷamāy-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) உணவில் குழம்பு முதலிய வற்றை மிகுதியாய்ப் பரிமாறுதல்; to serve in large quantity, as curry, curds, broth.

*[நீர் → நீராளம் → நீராளமாய் + விடு.]*

**நீரி** *nīri,* பெ. (n.) நீரில் வாழ்வது; that which lives in water, aquatic life. **"*நீரியா யூர்வனவாய் நின்றநாள் போதாதோ*"** (பட்டினத்துப்.பக்.200.).

*[நீர் → நீரி.]*

**நீரிடம்** *nīriḍam,* பெ. (n.) நாவல்; common jaumoon-eugenia jambolina. (சா.அக.).

**நீரிடை** *nīriḍai,* பெ. (n.) செயநீர்; a pungent saline liquid. (சா.அக.).

**நீரிண்டம்** *nīriṇḍam,* பெ. (n.) தொட்டாற் சுருங்கியை உள்ளடக்கிய துவரை (நுரையிண்டு) இனக்குத்துச்செடிவகை; a variety of mimosa. (சா.அக.).

**நீரிண்டு** *nīriṇḍu,* பெ. (n.) *நீரிண்டம்* பார்க்க; see nīriṇḍam. (சா.அக.).

**நீரிணை** *nīr-iṇai,* பெ. (n.) இருகடல்கள் இணையுமிடத்தமைந்த குறுகிய நீர் வழி; narrow passage of water connecting two seas or large bodies of water.

மறுவ. சலசந்தி.

*[நீர் + இணை.]*



**நீரிய** *nīriya,* பெ.அ. (adj.) நீர்சார்ந்த, நீர்கலந்த, நீர்த்த; aqueous.

*[நீர் → நீரிய.]*

**நீரியக்கவியல்** *nīr-iyakka-v-iyal.* பெ. (n.) நீர் இயக்க விசை சார்ந்த இயற்பியல் துறை; hydrodynamics.

*[நீரியக்கம் + இயல்.]*

**நீரியல்** *nīr-iyal,* பெ. (n.) நிலத்தின் அடியிலும் மேற்பரப்பிலும் இருக்கும் நீரைப்பற்றியும் அந்த நீருள்ள இடத்தின் அமைப்பைப் பற்றியும் விளக்கும் அறிவியற்பிரிவு; hydrology.

*[நீர் + இயல்.]*

**நீரியல்அழுத்தி** *nīriyal-āḻutti,* பெ. (n.) நீராற்றலால் இயக்கப்படுகின்ற அமுக்கும் பொறி; hydraulic press.

மறுவ. நீரமுக்குப் பொறி, நீரமுக்கு எந்திரம்.

*[நீரியல் + அழுத்தி.]*

**நீரியல்உயர்த்தி** *nīriyal-uyartti,* பெ. (n.) இயங்கு நீரின் தடையாற்றலால் அதன் பகுதியை உயர்த்தும் அமைவு; hydraulic ram.

*[நீரியல் + உயர்த்தி.]*

**நீரியல்சரிவு** *nīriyal - šarivu,* பெ. (n.) நீராற்றலால் இயக்கப்படும் திறன்; hydraulic slope.

*[நீரியல் + சரிவு.]*

**நீரியல்திறன்** *nīriyal-tiṟaṉ,* பெ. (n.) நீராற்றலால் இயக்கப்படும் திறன்; hydraulic efficiency.

*[நீர் + இயல் + திறன்.]*

**நீரில்வறுங்கயம்** *nīril-vaṟuṅgayam,* பெ. (n.) நீரில்லாத வறிய குளம்; dry lake. "*வருவர்கொல்வாழி தோழி நீரில் வறுகயந் துழைஇய விலங்கு மருப்பியானை*" (குறுந்.215.).

*[நீர் + இல் + வறிய + கயம்.]*

**நீரில்வைப்பு** *nīr-il-vaippu,* பெ. (n.) நீரற்ற பாலை நிலம்; dry barren sandy tract; desert. "*நீரில் வைப்பிற் சுரனிறந்தோரே*" (குறுந்.211.).

*[நீர் + இல் + வைப்பு.]*

**நீரிலாநிலம்** *nīr-ilā-nilam,* பெ. (n.) பொட்டற்காடு, பாலைநிலம் (யாழ்.அக.); desert tract, as waterless.

*[நீர் + இலா + நிலம்.]*

**நீரிலாறு** *nīr-il-āṟu,* பெ. (n.) நீரற்ற வழி; route, as waterless. "*படுமுடை பருந்து பார்த்திருக்கும் நெடு மூதுடைய நீரில் லாறே*" (குறுந்.283.).

*[நீர் + இல் + ஆறு. ஆறு = வழி,தடம்.]*

**நீரிலை** *nīr-ilai,* பெ. (n.) **1.** நூல்தாளி; larger chinese lauvel-antidesma menasu. **2.** பொன்னாங்காணி சக்களத்தி; water leaf, river blatty-hydrolea zeylanica. (சா.அக.).

**நீரிலோடி** *nīril-ōḍi,* பெ. (n.) ஒருவகை நெட்டி; a kind of pitch plant. (சா.அக.).

*[நீரில் + ஓடி.]*

**நீரிழிச்சல்** *nīr-iḻiccal,* பெ. (n.) நீரிழிவு; diabetes. "*நீரிழிச்சல் பெருவயிறு*" (திருப்பு.627.).

*[நீர் + இழிச்சல்.]*

**நீரிழிபிரமேகம்** *nīr-iḻi-piramēgam,* பெ. (n.) கடுமையான வெட்டைநோய்வகை; (கடம்ப.பு. இலீலா.113.); a severe form of gonorrhoea.

*[நீரிழி + பிரமேகம்.]*

**நீரிழிவு** *nīr-iḻivu,* பெ. (n.) மூத்திரம் சர்க்கரைத் தன்மை கலந்து மிதமிஞ்சி இறங்கும் நோய்; diabetes. "*நீரிழிவாளர்*" (கடம்ப.பு. இலீலா.109.). "*மூக்கடைப்புட்காந்தி நீரிழிவு, குன்மம்*" (தைல.தைலவ.140.).

*[நீர் + இழிவு.]*

**நீரிறக்கம்** *nīr-iṟakkam,* பெ. (n.) **1.** கடலில் நீரேற்றம் உள்வாங்கும் நிலை (யாழ்.அக.); ebb of the tide. **2.** நீரிழிவு (இ.வ.) பார்க்க; see nīriḻivu.

**நீரிறங்குதல்** *nīr-iṟaṅgudal,* பெ. (n.) **1.** சிறுநீர் இறங்குகை; urination. **2.** உடம்பில் கெட்டநீர் தங்குகை; formation of impure watery humours in the body.

*[நீர் + இறங்குதல்.]*

**நீரிறை–த்தல்** *nīr-iṟai-,* 4 செ.குன்றாவி. (v.t.) வேளாண் பயிருக்கு நீர் பாய்ச்சுதல்; to irrigate for crops.

*[நீர் + இறை–.]*

**நீரிறைவன்** *nīr-iṟaivaṉ,* பெ. (n.) *நீர்க் கடவுள்* (நாமதீப.82.) பார்க்க; see *nir-k-kaḍavul.*

*[நீர்+ இறைவன்.]*

**நீரின்மைநிலை** *nīriṉmai-nilai,* பெ. (n.) நீர்த் தட்டுப்பாடான தன்மை (சிலப்.பதி,உரை.); scarcity of water cure.

*[நீர் + இன்மை + நிலை.]*

**நீரின்றிவேனில்தெறுநிலம்** *nīriṉṟi-vēṉilteṟu-nilam,* பெ. (n.) பாலை (சிலப்.பதி.உரை.) desert.

*[நீர் + இன்றி + வேனில் + தெறுநிலம்.]*

**நீருடும்பு** *nīr-uḍumbu,* பெ. (n.) உடும்புவகை; a kind of iguana, water gaunaneut.

**க.** நீருடு.

*[நீர் + உடும்பு.]*

**நீருடை[1]** *nīr-uḍai,* பெ. (n.) நனைந்த ஆடை; wet cloth. "***போகா தாடுநர் புன்க மெய்தி மேகலை விரீஇய தூசுவிசி யல்குல் நீருடை களைதல் செல்லார்***" (பெருங்.உஞ்சைக்.44:5.).

*[நீர் + உடை.]*

*உடை = ஆடை.*

**நீருடை[2]** *nīr-uḍai,* பெ. (n.) நீருடைய மரம்; rubber thorn-acacia latronum.

*[நீர் + உடை. உடை = உடைமை.]*

**நீருடை[3]** *nīruḍai,* பெ. (n.) வேலமர வகை; buffalo thorn cutch.

**நீருணவு** *nīr-uṇavu,* பெ. (n.) உப்புநீர், கஞ்சி முதலியன; liquid diet as soup, conjee., etc, (சா.அக.).

*[நீர் + உணவு.]*

**நீருதடன்** *nīr-udaḍaṉ,* பெ. (n.) அட்டை; leech so called from its sucking blood. (சா.அக.).

*[நீர் + உதடன்.]*

**நீருதித்தநாள்** *nīruditta-nāḷ,* பெ. (n.) *நீர் நாள்* (சூடா.) பார்க்க; see *nīr-nāḷ.*

*[நீர் + உதித்த + நாள்.]*

**நீருதிபாசம்** *nīrudi-pāšam,* பெ. (n.) கடற்பாசி; sea moss-gracilaria lichenoides. (சா.அக.).

**நீருந்தம்** *nīr-undam,* பெ. (n.) நிலத்தடியிலிருக்கும் நீரைக் குழாய் வழி உறிஞ்சிமேலேற்றும் பொறி; water-motor.

*[நீர் + உந்தம். உந்து → உந்தம்.]*



**நீருமரி** *nīr-umari,* பெ. (n.) **1.** சிறுமரவகை; cyprus tamarisu. **2.** சாயத்துக்கு உதவும் பூடுவகை; seaside Indian salt wort.

*[நீர் + உமரி.]*

**நீருமிழ்நோய்** *nīr-umiḻ-nōy,* பெ. (n.) உமிழ்நீர் பெருகிவரும் நோய்; excessive or abnormal salivation.

*[நீர் + உமிழ் + நோய்.]*

**நீருமிழ்வியாதி** *nīrumiḻ-viyādi,* பெ. (n.) *நீருமிழ் நோய்* பார்க்க; see *nir-umiḻ-nōy.*

*[நீருமிழ் + (skt.) வியாதி.]*

**நீருருள்** *nīr-uruḷ,* பெ. (n.) சகடமாகப் பண்ணித் தண்ணீரேற்றியுருட்டுங் கருவி; a kind of cart-like water barrel. "***நீருருள் பிளந்து***" (சீவக.1831.).

*[நீர் + உருள்.]*

**நீருரோகம்** *nīr-u-rōgam,* பெ. (n.) *நீரிழிவு* (m.l.) பார்க்க; see *nīr-iḻivu.*

*[நீர் + உ ரோகம்.]*

**நீருவஞ்சி** *nīruvañji,* பெ. (n.) வஞ்சிமரம்; common willow of India; south Indian willow - sabix tetrasperma. (சா.அக.).

*[நீர் + உ + வஞ்சி.]*

**நீருள்ளாரை** *nīr-uḷḷ-ārai,* பெ. (n.) நீராரை பார்க்க; see nīr-ārai.

*[நீர் + உள் + ஆரை.]*

**நீருள்ளி** *nīr-uḷḷi,* பெ. (n.) வெங்காயம்; onion-allium sepa. (சா.அக.).

மறுவ. ஈரங்காயம்.

க.,தெ. நீருள்ளி.

*[நீர் + உள்ளி.]*

**நீருளாரை** *nīruḷ-ārai,* பெ. (n.) *நீராரை* பார்க்க; see *nīr-ārai.* (சா.அக.).

*[நீருள் + ஆரை.]*

**நீருறை**[1] *nīr-uṟai,* பெ. (n.) 1. நீர்மநிலை மருந்து; liquid medicine, lotion. 2. மருந்துநீர்; mixture of solution. (சா.அக.).

*[நீர் + உறை.]*

**நீருறை**[2] *nīr-uṟai,* பெ. (n.) குளிர்ச்சியாக வைத்திருக்க வேண்டிய பொறியின் பாகத்தைச் சுற்றியுள்ள நீர் நிரப்பப்பட்ட உறை; water-jacket.

*[நீர் + உறை.]*

**நீருறைதெய்வம்** nīr-uṟai-deivam, பெ. (n.) நீரில் வாழும் தெய்வம்; watersprite.

*[நீர் + உறை + தெய்வம். உறை = வாழ்தல்.]*

**நீருறைமகன்றில்** *nīruṟai-magaṉṟil,* பெ. (n.) நீரில் வாழும் மகன்றிற் பறவை; a species of love bird which lives in water. *"பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன நீருறை மகன்றிற் புணர்ச்சி போல"* (குறுந்.57.).

*[நீருறை + மகன்றில்.]*

இப்பறவைகள் ஆணும் பெண்ணும் கூடி இணைபிரியாது வாழும் இயல்புடையன. தம்முட் சிறியதொரு பிரிவு நிகழினும் ஆற்றாது உயிர்விடும் ஆராக் காதலுடையன என்பர்.

**நீரூர்பாதை** *nīr-ūr-pādai,* பெ. (n.) நிறைபுனல்(நாமதீப.534.); full flood.

**நீரூற்று** *nīr-ūṟṟu,* பெ. (n.) 1. ஊற்று; spring, fountain. 2. கழிவு; oozing, dampness.

*[நீர் + ஊற்று.]*

**நீரூறி** *nīr-ūṟi,* பெ. (n.) கீழ்க்காய் நெல்லிச்செடி; a small plant (M.M.587.).

ம. நீரூரி.

*[நீர் + ஊறி.]*

**நீரெக்கி** *nir-ekki,* பெ. (n.) 1. சிவிறி; a kind of syringe. *"நெய்த்தோர் நிறவரக்கி னீரெக்கி"* (பரிபா 10:12.). 2. துருத்தி; bellows.

*[நீர் + எக்கி; எக்குதல் → பிலிற்றுவித்தல்; பீச்சுதல்.]*

**நீரெட்டி** *nīr-eṭṭi,* பெ. (n.) *நீரெட்டிமுத்து* பார்க்க; see *nīr-eṭṭi-muttu.*

**நீரெட்டிமுத்து** *nīr-eṭṭi-muttu,* பெ. (n.) **1.** பேயாமணக்கு (பைஷஜ.96.); wild croton. **2.** மரவட்டை மரம் (L.); marotti.

*[நீரெட்டி + முத்து.]*

**நீரெடுப்பு** *nīr-eḍuppu,* பெ. (n.) *நீரேற்றம்,* **1** (வின்.) பார்க்க; see *nīr-ēṟṟam.*

*[நீர் + எடுப்பு.]*

**நீரெரிப்பு** *nīr-erippu,* பெ. (n.) *நீர்க்கடுப்பு* பார்க்க; see *nīr-k-kaḍuppu.*

*[நீர் + எரிப்பு.]*

**நீரெரிவு** *nīr-erivu,* பெ. (n.) நீர்க்கடுப்பு (புதுவை); dysury.

*[நீர் + எரிவு.]*

**நீரெலி** *nīr-eli,* பெ. (n.) எலிவகை (வின்.); water rat.

*[நீர் + எலி.]*

**நீரெழுச்சி** *nīr-eḻucci,* பெ. (n.) வெள்விழியில் காணும் கண்ணோய்; a film flesh growth on the scientific of the eye as transparent as drop as water. (சா.அக.).

*[நீர் + எழுச்சி.]*

**நீரேற்றநுண்பொறி** *nīrēṟṟa-nuṇpoṟi,* பெ. (n.) நீரின் தடையாற்றலால் அதன் பகுதியை யுயர்த்தும் அமைவு; water-ram.

*[நீர் + ஏற்றம் + நுண்பொறி.]*

**நீரேற்றம்**[1] *nīr-ēṟṟam,* பெ. (n.) **1.** நீர்ப்பெருக்கு (வின்.); flood, tide, flow. **2.** சளி; catarrh. **3.** தீய நீரால் உடம்பு வீங்கும் நோய் (பதார்த்த.24.); dropsy. **4.** திமிர் (தஞ்சை.); impudance.

*[நீர் + ஏற்றம்.]*

**நீரேற்றம்**[2] *nīr-ēṟṟam,* பெ.(n.) வெள்விழியில் ஏற்படும் நீர்ப்பெருக்கு; accumulation of morbid fluid in the white of the eye. (சா.அக.).

*[நீர் + ஏற்றம்.]*

**நீரேற்றுநிலையம்** *nīr-ēṟṟu-nilaiyam,* பெ. (n.) குழாய் வழியாக நீர் எல்லா இடங்களுக்கும் சீராகச் செல்வதற்கான அழுத்தத்தைத் தரும் எந்திரம் உள்ள நிலையம்; pumping station.

*[நீரேற்று + நிலையம்.]*

**நீரேற்றுமடு** *nīr-ēṟṟu-maḍu,* பெ. (n.) நீர் பாய்ச்சமுடியாத மேட்டுநிலம். (R.T.); high land that cannot be irrigated.

*[நீரேற்று + மடு.]*

**நீரொட்டி** *nīr-oṭṭi,* பெ. (n.) *நீராரை* (மலை.) பார்க்க; see *nīr-ārai.*

*[நீர் + ஒட்டி.]*

**நீரொடி** *nīroḍi,* பெ. (n.) *நீரொட்டி* பார்க்க; see *nīr-oṭṭi* (சா.அக.).

*[நீரொட்டி→ நீரொடி.]*

**நீரொடுசொரிந்தமிச்சில்** *nīroḍu-šoṟinda-miccil,* பெ. (n.) நீரொடு தானம் செய்தெஞ்சிய பொருள்; leavings, what is left after making gifts by pouring water on the right hand of

the donee. "நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும் வரைகோ ளறியாச் சொன்றி நிரைகோற் குறுந்தொடி தந்தை யூரே" (குறுந்.233.).

*[நீரொடு + சொரிந்த + மிச்சில்.]*

**நீரொடை** *nīr-oḍai,* பெ. (n.) *நீருடை2* பார்க்க; see *nīr-uḍai.* (சா.அக.).

*[நீருடை → நீரொடை.]*

**நீரொலி** *nīroli,* பெ. (n.) நீரலையின் ஓசை; water noise. பெருமிதம் என்பது கரைகடவா நீரொலி போன்றது. தற்பெருமை என்பது உள்ள நீரையும் வற்றச் செய்து கரையைப் புரைப்படுத்தும் கதிர்ச்சூடு போன்றது. (உ.வ.)

*[நீர் + ஒலி.]*

**நீரொவ்வாமை** *nīr-ovvāmai,* பெ. (n.) *நீர்ப்பகை* பார்க்க; see *nīr-p-pagai.*

*[நீர் + ஒவ்வாமை.*
*உல் → ஒல் → ஒவ் → ஒவ்வு + ஆ + மை.]*

**நீரொழுக்கு**[1] *nīr-oḻukku,* பெ. (n.) **1.** துளையினின்று நீரொழுகும் ஒழுக்கு; leakage through a hole. **2.** வானின்று பெய்யும் மழை; rain.

*[நீர் + ஒழுக்கு.]*

நீரொழுக்குச் சிறுத்திருப்பின் பெய்தலென்றும் திரண்டிருப்பின் பொழிதலென்றும் சொல்லப்படும்.

**நீரொழுக்கு**[2] *nīr-oḻukku,* பெ. (n.) *நீரிழிவு* பார்க்க; see *nīr-iḻivu.*

*[நீர் + ஒழுக்கு.]*

**நீரொற்றி** *nīr-oṟṟi,* பெ. (n.) நீரை ஒற்றி யுலர்த்தும் பொறி; desiccator.

*[நீர் + ஒற்றி.]*

**நீரோசை** *nīr-ōšai,* பெ. (n.) **1.** கொண்டாட்டம்; festivity, joviality. **2.** மகிழ்ச்சி; delight, joy, enjoyment, gratification.

*[நீர் + ஓசை.]*

**நீரோட்டஆற்றல்** *nīrōṭṭa-āṟṟal,* பெ. (n.) இயங்கு நீரின் ஆற்றல்; flow energy.

*[நீர் + ஓட்டம் + ஆற்றல்.]*

**நீரோட்டம்**[1] *nīr-ōṭṭam,* பெ.(n.) **1.** ஒடும் நீர் (நாமதீப.80.); running water, current. **2.** மணியின் உள்ளொளி; lustre or water of a gem. **3.** நீர் செல்லுங்கால்; rivulet, channel.

*[நீர் + ஓட்டம்.]*

**நீரோட்டம்**[2] *nīrōṭṭam,* பெ. (n.) **1.** (கடல், ஆறு போன்றவற்றில்) வெளியே தெரியாத, விசையோடு செல்லும் நீரின் இயக்கம்; current (in a river or sea). ***ஆற்றின் நடுவே நீரோட்டம் மிகுதியாயிருக்கும் விழிப்பாய் நீந்த வேண்டும்.*** (உ.வ.)

*[நீர் + ஓட்டம்]*

**நீரோட்டம்**[3] *nīrōṭṭam,* பெ. (n.) **2.** (உரூவாத் தாள், தாள் முதலியவற்றில்) வெளிச்சத்திற்கு எதிராய்ப் பார்த்தால் மட்டுமே புலப்படக்கூடிய வகையில் அச்சடிக்கப் பட்டிருக்கும் உருவம் அல்லது எழுத்து; watermark (in a currency note, paper etc.).

*[நீர் + ஓட்டம்.]*

நீர் ஓடிய தாரையைப் போன்றிருப்பது.

**நீரோட்டம்**[4] *nīrōṭṭam,* பெ. (n.) நாட்டின் பொதுத்தன்மை; common persptive. இந்தியாவின் எந்த மாநிலமும் தேசிய நீரோட்டத்திலிருந்து விலகிச் செல்வதை ஏற்கவியலாது எனக் குடியரசுத் தலைவர் தனது குடியரசுநாள்விழா உரையில் வலியுறுத்திக் குறிப்பிட்டார். (உ.வ.). இளைஞர்கள் தேசிய நீரோட்டத்தில் பங்கு பெற வேண்டுமென இந்தியத் தலைமை யமைச்சர் தனது பொழிவில் குறிப்பிட்டார். (உ.வ.).

*[நீர் + ஓட்டம்.]*

ஓடும் நீர் ஒரே திசைநோக்கிச் செல்வது போன்று நாட்டுமக்கள் அனைவரும் ஒருபோகாய்ச் செல்வதைக் குறித்து வந்த சொல்.

**நீரோட்டவலை** *nīrōṭṭa-v-alai,* பெ. (n.) *நீரின் மேற்பரப்பு அசையா நிற்க கீழ்பரப்பின் நீரின் ஓட்டம்* current in the lower part of the sea or river.

*[நீர் + ஓட்டம் + அலை.]*

**நீரோட்டு** *nīr-ōṭṭu,* பெ. (n.) *நீரோட்டம்* பார்க்க; see *nīr-ōttam.*

*[நீரோட்டம் → நீரோட்டு.]*

**நீரோடட்டிக்கொடு-த்தல்** *nīrōḍaṭṭi-k-koḍu,* 4 செ.குன்றாவி. (v.t.) தனக்குரியதைப் பிறருக்குத் தாரைவார்த்துக் கொடுத்தல்; to make gifts by pouring water on the right hand of the donee. "இருநூறு பறை செய்து நெல் ஆண்டு வரை கொடுப்பதாகப் பொதுவாள் கையில் நீரோடட்டிக் கொடுத்தான்" (மாம்பள்ளிக் கல்வெட்டு-தி.தொ.4:1).

*[நீரோடு + அட்டி + கொடு.*

*அட்டு = பொருந்து. அட்டு → அட்டி.]*

**நீரோடி**[1] *nīr-ōḍi,* பெ. (n.) **1.** மதகு; sluice, conduit. **2.** நீரோடும் உள்வாய்; bed of a stream.

*[நீர் + ஓடி.]*

**நீரோடி**[2] *nīr-ōḍi,* பெ. (n.) கூரைக் கூடல்வாய் (வின்.); gutter of a roof.

*[நீர் + ஓடி.]*



**நீரோடுகால்** *nīr-ōḍu-kāl,* பெ. (n.) **1.** கால்வாய்; water course, canal. **2.** ஊரில் நீர் வடிந்து செல்லுந் தாழ்ந்த நிலம் (R.T.); low lands into which the rain water of a village discharges itself.

*[நீர் + ஓடு + கால்.]*

**நீரோடை**[1] *nīr-ōḍai,* பெ. (n.) **1.** *நீரோடுகால்,* (வின்.) பார்க்க; see *nīr-ōḍu-kāl.* **2.** நீர்நிலை (தஞ்சை); pond.

*[நீர் + ஓடை.]*

**நீரோடை**[2] *nīr-ōḍai,* பெ. (n.) (பெரும்பாலும்) இயற்கையாக ஆற்றிலிருந்து பிரிந்து வரும் சிறிய நீர் வழி; stream or rivulet.

*[நீர் + ஓடை.]*

**நீரோது-தல்** *nīr-ōdu-,* 5 செ.கு.வி. (v.i.) பேற்றுக்கால வேதனையிலிருக்கும் பெண்டிர் முதலியோருக்குக் கொடுக்க நீரை மந்திரித்தல்; to consecrate water by mantras, for being given to a woman in labour.

*[நீர் + ஓது-, ]*

**நீரோம்பல்**[1] *nīr-ōmbal,* பெ. (n.) **1.** பூமருது; flowering murdah. **2.** நீர்க்கடம்பு; water cadamba.

*[நீர் + ஓம்பல்.]*

**நீரோம்பல்**[2] *nīr-ōmbal,* பெ. (n.) பேய்க்கடுக்காய் (கதி.அக.); crape myrtle.

*[நீர் + ஓம்பல்.]*

**நீரோருகம்** *nīrōrugam,* பெ. (n.) தாமரை; lotus. (சா.அக.).

**நீல்**[1] *nīl,* பெ. (n.) **1.** நீலம்; blue. *"நீனிற மஞ்ஞையும்"* (சிலப்.12:34.). *"நீனெய் தாழ் கோதையவர் விலக்க நில்லாது"* (பரிபா.11:124.). **2.** கறுப்பு (சூடா.): black. **3.** அவரி; common indigo. **4.** கருங்குவளை; blue helumbo. *"நீலிதழுண் கண்ணாய்"* (கலித்.33:28.).

pkt. nīl.

**நீல்**[2] *nīl,* பெ. (n) **1.** காற்று; wind. **2.** (வாதக்) *வளிக்கூறுள்ள நோய்* (தைலவ. பாயி.42); diseases in which the vadam element is predominant.

**நீலஒளி** *nīlaoḷi,* பெ. (n.) நீல நிறம்; blue glow.

*[நீலம் + ஒளி.]*

**நீலஒளிர்வு** *nīla-oḷirvu,* பெ. (n.) *நீலஒளி* பார்க்க; see *nīla-oḷi.*

*[நீலம் + ஒளிர்வு]*

**நீலக்கச்சு** *nīla-k-kaccu,* பெ. (n.) நீலநிறத்துணி; blue cloth. *"நிறங்கவர்பு புனைந்த நீலக்கச்சினர் மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர் நிலனகழுளியர் கலனசைஇக் கொட்கும் கண்மாறாடவ ரொடுக்க மொற்றி"* (மதுரைக்.639-42.).

*[நீலம் + கச்சு.]*

**நீலக்கச்சை** *nīla-k-kaccai,* பெ. (n.) நீலநிறத்துணி; blue cloth. *"நீலக்கச்சைப் பூவாராடைப் பலிக்கண்ணிப் பெருந்தகை மறவன்"* (புறநா.274.).

*[நீலம் + கச்சை.]*

**நீலக்கட்டி** *nīla-k-kaṭṭi,* பெ. (n.) அவுரிச்சாயக் கட்டி (வின்.); lumps of indigo due.

*[நீலம் + கட்டி.]*

**நீலக்கடம்பை**[1] *nīla-k-kaḍambai,* பெ. (n.) நீலநெல்லி; lowly nelly madras phyllanthus. (சா.அக.).

*[நீலம் + கடம்பை.]*

**நீலக்கடம்பை**[2] *nīla-k-kadambai,* பெ. (n.) பூலா என்னுஞ் செடி வகை; a common weed, black-berried feather foil.

*[நீலம் + கடம்பை.]*

**நீலக்கடிப்பிணை** *nīlakkaḍippiṇai,* பெ. (n.) குதம்பை போல்வதோர் அணி (சீவக நாமக.266,உரை.) (கதி.அக.); an ornament like gudambai.

*[நீலம் + கடிப்பு + இணை.]*

**நீலக்கத்தரி**[1] *nīla-k-kattari,* பெ. (n.) வழுதுணை வகை; New York purple brinjal. (சா.அக.).

*[நீலம் + கத்தரி.]*

**நீலக்கத்திரி**[2] *nīla-k-kattiri,* பெ. (n.) *நீலக்கத்தரி* பார்க்க; see *nīla-k-kattari.*

*நீலக்கத்தரி → நீலக்கத்திரி. (கொ.வ.).*

**நீலக்கபித்தம்** *nīla-k-kapittam,* பெ. (n.) மாங்காய்; mango mangifera indica. (சா.அக.).

**நீலக்கல்** *nīla-k-kal,* பெ. (n.) நீலமணி; sapphire.

*[நீலம் + கல்.]*

**நீலக்கள்ளி** *nīla-k-kaḷḷi,* பெ. (n.) அறுகோணக்கள்ளி; six angled torch light-cercus hexagonus. (சா.அக.).

*[நீலம் + கள்ளி.]*

**நீலக்களக்கட்டான்** *nīla-k-kaḷa-k-kaṭṭāṉ* பெ. (n.) ஒருவகை பூண்டு; a kind of plant.

*[நீலம் + களம் + கட்டான்.]*

**நீலக்காக்கட்டான்** *nīla-k-kākkaṭṭāṉ,* பெ. (n.) *நீலக்காக்கணம்* பார்க்க; see *nīla-k-kākkaṇam.*

*[நீலம் + கா + கட்டான்.]*

**நீலக்காக்கணம்** *nīla-k-kākkaṇam,* பெ. (n.) காக்கணங்கொடி வகை; mussell-shell creeper.

*[நீலம் + காக்கணம்.]*

**நீலகாம்போதி** *nīlakāmpōdi,* பெ. (n.) பண்வகை (பாரத நாக.பக்.103.); a specific melody-type.

*[நீலம் + காம்போதி.]*

**நீலக்காரம்** *nīla-k-kāram,* பெ. (n.) துரிசு (யாழ்.அக.); blue vitriol, verdigris.

*[நீலம் + காரம்.]*

**நீலக்காலி**[1] *nīla-k-kāli,* பெ. (n.) அவுரி (வின்.); common indigo.

*[நீலம் + காலி.]*

**நீலக்காலி**[2] *nīla-k-kāli,* பெ. (n.) நண்டுவகை (யாழ்.அக.); a kind of crab.

*[நீல + காலி.]*

**நீலக்காலிநண்டு** *nīla-k-kāli-naṇḍu,* பெ. (n.) *நீலக்காலி 2* (வின்.) பார்க்க; see *nīla-k-kāli.*

*[நீலம் + காலி+ நண்டு.]*

**நீலக்கிரந்தை** *nīla-k-kirandai,* பெ. (n.) கிரந்தை வகை; vishnu's basil - sphaeranthus indicus. (சா.அக.).

*[நீலம் + கிரந்தை.]*

**நீலக்குடி** *nīla-k-kuḍi,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; a village in Tanjavur dt.

"*கல்லினோடெனைப் பூட்டியமண்கையர் ஒல்லை நீர்புக நூக்கி வென் வாக்கினால் நெல்லு நீள் வயனீலக் குடியரன் நல்ல நாம நவிற்றி யுய்ந்தேனன்றே*" (அப்பர்.18–7.).

*[நீலம் + குடி.]*

*'நீலகண்டன் குடி'* யெனச் சுட்டப்பட்டுப் பின்னர் நீலன்குடி ஆகி, பின்னர் நீலக்குடியெனத் திரிந்தது. பின்னர் இன்றைய *'தென்னலக்குடி'* என்று திசையைக் குறித்து அழைக்கப்படுகிறது.

**நீலக்குதம்பை** *nīla-k-kudambai,* பெ. (n.) காதணி வகை. a kind of ear's ornament. "*முகப்பிற்கட்டின இந்திரநீலத்திடையிடையே பயிலக்கட்டின வயிரங்களால் அழகுபெற்ற நீலக்குதம்பையை வடிந்த காதினிடத்தே அழகு மிகும்படி அணிந்தென்க*" (சிலப்.6:103,உரை.).

*[நீலம் + குதம்பை.]*

**நீலக்குமிழ்** *nīla-k-kumil,* பெ. (n.) குமிழ்க் கொடி; small cashmere tree - gmelina asiatica alias gordonia obtrosa. (சா.அக.).

*[நீலம் + குமிழ்.]*

**நீலக்குருத்து** *nīla-k-kuruttu,* பெ. (n.) மூவிலைக்குருத்து; three leaved wild lime-Trichilia spinosa. (சா.அக.).

*[நீலம் + குருத்து.]*

**நீலக்கொடி** *nīla-k-kodi,* பெ. (n.) கருங்குவளை; blue Indian water lily, blue nelumbo - monochoria vaginalis. (சா.அக.).

*[நீலம் + கொடி.]*

**நீலக்கொடிவேலி** *nīla-k-kodi-vēli,* பெ. (n.) நீலசித்திரமூலம்; blue flowered lead wort-plum bago-capensis.

*[நீலம் + கொடிவேலி.]*

**நீலக்கொடுவேலி** *nīla-k-koduvēli,* பெ. (n.) கொடுவேலிவகை; blue-flowered leadwort.

*[நீலம் + கொடுவேலி.]*

**நீலக்கொண்டி** *nīla-k-kondi,* பெ. (n.) புல்லா மணக்கு; creeper ammanac small castor plant - sebastiana chamaciea. (சா.அக.).

*[நீலம் + கொண்டி.]*

**நீலக்கொழுந்து** *nīla-k-kolundu,* பெ. (n.) மாழையை யுருக்கும் பொழுது நெருப்பில் காணப்படும் நீல வெளிச்சம்; a blue glow found when melting metals. (சா.அக.).

*[நீலம் + கொழுந்து.]*

**நீலக்கோலன்** *nīla-k-kōlan,* பெ. (n.) காமன் (நாமதீப. 59.); cupid.

*[நீலம் + கோலன்.]*

**நீலகண்டசிவாச்சாரியார்** *nīla-kanda-śivāccāriyār,* பெ. (n.) பிரமசூத்திரம் என்னும் நூலுக்குச் சிவபரமாக உரையெழுதியவர்: author of a šaiva commentary of on Brahmasūtra.

**நீலகண்டபாடியம்** *nīla-kanda-pādiyam,* பெ. (n.) பிரமசூத்திரத்துக்கு நீலகண்ட சிவாச் சாரியார் இயற்றிய பேருரை; the šaiva commentary on Brahmasūtra by Nīlakandacivācāriyur.

**நீலகண்டம்[1]** *nīla-kandam,* பெ. (n.) சிவ பெருமானுடைய நஞ்சு தங்கிய கண்டம்; neck of šivan, as blue from poison. "*சிவனெந்தை கண்டந்தன்னைத் திருநீல கண்டமென்பார்*" (பெரியபு. திருநீல.4.). "*நீலமணிமிடற் றொருவன்*

*போல மன்னுக பெரும நீயே"* (புறநா.91.). 2. மயில்; peacock as blue-throated. *"நீல கண்டந் தம்போல் நிமலன் படைத்திருந்த கோலம்"* (பூவண. உலா. 131.).

*[நீலம் + கண்டம் ]*

**நீலகண்டம்[2]** *nīla-kaṇḍam,* பெ. (n.) 1. பெரு முள்ளங்கி; country raddish of a bigger variety-raphan us sativus. 2. காட்டுக்காடை; Indian jay-coracias indica. (சா.அக.).

**நீலகண்டமந்திரம்** *nīlakaṇḍa-mandiram,* பெ. (n.) சிவனிய மந்திரம்; a holy mandiram relating to šiva. (சா.அக.).

*[நீலகண்டன் + மந்திரம்.]*

**நீலகண்டவாலை** *nīlakaṇḍa-vālai,* பெ. (n.) மருந்துவகை (இ.வ.); a kind of medicine.

*[நீலகண்ட + வாலை.]*

**நீலகண்டன்** *nīla-kaṇḍaṉ,* பெ. (n.) 1. சிவன் (திவா.); šiva, as having azure-coloured neck. *"நீற்ற ரேற்றார் நீலகண்டர்"* (தேவா.187.2.). 2. *நீலக்காரம்* (மூ.அ.) பார்க்க; see *nīla-k-kāram.* 3. முருங்கை; horse radish tree. 4. நஞ்சு; a prepared arsenic.

*[நீலம் + கண்டன்.]*

**நீலகண்டனிலை** *nīlakaṇḍaṉ-ilai,* பெ. (n.) வெற்றிலை; betel leaf; piper betle. (சா.அக.).

*[நீலம் + கண்டன் + இலை.]*

**நீலகண்டி** *nīla-kaṇḍi,* பெ. (n.) 1. கொற்றவை; koṟṟavai; Durga. 2. பொல்லாதவள் (வின்.); cruel woman. 3. பாம்பின் நச்சுப் பற்களு ளொன்று (வின்.); a poison fang of a snake.

*[நீலம் + கண்டி.]*

**நீலகந்தி[1]** *nīla-kandi,* பெ. (n.) நீலமலர், குவளை, (சிலப்.14:182, உரை.); a kind of blue flower.

*[நீலம் + கந்தி.]*

**நீலகந்தி[2]** *nīla-kandi,* பெ. (n.) மாணிக்கவகை (சிலப்.14:186,உரை.); a kind of precious stone.

**நீலகம்** *nīlagam,* பெ. (n.) 1. காருப்பு; salt produced from sasamum seed. 2. துரிசு (1,2 வைத்திய பரிபா.); fault. (கதி.அக.).

*[நீலம் + அகம்.]*

**நீலகமலம்** *nīla-kamalam,* பெ. (n.) கருங்குவளை (மலை.); blue nelumbo.

*[நீலம் + கமலம்.]*

**நீலகாந்தி** *nīlagāndi,* பெ. (n.) 1. ஒருவகை நீலப்பூ; a kind of azure blue flower. 2. நீலம்; sapphire. 3. நீலவொளி; blue brilliancy. 4. ஒருவகைக் கண்ணோய்; a kind of eye disease affecting the pupil. (சா.அக.).

**நீலகாசம்** *nīlakāšam,* பெ. (n.) ***கண்ணின் கருவிழியை பற்றிய கண்ணோய்;*** a disease relating to the black of the eye associated with the affection of the lens. (சா.அக.). 2. கருவிழிநோய் வகை (வின்.); a disease of the eye.

**நீலகிரி** *nilagiri*, பெ. (n.) *நீலமலை* பார்க்க; see *nila-malai*. "*நீலகிரியி னெடும்புறத் திறுத்தாங்கு*" (சிலப்.26:85.).

*[நீலம் + கிரி. skt. கிரி த. மலை நீலகேரி → நீலகிரி என்றுமாம். சேரி = சேர்ந்து வாழுமிடம். சேரி → கேரி.]*

**நீலகிரிச்சண்பகம்** *nilagiri-c-canbagam*, பெ. (n.) *நீலமலைச்சண்பகம்* பார்க்க; see *nilamalai-c-canbagam*..

*[நீலகிரி+ சண்பகம். நீலமலை → நீலகிரி.]*

**நீலகேசி** *nilakēši*, பெ. (n.) ஐஞ்சிறு காப்பியங்களுளொன்று; one of five small epic, aiñjiru-kappiam.

*[நீலம் → நீலகேசி.]*

இக்காப்பியத்தை நீலம் என்று வழங்கின ரென்பது, "*தருக்கமாவன—ஏகாந்த வாதமும் அநேகாந்த வாதமுமென்பன. அவை, நீலம், பிங்கலம், அஞ்சனம், தத்துவ தரிசனம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும் சாங்கியம் முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க*" என வரும் யாப்பருங்கல விருத்தியின் குறிப்பாலறியலாம்.

இன்னும் யாப்பருங்கல விருத்தியிலேயே "*சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, அமிருதபதி என்பவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவன*" என வரும் குறிப்பினால் நீலம், நீலகேசி என்னும் இருவகைப் பெயர்களால் அந்நூலாசிரியர் காலத்திலேயே வழங்கப் பட்டன என்பதும், சமய திவாகரர் வகுத்த இந்த நீலகேசியின் பழைய உரை நூலின்கண் சருக்கம்தோறும் இறுதியில் நீலகேசித்திரட்டு என்று இந்நூல் குறிப்பிடப்படுகின்றமையால் நீலகேசித்திரட்டு என்றும் வழங்கப்பட்டதென்று ணரலாம்.

இனி, இந் நூற்றலைவியாகிய நீலகேசியை நோக்கி அவள் ஆசிரியராகிய முனிச்சந்திரபட்டாரகர் "*நங்காய்! இனி நீ கடல் நாட்டிற் சினவரன் நெறியே தெருட்டு*" என்று பணிப்ப, நீலகேசியும் அப்பணி தலைமேற் கொண்டு பல நாட்டினும் சென்று அச்சினவரன் நெறியே தெருட்டுகின்றாள் ஆதலின் இந்நூல், தொடக்கத்தில் '*நீலகேசித் தெருட்டு*' என வழங்கப்பட்டு நாளடைவில் தெருட்டு என்னும் சொல்லே திரட்டு என்று திரிந்துவழங்குவதாயிற்றென்று நினைத்திற்கும் இடமுண்டு.

பௌத்த சமயத்தைச் சார்ந்த குண்டலகேசி ஆசிரியர் தம் பெருங்காப்பியத்துள் தமது சமயச் சிறப்பை உலகினர்க்குணர்த்தற் பொருட்டேயுமன்றி அக்காலத்தே ஆருகதர் தம் பௌத்த சமயத்தோடு இகலித் தமது சமயத்தைப் பரப்புவதில் பெரிதும் முனைந்திருந்தமையால் அவ் வாருகத சமயச் சான்றோர் கொள்கைகளைக் குற்றங்கூறி அச்சமயத்தை வீழ்த்துவதனையே சிறப்பான குறிக்கோளாகக் கொண்டிருந்தன ரென்பதும் இந்நீலகேசி யாலறிய வருகின்றது. குண்டல கேசியின் பல கூற்றுகள் ஆருகத சமயக் கணக்கர்கள் உள்ளத்தைப் புண்படுத்து மளவிற்கு ஆற்றல் பெற்றிருந்தன வென்பதும், இவ்வாற்றால் மனம் புண்பட்ட இந்நீலகேசியின் ஆசிரியர் தாம் குண்டலகேசியின்கண் தமது ஆருகத சமயத்திற்குக் கூறப்பட்டிருந்த குற்றங்கட் கெல்லாம் தீர்வு காட்டுவதோடன்றி அப் பௌத்த சமயத்துக் கொள்கைகள் பெரிதும் குற்றமுடையனவென்று உலகினர்க்கு அம்பலப்படுத்தி, மேலும் தமது ஆருகத சமயமே சாலச்சிறந்த மெய்ச்சமயமாம் ஆதலால் இதன்கண் சேரவாரும் செகத்தீரே என்று அழைத்துத் தமது சமயத்தைப் பரப்ப வேண்டுமென்று கருதியவராய் நெடுநாள் நீள நினைத்து அக்கருத்தையெல்லாம் இந்நீலகேசி எனும் நூல்வழியாய்ப் பெரிதும் திறம்படவே செய்து நிறைவேற்றினாரென்பதும் தெரிய வருகின்றது. இவ்வாற்றால் இந்நூல்

'பிறன்பழி கூறுவான் தன்பழியுள்ளும் திறன்தெரிந்து கூறப்படும் என வரும் திருக்குறட்குச் சிறந்த எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்ற தெனலாம்.

இனி, தெய்வப்புலவர் திருவள்ளுவனார் *'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்'* எனச் சொல்லிற்கு இலக்கணம் கூறிப் போந்தார். இக் குறட்பாவிலுள்ள கேளார் என்பதற்குப் பகைவர் என்பது பொருளாகும். பகைவரும் கேட்க விரும்பும் பெற்றிமை யுடையனவாகச் சொற்கள் அமைதல் வேண்டும் என்பது தெய்வப் புலவரின் கருத்தாகும். இந்நீலகேசி யாசிரியரின் சொல்வன்மை அத்தகையதே என்பது மிகையன்று. மேலும் இவர் செய்யுள் செய்வதினும் பேராற்றல் வாய்ந்தவர் என்பதனை இந்நூலிற் றிகழும் அவர்தம் செய்யுள்கள் நன்கு புலப்படுத்துகின்றன. மெய்யியல் (தத்துவ) நூல் பெரும்பாலும் சுவையற்ற னவாகவே இருப்பதுதான் இயல்பு. இப்புலவர் பெருமான் இத்தத்துவ நூலைப் பெருங் காப்பியத்திற்குரிய நகை முதலிய சுவையெல்லாம் கெழுமச் செய்திருக்கின்ற செயற்கைத் திறம் பெரிதும் போற்றற்பாலதாம்.

இத்தகைய சிறந்த நூலை யாத்தருளிய நல்லிசைப் பெரும் புலவர் யாவர், எவ்வூரினர், எந்நாட்டினர், எக்காலத்தினர் அவர்பெயர் யாதென்பன போன்ற வினாக்களுக்கெல்லாம் விடை யிறுத்தலரிதாம்.

**நீலகேசித்திரட்டு** *nīlakēši-t-tiraṭṭu,* பெ. (n.) *நீலகேசி* பார்க்க; see *nīlakēši.*

*[நீலகேசி + திரட்டு.]*

**நீலகேசித்தெருட்டு** *nīlakēši-t-teruṭṭu,* பெ. (n.) *நீலகேசி* பார்க்க; see *nīlakēši.*

*[நீலகேசி + தெருட்டு*
*திரட்டு → தெருட்டு.]*

**நீலங்கட்டு—தல்** *nīlaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** நீலச்சாயந் தோய்த்தல் (வின்.); to dye a cloth with indigo. **2.** பொய் கற்பித்தல் (யாழ்ப்); to invent a lie.

*[நீலம் + கட்டு—,]*

**நீலங்கம்** *nīlaṅgam,* பெ. (n.) வாழைவகை (G.sm, D.I.i,**215.**); a kind of plantain.

**நீலச்சம்பா** *nīla-c-cambā,* பெ. (n.) *நீலநெல்* (இ.வ.) பார்க்க; see *nīlanel.*

*[நீலம் + சம்பா.]*

**நீலச்சால்** *nīla-c-cāl,* பெ. (n.) நீலச்சாயம் ஊறவைக்கும் சால்; the pot or jar in which indigo dye is kept.

*[நீலம் + சால்.]*

**நீலச்சிகை** *nīla-c-cigai,* பெ. (n.) நீலச் சிகைப்பூடு; blue crest plant-plumpego zeylanica. (சா.அக.).

*[நீலம் + சிகை.]*

**நீலச்சித்திரமூலம்** *nīla-c-cittiramūlam,* பெ. (n.) *நீலக்கொடிவேலி* பார்க்க; see *nīla-k-koḍivēli.* (சா.அக.).

*[நீலம் + சித்திரமூலம்.]*

**நீலச்சுறா** *nīla-c-curā,* பெ. (n.) சுறாமீன்வகை; a kind of sea-fish. *"நீலச்சுறா பிறழ்வ போன்ற"* (களவழி.**9.**).

*[நீலம் + சுறா.]*

**நீலச்சூலி** *nīla-c-cūli,* பெ. (n.) *நீலக்குருத்து* பார்க்க; see *nīla-k-kuruttu.* (சா.அக.).

*[நீலம் + சூலி.]*

**நீலச்செடி** *nīla-c-ceḍi,* பெ. (n.) சேங்கொட்டை மரம்; marking nut tree.

*[நீலம் + செடி.]*

**நீலச்செம்முள்ளி** *nīla-c-cemmuḷḷi,* பெ. (n.) **1.** வெள்ளை நீலாம்பரம் (A.); crested purple nail dye. **2.** செடிவகை; shining sepalled blue nail dye.

*[நீலம் + செம்முள்ளி.]*

**நீலஞ்சம்பா** *nīlañ-cambā,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் விளையுஞ் சம்பா நெல்வகை; a kind of campā paddy, raised in the Kanjeepuram district.

*[நீலம் + சம்பா.]*

**நீலஞ்சூத்திரன்** *nīlañšūttiran,* பெ. (n.) ஒன்பான் மணியுளொன்று; a kind of white stone - lupis lazuli. (சா.அக.).

**நீலஞ்சோதி** *nīlañ-jōdi,* பெ. (n.) **1.** திருகு கள்ளிவேர்; the root of the twisting spuoge tree. **2.** இருளில் ஒளிரும் மரம்; a tree luminous in the dark. **3.** கற்பவகையிலொன்று; one of the classified rejuvenating drugs. **4.** புல்லூரி; a parasitic plant. Loranthus genus.

**நீலத்தாமரை** *nīla-t-tāmarai,* பெ. (n.) கருங் குவளை; blue nelumboo.

*[நீலம் + தாமரை.]*

**நீலத்திருவாத்தி** *nīla-t-tiru-v-ātti,* பெ. (n.) மந்தாரை (இ.வ.); purple mountain ebony.

*[நீலம் + திருவாத்தி.]*

**நீலத்தொட்டி** *nīla-t-tōṭṭi,* பெ. (n.) *நீலச்சால்* (இ.வ.) பார்க்க; see *nīla-c-cāl.*

*[நீலம் + தொட்டி.]*

**நீலதரு** *nīla-taru,* பெ. (n.) தென்னை (மூ.அ.); common cocoanut.

*[நீலம் + தரு.]*

**நீலந்தன்** *nīlandan,* பெ. (n.) பாணன் (அக.நி.); bard.

**நீலந்தீர்–தல்** *nīlan-tīr-,* 4 செ.கு.வி. (v.i.) நீலச் சாயந் தோய்தல் (யாழ்.அக.); to be dyed or tinged with indigo.

*[நீலம் + தீர்–,]*

**நீலநாகம்** *nīla-nāgam,* பெ. (n.) கருநாகம்; cobra. "*நீலநாகம் பைவிரித்தன்ன*" (பெருங். இலாவாண.15:142.).

*[நீலம் + நாகம்.]*

**நீலநாரை** *nīla-nārai,* பெ. (n.) நாரைவகை (M.M. 907.); Indian bastard.

*[நீலம் + நாரை.]*



**நீலநிர்க்குண்டி** *nīla-nirkkuṇḍi,* பெ. (n.) நீல நொச்சி; blue notchy-justica gendarussa. (சா.அக.).

*[நீலம் + நிர்க்குண்டி.]*

**நீலநெல்** *nīla-nel*, பெ. (n.) கார்நெல்; a kind of paddy. '*நீலநெல்லரி கூலிகொண் டுண்ணுநாள்*' (பெரியபு. அரிவாட்.10.).

*[நீலம் + நெல்.]*

**நீலநொச்சி** *nīla-nocci*, பெ. (n.) *நீல நிர்க்குண்டி* பார்க்க; *see nīla-nirkkuṇḍi.* (சா.அக.).

*[நீலம் + நொச்சி.]*

**நீலப்படாம்** *nīla-p-paḍām*, பெ. (n.) இருள் (சிலப்.5:4, உரை.); darkness.

*[நீலம் + படாம்.]*

**நீலப்பணி** *nīla-p-paṇi*, பெ. (n.) நீலச்சாய மிடுந் தொழில்; work of dyeing with indigo.

*[நீலம் + பணி.]*

**நீலப்பறவை** *nīla-p-paṟavai*, பெ. (n.) மயில்; peacock, as blue coloured. "*நீலப் பறவைமே னேரிழை தன்னொடும்*" (சிலப். 24.15.).

*[நீலம் + பறவை.]*

**நீலப்பிசின்** *nīla-p-piśiṉ*, பெ. (n.) கற்பூரமரம்; camphor tree, blue gum-eucalyptus genus. (சா.அக.).

*[நீலம் + பிசின்.]*

**நீலப்புகார்** *nīla-p-pugār*, பெ. (n.) அழுத்தமாகப் படியாத நீலச் சாயம் (வின்.); faint blue-dye.

*[நீலம் + புகார்.]*

**நீலப்புடவை** *nīla-p-puḍavai*, பெ. (n.) *நீலப்புடைவை* பார்க்க; see *nīla-p-puḍaivi.*

*[நீலம் + புடவை.]*

**நீலப்புடைவை** *nīla-p-puḍaivai*, பெ. (n.) காங்குச்சீலை (வின்.); blue saree.

*[நீலம் + புடைவை.]*

**நீலப்புறா** *nīla-p-puṟā*, பெ. (n.) கோயிற் புறா; blue rock pigeon-colomba intermedia. (சா.அக.).

*[நீலம் + புறா.]*

**நீலப்பைங்குடம்** *nīla-p-paiṅguḍam*, பெ. (n.) பச்சைக்குப்பி; blue green jar. "*நீலப் பைங்குடந் தொலைச்சி*" (பெரும்பாண். 382.).

*[நீலம் + பை + குடம்.]*

**நீலப்பைஞ்சுனை** *nīla-p-paiñjuṉai*, பெ. (n.) நீலப் பூவினையுடைய பசிய சுனை; blue flowered spring. "*நிவந்த போல் இமயத்து நீலப் பைஞ்சுனை*". (பரிபா. 5:47.).

*[நீலம் + பை + சுனை.]*

**நீலப்பைம்போது** *nīla-p-paimpōdu*, பெ. (n.) நீலமாகிய பசிய மலர்; blue-green flower. "*வாராராயினும் வரினும் அவர்நமக்கு யாராகியரோ தோழி நீர நீலம்பைப்போ துளரிப் புதல்*" (குறுந்.110.).

*[நீலம் + பைம்போது
நீலம் = கருங்குவளை.]*

**நீலப்போது** *nīla-p-pōdu,* பெ. (n.) குவளை மலர்; nelumbo flower. "*மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த நீலப் போது மறியாது வண்டூச லாடும் புகரே யெம்மூர்*" (சிலப்.6:6.).

*[நீலம் + போது]*

**நீலம்**[1] *nīlam,* பெ. (n.) நீலமலர்; nelumbo-flower. "*ஊதை யவிழ்த்த வுடையிதழ் ஒண்ணீலம்*" (பரிபா.11:22.).

**நீலம்**[2] nīlam, பெ. (n.) தருப்பைப்புல், நாணல்; kaus the sacred grass; "*நீவந்தோங் கிமயத்து நீலப்பைஞ்சுனை*" (பரிபா.5:47.).

**நீலம்**[3] *nīlam,* பெ. (n.) **1.** நீலநிறம் (திவா.); blue azure or purple colour. **2.** நீலச்சாயம்; blue die, indigo. **3.** தொன்மணியு ளொன்று (பிங்.); sapphire. **4.** மாணிக்க வகை; a kind of gem. "*பதுமமு நீலமும்*" (சிலப்.14:186.). **5.** ஒன்பது செல்வத்துளொன்று; one of the nine treatise of Kubēra. (நாமதீப.387.); **6.** கருப்பு (திவா.); black colour. **7.** இருள் (திவா.); darkness. **8.** கருங்குவளை (திவா.); blue nelumbo. "*நீலமொடு நெய்த னிகர்க்குந் தண்டுறை யூரன்*" (ஐங்குறு.2.). **9.** நீல ஆடை; blue cloth. "*பூக்கரை நீலந் தழீஇ*" (கலித்.115.). **10.** நஞ்சு; poison. "*நீரேறு மேனியார் நீல முண்டார்*" (தேவா.226.9.). **11.** மருந்தாகப் பயன்படும் தாமிரக் காடிப் படிக அடை (மூ.அ.); verdigris. **12.** கண்ணிலிடும் மை; collyrium. "*நீல மிட்டகண் மடவியர் மயக்கால்*" (அருட்பா.ii,கருணைபெறாதிரங்.7.). **13.** *நீலமலை1* (பிங்.) பார்க்க; see *nīla-malai.* **14.** பனைமரம் (அக.நி.); palmyra tree. **15.** பழைய காசு வகை (நேமிநா. சொல்.10,உரை.); an old coin.

*[நிழல்= சாயல், இருட்டு, நிழல் → நீழ் → நீல் → நீலம். நீர் → நீல் → நீலம் = கடலின் நிறம்.]*

'nīla', of a dark colour; dark blue or black; darkness. Gt. (p.**522**) gives nīla the meaning of 'shade' and compares D.nel̲al (nil̲al) (KKEDXXVIII).

**நீலம்**[4] *nīlam,* பெ. (n.) நீலகேசி என்னும் பாவியம் (காப்பியம்); the epic Nīlakēśi. "*தருக்கமாவன ஏகாந்தவாதமும் அநேகாந்த வாதமும் என்பன. அவை நீலம், பிங்கலம், அஞ்சனம் தத்துவதரிசனம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும் சாங்கிய முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க*" (யாப்.விருத். உரை.).

**நீலம்**[5] *nīlam,* பெ. (n.) (வெளுத்த வெள்ளைத் துணிகள் பளிச்சிடுவதற்காக நீரில் கரைத்துப் பயன்படுத்தும்) நீலநிறப் பொடி அல்லது நீர்மம்; laundering blue.

**நீலம்பற்றவை– த்தல்**[1] *nīlam-par̲r̲a-vai-,* 4 செ.கு.வி. (v.i.) கதைகட்டுதல்; to fabricate a story.

*[நீலம் + பற்றவை–,]*

துணிக்குச் சாயமேற்றுவதைப் போல கதை கட்டி விடுதல்.

**நீலம்பற்றவை**[2] **–த்தல்** *nīlam-par̲r̲a-vai-,* 4 செ.கு.வி. (v.i.) ஆடைக்கு நீலமேற்றுதல்; to dye a cloth with blue.

*[நீலம் + பற்றவை–,]*

**நீலம்பாரி–த்தல்** *nīlam-pāri-*, 4 செ.கு.வி. (v.i.) நச்சுயிரி தீண்டலால் உடம்பு நீலநிறமாதல் (இ.வ.); to become blue, as the face or eyes by poisonous bites. **2.** இருளடைதல் (வின்.); to be darkened as the earth in an eclipse.

*[நீலம் + பாரி.]*

**நீலம்பாலை** *nīlam-pālai*, பெ. (n.) வெட்பாலை மரம் (L.); ivory tree.

**நீலம்பாவி–த்தல்** *nīlam-pāvi-*, 4 செ.கு.வி (v.i.) *நீலம்பாரி–*(நெல்லை.) பார்க்க; see *nīlam-pāri*

*[நீலம் + பாவி*
*பாவு = பரவு*
*பாவு → பாவி.]*

**நீலம்பிடிபடு–தல்** *nīlam-piḍipaḍu-*, 20 செ.கு.வி. (v.i.) கைகூடாமற் போதல்; to be impossible of accomplishment.

*[நீலம் + பிடி + படு–,]*

**நீலம்பூரி–த்தல்** *nīlam-pūri-*, 4 செ.கு.வி. (v.i.) *நீலம் பாரி–த்தல்* பார்க்க; see *nīlam-pāri-*,

*[நீலம் + பூரி.]*

**நீலமண்டலம்**[1] *nīla-manḍalam*, பெ. (n.) சிற்றீந்து (சங்.அக.); dwarf wild date-palm.

*[நீலம் + மண்டலம்.]*

**நீலமண்டலம்**[2] *nīla-manḍalam*, பெ. (n.) சிற்றீச்சை; small date fruit - phoenix farinifera. (சா.அக.).

*[நீலம் + மண்டலம்.]*

மண்டிலம் > மண்டலம்.

**நீலமணல்** *nīlamaṇal*, பெ. (n.) கருமணல்; black sand. (சா.அக.).

*[நீலம் + மணல்.]*

**நீலமணி**[1] *nīlamaṇi*, பெ. (n.) பனைமரம் (வைத்தியபரிபா.); palmyra tree.

*[நீலம் + மணி.]*

**நீலமணி**[2] *nīla-maṇi*, பெ. (n.) **1.** *நீலம்* பார்க்க; see *nīlam*. "*நீலமணி மிடற்றொருவன்*" (புறநா.91.). **2.** கருவிழி (வின்.); pupil of the eye. **3.** தென்னை (சங்.அக.); cocoanut tree.

*[நீலம் + மணி.]*

**நீலமணிகாசம்** *nīlamaṇi-kāšam*, பெ. (n.) *நீலகாசம்* பார்க்க; see *nīla-kāšam*. (சா.அக.).

*[நீலம் + மணிகாசம்.]*

**நீலமணிவண்ணன்** *nīla-maṇivaṇṇaṉ*, திருமால் (சிலப்.6:54 உரை.); God Tirumāl.

*[நீலம் + மணி + வண்ணன்.]*

**நீலமணிவோன்** *nīlam-aṇivōṉ*, பெ. (n.) முருகக்கடவுள் (நாமதீப.32.); Lord Murugaṉ.

*[நீலம் + அணிவோன்.]*

**நீலமந்தி** *nīlamandi*, பெ. (n.) கருங்குரங்கு; black monkey -macacus silenus. (சா.அக.).

*[நீலம் + மந்தி.]*

**நீலமருந்து** *nīlamarundu*, பெ. (n.) அவுரி (மலை.); indigo.

*[நீலம் + மருந்து.]*



நீலத்தலைப் பூங்குருவி



நீலப் பூங்குருவி



நீலத் தாழைக் கோழி



நீளவால் இலைக்கோழி



நீல ஈப்பிடிப்பான்



நீலச்சிட்டு

**நீலமல்லிகை** *nīla-malligai,* பெ. (n.) 1. *நீலமலிக்கம்* பார்க்க; see *nīlamalikkam.* 2. நீலநிற மல்லிகை; blue jasmine-agle marmelos. (சா.அக.).

*[நீலம் + மல்லிகை.]*

**நீலமலிக்கம்** *nīlamalikkam,* பெ. (n.) வில்வம்; bael fruit tree - crataeva religiosa. (சா.அக.).

**நீலமலை** *nīla-malai,* பெ. (n.) கோயம்புத்தூருக்கு அருகில் உள்ள நீண்ட மலைத்தொடர்; a hill station near Coimbatore.

*[நீலம் + மலை.]*

**நீலமலைச்சண்பகம்** *nīlamalai-c-caṇbagam,* பெ. (n.) நீல மலையிலுண்டாகும் பெரிய மரம்; white stalked fruited tulip tree of The Nilgris.

*[நீலமலை + சண்பகம்.]*

**நீலமலைத்தொடர்** *nīla-malai-t-toḍar,* பெ. (n.) *நீலமலை* பார்க்க; see *nīla-malai.*

*[நீலமலை + தொடர்.]*

**நீலமாதகம்** *nīlamādagam,* பெ. (n.) கையாந்த கரை; eclipse plant. eclypta-prostrata. (சா.அக.).

**நீலமார்க்கம்** *nīlamārkkam,* பெ. (n.) கையாந்தகரை; eclipse plant-eclypta prostrata. (சா.அக.).

*[நீல + மார்க்கம்.]*

**நீலமீலிகை** *nīla-mīligai,* பெ. (n.) மின்மினிப் பூச்சி (யாழ்.அக.); fire fly.

*[நீலம் + மீலிகை.]*

**நீலமுள்ளி** *nīla-muḷḷi,* பெ. (n.) செடிவகை (c.); fragrant sky bule.

*[நீலம் + முள்ளி.]*

**நீலமெடு-த்தல்** *nīlam-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) அவுரியிலிருந்து நீலச்சாயம் உண்டாக்குதல்; to extract blue dye from the indigo.

*[நீலம் + எடு-,]*

**நீலமென்சிறை** *nīlameṉ-śiṟai,* பெ. (n.) நீலநிறமுடைய மெல்லிய சிறகு; blue-coloured feather. "*நீலமென்சிறை வள்ளுகிர்ப் பறவை நெல்லியம்புளிமாந்தியயலது முள்ளி லம்பணை மூங்கிற் றூங்கும்*" (குறுந். 201.).

*[நீலம் + மென்சிறை]*

**நீலமேகநோய்** *nīla-mēga-nōy,* பெ. (n.) குருதி யோட்டக் குறைவினாலும் குருதி தூய்மைப் படாமையாலும் உடலை நீலநிறமாகச் செய்யும் நோய்; a disease in which the body is rendered blue or has a blue tint arising either from imperfect circulation of the blood or due in sufficient oxygenation of the blood-cyanosis, blue disease. (சா.அக.).

**நீலமேகம்¹** *nīlamēgam,* பெ. (n.) கார்முகில்; dark clouds. "*நீலமேக நெடும்பொற் குன்றத்துப் பால்விரிந் தகலாது படிந்தது போல*" (சிலப். 11:35.).

*[நீலம் + மேகம்.]*

**நீலமேகம்²** *nila-mēgam,* பெ. (n.) *நீலமேக நோய்* பார்க்க; see *nīla-mēga - nōi.* (சா.அக.).

*[நீலம் + மேகம். மேகம் = மேகநோய்.]*

**நீலமேகரோகம்** *nīla-mēga-rōgam,* பெ. (n.) *நீலமேகம்*[2] பார்க்க; see *nīlamēgam.*

**நீலமேகன்** *nīla-mēgaṉ,* பெ. (n.) *நீலமேனியன்,* 1. பார்க்க; see *nīlamēṉiyaṉ.*

*[நீலம் + மேகன்.]*

**நீலமேனிநெடியோன்** *nīla-mēṉi-neḍiyōṉ,* பெ. (n.) (நீலமணிபோலும் நிறத்தையுடைய நெடிய) திருமால்; Tirumal. *"வால்வளை மேனி வாலியோன் கோயிலும் நீலமேனி நெடியோன் கோயிலும்"* (சிலப். 5:171.).

*[நீலம் + மேனி + நெடியோன்.]*

**நீலமேனியன்** *nīla-mēṉiyaṉ,* பெ. (n.) 1. திருமால்; Tirumāl. 2. *நீலக்காரம்* பார்க்க; see *nīla-k-kāram.*

*[நீலம் + மேனியன்.]*

**நீலயானை** *nīla-yāṉai,* பெ. (n.) இரவு; night. *"மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு நீல யானை மேலோர் இன்றி"* (மணிமே. 19:19.).

**நீலர்** *nīlar,* பெ. (n.) அரக்கர் (நாமதீப. 73.); rāksasas.

*[நீலம்→நீலர்.]*

**நீலரோகம்** *nīla-rōgam,* பெ. (n.) *நீலமேகம்*[2] பார்க்க; see *nīla-mēgam.*

*[நீல + ரோகம்.]*

**நீலல்லி** *nīlalli,* பெ. (n.) *நீலவல்லி* (இ.வ.) பார்க்க; see *nīla-v-alli.*

*[நீலம் + அல்லி.]*

**நீலலோகிதம்** *nīlalōgidam,* பெ. (n.) ஏகாதசருத்திரருள் ஒருவர் (திவா.); a rudra one of ēkātaca-rutti-rar. *"கருமையும் செம்மையும் கலந்த வடிவம் சோதியுணீலலோகித நிலவு மேருவைப் போலு மிக்கதோர் புருடனிற்பதே"* (சேதுபு. சிவதீர். 74.) (கதி.அக.).

*[நீலம் + லோகிதம்.]*

**நீலவண்ணம்** *nīla-vaṇṇam,* பெ. (n.) 1. நீல நிறம்; blue colour. 2. நீலச்சாயம் (வின்.); blue dye 3. தீப்பொழியும் முகில் (பிங்.); a cloud which rains fire.

*[நீலம் + வண்ணம்.]*

**நீலவண்ணன்** *nīla-vaṇṇaṉ,* பெ. (n.) 1. திருமால்; Tirumāl. 2. காரி; Saturn.

*[நீலம் + வண்ணன்.]*

**நீலவண்ணான்** *nīla-vaṇṇāṉ,* பெ. (n.) சாயக்காரன் (வின்.); dyer.

*[நீலம் + வண்ணம் + ஆன்.]*

**நீலவல்லி** *nīla-v-alli,* பெ. (n.) கருநெய்தல்; blue Indian water-lilly.

*[நீலம் + அல்லி.]*

**நீலவல்லிக்கிழங்கு** *nīla-v-alli-k-kiḻaṅgu,* பெ. (n.) நீல அல்லிக்கிழங்கு; bulb of nymphae stellata. (சா.அக.).

*[நீல + அல்லி + கிழங்கு.]*

**நீலவழுதலை** *nīla-vaḻudalai,* பெ. (n.) *நீலக் கத்தரி* பார்க்க; see *nīla-k-kattari.*

*[நீலம் + வழுதலை.]*



நீலகண்டன்



நீலமலைக் காட்டுப்புறா



நீலமலை ஈப்பிடிப்பான்



நீலமலைப் பூங்குருவி



நீலமலை நெட்டைக்காலி



நீலமலைச் சிரிப்பான்

**நீலவழுதுணை** *nīla-valudunai,* பெ. (n.) *நீலக்கத்தரி* (வின்.) பார்க்க; see *nīla-kattari.*

*[நீலம் + வழுதுணை.]*

**நீலவிதானம்** *nīla-vidānam,* பெ. (n.) நீலப்பட்டு மேற்கட்டியின் கீழ் நிறுத்திய பந்தல்; canopy. "*நீல விதானத்து நித்திலப் பூம்பந்தர்க் கீழ்*" (சிலப். 1:49.).

*[நீலம் + விதானம்.]*

**நீலவூமத்தை** *nīla-v-ūmattai,* பெ. (n.) ஊமத்தை வகை; bule thorn-apple.

*[நீலம் + ஊமத்தை.]*

**நீலவேலி** *nīla-vēli,* பெ. (n.) *நீலக்கொடி வேலி* பார்க்க; see *nīla-k-kodi-vēli.* (சா.அக.).

[நீலம் + வேலி.]

**நீலன்**[1] *nīlan,* பெ. (n.) **1.** காரி (திவா.); Saturn **2.** கொடியவன்; wicked person. "*நிவர்த் தியவை வேண்டு மிந்த நீலனுக்கே*" (தாயு. பன்மாலை. 6.). **3.** குரங்கு வீரன் (கம்பரா. தானை. 8.); a monkey chief in Rama's army. **4.** குதிரைவகை (அசுவசா.); a horse with particular marks. **5.** மாங்கனி வகை (இ.வ.); a variety of mango.

**நீலன்**[2] *nīlan,* பெ. (n.) **1.** கருங்குரங்கு; blue black monkey. **2.** துருசு; blue vitriol. **3.** கரு நெல்லி; blue black gooseberry. (சா.அக.).

நீலம்→நீலன்.

**நீலன்சம்பா** *nīlan-šambā,* பெ. (n.) நீலஞ் சம்பா பார்க்க; see nīlañ-jambā.

*[நீலன் + சம்பா.]*

**நீலா** *nīlā,* பெ. (n.) அவுரி (சங்.அக.); indigo plant.

**நீலாங்கம்** *nīlāṅgam,* பெ. (n.) **1.** புழு ; worm. **2.** மலைத் தேள்; scorpion of the hills.

*[நீலம் + அங்கம்.]*

**நீலாங்கு** *nīlāṅgu,* பெ. (n.) *நீலாங்கம்,* **1.** (சங்.அக.) பார்க்க; see *nīlāṅgam.*

*[நீலாங்கம் → நீலாங்கு.]*

**நீலாஞ்சனக்கல்** *nīlāñjana-k-kal,* பெ. (n.) கருப்புக்கல் (வின்.); sulphide of antimony.

*[நீலம்+அஞ்சனம் + கல்.]*

**நீலாஞ்சனம்** *nīlāñjanam,* பெ. (n.) **1.** *நீலக் காரம்* (வின்.)பார்க்க; see nīlakkāram. **2.** *நீலாஞ்சனக்கல்* (யாழ்.அக.) பார்க்க; see *nīlāñjana-k-kal.* **3.** கல்லீயம் (யாழ்.அக.); a kind of lead.

*[நீலம்+அஞ்சனம்.]*

**நீலாஞ்சனை** *nīlāñjanai,* பெ. (n.) மின்னல் (யாழ்.அக.); lightning.

*[நீலம்+அஞ்சனை.]*

**நீலாப்பிரகம்** *nīlāppiragam,* பெ. (n.) கரு மணல் (யாழ்.அக.); fine black sand.

*[நீலம் + அப்பிரகம்.]*

**நீலாம்பரம்** *nīlāmbaram,* பெ. (n.) செடி வகை; dense-spiked blue nail dye.

*[நீலம் + அம்பரம்.]*

**நீலாம்பரன்** *nīlāmbaran*, பெ. (n.) பலபத்திரன்; Balabhatra. *"நீலாம்பரனும் யதுவீர நிருபர் யாரும்"* (பாரத. அருச்சனன்றீர். 81.).

*[நீலம் +அம்பரன்.]*

**நீலாம்பரி** *nīlāmbari*, பெ. (n.) 1. செடிவகை; blue fox-tail nail dye. 2. *நீலாம்புரி* (இ.வ.) பார்க்க; see *nīlāmburi*.

*[நீலம் +அம்பரி.]*

**நீலாம்பல்** *nīlāmbal*, பெ. (n.) *நீலோற்பலம்* (இ.வ.) பார்க்க; see *nīlōṟbalam*.

*[நீலம் + ஆம்பல்.]*

**நீலாம்புசம்** *nīlāmbušam*, பெ. (n.) *நீலோற் பலம்* (சங்.அக.) பார்க்க; see *nīlōṟbalam*.

*[நீலம் + அம்புசம்.]*

**நீலாம்புரி**[1] *nīlāmburi*, பெ. (n.) ஒருவகைப் பண் (யாழ்.அக.); a kind of melody type.

*[நீலம் + அம்புரி.]*

**நீலாம்புரி**[2] *nīlāmburi*, பெ. (n.) 1. காசாங்கம்– காசாவின் சமூலம்; the entire iron wood tree-memy. cylon edule. 2. நிலவு; moon. 3. *நீலாம்பரி* பார்க்க; see *nilambari*. (சா.அக.).

**நீலாம்புரியாள்** *nīlāmburiyāḷ*, பெ. (n.) அலரி; oleander-nerium odorum. (சா.அக.).

*[நீலம் + அம்புரி + ஆள்.]*

**நீலார்கண்டம்** *nīlār-kaṇḍam*, பெ. (n.) கருமை; black.

*[நீலம் + ஆர் + கண்டம்.]*

**நீலாரம்** *nīlāram*, பெ. (n.) *நீவாரம்* பார்க்க; see *nīvāram*. (சா.அக.).

**நீலி**[1] *nīli*, பெ. (n.) நீலநிறத்தை யுடையோள், கொற்றவையின் மறுபெயர்; durga. *"சூலி நீலி மாலவற் கிளங்கிளை"* (சிலப். 12:68.). *"சங்கரி யந்தரி நீலி சடாமுடி"* (சிலப். 12:25.). *"நிலைக்களங் காணா நீலி யென்போள்"* (சிலப். 23:159.).

*[நீலம் → நீலி]*

**நீலி**[2] *nīli*, பெ. (n.) 1. கருநிறம் (பிங்.); black hue. 2. கொற்றவை (பிங்.); Durgai. 3. மலை மகள் (பிங்.); Pārvati. *"நீலியோடுனை நாடொறு மருச்சித்து"* (சிவப். பிரபந். சோண. 55.). 4. ஒரு பெண் பேய்; a female devil. *"மாறுகொடு பழையனூர் நீலிசெய்த வஞ்சனையால்"* (சேக்கிழார். பு. 15.). 5. கொடியவள் (இ.வ.); wicked woman. 6. அவுரி (நாமதீப. 295.); indigo plant. 7. மேகவண்ணப் பூவுள்ள மருதோன்றி (L.); western ghats blue nail dye. 8. *நீலாம்பரம்* பார்க்க; see *nīlāmbaram*. 9. கருநொச்சி (மலை.); three-leaved chaste tree. 10. பாம்பின் நச்சுப் பற்களுளொன்று (வின்.); a poison fang of a snake. 11. துரிசு (நாமதீப.397.); bule vitriol.

**நீலி**[3] *nīli*, பெ. (n.) தீங்கு நினைக்கும் பசப்புக் காரி; wicked woman who feigns innocence. அந்த நீலி சொல்வதைக் கேட்டுக் கொண்டு என்னைத் திட்டுவதா? (பழ.).

*[நீலம் → நீலி]*

**நீலிக்கண்ணீர்** *nīli-k-kaṇṇīr*, பெ. (n.) உண்மையான வருத்தமின்றிப் பொய்யாக வடிக்கும் கண்ணீர், போலி வருத்தம்; insincere tears, crocodile tears. *முதலாளியின் நீலிக்கண்ணீரைக் கண்டு தொழிலாளிகள் ஏமாந்து விடக் கூடாது எனக் தொழிற்சங்கத் தலைவர் முழங்கினார்*. (உ.வ.).

*[நீலி + கண்ணீர்.]*

**நீலிகற்பம்** *nili-karppam,* பெ. (n.) என்றும் மாறாஇளமைசெய் கற்பமூலிகை; a rejuvenating drug taken for longevity. (சா.அக.).

*[நீலி + கற்பம்.]*

**நீலிகை** *niligai,* பெ. (n.) அவுரி (யாழ்.அக.); indigo plant.

**நீலிசம்** *nilišam,* பெ. (n.) பசலை; spinach-portulaca qudrifida. (சா.அக.).

**நீலிஞ்சிகை** *niliñjigai,* பெ. (n.) பசு; cow. (சா.அக.).

**நீலித்தனம்** *nili-t-tanam,* பெ. (n.) 1. கொடுமை (இ.வ.); cruelty, wickedness, hard-heartedness. 2. பாசாங்கு; pretence. 3. செருக்கு (வின்.); impudence.

*[நீலி + தனம்]*

**நீலிதம்** *nilidam,* பெ. (n.) நீலநிறமானது; that which is blue. "*பரிமள நீலிதவுடை யாடை யுடுத்தாள் பாரத*" (அருச்சுனன்றவ. 158.).

*[நீலம் + இதம்.]*

**நீலிமருந்து** *nili-marundu,* பெ. (n.) அவுரிச் சாயம்; indigo dye-indigo fera. (சா.அக.).

**நீலியம்** *niliyam,* பெ. (n.) மருதோன்றி; fragrant nail dye-mindic-lawsonia alba. (சா.அக.).

**நீலியாவரை** *nili-y-āvarai,* பெ. (n.) சூரத்து நீலாவரை; surat senna. (சா.அக.).

**நீலினி** *nilini,* பெ. (n.) அவுரி (யாழ்.அக.); indigo plant.

**நீலோற்பலம்** *nilōrpalam,* பெ. (n.) 1. கருங் குவளை (திவா.); blue nelumbo. 2. கரு நெய்தல் (பிங்.); blue Indian water lily.

*[நீலம் + உத்பலம்.]*

**நீவரகம்** *nivaragam,* பெ. (n.) (பஞ்சம்), வற்கடகம் (யாழ்;அக.); dearth, famine.

**நீவரசிகம்** *nivarašigam,* பெ. (n.) பிச்சிப்பூடு; spanish jasmin-jasminum grandflorum.

**நீவார்** *nivār,* பெ. (n.) நீவாரம் பார்க்க. see nivāram. (சா.அக.).

*[நீவாரம் → நீவார்]*

**நீவாரம்** *nivāram,* பெ. (n.) குளநெல் (திவா.); wild rice. "*நீவாரத்தாளினில்*" (இரகு. அயனு. 15.). 2. செந்தினை (மூ.அ.); Italian millet.

**நீவாரி** *nivāri,* பெ. (n.) *நீவாரம்* பார்க்க; see *nivāram.*

*[நீவாரம் → நீவாரி.]*

**நீவான்** *nivān,* பெ. (n.) மீகாமன் (அக.நி.); steers man.

*[நாவு → நீவு → நீவான்.]*

**நீவி**[1] *nivi,* பெ. (n.) 1. கொய்சகம் (திவா.); ornamental plaiting in a saree hanging from the waist. 2. மகளிர் ஆடையுடுத்தும் போது இடையில் முடிக்கும் முடிச்சு; knot of a

saree tied at the waist when dressing. "*நீவி நிதம்ப வுழத்தியர்*" (பெரியபு ஆனாய. 2.). 3. ஆடை (திவா.); cloth. 4. கிழி; money or other valuables tied up in a cloth. "*ஓங்கிய நீவிக் கைக் கொடருமி*" (திருவாலவா. 16. 11.).

**நீவி**[2] *nīvi*, பெ. (n.) 1. துடைக்கை; wiping. 2. இறகு; feather.

**நீவி**[3] *nīvi*, பெ. (n.) 1. தெரிநிலை வினையெச்சம்; an inf. ending. "*மாசறு சுடர் நுத னீவி*" (கு.பா. 182.). 2. சீலை; saree. "*நீவியின்றியிந் நெற்றியுங்கண்ணுதல்*" (கந்தபு. ததிசியுத். 56.) (கதி.அக.).

**நீவியம்** *nīviyam*, பெ. (n.) *நீவி* 1, 3, (சூடா.) பார்க்க; see *nīvi*.

(நீவி→ நீவியம்)

**நீவிர்** *nīvir*, பெ. (n.) முன்னிலைப் பெயர்; second person. "*நீவிரிவண் வந்து புகலும்*" (சிவரக. தாருக. 28.) (கதி.அக.).

( நீ → நீர் → நீவிர்)

**நீவிர்** *nīvir*, பி. பெ. (pron.) நீங்கள் (நன். 287.); you.

க. நீவு.

நீ (ஒருமை) → நீவிர் (பன்மை)

**நீவு**[1]**–தல்** *nīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கையாலே தடவுதல், பூசுதல்; to stroke, daub. "*சாரல் ஆரம் வண்டுபட நீவி*" (நற். 259.).

**நீவு**[2]**–தல்** *nīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கைவிடுதல்; to cease, discontinue. "*ஒலிநீவி யினநாரை முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போல் எக்கர்மேல் இறைகொள்ள*" (கலித். 126.). 2. கடத்தல்; to pass beyond, transgress. "*எந்தை யருங்கடி நீவி*" (குறிஞ்சிப்.20.). 3. அழித்தல் (அக.நி.); to destroy. 4.அறுத்தல்; to break asunder, as a chain. "*பின்னிய தொடர் நீவி*" (கலித்.15.).

க. நீவு.

**நீவு**[3]**–தல்** *nīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. தடவிக்கொடுத்தல்; to stroke, rub gently, handle softly. "*தன்னைப் புறம்பழித்து நீவ*" (கலித். 51.). 2. கோதுதல்; to smooth by passing the fingers over. "*பொம்ம லோதி நீவி யோனே*" (குறுந். 379.). 3. துடைத்தல்; to wipe off. "*ஒண்ணுத னீவுவர் காதலர்*" (கலித்.4.). 4. பரப்புதல்; to spread. "*நீவிநித்திலம் பரத்திய ருணக்குவ*" (பெரியபு. திருக்குறிப். 6.). 5. பூசுதல்; to daub, smear. "*நறுஞ்சாந்து நீவிய கேழ்கிள ரகலத்து*" (மதுரைக். 493.).

**நீவு**[4]**–தல்** *nīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தூண்டுதல்; to propel; to raise, as the wick of a lamp.

**நீவு**[5]**–தல்** *nīvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) (தாள், துணி போன்றவற்றைச் சுருக்கம் போகும்படி விரலால்) அழுத்தி இழுத்தல்; smooth out (the surface of a page), to press (the pleats of a saree). புத்தகத்தின் பக்கத்தை நீவி விட்டுக்கொண்டே படிப்பது சிலரின் பழக்கம். (உ.வ.). சேலையின் கொய்சகத்தைப் பலமுறை நீவி விட்டுக் கொண்டாள். (உ.வ.).

**நீழல்**[1] *nīḻal,* பெ. (n.) *நிழல்* பார்க்க; see *niḻal.* "*பலகுடை நீழலுந் தன்குடைக்கீழ்க் காண்பர்*" (குறள், 1034.).

(நிழல் → நீழல்)

**நீழல்**[2] *nīḻal,* பெ. (n.) **1.** காற்று (திவா.); wind. **2.** குளிர்தடம், ஒளி ஒதுக்கம், சாயல்; shade. "*ஈசன் எந்தை இணையடி நீழலே*" (திருஞான. தேவாரம்.).

(நிழல் → நீழல்)

**நீழலவர்**[1] *nīḻalavar,* பெ. (n.) இரப்போர்க் கெல்லாம் ஈதலாகிய தண்ணளியுடையோர்; a kind hearted person. "*பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர் அலகுடை நீழ லவர்*" (குறள், 1034.).

(நிழல் → நீழல்→ நீழலவர்.)

*[நிழல் → நீழல். நிழல் = வெம்மைக்கு மாறானது குளுமை, தண்ணளி.]*

**நீழலவர்**[2] *nīḻalavar,* பெ. (n.) ஈர நெஞ்சத்தாரான உழவர்; agriculturists as kind hearted. "*நீழலவர்* என்றது இரப்போர்க் கெல்லாம் ஈயும் தண்ணளி பற்றி" (குறள், 1034, மரபுரை.).

*[நீழல் + அவர்; நிழல் = குளுமை நிழல் → நீழல்.]*

**நீழி** *nīḻi,* பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric-coscinium fenestratum. (சா.அக.).

**நீழை**[1] *nīḻai,* பெ. (n.) ஒளி; light, lusture. "*நீழை யாண்மலர்*" (அரிசமய. குலசே. 5.).

**நீழை**[2] *nīḻai,* பெ. (n.) *நீளை*[1] (கயாகரம்) பார்க்க; see *nīḷai.*

**நீள்**[1]**(ளு)–தல்** *nīḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) **1.** நீடு பார்க்க; see nīḍu. **2.** பெருமையாதல்; to be great. "*நீள்கழற் கன்பு செய்வாம்*" (கந்தபு. கடவுள்வா. 2.). **3.** ஓடுதல் (திவா.); to run.

ம. நீளுக, நீள, நீளெ, நீளவே.

நுல் (நீட்சிக்கருத்துவேர்) → நெல்→ நெள் → நெகிழ்→ நெகிள் → நிகள் → நீள்.

**நீள்**[2] *nīḷ,* பெ. (n.) **1.** நீளம் (வின்.); length. extension, elongation. **2.** நெடுங்காலம்; long time, duration. நீடுங்காய் (கலித். 131.). **3.** உயரம் (வின்.); height, tallness, loftness. **4.** ஆழம்; depth. "*நீணிலைக் கூவல்*" (கல்லா. 12.). **5.** ஒளி (வின்.); light, lustre. **6.** ஒழுங்கு (சது.); order, series, row.

தெ. நீலுகு (உடலுறுப்புக்களை நீட்டுதல்); கோத. நீர், நீன்; நீட் (நீளுதல்); துட. நீர் (நீட்டுதல், விரித்தல்).

*[நெகிள் → நிகள் → நீள்]*

**நீள்கோளம்** *nīl-kōḷam,* பெ. (n.) முட்டை வடிவமான கோளம் (வின்.); spheroid.

*[நீள் + கோளம்]*



**நீள்சடையான்** *nīḷ-šaḍaiyāṉ,* பெ. (n.) கொன்றை; Indian laburhnum.

*[நீள் + சடையாள்.]*

**நீள்சடையோன்**[1] *nīḷ-šaḍaiyōṉ,* பெ. (n.) *நீளச்சம்* பார்க்க; see *nīḷaccam.* (சா.அக.).

*[நீள் + சடையோன்.]*

**நீள்சடையோன்**[2] *nīḷ-šaḍaiyōṉ,* பெ. (n.) **1.** சிவபெருமான்; Sivaṉ, as having long matted locks. 2. சரக்கொன்றை (மலை.); Indian laburnum.

*[நீள் + சடையோன்.]*

**நீள்சதுரம்** *nīḷ-šaduram,* பெ. (n.) செவ்வகம்; rectangle.

*[நீள் + சதுரம்.]*



**நீள்புகழ்** *nīḷ-pugaḷ,* பெ. (n.) பொன்றாது நிற்கும் புகழ்; a great virture. "*நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப் போற்றாது புத்தே ளுலகு*" (குறள், 234.).

**நீள்மைஅளவி** *nīḷmai-aḷavi,* பெ. (n.) நீளத்தை அளவிடும் கருவி; extenso meter.

*[நீள்மை + அளவி.]*

**நீள்வட்டம்** *nīḷ-vaṭṭam,* பெ. (n.) முட்டை வடிவம்; ellipse. '*நிலவுலகம் கதிரவனை நீள்வட்டப் பாதையில் சுற்றி வருகிறது*' (உ.வ.)



**நீள** *nīḷa,* பெ. அ. (adj.) **1.** நெடுந்தொலைவாக; to a great length or distance. 2. நெடுங்காலமாக; all along. "*நீளநினைந் தடியே னுமை நித்தலுங் கைதொழுதேன்*" (தேவா. 825, 1.). **3.** மிகு தொலையில் (இ.வ.); at a great distance.

*[நீள் → நீள.]*

**நீளக்க** *nīḷakka,* பெ. அ (adj.) *நீள* பார்க்க; see *nīḷa.*

*[நீள் → நீள → நீளக்க.]*

**நீளங்கடை** *nīḷaṅ-gaḍai,* பெ. (n.) நாட்செல்லுகை (யாழ்.அக.); delay, procrastination.

*[நீளம் + கடை.]*

**நீளச்சம்** *nīḷaccam,* பெ. (n.) கொன்றை; cassia-cassia fistula. (சா.அக.).

**நீளத்தில்விடு—தல்** *nīḷattil-viḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) **1.** காலநீட்டித்தல்; to protract delay. **2.** வெறும் பேச்சுப் பேசிக்காலத்தைக் கடத்துதல்; to put off with empty words. **3.** வேண்டுமென்றே புறக் கணிப்பு செய்தல்; to neglect intentionally.

*[நீள் → நீளம் → நீளத்தில் + விடு–,]*

**நீளத்திலே போ—தல்** *nīḷattilē-pō-*, 8. செ.கு.வி. (v.i.) **1.** நீளவாட்டமாய்ச் செல்லுதல்; to go lengthwise. **2.** தாழ்ச்சியாதல் (வின்.); to be protracted; to be put off.

*[நீள் → நீளம் → நீளத்திலே + போ–,]*

**நீளப்பூச்சி** *nīla-p-pūcci*, பெ. (n.) வயிற்றுப் பூச்சிவகை (வின்.); tapeworm, as being long.

*[நீளம் + பூச்சி.]*

**நீளம்**[1] *nīḷam*, பெ. (n.) **1.** நெடுமை; extension, length. "*நீளம் பெறுங் கண்களே*" (திருக்கோ. 109.). **2.** தொலைவு (பிங்.); distance remoteness. '*கையானீளமாப் புடைப்ப*' (சீவக. 2248.). **3.** தாழ்ச்சி (வின்.); delay, procrastination.

க. நீள. ம. நீளம்.

*[நீள் → நீளம்.]*

*[நுல் → நீட்சிக்கருத்துவேர். நுல் → நெல் → நெள் → நெகிழ் → நெகிள் → நிகள் → நீள் → நீளம் = நீண்டு செல்வது.]*

**நீளம்**[2] *nīḷam*, பெ. (n.) பறவைக்கூடு; bird's nest. "*நீள நீங்கிய பறவையின் விண்ணுற நிமிர்ந் தான்*" (கம்பரா. கவந். 40.).



**நீளம்தாண்டுதல்** nīḷam-tāṇḍudal, பெ. (n.) (விளையாட்டில்) ஓடிவந்து குறிப்பிட்ட இடத்தில் காலை ஊன்றி எழும்பி முடிந்த அளவுக்குத் தொலைவைத் தாண்டுதல்; long jump.

*[நீளம் + தாண்டுதல்.]*



**நீளமல்லிகை** *nīḷa-malligai*, பெ. (n.) மல்லிகை (இ.வ.); Arabian jasmine.

*[நீளம் + மல்லிகை.]*

**நீளமாக** *nīḷamāga*, பெ.அ. (adj.) இயல்பான நீளத்தை விட அதிகமாக; long. *நீளமான பாதை* (உ.வ.). கயிறு நீளமாக இருக்கிறது. (உ.வ.).

*[நீளம் → நீளமாக.]*

**நீளலை** *nīḷalai,* பெ. (n.) நெடுந்தொலைவு வரை தெரியும் ஒளியலை; long distance wave. சிவப்பு நிறம் நீளலையைக் கொண்டதால் போக்குவரத்து விளக்குகளில் நிறுத்துங் குறியாக அந்நிறம் கொண்ட விளக்குகள் பயன்படுத்தப்படுகின்றன. (உ.வ.).

*[நீள் + அலை.]*

**நீளவாடு** *nīḷa-vāḍu,* பெ. (n.) நெடும்போக்கு (இ.வ.); lengthwise direction.

*[நீளம் + வாடு.*

*மாடு → வாடு.]* ஒ.நோ:தலைமாடு

**நீளாதேவி** *nīḷādēvi,* பெ. (n.) திருமால் தேவியருளொருத்தி (அபி.சிந்.); a wife of Tirumāl.

**நீளி[1]-த்தல்** *nīḷi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. நீளுதல் (வின்.); to be lengthened, extended. 2. நெடுங்காலமிருத்தல்; to be long as time or life; to be prolonged; to last long endure. 3. சுணங்குதல்; to be protracted, delayed.

க. நீள்.

*[நீள் → நீளி–,]*

**நீளி[2]** *nīḷi,* பெ. (n.) 1. நெடியவன் (வின்.); tall person. 2. நெடியது; that which is long, lofty. *"நிணம்பசைகொண்ட நீளி நெடும்பல்"* (பெருங். இலாவாண. 8, 108.).

*[நீள் → நீளி.]*

**நீளி[3]** *nīḷi,* பெ. (n.) 1. நீளத்தையுடையது; that which is long. *'நெடுந்தரு நீளிகள்'* (கந்தபு. அக்கினிமுகா.104.). 2. தெரிநிலை வினைப் பகுதி (கதி.அக.); verbal part.

*[நீள் → நீளி.]*

**நீளிடை** *nīḷiḍai,* பெ. (n.) 1. நெடுந்தொலைவு; long distance. *"இன்ப நீளிடைப் பயக்கும்"* (கல்லா. 2.). 2. நெடியவழி; long way. *"நீளிடைச் செல"* (கலித். 10.). 3. காடு; jungle tract. *"நீளிடை மருங்கின்"* (சிலப். 13:12, அரும்.).

*[நீள் → நீளிடை.]*

**நீளிடையத்தம்** *nīḷiḍai-y-attam,* பெ. (n.) நீண்டநெறி; a long distance. *"தோளும் அழியும் நாளும் சென்றென நீளிடை அத்தம் நோக்கி வாள் அற்றுக் கண்ணுங் காட்சித் தெளிவின வெண்ணீத்து"* (நற். 397.).

*[நீள் + இடை + அத்தம்.]*

**நீளிப்பு** *nīḷippu,* பெ. (n.) நீளுகை (வின்.); prolongation.

*[நீள் → நீளிப்பு.]*

**நீளியசாரை** *nīḷiyasārai,* பெ. (n.) கானகக்கல் (யாழ்.அக.); a kind of metallic ore.

*[நீளிய + சாரை.]*

**நீளியது** *nīḷiyadu,* பெ. (n.) 1. நீண்டது (வின்.); that which is long. 2. நீக்கமற நிறைந்திருப்பது; that which is omnipresent. *"காலமுஞ் சிறிது நீளியதல்ல"* (ஞானவா. லீலை. 32.).

*[நீள் → நீளியது.]*

**நீளியன்** *nīḷiyaṉ,* பெ. (n.) நெடியவன் (யாழ்.அக.); tall man.

*[நீள் → நீளியன்.]*

**நீளுமை** *nīḷumai,* பெ. (n.) உடையாமல் கம்பிகளாக இழுக்கப்படும் ஆற்றல்; ductility.

*[நீள் → நீளுமை.]*

**நீளெட்டு** *nīl-eṭṭu,* பெ. (n.) தேசியப்படை மாணவர் பயிற்சி ஏவல்களுள் ஒன்று; one of the command in N.C.C., step out.

*[நீள் + எட்டு.]*

நீள் → நீளம் → நீளமாக
எடு → எட்டு = காலின் எடுப்பு, அடிவைப்பு.

எட்டு என்பது காலின் எடுப்பையும் அடிவைப்பையும் குறிக்கும். விரைவாய் நடத்தற்கேவுதலை எட்டி நடவென்றும், நாலெட்டில் சென்றுவாவென்றும், ஒரெட்டில் ஓடிவா என்றும் வழங்குவதைக் காணலாம்.

**நீளெரி** *nīl-eri,* பெ. (n.) **1.** பெருநெருப்பு; great fire, conflagration. "*நீணகர் நீளெரி வைத்தருளாயென்று*" (திவ். இயற். திருவிருத். 92.). **2.** மிகுவெப்பம்; extreme heat. "*கதிர்தெற நீளெரி பரந்த நெடுந்தா எியாத்து*" (அகநா. 51.).

*[நீள் + எரி.]*

**நீளை**[1] *nīḷai,* பெ. (n.) காற்று (பிங்.); wind.

*[நீள் + ஐ.]*

*[நுல் – நீட்சிக்கருத்துவேர். நுல் → நெல் → நெள் → நெகிழ் → நெகிள் → நிகள் → நீள். நீள் → நீளை (நீண்டு இயங்குவது).]*

**நீளை**[2] *nīḷai,* பெ. (n.) *நீளாதேவி* பார்க்க; see *nīḷādēvi.* "*நீளைக்கு மணவாள ராடிரூசல்*" (அஷ்டப். சீரங்கநாயக. 9.).

*[நீள் → நீளை.]*

**நீற்கண்டன்** *nīṟkaṇḍaṉ,* பெ. (n.) *நீலகண்டன்* பார்க்க; see *nīla-kaṇḍaṉ.*

*[நீலகண்டன் → நீற்கண்டன்]*

நீலம் என்ற சொல் அம் ஈறு கெட்டு நீல் என நின்று '*ல்*' , '*ற்*' ஆயிற்று

**நீற்புப்பிழை** *nīṟpu-p-piḻai,* பெ. (n.) எரி பொருள் எச்சம், ஆவியாக்கத்தில் மிச்சம்; residual error. *கன்னெய் (பெட்ரோலியம்) பிரித்தெடுப்பின்போது நீற்புப்பிழையாக தார் கிடைக்கிறது.* (உ.வ.).

*[நீற்பு + பிழை.]*

**நீற்றமுது** *nīṟṟamudu,* பெ. (n.) (மாலிய.) வெற்றிலையில் தடவுஞ்சுண்ணாம்பு; lime used with betel.

*[நீறு + அமுது.]*

சுண்ணாம்புக் கல்லைச் சுட்டு நீறாக்கிச் சுண்ணாம்பாக்குவர்

உண்ணத் தகுவன அனைத்தையும் அமுதென அழைப்பது மாலியர் வழக்கு. அவ் வகையில் சுண்ணாம்பு நீரும் அமுதெனப் பட்டது.

**நீற்றறை** *nīṟṟaṟai,* பெ. (n.) சுண்ணாம்புக் காளவாய்; lime kiln. "*நீற்றறை... மலர்ப் பொய்கையாக*" ( பிரபுலிங். துதி. 9.).

*[நீறு → நீற்று + அறை.]*

**நீற்று[1]–தல்** *nīṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நீறச் செய்தல்; to slake, as lime. 2. பொடியாக்குதல் (வின்.); to reduce to ashes or powder. 3. கனிமங்களைப் பற்பமாக்குதல்; to calcine, as metals; to calcinate.

ம. நீற்றுக.

*[நீறு → நீற்று + தல்.]*

**நீற்றுதல்[2]** *nīṟṟudal,* பெ. (n.) உலர்த்துதல், சாம்பலாக்குதல், பொடியாக்குதல்; calcination. *சுண்ணாம்புக் கல்லிருந்தும் கடல் சிப்பிகளி லிருந்தும் நீற்றுதல் முறையிலேயே சுண்ணாம் புப்பொடி பெறப்படுகிறது.* (உ.வ.).

*[நீறு → நீற்று]*

**நீற்றுக்குட்டான்** *nīṟṟu-k-kuṭṭāṉ,* பெ. (n.) கள்ளிறக்குவோன் பயன்படுத்தும் சிறிய சுண்ணாம்புப் பெட்டி (யாழ்ப்.); the small lime basket of a toddy drawer

*[நீறு → நீற்று + குட்டான்.]*



**நீற்றுக்கோயில்** *nīṟṟu-k-kōyil,* பெ. (n.) திருநீற்றுப்பை; bag for sacred ashes. "*நீற்றுக்கோயி லுணீற்றை மென்கரத்தள்ளி*" (திருவாலவா. 37, 57.).

*[நீறு → நீற்று + கோயில்.]*



**நீற்றுண்டவூமை** *nīṟṟuṇḍa-vūmai,* பெ. (n.). முட்டை; egg. (சா.அக.).

**நீற்றுண்டை[1]** *nīṟṟuṇḍai,* பெ. (n.) *நீற்றுருண்டை* பார்க்க; see *nīṟṟu-uṟuṇḍai.*

*[நீறு → நீற்று + உருண்டை.]*
*உருண்டை → உண்டை (கொச்சை.)*

**நீற்றுண்டை[2]** *nīṟṟuṇḍai,* பெ. (n.) *நீற்றுண்ட வூமை* பார்க்க; see *nīṟṟuṇḍa-ūmai.* (சா.அக.).

**நீற்றுப்பாகம்** *nīṟṟu-p-pāgam,* பெ. (n.) *நீர் சோற்றுத் தண்ணீர்* பார்க்க; see *nīr-šōṟṟu-t-taṇṇīr.*

*[நீர்ப்பாகம் → நீற்றுப்பாகம்.]*

**நீற்றுப்பூசணி** *nīṟṟu-p-pūšaṇi,* பெ. (n.) கலியாணப்பூசணி; ash pumpkin or ash gourd-benincasa cerifera. (சா.அக.).

*[நீறு → நீற்று + பூசணி. நீறு → சாம்பல்.]*

**நீற்றுப்பூசணிக்குழம்பு** *nīṟṟu-p-pūšaṇi-k-kuḻambu,* பெ. (n.) கல்யாணப்பூசணி நெய்; a medicinal ghee, prepared with ash pumpkin as chief ingrediant. (சா.அக.).

*[நீற்று + பூசணி + குழம்பு.]*

**நீற்றுப்பெட்டி[1]** *nīṟṟu-p-peṭṭi,* பெ. (n.) 1. பிட்டுசுடும் பெட்டி; basket in which the piṭṭu pastry is cooked. 2. எண்ணெயூற்றுங் கூடை; a kind of basket in which the powdered mahwa or other seeds are kept while extracting oil.

*[நீறு + பெட்டி.]*



**நீற்றுப்பெட்டி[2]** *nīṟṟu-p-peṭṭi,* பெ. (n.) திருநீறு வைக்கும் பெட்டி; casket of sacred ashes.

*[நீறு + பெட்டி.]*



**நீற்றுமானம்** *nīṟṟu-māṉam,* பெ. (n.) புடமிடுகை; calcination. "*குழு முடித்து நீற்றுமானம் புரிய நேரறிவேன்*" (பஞ்ச.திருமுக. 848.).

*[நீறு → நீற்று + மானம்.]*

**நீற்றுமுண்டி** *nīṟṟu-muṇḍi,* பெ. (n.) திருநீறு அணிந்தவன்–ள் (திருவாலவா. 13, 14, உரை.); one who wears marks of sacred ashes.

*[நீறு > நீற்று + முண்டி.]*

**நீற்றுருண்டை** *nīṟṟuruṇḍai,* பெ. (n.) திருநீற்றுக்காக உருட்டி வைக்கும் சாணிவுருண்டை; cow dung ball for preparing sacred ashes.

*[நீறு → நீற்று + உருண்டை → நீற்றுருண்டை,]*

**நீறடி–த்தல்** *nīṟaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சுண்ணாம்பு நீற்றில் தோய்த்த கயிற்றினால் கோடு போடுதல் (யாழ்.அக.); to draw ornament figures on floor with a rope soaked in lime-water.

*[நீறு + அடி–,]*

**நீறணிகடவுள்** *nīṟaṇi-kaḍavuḷ,* பெ. (n.) *நீறாடி* (பிங்.) பார்க்க; see *nīṟāḍi.*

*[நீறு+அணி + கடவுள்.]*

**நீறணிந்தோன்** *nīṟaṇindōṉ,* பெ. (n.) *நீறாடி* (சூடா.) பார்க்க; see *nīṟāḍi.*

*[நீறு + அணிந்தோன்.]*

**நீறாகு–தல்** *nīṟāgu-,* 7 செ.கு.வி. (v.i.) சாம்பலாய்ப் போதல்; to be burnt to ashes. "*அசுரர்களை நீறாகும் படியாக நிருமித்துப் படைதொட்ட மாறாளன்*" (திவ். திருவாய். 4, 8, 1.).

*[நீறு + ஆகு–,]*

**நீறாடி** *nīṟāḍi,* பெ. (n.) சிவன்; sivan, as wearing sacred ashes. "*நீறாடி தான்காண மாட்டாத*" (திவ். இயற். நான்முக. 27.).

**மறுவ.** நீறணிகடவுள், நீறணிந்தோன், நீறுபூசி.

*[நீறு + ஆடி.]*

**நீறாடு[1]–தல்** *nīṟāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொடியாக்குதல் (வின்.); to reduce to ashes, bring to ruin.

*[நீறு + ஆடு–,]*

**நீறாடு[2]–தல்** *nīṟāḍu-,* 7 செ.கு.வி. (v.i.) 1. திருநீறணிதல்; to be smear one self with sacred ashes. 2. புழுதி படிதல்; to be covered with dust.

*[நீறு + ஆடு–,]*

**நீறு[1]–தல்** *nīṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சுண்ணமாதல்; to become slaked, as lime. 2. சூரணமாதல்; to be turned to ashes or calcined, as metals or stones. "நீறியநீறு" (துணிகைப்பு. நாரத. 41.). 3. அழிதல்; to perish, to be ruined. "*பிணி செயும் வினைகணீற*" (விநாயகபு. நைமி. 3.).

*ம. நீறுக*

*[நுல் → நீள் → நீல் → நீர் → நீறு.]*

**நீறு[2]** *nīṟu,* பெ. (n.) 1. சாம்பல்; ashes, dross of any substance after it has been burnt. "*பொற்பாவாய் நீறாய் நிலத்து விளியரோ*" (நாலடி, 266.). 2. திருநீறு; sacred ashes. "*மந்திரமாவது நீறு*" (தேவா. 857.). 3. புழுதி; dust. "*அருவி துகளவிப்ப நீறடங்கு தெருவின்*" (சிறுபாண். 201.). 4. நீற்றின சுண்ணாம்பு; slaked line.

ம., க., தெ. நீறு; பர். நித்; கோண். நீர்

*[நூல்→ நீள் → நீல் → நிர் → நீறு]*

**நீறுண்டி** *nīrundi,* பெ. (n.) 1. தண்ணீர் விட்டான்; water root-asparagus recemosus. 2. நன்னாரி வேர்; root of sarasparilla (சா.அக.).

*[நீறு + உண்டி.]*

**நீறுதரிக்கும்புதன்கிழமை** *nīṟu-tarikkum-pudaṉ-kiḻamai,* பெ. (n.) சாம்பலடிப் பெருநாள் (யாழ்ப்.); ash wednesday.

*[நீறு தரிக்கும் + புதன் கிழமை.]*

புதன் என்பதற்கு அறிவன் என்பது தமிழ்.

**நீறுதரித்தநெற்றி** *nīṟu-taritta - neṟṟi,* பெ. (n.) திருநீறணிந்த நெற்றி; forehead with mark of sacred ash.

*[நீறு + தரித்த + நெற்றி.]*



**நீறுபூ-த்தல்** *nīṟu-pū-*, 4 செ.கு.வி. (v.i.) 1. நன்றாய் நீறுதல்; to be slaked, as lime. *சுண்ணாம்பு நீறு பூத்திருக்கிறது* (உ.வ.). 2. சாம்பனிறம் பிடித்தல்; to be covered with dirt, ashy coating. 3. உடலில் அழுக்குப் படிதல் (வின்.); to be covered with dirt, as the body.

*[நீறு + பூ –,]*

**நீறுபூசி** *nīṟu-pūši*, பெ. (n.) 1. *நீறாடி* பார்க்க see *nīṟādi*. 2. அருகசமயத்தவராயிருந்து சிவனியரான வேளாளவகையினர் ; a sect of vēlālas belived to be converts from Jainisim. 3. சிவத்தொண்டர்; canonized šaiva saint.

*[நீறு + பூசி.]*

**நீறுபூத்தநெருப்பு**[1] *nīṟu-pūtta-neruppu*, பெ. (n.) சாம்பல் படிந்த கட்டைத் தணல்; live embers covered with ashes.

**நீறுபூத்தநெருப்பு**[1] *nīṟu-pūtta-neruppu*, பெ. (n.) சினங் காட்டாதான் (பே.வ.); person who conceals his anger.

*[நீறுபூத்த + நெருப்பு.]*

சினத்தைக் கனலும் நெருப்புக்கு உவமையாகவும், அச்சினத்தையடக்கியாளுந் தன்மைக்கு நீறுபூத்தலை உவமையாகவும் கொள்க.

**நீன்மை** *nīṉmai*, பெ. (n.) நீலநிறம்; blue colour. "*நீன்மை மேனியன்*" (சேதுபு. விதூம.1.).

**நீனிறம்** *nīṉiṟam*, பெ. (n.) நீலநிறம்; blue; blue-black; purple. "*நீனிற வோரி பாய்ந்தென*" (மலைபடு. 524.). "வயச்சுறா எறிந்த புண்தணிந் தெந்தையும் நீனிறப் பெருங்கடல் புக்கனன்" (குறுந். 209.).

*[நீல் + நிறம்.]*

**நீனிறமஞ்ஞை** *nīṉira-mañjai*, பெ. (n.) நீலநிறமயில்; peacock. "*கானக்கோழியு நீனிற மஞ்ஞையும்*" (சிலப். 12:34.).

*[நீல + நிறம் + மஞ்ஞை.]*

**நீனிறவண்ணன்** *nīṉiṟa-vaṇṇaṉ*, பெ. (n.) திருமால்; Tirumāl. "*அவனுடைய நகர வீதியிற் சென்ற நிலங்கடந்த நீனிற வண்ணன் குடங் கொண்டாடிய குடக்குத்தும்*" (சிலப். 6:55, உரை.).

*[நீல + நிறம் + வண்ணன்.]*

**நீனிறவியலகம்** *nīniṟa-viyalagam*, பெ. (n.) நீலப்பரப்பாகிய கடல் (ஐங்குறு. 401.); sea, ocean, as the blue expanse.

*[நீனிறம் + வியலகம்.]*

**நீனிறவினை** *nīṉiṟa-viṉai*, பெ. (n.) கரிசு (பாவச்செயல்); sinful deeds. "*நீனிற வினையி னீங்கி*" (சீவக. 947.).

*[நீல் + நிறம் + வினை.]*

